# மேலைநாட்டறிஞர்களின் தமிழ்த் தொண்டு

முனைவர் எம்.ஏ. சவேரியார்














உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
INTERNATIONAL INSTITUTE OF TAMIL STUDIES

# மேலைநாட்டறிஞர்களின் தமிழ்த் தொண்டு


முனைவர் எம்.ஏ.சவேரியார்






உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
**INTERNATIONAL INSTITUTE OF TAMIL STUDIES**
*இரண்டாம் முதன்மைச் சாலை*
*மையத் தொழில்நுட்பப் பயிலக வளாகம்*
*தரமணி, சென்னை-600 113*

# சிறப்புச் சொற்பொழிவு

நாள்: 1-2-2014

## நூல் விவரக் குறிப்பு

| | | |
|---|---|---|
| நூல் தலைப்பு | : | மேலைநாட்டறிஞர்களின் தமிழ்த்தொண்டு |
| ஆசிரியர் | : | முனைவர் எம்.ஏ. சவேரியார் (ஓய்வு)<br>2, இரண்டாவது குறுக்குத் தெரு<br>ராஜாஜி நகர் விரிவாக்கம்<br>சேலையூர்<br>சென்னை-600 073 |
| பொதுப்பதிப்பாசிரியர் | : | முனைவர் மு. வளர்மதி<br>இணைப் பேராசிரியர்<br>அயல் நாட்டுத் தமிழர் புலம்<br>உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்<br>இரண்டாம் முதன்மைச் சாலை<br>தரமணி, சென்னை-600 113 |
| வெளியீட்டாளரும் பதிப்பு உரிமையும் | : | உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்<br>இரண்டாம் முதன்மைச் சாலை<br>தரமணி, சென்னை-600 113<br>தொலை பேசி எண். 044 - 22542992 |
| வெளியீட்டு எண் | : | 761 |
| மொழி | : | தமிழ் |
| பதிப்பு | : | முதற் பதிப்பு |
| பதிப்பு ஆண்டு | : | 2014 |
| பயன்படுத்திய தாள் | : | 18.6 கிகி டி.என்.பி.எல் வெள்ளை மேப்லித்தோ |
| நூலின் அளவு | : | 1/8 டம்மி |
| எழுத்தின் அளவு | : | 10 அளவு |
| பக்க எண்ணிக்கை | : | xii+388 |
| அச்சுப்படிகளின் எண்ணிக்கை | : | 1200 |
| விலை | : | ரூ. 175/- (ரூபாய் நூற்றி எழுபத்தைந்து மட்டும்) |
| அச்சகம் | : | ஸ்ரீ சரவணா அச்சகம்<br>148, தம்புத் தெரு<br>சென்னை-600 001<br>9444265471 |
| பாடம் | : | தமிழ் இலக்கியம் |

முனைவர் கோ. விசயராகவன், எம்.ஏ., எம்.ஃபில், பி.எட்., பிஎச்.டி.
இயக்குநர்
உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
சென்னை 600 113

## அணிந்துரை

ஐரோப்பியர் வருகை இந்திய அரசியல் வரலாற்றில் மாபெரும் மாற்றத்தை ஏற்படுத்தியது போல் இந்திய இலக்கிய வரலாற்றிலும் மிகப் பெரும் மாற்றத்தை ஏற்படுத்தியது. தமிழ் நாட்டிலும் அன்றைய இலக்கியச் சூழலை மாற்றி அமைத்தது. கிறித்துவ மதத்தை மக்களிடையே பரப்புவதற்காகத் தமிழ் நாட்டிற்கு வந்த மேலை நாட்டு கிறித்துவமத மறைப்போதகர்கள் தமிழின் சிறப்பையும், அதன் தனித்தன்மையையும் அறிந்து தமிழ் மொழி, இலக்கணங்களைக் கற்றுக் கொண்டு அதன் துணையுடன் கிறித்துவ மதத்தைப் பரப்பவும், பல தமிழ் நூல்களைப் படைக்கவும் மொழிபெயர்த்தளிக்கவும் முற்பட்டனர்.

அச்சுக்கலை வருகையின் மூலம் தமிழ் இலக்கிய வளர்ச்சியில் புதிய புதிய திருப்பங்களை உருவாக்கினர். தாங்கள் தமிழ் கற்றதன் மூலம் புதிய இலக்கியம், இலக்கணம், அகராதிப் பணிகளை மேற்கொண்டு தமிழ் மொழியின் வளர்ச்சிக்கு வித்திட்டனர். தமிழ் மொழியின் தொன்மையையும், அதன் தனித்தன்மையையும் உலகிற்கு எடுத்துக்காட்டி அரும்பணியாற்றியுள்ளனர். டாக்டர் வின்சுலோ, டாக்டர் கால்டுவெல், டாக்டர் ஜி.யு. போப் ஆகியோரின் தமிழ்ப் பணியும் தமிழ்ப் பற்றும் தமிழுலகம் என்றும் மறவாது.

தமிழ் வளர்ச்சியில் கிறித்துவர்களின் பங்களிப்பு குறித்து பல நூல்கள், ஆய்வேடுகள் வெளிவந்த போதிலும் திருச்சி, புனித வளனார் கல்லூரியில் பிரெஞ்சு மொழித்துறைப் பேராசிரியராகப் பணியாற்றிய முனைவர் எம்.ஏ.சவேரியார் நாம் அறிந்த, அறிய வேண்டிய தமிழ்த் தொண்டாற்றிய அறிஞர்களைப் பற்றி பல்வேறு தகவல்களைத் திரட்டி ஒரே நூலாக அளிக்க முனைந்துள்ளார்.

அவருடைய அரிய முயற்சியினால், அயராத உழைப்பினால் ‘மேலை நாட்டு அறிஞர்களின் தமிழ்த் தொண்டு’ என்ற இந்நூல் உருவாக்கப்பட்டுள்ளது.

உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம் இவருடைய அரிய பணியைச் சிறப்பிக்கும் வகையில் 1.2.2014ஆம் நாளன்று சிறப்புச் சொற்பொழிவுக்குரிய நூலாக இந்நூல் வெளியிடப்படுகின்றது. தமிழ்த் தொண்டாற்றிய 167 மேலைநாட்டறிஞர்களைப் பற்றிய செய்திகளை இந்நூலில் பேரா. முனைவர் எம்.ஏ.சவேரியார் வழங்கியுள்ளார்.

மேலைநாட்டறிஞர்கள் தமிழுக்காற்றிய பணியைக் குறித்து ''டாக்டர் ரா.பி. சேதுப்பிள்ளை, பேராசிரியர் ரம்போலா மஸ்கரேனஸ், பேராசிரியர் முனைவர் கா. மீனாட்சி சுந்தரம், மயிலைசீனி வேங்கடசாமி, வழக்குரைஞர் ரா. தேசிகன் போன்ற அறிஞர்களும், தமிழ் இலக்கிய வரலாறு எழுதிய பேராசிரியர்களும் தமிழுக்கு ஐரோப்பியரின் பங்களிப்பைப் பற்றி எழுதியுள்ளனர்'' என்பதை இந்நூலாசிரியர் என்னுரையில் குறிப்பிட்டுக் காட்டி ''இப்படைப்பின் நோக்கம் விடுபட்டுப் போன ஐரோப்பிய அறிஞர்களின் பட்டியலில் உள்ள வெற்றிடத்தை நிரப்புவதாகும்'' என்று இந்நூலின் நோக்கத்தைத் தெளிவுபடுத்தியுள்ளார்.

தமிழ் ஆர்வலர்களுக்கும், ஆய்வாளர்களுக்கும் இந்நூல் பெரிதும் பயனுடையதாக அமையும் என்பதில் அய்யமில்லை. இப்பெருமுயற்சியில் ஈடுபட்ட பேராசிரியர் முனைவர் எம்.ஏ.சவேரியார் அவர்களுக்கு எனது பாராட்டுகளையும் வாழ்த்துகளையும் தெரிவித்துக் கொள்கின்றேன்.

இந்நூல் வெளிவர உறுதுணையாக இருந்த இணைப்பேராசிரியர், அயல்நாட்டுத் தமிழர்புலம், மு.வளர்மதி அவர்களுக்குப் பாராட்டுகள்.

**தமிழும், தமிழ்நாடும் வாழ்ந்திட, அல்லும் பகலும் அயராது உழைத்து வரும் தமிழ்நாடு மாண்புமிகு முதலமைச்சர் புரட்சித்தலைவி அம்மா** அவர்களுக்கு இதயம் கனிந்த நன்றியினைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

தமிழ் மொழி வளர்ச்சிக்கு ஆக்கமும், ஊக்கமும் அளித்துவரும் பள்ளிக் கல்வி மற்றும் உலகத் தமிழாராய்ச்சி நிறுவனத் தலைவர் **மாண்புமிகு அமைச்சர் கே.சி.வீரமணி** அவர்களுக்கும், தமிழ் வளர்ச்சி மற்றும் செய்தித்துறை அரசுச் செயலாளர் **முனைவர் மூ.இராசாராம் இ.ஆ.ப.** அவர்களுக்கும் எனது உளங்கனிந்த நன்றியினைத் தெரிவித்துக் கொள்கிறேன்

இந்நூலை மெய்ப்புத்திருத்தம் செய்த ஆ. தசரதன் அவர்களுக்கும், இந்நூல் வெளியீடு தொடர்பான அனைத்து ஏற்பாடுகளையும் செய்த நிறுவனப் பணியாளர்கள் மற்றும் ஒளியச்சு கோர்வை செய்த இளநிலை உதவியாளர் (ம) தட்டச்சர் திருமதி பா. கௌசல்யா ஆகியோருக்கும், இந்நூலை அழகுற அச்சிட்டுத் தந்த ஸ்ரீ சரவணா அச்சகத்தாருக்கு பாராட்டுகள்.

**இயக்குநர்**

# மதிப்புரை

முனைவர் எம்.ஏ. சவேரியார் பிரெஞ்சு-தமிழ்-ஆங்கிலம் ஆகிய மும்மொழிகளில் தோய்வும் புலமையும் கொண்டவர். பல ஆண்டுகளுக்கு முன் 'தமிழ் புளூடார்க்' என்னும் நூலை நூலகத்தில் வாசித்த நினைவே இந்நூலைப் படிக்கும்போது எதிரொளி செய்தது. ஆனால் அது மிகச் சிறிது என்று ஒப்புநோக்கில் குறிப்பிடுகிற அளவுக்கு 169 அயலக அறிஞர்களின் தமிழ்ப்பணிகளை இந்த நூலில் ஆராய்ந்துள்ளார்.

காலவரிசைப்போக்கில் ஒரு கலைக்களஞ்சியம் போன்று விரிந்து, பரந்து, உயர்ந்தும், தரவுகளின் அருமை நோக்கில் சிலசில சுருக்கியும் இந்த ஆய்வு தனக்கே உரிய தனித்தன்மை கொண்டுள்ளது.

அயர்லாந்து, அமெரிக்கா, இங்கிலாந்து, இத்தாலி, கனடா, 'செக்'நாடு, பாரீசு, போர்ச்சுக்கல், மாஸ்கோ, ஜெர்மனி, ஸ்பெயின், ஹோனோவர், ஸ்காட்லாந்து ஆகிய இடங்களில் பிறந்து வளர்ந்த மேலைநாட்டு அறிஞர்களது விவரக் குறிப்புகள் இடம் பெற்றுள்ளன.

எத்தகைய தமிழ்த்தளங்களில் 169 பேர்களின் தமிழ்ப்பணிகளை அறிஞர் சவேரியார் அடையாளம் கண்டு வகைதொகை செய்துள்ளார் என்பது வியக்கச் செய்கிறது.

மூலநூல் சான்றுகள்
கடிதப்பகுதி மேற்கோள்கள்
காலவரிசைப் போக்குகள்
பேச்சுமொழி இலக்கண நூல்கள்
தருக்க அணுகுமுறைச் சமய போதனைகள்
கிறித்தவ மெய்யியல் விளக்கங்கள்
பிறமொழி-தமிழ் நிகரன் அகராதி உருவாக்கம்
பதிப்புவரலாற்றுக் குறிப்புகள்
தமிழ்ச்சமய-ஆய்வுக் கட்டுரைகள்-நூல்கள்
ஆன்மீகப் படைப்புகள்
தமிழ்ப் பெயர் சூட்டல் தகவல்கள்
தமிழர் சமய விவரங்கள்
தமிழர் கடவுளரது வரலாறு
வான் அறிவியல் செய்திகள் (விண்கோள்)
சொற்பொழிவுப் பதிவுகள் (தொகுப்புகள்)
திருக்குறள் முதல் ஆங்கில மொழியாக்கம்
திருவள்ளுவர் கடல் அல்லது ஞான சமுத்திரம் (1774)

விலங்கு பறவை நூல் ஆய்வு
ஐந்திலக்கண ஆக்கம்
திராவிட மொழிகள் ஒப்பீடு
திருவிவிலிய அகராதி ஆக்கம்
நல்லொழுக்கப் போதனை
பேச்சுநடைக் கையேடு
ஞாபக் குறிப்புகள்
அச்சு நூல் பதிப்புகள்
கூலித்தமிழ் நூலாக்கம்
மொழி ஒப்பாய்வுகள்
சாதிப் பழக்க வழக்கப் பதிவுகள்
உரைநூல்கள்
கையேடுகள்
அகழாய்வுகள்
எழுத்து வரி வடிவ இயல்
சமயப்பணி வரலாறு
பள்ளிகளில் தமிழ் கட்டாயப் பாடமாக்கம்
திருவிவிலிய ஒருங்கமைவு விவரம்
பாரீசு தேசிய நூலகத் தமிழ் விவரங்கள்
பஞ்சதந்திரக் கதைப் பதிப்புகள்
உ.வே.சா.-மேலை அறிஞர் கடிதத் தொடர்புகள்
இத்தாலிய செனக்கா-திருக்குறள் ஒப்பீடு
தமிழிசைத் தனித்தன்மைகள்
பெரியபுராணம்-ஜெர்மானியத் தமிழாக்கம்
கல்மேடைகள்-கல்லறைகள்-கல்வட்டங்கள்

பற்றிய அகழாய்வுக் குறிப்புகள் என உள்ளடக்கப் பொருண்மைகள் விரிப்பின் அகலும்; தொகுப்பின் எஞ்சும். இதுவரை இந்நூலாய்வுத் திட்ட அறிஞர் படைப்பாக்கம் செய்தவற்றுள் தன்னேரிலாத-இதுவரையிலும் எவரும் தொகுக்கத் தொடாத பணி என்னும் முறையில், எதிர்கால உலகளாவிய ஆய்வுத் தொடர்புகளுக்கும், தேடல்களுக்கும், ஆய்வுகளுக்கும் உரித்தான ஆக்கப்பனுவல் இதுவே!

உறையூர்
திருச்சிராப்பள்ளி

அந்தோனிகுருசு

# என்னுரை

மேலை நாட்டு அறிஞர்கள் தமிழுக்காற்றிய அரும் பெரும் பணி உலகறிந்த உண்மை என்று கூறினால் அது மிகையாகாது. தமிழக அறிஞர்கள் அங்கு நிலவிய சைவம், வைணவம், புத்தம், இஸ்லாமியம் போன்ற சமயங்களைப் போதித்ததோடு நம் தாய்மொழியாம் தமிழ் மொழியின் வளர்ச்சிக்கும் பெரும் பங்காற்றியுள்ளனர். இதேபோன்று போர்த்துக்கல், டென்மார்க், ஜெர்மனி, பிரான்ஸ், இத்தாலி, ஸ்காட்லாண்டு, இங்கிலாந்து போன்ற நாடுகளிலிருந்து தமிழகம் வந்த மேலை நாட்டு அறிஞர்கள் கிறித்தவ மறைக் கொள்கைகளைத் தமிழ் மக்களுக்குப் போதிக்க மிகத் தேவையான தமிழைக் கற்றுப் போதித்ததோடல்லாமல், அவர்கள் தமிழுக்குப் பெரும் தொண்டாற்றியுள்ளனர். சமயம், வரலாறு, இலக்கியம், இலக்கணம், அகராதிகள், அறிவியல், நிலநூல், அகழ்வாராய்ச்சி போன்ற பிற துறைகளிலும் பல புதுமைகளைப் புகுத்தி உரை நடைவாயிலாகவும், செய்யுள் வடிவிலும் எழுதிக்காட்டி உள்ளனர். மேலை நாட்டு அறிஞர்கள், அதிலும் குறிப்பாகக் கிறித்தவ மறை பரப்ப வந்த மறைப்போதகர்கள் தமிழ் மொழியைச் சீரிய முறையில் கற்று, பேச, எழுதத் தெரிந்து கொண்டதோடல்லாமல் இலக்கணம், இலக்கியங்களை ஆராய்ந்து நம் தமிழ் மொழியின் பெருமையையும், தொன்மையையும் உலகுக்கு எடுத்துக்காட்டியுள்ளனர். மேலும் அவர்கள் ''வடமொழி வேறு; தமிழ் மொழி வேறு; தமிழ் மொழி தனி இனத்தைச் சார்ந்தது'' என உலகறியப் பறை சாற்றினர். அவ்வறிஞர்கள் தமிழ் மொழியை அறிவியல் முறையில் ஆராய்ந்து தமிழ் ஒரு செம்மொழி என்றும் கண்டுபிடித்தவர்களாவர்.

''இந்திய மக்களுக்கு வரலாறு பண்பட்ட நிலமாக அமையவில்லை. கட்டுக்கதைகளாலும், புராணச் செய்திகளாலும் உண்மைகளை அறியமுடியாதவாறு இருண்டு கிடந்தது. மேலை நாட்டு அறிஞர்கள் வரலாறு காணும் முயற்சியில் ஈடுபட்ட பின்தான், தமிழர்களுக்கு முறையான வரலாறு காணும் நிலை ஏற்பட்டது. நம் நூல்களைப் பற்றிய மேலைநாட்டவரின் திறனாய்வுகளையும், விரிவுரைகளையும் நம்முடைய வரலாற்றுப் பின்னணியில் வைத்துப் பார்த்தால்தான் அவைகளைப் பற்றிப் புரிந்து கொள்ளவும், புதுமையான அணுகுமுறைகளை அவர்கள் புகுத்திய பாங்கோடு அவர்களின் குறைபாடுகளையும் தெளிவாக விளக்கிக் கொள்ளவும் கூடும்.'' (K.M.S. Page 4, ஐரோப்பியர் தமிழ்ப்பணி, கா.மீனாட்சிசுந்தரம், சென்னை, ப.4)

''இந்தியாவிலும் சீனாவிலும் இயேசு சபையைச் சார்ந்த மறைபோதகர்களின் இலக்கியத் தொண்டு மறை வரலாற்று ஏடுகளில் பொறிக்கப்படுவதைவிட வருடாந்திரக் கல்வி ஏடுகளில் என்றும் நிலைத்து நிற்கும்'' என்பது தந்தை மேக்ஸ் முல்லர் (Max Muller) கூற்றாகும். கிழக்கத்திய நாடுகளையும் மேற்கத்திய நாடுகளையும் இணைக்க வந்த முன்னோடிகளில் முதல்வராகக் கருதப்படுபவர் புனித தோமையாராவார். அவரை அடுத்துப் புனித பிரான்சிஸ் சேவியர், அருள்திரு என்றீக்கஸ், ஜான் பரியா, எம்மானுவேல் மார்ட்டின், புரோயென்சா, பல்த்தசார் டா கோஸ்டா, தத்துவ போதகரான இராபர்ட் தெ நொபிலி, சி.ஜே.பெஸ்கி போன்றவர்களும் இன்னும் இயேசு சபையைச் சார்ந்த மறைபோதகர்களும் பாரீஸ் அந்நிய நாட்டு மறைபோதகர்கள் சபையைச் (Missionaires- Etrangères de Paris) சார்ந்த தந்தை துப்புயி, தந்தை முசே, ஆயர் பொத்தேரோ, ஜான் லாப், பூலே மாரியுஸ், லு கிரான் லூசியன், அபே துபுவா, மாக்னி பியர், புத்தலூப் ஜான் போன்ற பலரும், திருத்த முறைக் கிறித்தவ சபைகளைச் சார்ந்த பாதிரிமார்களான சீகன் பால்கு, ராட்லர், பெப்ரீசியஸ், கால்டுவெல், ஜி.யு.போப் போன்ற அறிஞர்களும், அரசாங்க அலுவர்களாகவும், பணியாளர்களாகவும் புதுச்சேரிக்கும், தமிழகத்துக்கும் வந்து குடியேறிய ஐரோப்பியக் கிறித்தவர்களும் தமிழுக்காற்றிய பங்களிப்பு மிகச் சிறப்புடையதாகும். ８

மேலே குறிப்பிட்டுள்ள இவ்வறிஞர்கள் தமிழுக்காற்றிய பணியைப் பற்றித் தமிழ் வல்லுநர்கள் சிலர் எழுதியுள்ளனர். அவர்களில் குறிப்பிடத்தக்கவர்கள் டாக்டர் ரா.பி.சேதுப்பிள்ளை, பேராசிரியர் ரம்போலா மஸ்கரேனஸ், பேராசிரியர் முனைவர் கா.மீனாட்சிசுந்தரம், மயிலை சீனி. வேங்கடசாமி, வழக்கறிஞர் ரா.தேசிகன் போன்ற அறிஞர்களும், தமிழ் இலக்கிய வரலாறு எழுதிய பேராசிரியர்களும் தமிழுக்கு ஐரோப்பியரின் பங்களிப்பைப்பற்றி எழுதியுள்ளனர். இவர்களில் குறிப்பாகக் கூறுமிடத்து முனைவர் கா.மீனாட்சி சுந்தரம் ஏறக்குறைய இருபது மேலைநாட்டு அறிஞர்களைத் தேர்ந்தெடுத்து அவர்களின் வாழ்க்கைச் சுருக்கம், அவர்களின் படைப்புகளைப் பற்றி முனைவர் பட்டத்திற்காகப் பல்வேறு கோணங்களில் ஆராய்ச்சி செய்துள்ளது பாராட்டுதலுக்குரியது. ஐரோப்பிய அறிஞர்களின் வாழ்க்கைக் குறுக்கம், தமிழுக்கு அவர்கள் அருளிய கொடை பற்றி ''மேலை நாட்டறிஞர்களின் தமிழ்த்தொண்டு'' என்னும் தலைப்பில் விடுபட்டுப்போன அறிஞர்களின் பங்களிப்பும் இடம்பெற்றுள்ளது. இப்படைப்பின் நோக்கம் விடுபட்டுப்போன ஐரோப்பிய அறிஞர்களின் பட்டியலில் உள்ள வெற்றிடத்தை நிரப்புவதாகும். அறிஞர்களின்

பெயர்கள் அடங்கிய அட்டவணை நூற்றாண்டு முறையில் எழுதப் பட்டுள்ளது. எனவே தமிழ் ஆர்வலர்களும், கல்லூரி ஆசிரியர்களும் இந்நூலிலிருந்து குறிப்பிட்ட ஓர் அறிஞரையோ அல்லது ஒரு நூற்றாண்டைச் சார்ந்த அறிஞர்களின் படைப்புகளையோ எடுத்துக் கொண்டு ஒப்பாய்வு செய்யவும் பயனுள்ளதாக இருக்கும். பல்கலைக் கழகங்களிலும், கல்லூரிகளிலும் தமிழ் கற்கும் மாணவர்கள் தங்களது இளம்முனைவர் (M.Phil.) அல்லது முனைவர் (Ph.D.) ஆய்வுக்காக அறிஞர்களைத் தேர்ந்தெடுத்து ஆராய்ச்சி செய்ய மிகவும் உதவியாகவும், பயனுள்ளதாகவும் இருக்குமென்பது நமது தாழ்மையான கருத்தும் நம்பிக்கையுமாகும்.

இந்நூலுக்கான செய்திக் குறிப்புகளைச் சேகரிக்க ஆவணக் காப்பகங்கள், நூலகங்கள், நிறுவனங்களுக்குச் சென்றோம். கொடைக்கானல் செண்பகனூரிலுள்ள திரு இருதயக் கல்லூரியில் (Sacred Heart College) அமைந்துள்ள இயேசு சபையின் மதுரை மாநிலத்தின் ஆவணக் காப்பகத்தில் பல அறிஞர்களைப்பற்றிய அதிகமான செய்திக் குறிப்புகள் கிடைத்தன. புதுச்சேரியில் உள்ள உயர் மறைமாவட்டத்திலுள்ள பாரீஸ் அந்நிய மறைபோதகர்கள் சபையின் ஆவணக் காப்பகத்தில் செய்திக் குறிப்புகள் கிட்டின. அதே நகரத்திலுள்ள பிரெஞ்சு-இந்தியக் கழகத்தில் (L'Institut Français) நமக்குச் சில செய்திக் குறிப்புகள் கிடைத்தன. மேலும் சென்னையிலுள்ள ஆசியவியல் நிறுவனத்திலும் (Institute of Asian Studies) கணிசமான செய்திக் குறிப்புகள் கிடைக்கப் பெற்றன. மறைப்போதகர்கள் தங்கள் சபைத் தலைவருக்கும், நண்பர்களுக்கும், பெற்றோர்களுக்கும் எழுதிய ஆண்டுக் கடிதங்களிலிருந்து பல செய்திக் குறிப்புகள் கிடைத்தன. சென்னை இலயோலாக் கல்லூரியில் தந்தை முனைவர் ச.இராசமாணிக்கம், சே.ச. நிறுவிய தெ நொபிலி ஆராய்ச்சி நிலையத்திலிருந்தும் செய்திக் குறிப்புகள் நமக்குக் கிடைத்தன.

எந்த ஒரு செயலானாலும் மற்றவர்களின் உதவியின்றி நம்மால் செய்ய இயலாது. எந்த ஒரு வெற்றிக்கும் பின்னால் ஓர் பெண் இருப்பது உலகறிந்த உண்மை. பல நல்ல ஆலோசனைகளை நல்கியும், அயரா உழைப்பைக் கொடுத்தும், இந்நூலைச் சிறந்த முறையில் கணினி மூலம் உருவாக்க உதவிய என் வாழ்க்கைத் துணைவியார் திருமதி பாரதி மேரிக்கும், அவ்வப்போது உதவி நல்கிய சுசீந்திரன் அவர்களுக்கும், அணிந்துரை வழங்கி இந்நூலை வெளியிட அனுமதியும் ஊக்கமும் அளித்த உலகத் தமிழாராய்ச்சி நிறுவன இயக்குநர் முனைவர்

கோ. விசயராகவன் அவர்களுக்கு மிக்க நன்றி. இந்நூலை அச்சிட்டு வெளியிடப் பெரிதும் உதவிய நிறுவனத்தின் இணைப் பேராசிரியர், அயல்நாட்டு தமிழர் புலம் முனைவர் மு. வளர்மதி அவர்களுக்கும், மதிப்புரை வழங்கிய என் நெருங்கிய நண்பரான முனைவர் ஆ.அந்தோணி குருசு அவர்களுக்கும் என் மனமார்ந்த நன்றி. இந்நூலைச் சிறப்பாக அச்சேற்றி வெளிக்கொணர்ந்த அச்சகத்தாருக்கும் என் நன்றி. ''மேலை நாட்டறிஞர்களின் தமிழ்த் தொண்டு'' என்னும் இந்த நூலை வாசிக்கும் அறிஞர் பெருமக்களுக்கும், பேராசிரியர்களுக்கும், மாணவர்களுக்கும் என் உளங் கனிந்த நன்றி. இந்நூலை வாசித்து மிகுந்த பயனடையுமாறும் ஆலோசனைகள் நல்குமாறும் கேட்டுக் கொள்கிறேன்.

**எம்.ஏ.சவேரியார்**

## ஆசிரியர் குறிப்பு



எம்.ஏ.சவேரியார் 7.3.1945ஆம் நாள் மதுரை மாவட்டத்தில் உள்ள இராயப்பன்பட்டியில் பிறந்தார். தந்தை ஆரோக்கியம், தாய் கித்தேரியம்மாள். இவர் முதுகலை ஆய்வில் நிறைஞர் பட்டமும், பிரெஞ்சு மொழியில் முனைவர் பட்டமும் பெற்றவர். செயின்ட் ஜோசப் கல்லூரி, திருச்சியில் பிரெஞ்சு மொழித் துறைப் பேராசிரியராக 29 ஆண்டுகள் பணியாற்றி ஓய்வு பெற்றவர்.

La contribution du Rev. PereJean Baptiste Trincal, S.J. (1844-1892) எனும் தலைப்பில் ஆய்வு செய்து திருச்சி பாரதிதாசன் பல்கலைக்கழகத்தில் பட்டம் பெற்றார்.

The Contribution of French to the Tamil Culture from XIX century to XX century: Studies on the Social, Economical, Political, Historical, Archaeological, Agricultural and Cultural aspects as viewed by French Jesuit Missionaries எனும் தலைப்பில் பல்கலைக்கழக நிதி நல்கைக் குழு குறுந் திட்டப்பணி ஆய்வாக (2002) வழங்கியுள்ளார்.

பிரெஞ்சு, ஆங்கிலம், தமிழ் மொழிகளில் 30க்கும் மேற்பட்ட ஆராய்ச்சிக் கட்டுரைகளை வழங்கியுள்ளார்.

1. தெளிந்த நீரூற்று (புனித அன்னாள் சகோதரிகள் சபை வரலாறு.)
2. விடுதலைக்கோர் விடிவெள்ளி.
3. புனித பனிமய அன்னை ஆலயம்.
4. பிரெஞ்சு சிறுகதைகள் ஆகிய நூல்களை வெளியிட்டுள்ளார்.

# பொருளடக்கம்

# முகவுரை

ஐரோப்பியர்கள் முதன் முதலில் தென்னிந்தியாவிற்கு அதிலும் குறிப்பாகத் தமிழகத்திற்கு வியாபாரம் செய்யும் நோக்கத்திற்காக வந்தனர். அவர்கள் தங்களுடைய அன்றாட வாழ்க்கைக்கும், வியாபாரத் தேவைகளுக்காகவும் மக்கள் பேசும் தமிழைக் கற்றனர். அவர்களுக்குப் பின் தமிழகத்திற்கு வந்த மேலை நாட்டுக் கத்தோலிக்க, திருத்தமுறைக் கிறித்தவச் சபைகளைச் சார்ந்த மறைப்போதகர்கள் கிறிஸ்துவின் நற்செய்தியைத் தமிழ் மக்களுக்குப் போதிக்கும் நோக்கத்தோடு வந்தனர். அம்மக்களோடு வாழவும் அவர்களுக்குக் கிறித்தவ மறையைப் போதிக்கவும் அம்மக்கள் பேசும் தமிழ் மொழியைக் கற்க முற்பட்டனர். எனவே மறைப்போதகர்கள் தமிழ் மொழியைக் கற்பதில் முனைப்புடன் ஈடுபட்டனர். அவர்கள், தமிழ் சிறந்த இலக்கியங்களைக் கொண்ட மொழி என்பதைக் கண்டனர். ஆனால் தமிழ் மக்களோ தங்களின் தாய்மொழியாகிய தமிழின் மேன்மையைப்பற்றி அறிந்து கொள்ளத் தவறிவிட்டனர். ஏனெனில் தமிழ் இலக்கணம், இலக்கியங்கள் எல்லாம் செய்யுள் வடிவில் இருந்தன. தமிழ் மொழி, இலக்கணம், இலக்கியங்களை நன்கு கற்றறிந்த மேனாட்டு அறிஞர்கள் தமிழைப் பற்றிய தங்கள் கருத்துகளை வெளியிட்டுள்ளதை நாம் காண்போம்.

**தமிழ் மொழியைப்பற்றி**

முனைவர் வின்சுலோ,

> ''தமிழ் செய்யுள் வடிவில் உள்ளது என்று கூறுவது ஒருவேளை மட்டுமீறியதாக இல்லை. மேலும் தமிழ், கிரேக்க மொழியை விடத் துல்லியமும் பண்பட்டுள்ளதுமாக இருக்கின்றது. தமிழ் மொழியின் இலக்கிய பேச்சு வழக்குகள் இலத்தீன் மொழியைவிட அதிக வளமுள்ளவைகளாக உள்ளன. தமிழ் தன் முழுமையிலும் ஆற்றலிலும் வேறு எந்தப் பேச்சுவழக்கில் உள்ள மொழிகளைவிட ஆங்கிலம், ஜெர்மன் மொழிகளை ஒத்திருக்கின்றது.''

என எழுதியுள்ளார்.

## தமிழ் இலக்கியம் பற்றி

தனிப்பட்ட மேதையான தந்தை சி.ஜே.பெஸ்கி,

''தமிழ் இலக்கியம் இயல்பாக அமைந்த தனித்தன்மை வாய்ந்த ஒன்றாகும். தமிழ்க் கவிஞர்கள் செய்யுளுக்கென்றே அமைந்த மொழியைப் பயன்படுத்துகின்றனர். தமிழ்ச் செய்யுளில் நல்லொழுக்கத்தைப் பற்றியும், தெய்வீகத்தைப் பற்றியும் சிறந்த படைப்புகள் உள்ளன''

என்று எழுதியுள்ளார்.

முனைவர் ஜி.யு.போப், தமிழில் உள்ள அநேக நல்லொழுக்கப் படைப்புகளைப் பற்றிப் பேசும்போது,

''நேர்மையின் மீதுள்ள தங்களின் பசி, தாகத்தை எடுத்துணர்த்தும் வகையில் மக்கள் அந் நல்லொழுக்கப் படைப்புகளை முழுமையாக இரசித்து மகிழுவதால் அம்மக்களுக்குத் தனிப்பட்ட ஓர் ஆசீர்வாதம் இருப்பதாகச் சில வேளைகளில் நான் உணருகின்றேன்''

என்று கூறியுள்ளார்.

## இலக்கணம்பற்றி

மரியாதைக்குரிய டிபிரதர்டோன் (Rev.T.Brotherton)

''பவணந்தியாரின் நன்னூல் அல்லது தமிழ் இலக்கணம் உலகிலுள்ள எந்த மொழியின் இலக்கணத்தைவிடத் தத்துவ முறையிலும் தர்க்க ரீதியிலும் ஒழுங்குபடுத்தப் பட்டுள்ளதைப் பொதுவாக இலக்கியத்தைக் கற்றுணர்ந்த அனைவரும் ஒத்துக்கொள்ளும் உண்மையாகும். மேலும் இது மதிப்பு மிக்கதாகவும், உயர்வான படைப்பாகவும் உள்ளது.''

ஐரோப்பியர்கள் வேறெதுவும் செய்யவில்லை எனினும் அவர்கள் நம் மொழியின் மேம்பாட்டுக்காக நம் அறிவுக் கண்ணைத் திறக்க முயன்றுள்ளனர். மேலும் நாம் அதைப் புறக்கணியாமல் இருக்க நம்மை எச்சரித்துள்ளனர். இதற்காக நாம் அவர்களுக்கு என்றென்றும் கடமைப்பட்டவர்களாய் உள்ளோம். அவர்கள் தமிழுக்கு நிறையத் தொண்டு செய்துள்ளனர்.

ஐரோப்பியர்கள் தமிழ் எழுத்துக்களை எளிமைப் படுத்தியுள்ளனர். அவர்கள் வார்த்தைகளுக்கிடையிலும், சாதாரண அல்லது கலந்து

இணைந்த ஒரு வாக்கியத்திலும் இடைவெளி விட்டு எழுதுவதைப் புகுத்தியுள்ளனர். ஏனென்றால் ஒரு முழு வாக்கியத்தை ஒரு நீண்ட வார்த்தையை மட்டும் கொண்டுள்ளது போல் எழுதுவது நம்மிடையே உள்ள பழக்கமாகும். முதன் முதலில் அவர்கள்தாம் தமிழை அச்சிட்டும் வெளியிட்டனர். நூல்கள், செய்தித்தாள்கள், நடைமுறைச் சமயம் பற்றிய சிறு ஆய்வுக் கட்டுரைகள் ஆகியவற்றை அச்சடித்து வெளியிட்டவர்களும் அவர்களேயாவர். முதன் முதலில் அவர்கள்தாம் தமிழின் ஆராய்ச்சியை நாகரிகமுள்ள நாடுகளுக்கு அறிமுகப்படுத்தினர். முதன்முதலில் அவர்கள்தாம் ஐரோப்பிய மொழிகளிலிருந்து தமிழுக்கு மொழியாக்கம் செய்தவர்கள். முதன் முதலாகத் தமிழ்ச் சொற்களஞ்சியங்கள், அகராதிகள், நிகண்டுகள் ஆகியவற்றைத் தொகுத்தெழுதி வெளியிட்டவர்கள் மேலைநாட்டு அறிஞர்கள்தாம். காலங்காலமாகப் பழக்கத்தில் இருந்து வந்த அகரவரிசையில் பொருள் விளக்கப்பட்ட சொல் தொகுதியை இலக்கியத்தைப் படிக்குமுன்பு மனப்பாடம் செய்யும் வழக்கத்தை இவ்வகராதிகள் வழக்கற்றுப் போகச் செய்தன. முதன் முதலில் மேலைநாட்டவர்தாம் இயற்கை, அறிவியல் பற்றித் தமிழில் ஆய்வுக் கட்டுரைகள் எழுதியுள்ளனர். அவர்கள்தாம் படித்த தமிழ் அறிஞர்களைத் தமிழ்ப் படைப்புகளிலிருந்து வேண்டாத பகுதிகளை அகற்றிப் புதிய பதிப்புக்களைக் கொணரவும், முழுமை வாய்ந்த பொதுவான கவர்ச்சிமிகு இலக்கியங்களை எழுதவும் முதன் முதலில் தூண்டியவர்கள். ஐரோப்பிய அறிஞர்கள்தாம் முதன் முதலில் நமது மொழி, இலக்கணம், இலக்கியம் ஆகியவற்றை எவ்வாறு திறனாய்வு செய்ய வேண்டும் என்று நமக்குக் கற்பித்தவர்களாவர். மேலும் முதன் முதலில் அவர்கள்தாம் எவருக்கும் புரியாத மொழி நல்லதல்ல என்றும் அவ்வாறிருந்தால் சமூகம், சமயநல்லொழுக்கம், அரசியல், பொருளாதாரம் ஆகிய துறைகளின் வளர்ச்சி மக்களிடையே காணக்கிடைக்காது என்றும் நமக்குக் கற்றுக் கொடுத்தவர்கள். சாதாரணத் தமிழ் மக்கள் வீடுகளில் வாசிப்பதற்கென்று எந்த ஓர் இலக்கியமும் இல்லாமல் இருந்தனர். தற்காலத் தமிழ் உரைநடையில் நூல்கள் எழுதி நூல்கள் வாசிக்கும் வழக்கத்தை மக்களிடையே உருவாக்குவதற்குத் தூண்டுகோலாக இருந்தவர்கள் ஐரோப்பிய அறிஞர்கள்.

கிறித்தவம் தமிழுக்கு ஆற்றிய தொண்டினை ஆராய்ந்து பார்க்குமிடத்து அதன் எல்லையும் பரப்பும் விரிவானதாகத் தோன்றுகின்றன. தமிழ் மொழி, இலக்கணம், இலக்கியம், நிகண்டு, மொழிபெயர்ப்பு, அகராதிகள், எழுத்துச் சீர்திருத்தம் எனப் பல்வேறு நிலைகளில் மேலை நாட்டு அறிஞர்களின் தொண்டுகள் அமைகின்றன. இவ்வுண்மையைத் தமிழ் ஆய்வாளர்கள் இந்நூலில் காணக்கூடும் என்பதில் எள்ளளவும் ஐயமில்லை.

## வரலாற்றுப் பின்புலம்

பண்டைய காலம் தொட்டே மேற்கத்திய நாடுகள் நமது தாய்நாடான இந்தியாவைப் பற்றி அறிந்திருந்தன. இதற்குக் காரணம் அவர்கள் இந்தியாவோடு கொண்டிருந்த வணிகத் தொடர்பே ஆகும். குறிப்பாகக் கூறுமிடத்துத் தென்னிந்தியாவிற்கும் மேற்கத்திய நாடுகளுக்குமிடையே வணிகம் சிறந்த முறையில் நடைபெற்றது. அரிக்கமேடு அகழ்வாராய்ச்சி, வணிகத்தின்போது பயன்படுத்தப்பட்ட உரோம நாணயங்கள் இதற்குச் சான்று பகருகின்றன. உரோமைப் பேரரசுக்கும் தென்இந்தியாவிற்கு மிடையே அரபிக் கடலோரத்தில் உள்ள துறைமுகங்களின் மூலம் வணிகம் நடைபெற்று வந்தது யாவரும் அறிந்த ஒன்றே.

வாஸ்கோட காமா கடல் வழியைக் கண்டுபிடித்ததின் விளைவாக வணிகம் உச்ச நிலையைத் தொட்டது எனக் கூறலாம். மிளகு, ஏலக்காய் போன்ற நறுமணப் பொருள்களின் வணிகம் தென்னகத்தில் மிகப் பெரும் இலாபத்தை ஈட்டியது. போர்ச்சுக்கீசியர் நம் நாட்டில் தங்களுடைய ஆட்சியை நிறுவுவதற்கு இவ்வணிகமே முதற்காரணமாக அமைந்தது. இவர்களைத் தொடர்ந்து டச்சுக்காரர்களும் மேற்குக் கடற்கரைகளில் வந்து குடியேறினர்.

கி.பி.52இல் போர்ச்சுக்கீசியரின் வரவுக்கு முன்பே, இயேசு கிறிஸ்துவின் பன்னிரண்டு சீடர்களில் ஒருவரான தோமையாரால் மனமாற்றம் செய்யப்பட்ட கிறித்தவர்களும், யூதர்களும் கேரளப் பகுதிகளில் இருந்தனர். புனித தோமையார் மைலாப்பூரிலும், அதைச் சுற்றியிருந்த பகுதிகளிலும் நற்செய்தியை அறிவித்துப் பலபேரை மனமாற்றித் திருமுழுக்குக் கொடுத்துக் கிறித்தவர்களாக்கினார். ஆனால் அவர் புனித தோமையார் குன்றில் ஈட்டியால் குத்திக் கொலை செய்யப்பட்டார்.

ஜமோரின் அரசர் கள்ளிக்கோட்டையை ஆட்சி செய்தபொழுது போர்ச்சுக்கீசியர் அங்கு வந்திறங்கினர். நாளடைவில் அவர்கள் அங்கு உரிமை பெற்றவர்களாகவும் ஆயினர். அப்பொழுது போர்ச்சுக்கல் நாட்டின் அல்போன்சா ஆல்புகர்க் இந்தியாவின் ஆளுநராக இருந்தார். போர்ச்சுக்கீசியர் தங்களுடன் மறைப்போதகர்களையும் அழைத்து வந்தனர். அம் மறைப்போதகர்களின் உதவியுடன் இந்திய மக்களை மனமாற்றுவதில் ஆர்வம் கொண்டவர்களாய் இருந்தனர்.

கத்தோலிக்கக் கிறித்தவ மதத் தலைவராக உரோமையில் உள்ள பாப்பரசர் இந்தியாவில் மறைப்பணியாற்றப் புனித பிரான்சிஸ் சவேரியாரை அனுப்புமாறு போர்ச்சுக்கல் அரசரைக் கேட்டுக் கொண்டார். அதன்படி ஸ்பெயின் நாட்டினரான புனித தந்தை பிரான்சிஸ் சவேரியார்

1541இல் இந்தியாவுக்கு வந்தார். திருவிதாங்கூரில் வாழ்ந்த செம்படவர்களிடையேயும், பிற பழங்குடி மக்களிடையேயும் சமய, சமூகப் பணிகள் ஆற்றினார். இவரைத் தொடர்ந்து அநேக மறைப் போதகர்கள் தென்னிந்தியாவிற்கு வந்தனர். அவர்கள் உள்நாட்டு மக்களின் மொழியைக் கற்றால்தான் சிறந்த முறையில் மறைப்பணியாற்றி இறை அரசைப் பரப்ப முடியும் என்பதைக் கண்டறிந்து தமிழை முறையாகக் கற்றதோடல்லாமல் இலக்கியப் பணியும் ஆற்றினர்.

போர்ச்சுக்கீசியரை அடுத்து 1599இல் டச்சுக்காரர்கள் கீழைநாட்டு வணிகத்தைச் சிறந்த முறையில் வளப்படுத்தினர். மேலும் போர்ச்சுக்கீசியர்கள் கடற்கரையோரமாகக் கட்டியெழுப்பிய தொழிற் கூடங்களும், கோட்டைகளும் டச்சுக்காரர்களின் அதிகாரத்தின் கீழ் வந்தன. 1616இல் டச்சுக் கிழக்கிந்தியக் கம்பெனி உருவாயிற்று. இந்தக் கம்பெனி இந்தியாவுடன் வணிகம் செய்யத் தொடங்கியது. டச்சு அரசும் இந்திய மக்களின் சமய மனமாற்றத்தை ஆதரித்தது. 1609ஆம் ஆண்டு சென்னையை அடுத்த புலிக்காடு என்ற இடத்தில் டச்சுக்காரர்கள் தங்களது முதல் கோட்டையைக் கட்டி எழுப்பினர். 1660ஆம் ஆண்டிலிருந்து நாகபட்டினம் அவர்களின் முக்கியத் துறைமுகமானது. இதற்கு முன் 1620இல் டச்சுக்காரர்கள் கிழக்குக் கடற்கரையில் உள்ள தரங்கம்பாடியில் ஒரு தொழிற்கூடத்தைத் தொடங்கினர். அப்பொழுது தஞ்சையை ஆண்ட நாயக்க மன்னரும் அதற்கு அனுமதி அளித்தார். தரங்கம்பாடி டச்சுக்காரர்களுக்கு முக்கிய வணிகத் தலமாகவும், மறைப்பணியின் மையமாகவும் திகழ்ந்தது. பதினேழாம் நூற்றாண்டில் டச்சுக்காரர்கள் வாணிபத்தோடு திருமறை பரப்பும் பணியையும் தொடங்கினர்.

1845இல் நலிவடைந்த டச்சுத் தொழிற்சாலைகள் ஆங்கில அரசுக்கு விற்கப்பட்டன. ஐரோப்பியர்களிடையே நடந்த சண்டைகளால் இந்தியாவில் நிலவிய டச்சு ஆதிக்கம் பெரிதும் பாதிக்கப்பட்டது. டச்சு அரசு வணிகத்தை மட்டுமே நோக்கமாகக் கொண்டிருந்தது. பதினெட்டாம் நூற்றாண்டில் டச்சுக் கடற்படையின் வலிமை இந்தியாவில் குறைந்ததால் இவ்வரசு தேவைப்பட்ட வலிமையுடன் செயலாற்ற முடியவில்லை.

1625ஆம் ஆண்டு ஆங்கிலேயர் இந்தியாவில் முதன்முதலாகச் சோழமண்டலக் கடற்கரையில் காலடி வைத்தனர். 1632இல் ஆங்கிலேயர்கள் சென்னைப்பட்டினம் என்னும் இடத்தை விலைக்கு வாங்கினர். அவர்கள் பொருள் சேர்த்து வைக்கும் கிடங்கிற்குப் பக்கத்தில் ஒரு கோட்டையைக் கட்டி எழுப்பினர். அதுதான் புனித ஜார்ஜ் கோட்டை.

1672இல் பிரான்சிஸ் மார்ட்டின் தலைமையில் பிரெஞ்சுக்காரர்கள் சென்னைக்குத் தென்திசையில், ஏறக்குறைய 130 கிலோமீட்டர் தொலைவில் ஒரு சிறு நிலப்பகுதியை விலைக்கு வாங்கினர். அந்த

நிலப்பகுதியானது சோழமண்டலக் கடற்கரையில் பிரெஞ்சுக்காரர்களின் குடியேற்றப் பகுதியாயிற்று. வணிகத்தில் மட்டுமல்லாது சமயப் பணியிலும் ஏன் தென்னிந்திய அரசியலிலும் கடற்கரையோரமாக அமைந்துள்ள தற்காலப் பாண்டிச்சேரி முக்கியத்துவம் வாய்ந்ததாக இருந்தது.

தென்னிந்தியாவில் கத்தோலிக்கத் திருச்சபையைச் சார்ந்த பிரெஞ்சு மறைப்போதகர்களின் பணியானது முக்கிய இடத்தை வகித்தது. 1699ஆம் ஆண்டில் பிரெஞ்சு மறைப்போதகர்கள் தொடங்கிய மறைப்பணியானது கர்நாடக மறைத்தளம் என்று அழைக்கப்பட்டது. இந்த மறைத்தளம் கேரளத்தைத் தவிர்த்துக் கர்நாடகம், ஆந்திரம், தமிழகம் ஆகியவற்றை உள்ளடக்கியதாகும். மறைப்போதகர்கள் இத்தளங்களில் பெரிய இடையூறுகளைச் சந்திக்க நேரிட்டது. இவர்கள் இயேசு சபையைச் சார்ந்தவர்களாவர். போர்ச்சுக்கல்லில் அரசருக்குக் கீழ்ப் பணியாற்றிய இயேசு சபை மறைப்போதகர்களின் இந்திய மறைப்பணியை உரோமாபுரியில் உள்ள பாப்பரசர் தடை செய்தார். அதனால் மறைப்பணியைப் பாரீசு அந்நிய மறைப்போதகர் சபை பொறுப்பேற்றுப் பணியாற்றியது. பின்னர் பாப்பரசர் அனுமதியோடு 1836இல் புதிய மதுரை மறைத்தளம், மறுபடியும் தொடங்கப்பட்டது. பிரான்ஸ் நாட்டிலுள்ள தூலூஸ், லியோன் மறை மாவட்டங்களிலிருந்து இயேசுசபை மறைப்போதகர்கள் மறைப்பணி புரிய வந்தனர்.

நாயக்கர்கள் ஏறக்குறைய இருநூறு ஆண்டுகள் (1529-1736) மதுரையை ஆண்டு வந்தனர். இக்காலக்கட்டத்தில் இயேசு சபையைச் சேர்ந்த திருமறைபரப்புப் பிரெஞ்சுப் பணியாளர்கள் ஒவ்வொரு ஆண்டின் முடிவிலும் உரோமையில் உள்ள தங்கள் தலைவருக்குத் தங்கள் பணியைப்பற்றி எழுதிய கடிதங்களில் இந்த அரசியல் செய்திகளைக் காணமுடியும். விஜயநகர அரசருக்குக் கீழ்ப் பணியாற்றிய விசுவநாத நாயக்கர்தான் மதுரையில் நாயக்கர் ஆட்சியை நிறுவியவர் என்று பொதுவாகக் கருதப்படுகின்றது.

1529ஆம் ஆண்டு இயேசு சபையைச் சார்ந்த தந்தை ஜி.பெர்னாண்டஸ் தலைமையில் மறை பரப்பும் குருவானவர்கள் மதுரையில் வாழ்ந்த பரவர்களிடையே சமயப்பணி ஆற்றினர். அப்பொழுது மதுரையை ஆண்ட வீரப்ப நாயக்கர் மாதா கோவில் ஒன்றைக் கட்டிக்கொள்ள அவர்களுக்கு அனுமதி அளித்தார். 1607இல் புகழ்பெற்ற தந்தை ராபர்ட்-டி- நோபிலி மதுரைக்கு வந்து சேர்ந்தார். துணிவும் அறிவாற்றலும் கொண்ட நொபிலி உயர்சாதி என்று கருதப்பட்ட பிராமணர்களைக் கிறித்தவ மறைக்கு மனமாற்ற, பிராமண சந்நியாசி உண்ணும் உணவு, உடுத்தும் உடை ஆகியவற்றைப் பின்பற்றித் தன்னையே உரோமானியப் பிராமணன் என்று அழைத்துக் கொண்டார். அவர் மதுரையில் வாழ்ந்த மக்களின் மொழியை நன்கு பேசவும், எழுதவும்

கற்று அவர்தம் இலக்கியத்தைச் சரிவரப் புரிந்து கொள்ளத் தக்கவாறு தமிழ், சமஸ்கிருதம் ஆகிய மொழிகளைக் கற்றார். இவரைப் பின்பற்றி சி.ஜே.பெஸ்கி அடிகள் பல தமிழ் நூல்களையும், அகராதியையும், உலகப்புகழ்பெற்ற தேம்பாவணியையும் எழுதியுள்ளார். தரங்கம்பாடியில் புராட்டஸ்டாண்டு டச்சுப் பாதிரியார்கள் தங்களுடைய சமயக் கொள்கைகளைப் பரப்பி வந்தனர். அதே வேளையில் மதுரை சமயச் சபையைச் சார்ந்த ஜே.வாஸ்கம் பிக்கட் பாதிரியார் அச்சபையின் செயல்பாடுகளை யெல்லாம் மிகவும் வலியுறுத்தினார்.

தென்னிந்தியாவில் கல்வியும், அதைப் பரப்பும் செயல்பாடுகளும் 20ஆம் நூற்றாண்டின் தொடக்கம் வரை பிராமணர் கையிலும், சமூகத்தில் உயர்நிலையில் இருந்தோரிடமும் இருந்தன. தாழ்த்தப்பட்டவர்கள், ஒடுக்கப்பட்டவர்கள், தீண்டத்தகாதவர்கள் ஆகியோரின் நிலை மிக மோசமாக இருந்தது. இந்துக் கோவில்களின் உள்ளே அவர்களை அனுமதித்து அவர்களை வழிபாட்டில் பங்கேற்க விடவில்லை. அம்மக்கள் வெளியே உள்ள தெய்வங்களை வணங்கி வந்தனர். மேலும் அவர்கள் தங்கள் குல தெய்வங்களை வணங்குவதில் மனநிறைவு கொண்டனர். பிராமணர்கள் தங்கள் வேத நூல்கள் பற்றிய அறிவை யாருக்கும் வெளியே கற்றுத் தரவில்லை. கத்தோலிக்கக் குருக்களும், கிறித்தவசபைப் பாதிரிமார்களும் சமயத்தைப் போதித்தபோது அவர்கள் ஆற்றிய மறையுரையைக் கேட்டு மனம் மாறிக் கிறித்தவர்களானார்கள்.

மறவர்நாட்டுக் குறுநில மன்னரான சேதுபதி மதுரை மன்னர் திருமலைக் நாயக்கருக்கு எதிராய்ப் புரட்சி செய்தார். திருமலை நாயக்கர் போர்ச்சுக்கீசியரின் உதவியைப் பெற்றார். டச்சுக்காரர்கள் சேதுபதியை ஆதரித்தனர். போர்ச்சுக்கீசியரின் உதவி பெற்றதற்காகத் திருமலை நாயக்கர் கிறித்தவ சமயத்திற்கு மாற விரும்பியவர்களுக்கெல்லாம் அனுமதி அளித்தார். டச்சுக்காரர்களுடன் நட்புக் கொள்ள மாட்டேன் என்றும் உறுதியளித்தார். இறுதியில் மறவர்நாடு மதுரை நாயக்கரின் கைவசமாகியது. 1658இல் டச்சுக்காரர்கள், போர்ச்சுக்கீசியரிடமிருந்து தூத்துக்குடியைக் கைப்பற்றினர். திருமலை நாயக்கர் கடற்கரையை ஐரோப்பியர்களுக்குக் கொடுத்து விட்டு அவர்கள் அளித்த திறைப் பொருளிலேயே மனநிறைவு கொண்டார். மதுரை நாயக்கரிடம் இராபர்ட்-டி-நொபிலிக்கு நல்ல வரவேற்பு கிடைத்தது.

1677இல் சிவாஜி தென்இந்தியாவின்மீது படை எடுத்துத் தஞ்சையில் மராட்டியர் ஆட்சியை நிறுவினார். தெற்கில் சிவாஜியின் முன்னேற்றம் கண்டு கலக்கமடைந்த முகலாய மன்னர் ஔரங்கசீப், சிவாஜியின் முன்னேற்றத்தைத் தடுத்து நிறுத்த முடிவெடுத்தார். 1680இல் சிவாஜியின் மரணம் ஔரங்கசீப்பிற்குச் சாதகமாயிற்று.

1691இல் மறுபடியும் முகலாயப்படை வெற்றி பெற்றது. தஞ்சை, திருச்சிராப்பள்ளியிலிருந்து திறைப் பொருள்களை வசூலிக்கும்

வலிமையையும் பெற்றது. முகலாயரின் அழிவைத் தொடர்ந்து பஞ்சமும், கொள்ளை நோயும் பரவின. கள்ளர்களின் கொள்ளையும், வழிப்பறியும் அதிகரித்தன. எனவே மதுரையிலிருந்த கிறித்தவர்கள் திருச்சிராப்பள்ளியிலும், சத்தியமங்கலத்திலும் தஞ்சம் புக வேண்டியிருந்தது. நாட்டில் உண்டான துன்பதுயரங்களுக் கெல்லாம் கிறித்தவர்களே முக்கியக் காரணம் என்று நம்பப்பட்டது. அதனால் கிறித்தவர்கள் மிகவும் துன்புறுத்தப்பட்டனர்.

1680இல் புனித அருளானந்தர் (ஜான்-டி-பிரிட்டோ) மறவர் நாட்டில் மறை பரப்பும் பணியில் ஈடுபட்டிருந்தார். அப்பொழுது அங்கு மறைப்போதகர்கள் மிகவும் துன்புறுத்தப்பட்டனர். மறைபரப்பும் பணிக்குத் தடை விதிக்கப்பட்டது. இத்தடையைப் புறக்கணித்து மீண்டும் மறை பரப்பும் பணியைத் தொடங்கியதன் பொருட்டு 1693இல் அவர் கொலை செய்யப்பட்டார். அவரது உடல் கழுமரத்தில் கட்டித் தொங்கவிடப்பட்டது.

இராணி மங்கம்மாள் 1689லிருந்து 1706வரையில் ஆட்சி செய்தார். மொகலாயர்களால் மங்கம்மாள் அச்சுறுத்தப்பட்டார். இராணி மங்கம்மாள் நுண்ணறிவும், நல்லாட்சி செய்யும் திறமையும் உடையவராய் இருந்தார். அவர் அமைத்த நல்ல சாலைகளுக்காகவும், அவர் கட்டி எழுப்பிய கோவில்களுக்காகவும், பயணியர் தங்கும் விடுதிகளுக்காகவும், அவர் அளித்த பெருங்கொடைகளுக்காகவும் அவர் புகழடைந்தார் என்றால் மிகையாகாது.

மங்கம்மாளுக்குப் பின் மீனாட்சி ஆட்சிக்கு வந்தார். மீனாட்சி பேரெதிர்ப்புக்களுக்கெதிராகத் தம் நிலையைத் தக்க வைத்துக்கொள்ள முடியவில்லை. மதுரை மீண்டும் பகைவர்களால் சிதறடிக்கப்பட்டபோது ஆர்க்காட்டு நவாப் தன் ஆதிக்கத்தை உயர்த்திக் கொள்ள விரும்பினான். 1734இல் அவனுடைய மகன் சப்தல் அலியும் மருமகன் சந்தா சாகிப்பும் மதுரையையும், தஞ்சையையும் அடிமைப்படுத்த அனுப்பப்பட்டனர். மீனாட்சி, சந்தா சாகிப்பிற்கு அடிபணிந்தார். அவனோ தான் அளித்த வாக்குறுதியைப் புறக்கணித்து அவளைச் சிறையிலடைத்தான். முகமதியப்படை மீண்டும் மதுரையில் தலைமை ஏற்றது. 1736இல் மீனாட்சி பரிதாபமாகச் சிறையில் தற்கொலை செய்து கொண்டதோடு மதுரையில் நாயக்கர் ஆட்சி முடிவுக்கு வந்தது.

இவ்வாறாக, உள்நாட்டுப் பூசல்களாலும், போராட்டங்களாலும், சண்டை சச்சரவுகளாலும் சிதறுண்டு, முகலாயர்களாலும் மற்றும் வடநாட்டுப் படைகளாலும் தொடர்ந்து அச்சுறுத்தப்பட்டு, பஞ்சம், கொள்ளை நோய்களுக்கு ஆளாகி, அஞ்சாத கொள்ளையர்களால் அழிவுண்டு தென்னிந்திய வரலாறு துன்பமும் குழப்பமும் நிறைந்த பதினாறாம் நூற்றாண்டைக் கடந்து வந்துள்ளது. அக்காலக்கட்டங்களில்

வெளிநாட்டு மறைப்போதகர்கள் தென்னகத்தில் நிலவிய பெரும் தடைகளுக்கிடையே தம் மறைப்பரப்பும் திருப்பணியை மக்களிடையே செய்யவேண்டியதாயிற்று. மேலும் தெலுங்கு, உருது, மராத்தி, சமஸ்கிருதம் ஆகிய மொழிகள் ஒன்றன்பின் ஒன்றாய்த் தமிழைப் பெரிதும் தாக்கி ஒதுக்கின. பெரும்பாலான தொடக்ககால நூல்கள் பனை ஓலைச் சுவடிகளில் எழுதப்பட்டு இருந்தன. கத்தோலிக்க, புராட்டஸ்டண்ட் சபையைச் சேர்ந்த மறை பரப்புநர்கள் தமிழுக்கு ஆற்றிய பணி தமிழுக்கு, மறுமலர்ச்சி ஊட்டுவதாகவும், தெளிவு தருவதாகவும் அமைந்தது.

இந்தியாவில் ஆங்கிலேயர் ஆதிக்கம் அதிகரித்தது. இராபர்ட் கிளைவ், வாரன் ஹேஸ்டிங்ஸ், வெல்லெஸ்லி ஆகியோர் இந்தியாவில் ஆங்கிலேயப் பேரரசுக்கு அடிகோலியவர்கள் ஆவர். ஆங்கிலப்படை நல்ல பயிற்சியும், கட்டுப்பாடும் கொண்டதாயும், பலம் வாய்ந்ததுமாயிருந்தது. இந்திய மன்னர்களிடையேயும், தலைவர்களிடையேயும் சரியான ஒற்றுமை இல்லாததே இந்தியாவின் தோல்விக்கு முக்கியக் காரணம் என்று கூறலாம். இந்தியாவில் ஆங்கிலேயர் ஆட்சிக் காலத்தில் சமய, சமூக, பண்பாட்டு வாழ்க்கை மாற்றத்திற்கு இந்தியா இன்னும் சொல்லப்போனால் தமிழகம் உள்ளாகியது.

கத்தோலிக்கத் திருமறைப்போதகர்களின் முயற்சிகளால் அச்சு இயந்திரத்தைக் கொண்டு 1577இல் புன்னைக்காயலில் முதன் முதலாகத் தமிழில் அச்சடிக்கப்பட்டது. 18ஆம் நூற்றாண்டின் இறுதியில்தான் சென்னையிலும், மும்பையிலும் செய்தித் தாள்களை வெளியிட அச்சு இயந்திரங்கள் நிறுவப்பட்டன. அந்த நூற்றாண்டில்தான் ஆங்கிலேயரின் போக்கு இந்தியர்களைப் பொருட்படுத்தவும் அவர்களுடன் நெருங்கிய தொடர்பு கொள்ளவும் செய்யத் தொடங்கியது. இந்திய வரலாற்றில் பொன் எழுத்துக்களால் பொறிக்கப்பட வேண்டிய நாள் 1947 ஆகஸ்ட் திங்கள் 15ஆம் நாளாகும். ஏனென்றால் அன்றுதான் ஆங்கிலேயர், இந்தியர் தாமே தம் நாட்டை ஆண்டு கொள்ள விட்டுச் சென்றனர். ஆங்கிலேயர் ஆட்சிக் காலத்தில் இந்தியா சமூக, தொழில், பண்பாடு, ஆட்சி ஆகிய துறைகளில் மாற்றம் பெற்றது. ஆங்கிலேயர் ஆட்சி நடந்தபோது வெளிநாட்டு மறைப்போதகர்கள் தங்கு தடையின்றிச் சமயப்பணியாற்ற முடிந்தது. மேலும் அவர்கள் ஆங்கில ஆட்சியாளர்களின் முழு ஆதரவைப் பெற்றிருந்தனர்.

# பதினாறாம் நூற்றாண்டு

## புனித பிரான்சிஸ் சேவியர், சே.ச.
## (St.Francis Xavier S.J.) 1506-1552

ஐரோப்பாவிலிருந்து இந்திய நாட்டிற்குக் கிறித்தவ மறையைப் பரப்ப வந்த மறைப்போதகர்களில் முதன்முதலில் இயேசு கிறித்துவின் பன்னிரண்டு சீடர்களில் ஒருவரான புனித தோமையாருக்கு அடுத்த படியாக வந்தவர் புனித பிரான்சிஸ் சேவியர் (சவேரியார்) ஆவார். பிரான்சுக்கும் ஸ்பெயினுக்கும் நடுவில் அமைந்துள்ள நாவார் (Navarre) மாவட்டத்தில், 1506ஆம் ஆண்டு ஏப்ரல் 7-ஆம் நாள் தந்தை யூவான் தெ யாசுக்கும் தாய் டோனா மரியா தெ அஸ்பில் குவேட்டாவுக்கும் கடைசிக் குழந்தையாகப் பிரான்சிஸ் சேவியர் பிறந்தார். இவருடன் பிறந்தவர்கள் இரண்டு சகோதரர்களும் இரண்டு சகோதரிகளுமாவர்.

சிறுவன் சேவியருக்கு ஆறு வயது முடிந்தவுடன் தொடக்கக்கல்வி அவரது சொந்த வீட்டிலேயே கற்றுக் கொடுக்கப்பட்டது. தாய் மொழியாகிய பாஸ்கு (Basque) மொழியைத் தம்முடைய தாயிடமிருந்தும், இலத்தீன் மொழியை அவருடைய பங்குத் தந்தையிடமிருந்தும் கற்றுக் கொண்டார். மேலும் இவர் குதிரைச் சவாரி, கத்திச் சண்டை போன்றவைகளிலும், தேசிய விளையாட்டாகிய கால்பந்து விளையாட்டிலும், உடற்பயிற்சி செய்வதிலும், உயரம் தாண்டுவதிலும் திறமை படைத்தவராய் இருந்தார்.

சிறுவன் சேவியருக்கு ஒன்பது வயது நடக்கும்போது மிகவும் துயரமிக்க நிகழ்ச்சி ஒன்று இவரது குடும்பத்தில் நிகழ்ந்தது. 1515ஆம் ஆண்டு அக்டோபர்த் திங்கள் 16ஆம் நாள் இவரது தந்தை யூவான் தெ யாசு திடீரென்று இறந்து விட்டார். இளைஞன் சேவியரை உயர் கல்வி பயில எந்தக் கல்லூரிக்கு அனுப்புவது என்பது அக்குடும்பத்தில் ஒரு கேள்விக்குறியாக அமைந்தது. யாரும் எதிர்பாராத விதமாகச் சேவியரின் மூத்த சகோதரி மக்தலேனாவிடமிருந்து ஓர் கடிதம் வந்தது. தன்னுடைய இளைய சகோதரன் உயர் கல்வி பயில விரும்புகின்றான் எனக் கேள்விப்பட்டபோது அவரைப் பிரான்சு நாட்டின் தலைநகரிலுள்ள பார் புகழ்ப் பாரீசு பல்கலைக் கழகத்திற்கு அனுப்பும்படி தாயார் டோனா மரியாவுக்குக் கடிதம் எழுதினார். எனவே சேவியரைப் பார்புகழும் பாரீசுப் பல்கலைக்கழகத்திற்கே அனுப்புவது என்று முடிவு செய்தனர்.

ஏறக்குறைய 1525ஆம் ஆண்டு செப்டம்பர் மாத முதற்பகுதியில் சேவியர் பாரீசுக்குப் புறப்பட்டுச் சென்றிருக்க வேண்டும். அன்னை டோனா மரியா, சின்னம்மா லியோலாண்டே, மூத்த சகோதரர் மிகுவேல், சிறிய அண்ணன் யோவான், மாமா மார்ட்டின் இவர்களிடமிருந்து விடைபெற்றுக் கொண்டு பாரீசை நோக்கிப் புறப்பட்டார் சேவியர். ஸ்பெயின் நாட்டின் வட எல்லையாக அமைந்துள்ள பிரென்னே மலைகளைக் கடந்து பிரான்ஸ் நாட்டை அடைந்து 500 மைல் தொலைவுள்ள பிரான்சின் தலைநகரமான பாரீசைச் சென்றடைய வேண்டும். சேவியர் குதிரைமேல் சவாரி செய்துதான் பாரீசு நகரைச் சென்றடைய முடியும். மிகுவேல் லாண்டிவார் நவாரோ என்னும் உதவியாள் ஒருவருடன் சேவியர் பாரீசுக்குப் பயணம் சென்றிருக்கலாம். அவர்தான் சேவியருக்குப் பாரீசில் உதவியாளராக இருந்திருக்கிறார்.

அக்காலத்தில் பாரீஸ் பல்கலைக்கழகம் உலகப் புகழ்பெற்ற பல்கலைக்கழகங்களில் ஒன்றாகும். இப் பல்கலைக் கழகத்தில் இறையியல், சட்டவியல், மருத்துவ இயல், மெய்யியல் ஆகிய நான்கு துறைகளில் மாணவர்கள் கல்வி பயின்று வந்தனர். சபோய் நாட்டினரான பீட்டர் பேபர் (Fabre) சேவியரின் நெருங்கிய நண்பர். இவரும் மெய்யியலும், இறையியலும் கற்கப் பாரீசுக்கு வந்தவர். 1529ஆம் ஆண்டு இனிக்கோ தெ லொயாலா என்னும் புது மாணவர் பார்சலோனாவில் இருந்து மெய்யியலும், இறையியலும் பயிலப் பாரீசுக்கு வந்தார். இனிக்கோ தெ லொயாலாவின் தலைமையில் ஏழு மாணவர்கள் அடங்கிய குழுவினர் பாரீசின் வெளிப்புறமுள்ள சிறு குன்று ஒன்றை நோக்கி நடந்து சென்றனர். இக்குழுவே வருங்கால இயேசு சபையாக உருவாகி உலகின் எல்லாப் பகுதிகளுக்கும் சென்று மறை பரப்பத் தொடங்கியது.

சேவியர் இந்தியாவிற்கு வந்ததன் நோக்கம் எல்லாம் நற்செய்தியை இந்திய மக்களுக்குப் போதிக்க வேண்டும் என்பதே. கி.பி. 52ஆம் ஆண்டு தரை வழியாக இந்தியாவிற்கு முதல்முதலில் வந்தவர் புனித தோமையாராவார். இவரைப்போலவே சேவியரும் நற்செய்தியை அறிவிக்கும் ஆர்வம் கொண்டவராய் 1541ஆம் ஆண்டு ஏப்ரல் 7ஆம் நாள் ''சந்தியாகோ'' என்னும் கப்பல் மூலம் இந்தியா நோக்கிப் பயணம் மேற்கொண்டார். நெடுநாள் பயணத்திற்குப் பின் 1542 மே 6-ஆம் நாள் கோவா வந்தடைந்தார். சேவியரின் உடை முழங்கால் வரை தொடும் ஒரு கறுப்பு அங்கி. அதன்மேல் கையில்லாத ஒரு வெள்ளை சர்ப்பிளிஸ், ஒரு ஜெபமாலை. முட்கள் நடுவே மைல் கணக்காக நடந்து சென்றதால் அந்த அங்கியும் ஆங்காங்கே கிழிந்திருந்தது. அவரது உணவு மீனவர் உண்ட அதே உணவுதான். ரொட்டியும் இல்லை; திராட்சை இரசமும் இல்லை. அரிசியும், பிறர் கொடுத்தால் மீனும் அவரது அன்றாட உணவு. கன்னியாகுமரிவரை அவருக்கு வழித்துணையாகச் சென்ற ஜான் பேரஸ்

அளித்த சாட்சியத்தின்படி ஒரு நாளில் ஒரே ஒருதடவை மட்டும் அவர் உணவு உண்டார். அதுவும் மிகக் குறைந்த அளவில். அவரது படுக்கை வெறுந்தரை அல்லது நார் வேய்ந்த மரக்கட்டில், கெட்டியான தலையணை. போர்த்திக்கொள்ள வேறு துணியில்லை.

பல்கலைக் கழகத்தில் படிக்கும்போதும், வெனிஸ் நகரில் ஆறு மாதங்கள் தங்கியிருந்த போதும் அங்குள்ள மருத்துவமனைகளுக்குச் சென்று பிணியாளர்களுக்குப் பணிவிடை செய்தும், அவர்களுக்கு ஆறுதல் கூறியும் வந்தார். சேவியர் கோவா வந்தடைந்ததும் அங்கு நோய்வாய்ப் பட்டோரிடம் கனிவாய்ப் பேசியும் உதவி செய்தும் வந்துள்ளார். காலைதோறும் மருத்துவமனையில் அவரைக் காணலாம். பிற்பகலில் சிறையில் கைதிகளாக வாடியவர்கள் மத்தியில் இருந்து அன்பான வார்த்தைகளால் ஆறுதல் கூறியும், அவர்களிடம் அன்பு செலுத்தியும் வந்தார்.

சவேரியார் கடலோரக் கிறித்தவர்களோடு நீண்ட நாள்கள் வாழமுடிந்தது என்றால் அவருக்கு உறுதுணையாக நின்றது அவரது அளவற்ற பொறுமைதான். ஆழமான ஆன்மீக வாழ்விலிருந்து சுரந்ததுதான் அந்தப் பொறுமை.

1545 ஜனவரியில் கோவாவில் கப்பலேறிக் கொச்சியில் வந்திறங்கினார். கிழக்கிந்திய நாடுகளிலிருந்து வந்த போர்ச்சுக்கீசிய வணிகர்கள் சிலரைக் கொச்சியில் சந்தித்தார். இவர்கள் கொணர்ந்த செய்தி சவேரியாரின் ஆர்வத்தை மிகவும் தூண்டியது. அச்செய்தி என்னவென்றால் பசிபிக் கடலில் தன்னந்தனியாய் இருந்த மொளுக்கஸ் தீவுகளில் புதிதாக மனந்திருப்பப்பட்ட புதுக் கிறித்தவர்களுக்கு மறையறிவு புகட்ட யாருமில்லை என்பதாகும்.

சவேரியார் இந்தச் சிந்தனையை நெஞ்சில் சுமந்தவராய்க் கொச்சியிலிருந்து மயிலாப்பூருக்குப் பயணமானார். கொழும்பு, யாழ்ப்பாணம் வழியாக முதலில் நாகபட்டினத்தில் இறங்கினார். இங்கிருந்து தோணியில் கடல் பயணமாக மயிலாப்பூர் நோக்கிச் சென்றார். இங்குள்ள திருத்தூதரான புனித தோமையாரின் புகழ்பெற்ற திருத்தலமான சாந்தோம் வந்தடைந்தார். இங்கு 1545 ஏப்ரல் முதல் ஆகஸ்ட் வரை நான்கு மாதங்கள் தங்கினார். இந் நான்கு மாதங்களையும் இங்குப் போர்ச்சுக்கீசிய உறவால் பிறந்த கிறித்தவக் குழந்தைகளுக்கு மறைக்கல்வி புகட்டுவதிலும், இங்குப் அமைந்துள்ள மயிலை மாதாத் திருவுருவத்தின் முன் இறைவனின் திருவுளம் அறிய மண்டியிட்டு மன்றாடுவதிலும் செலவிட்டார்.

''நான் மலாக்கா செல்வதுதான் இறைவனின் திருவுளம் என உணர்ந்து ஆறுதல் அடைந்தேன்'' எனக் கொச்சிக்கு எழுதுகிறார் சவேரியார்.

மொளுக்கஸ் செல்லச் சாந்தோமிலிருந்து 1545 செப்டம்பர் மாத இறுதியில் புறப்பட்டார். மலாக்கா மொழியை அறிந்திருந்த தெ ஈபிரோ என்னும் போர்ச்சுக்கீசிய வணிகருடன் 1545 செப்டம்பர் இறுதியில் மலாக்கா வந்து சேர்ந்தார். மலாக்கா ஓர் பன்னாட்டுச் சந்தையாகத் திகழ்ந்த ஓர் இடமாகும்.

மொளுக்கஸ் தீவுகளுக்குச் செல்லவேண்டும் என்பதே சவேரியாரது திட்டம். ஆயினும் கப்பலுக்காகக் காத்திருந்த நாள்களிலே இந்தியாவில் சாந்தோமில் செய்தது போலவே மலாக்காவில் வாழ்ந்த போர்ச்சுக்கீசியருக்குத் தம்மாலான ஆன்மப் பணிகளைச் செய்து வந்தார்.

பசிபிக்கடலில் தீவுகளுக்குப் பஞ்சமில்லை. மொளுக்கஸ் தீவுகளிலிருந்து கடல் மார்க்கமாகச் சுமார் 600 மைல் தெற்கே அமைந்த அம்போயினாவை ஏறத்தாழ ஒன்றரை மாதப் பயணத்திற்குப்பின் போய்ச் சேர்ந்தார். இங்கிருந்து சற்றுக் கிழக்கே தெர்னாட்டா, மோராக் ஆகிய தீவுகள் உள்ளன. சவேரியார் அங்கேயும் சென்று ஆன்மப் பணியாற்றினார்.

கடற்பயணங்கள் நிறைந்த தம் ஈராண்டுப் பணியை முடித்துவிட்டு 1547 ஏப்ரல் மாதம் இந்தியா திரும்பிவிட்டார். போர்ச்சுக்கல்லிலிருந்து புதிதாகக் குருக்களும், சகோதரர்களும் மறைப் போதகர்களாக வந்திறங்கினர். ஏற்கெனவே இங்குப் பணிபுரிந்து வந்த என்றீக்கசை உதவியாளராக நியமித்தார் சவேரியார்.

தக்க முன்னெச்சரிக்கையோடு சவேரியார் தம்முடைய தமிழ் மொழியாக்கத்தில் பல போர்ச்சுக்கீசியச் சொற்களை அப்படியே பயன்படுத்தினார். உதாரணமாக: இஸ்பிரித்து சாந்து (பரிசுத்தஆவி), மீசா (பூசைத் திருப்பலி), குருசு (சிலுவை), இக்லேசியா (திருச்சபை), பப்திஸ்மா (திருமுழுக்கு), கொன்பசித்தல் (ஒப்புரவு அருட்சாதனம்).

சவேரியார் ஒரு கடிதத்தில் தூத்துக்குடியில், தான் நான்கு மாதங்கள் தங்கியதாகவும், செபங்களை மொழிபெயர்த்த பின் ஒருமாதம் அவற்றை மக்களுக்குக் கற்றுத் தந்ததாகவும் எழுதுகிறார். கடற்படைத் தளபதிகள் தாம் கூறியதை மக்களுக்குத் தமிழில் மொழி பெயர்த்துரைக்கச் சிலரை வேலைக்கு அமர்த்தினர் என்று நமக்குத் தெரியும். ஆனால் கிறித்தவச் செபங்களைத் தமிழில் மொழிபெயர்க்க சவேரியாருக்கு உதவியது யார்? தெரியாது என்கின்றனர் ஷூர்ஹாமரும் அவருக்கு முன் ஆய்வு மேற்கொண்ட காஸ்தத் என்னும் யேசு சபை அறிஞரும்.

சவேரியார் செபங்களையும் பிற கற்பனைகளையும் முதலில் போர்ச்சுக்கீசிய அல்லது இஸ்பானிய மொழி வடிவில் எழுதித் தமிழ் பேசும் மக்களுக்கு அவற்றைக் கற்பித்தார்.முதன் முதலாகத் தமிழில் மறை பரப்பிய தமிழரல்லாதவர் புனித பிரான்சிஸ் சேவியர்தான். இவர் தெருக்களைச் சுற்றி நடந்து மணியடித்துக் கொண்டு மறை போதனை செய்தார். மக்கள் இவரை மணியாட்டி சாமியார் என்று இழிவு படுத்தினர்.

இயேசு சபையினர் அச்சுத்தொழிலைத் தமிழர்கள் நடுவில் அறிமுகம் செய்யப் பெரும் ஆர்வம் காட்டினர். 1550இல் இரு அச்சுப் பொறிகள் கோவா வந்து சேர்ந்தன. இவற்றின் உதவியால் சவேரியார் மொழிபெயர்த்த கிறித்தவப் போதகங்களும், செபங்களும் அச்சிடப்பட்டன. 1578இல் ஜான் டிபாரியா என்ற துறவறச் சகோதரர் கொல்லத்தில் இன்னும் அதிகத் தெளிவான தமிழ் அச்செழுத்துக்களைத் தயாரித்தார். இவற்றைக் கொண்டு பங்குத்தந்தை என்றி என்றிக்கஸ், சவேரியார் முதலில் எழுதித்தந்த ஞானோபதேச நூலை வெளியிட்டார். அதன் ஒரு சிறிய பகுதியை இங்கே காணலாம்.




இதிலிருந்து கிறித்தவத் தமிழின் அன்றைய பரிணாமத்தை வாசகர்கள் எளிதில் புரிந்து கொள்ளலாம்.

இவ்விதம் கிறித்தவத்திற்கே உரிய கிரேக்க-இலத்தீன் கலாச்சாரக் கடலைத் தாண்டித் தமிழ்க் கலாச்சாரத்தில் கலக்க முதலடி எடுத்துவைத்தார் சவேரியார். சுமார் 50 ஆண்டுகளுக்குப்பின் 1606இல் இன்னொரு இயேசு சபை முன்னோடி இதே தூத்துக்குடியில் தமிழ்மொழி கற்றுச் சங்கத்தமிழ் மதுரையில் கிறித்தவச் சொற்களுக்கு மட்டுமல்ல, கிறித்தவத்திற்கே இந்திய கலாச்சார ஆடை அணிவித்தார். அவர் பெயர் இராபர்ட் தெ நொபிலி.

1542ஆம் ஆண்டு போர்ச்சுக்கீசிய வணிகக் கப்பல் ஒன்று புயலில் சிக்கித் திசைமாறி ஜப்பான் கரையோரத்தை அடைந்தது. அப்போது அங்குக் கண்டவற்றையும் கேட்டவற்றவையும் போர்ச்சுக்கீசிய மாலுமிகள்

மலாக்காவில் வந்து கூறியதைக் கேட்டு அறிந்தார் சவேரியார். மலாக்காவிலிருந்து புறப்பட்ட சீனக்கப்பல் ஒன்றில் சவேரியாரும் தோழர்களும் 1549 ஜூன் 24ஆம் நாள் ஜப்பான் நோக்கிப் பயணமாயினர். ஜப்பான் தீவுகளின் தென்கோடியில் அமைந்துள்ள காகோஷிமா துறைமுகத்தில் இறங்கினர். இவ்வாறாகத் தென்கிழக்கு ஆசியாவெங்கும் வலம் வந்துவிட்டார் சவேரியார். ஒரே ஒரு நாடுதான் எஞ்சி நின்றது. அதுதான் சீனம்.

1552 ஏப்ரல் 8ஆம் நாள் சீனாவிற்குப் புறப்படுவதற்கு ஒன்பது நாள்களுக்கு முன் சவேரியார் போர்ச்சுக்கல் மன்னருக்கு எழுதியது என்னவென்றால்,

> "நான் சீனா சென்று அங்கே நற்செய்தியைப் பறைசாற்ற முடிவெடுத்துள்ளேன். இன்னும் ஐந்து நாள்களில் கோவாவிலிருந்து மலாக்காவிற்குக் கப்பல் புறப்படும். அது வழியாகத்தான் சீனத்தை அடைய முடியும். தியோகோ பெரேய்ரா இட்டுச் செல்லவிருக்கும் தூதர் குழுவில் நானும் சேர்ந்து சீனத்தின் மன்னரைச் சந்திப்பேன். அவர் சீன மன்னருக்கு அளிப்பதற்காக விலையுயர்ந்த அன்பளிப்புகளை வாங்கியுள்ளார். மன்னரைச் சந்தித்துப் போர்ச்சுக்கல், சீனம் ஆகிய இரு நாடுகளிடையே ஓர் அமைதி உடன்படிக்கை செய்வார். அதன்படி காண்டோன் சிறைக் கைதிகளை விடுவிக்க முயற்சி எடுப்பார்."

மலாக்காவில் போர்ச்சுக்கீசியரின் தலைவராக இருந்த டோம் அல்வாரோ அத்தெய்டா மலாக்காவிலிருந்து போர்ச்சுக்கீசியக் கப்பல் சீனா செல்வதை ஒரே பிடியாய் மறுத்து விட்டார். வேறு குறுக்கு வழியில் சீனாவிற்குள் நுழையச் சவேரியார் முயற்சிகள் மேற்கொண்டு ஆகஸ்ட் இறுதியில் சான்சியான் தீவில் வந்திறங்கினார். செப்டம்பர், அக்டோபர் மாத அவஸ்தையைக் கடந்து நவம்பர் இறுதிக்கு வந்துவிட்டார். இறுதியில் நடந்தவற்றை அவரது ஊழியர் அந்தோணியோ கூறுகிறார்:

> "திங்கட்கிழமையன்று (1552 நவம்பர் 28) சவேரியார் தம் பேச்சை இழந்தவராய்க் காணப்பட்டார். இங்ஙனம் மூன்று நாட்கள் முடங்கிக் கிடந்தார். வியாழக்கிழமை நண்பகல் வேளையில் சுயநினைவுக்கு வந்தார். ஆனால் அவர் பேசியதெல்லாம் பிதா, சுதன், பரிசுத்த ஆவியான மூவொரு இறைவன் போற்றப்படுவாராக... இயேசு இறைமகனே! என்மீது இரக்கம் காட்டும்... இறைவனின் கன்னித்தாயே என்னை நினைவு கூர்ந்தருளும் போன்ற

> முனங்கல் செபங்கள்தாம். வெள்ளி நடுச்சாமம் முடிந்து சனிக்கிழமை உதயமாகும் வேளையில் அவர் சாகப்போவதைக் கவனித்தேன். உடனே எரியும் மெழுகுவர்த்தி ஒன்றை அவர் கையில் வைத்தேன். இயேசுவின் பெயரை உச்சரித்துக்கொண்டே அவர்தம் உயிரை இறைவனிடம் ஒப்படைத்தார்.''

சான்சியான் தீவுக்கரையில் 1552 டிசம்பர் மூன்றாம் நாள் புலரும் வேளையில் இறைவனடி சேர்ந்தார். 1553 பிப்ருவரி மாதம் சவேரியாரின் அழியா உடல் மலாக்காவுக்குக் கொண்டுவரப் பட்டது. 1554ஆம் ஆண்டு மார்ச் 16ஆம் தேதி அவரது உடல் கோவாவிற்குக் கொண்டு வரப்பட்டது. 1619ஆம் ஆண்டு அக்டோபர்த் திங்கள் 25ஆம் நாள் சவேரியார் அடிகளுக்கு முத்துப்பேறு பட்டம் உரோமையில் வழங்கப்பட்டது. 1622 மார்ச் 12ஆம் தேதி அருட்தந்தை பிரான்சிஸ் சவேரியாருக்குப் புனிதர் பட்டம் சூட்டப்பட்டது. புனிதரின் அழியா உடல் இன்னும் கோவாவில் பாம் ஜேசு பேராலயத்தில் உள்ளது.

**புனித சவேரியாரின் கிறித்தவத் தமிழ்ப் படைப்புகள்**

1542-43இல் சவேரியாரின் படைப்பு: தூத்துக்குடி மீன்பிடி கடற்கரையில் ஒரு முக்கியமான நகரமாகத் திகழ்ந்தது. சவேரியார் 1542-ஆம் ஆண்டு அக்டோபர் மாதக் கடைசியில் தூத்துக்குடியை வந்தடைந்து அங்கு நான்கு மாதங்கள் தங்கினார். அந்த நாள்களில் அவர் மொழிபெயர்ப்பாளர்களின் உதவி கொண்டு கடின உழைப்பிற்குப் பின் சின்னக் குறிப்பிடத்தைத் தமிழில் மொழிபெயர்த்தார். அவர் எழுதிய கடிதத்தில்,

> ''கடின உழைப்பிற்குப்பின் நாங்கள் சிலுவை அடையாளத்தில் தொடங்கிப் பல செபங்களைத் தமிழில் மொழி பெயர்த்துள்ளோம். இந்தச் சிலுவை அடையாளச் செபத்தில்தான் நாம் ஆள்வகையிலே மூவராயும் ஆனால் ஒரே கடவுளாகவும் இருக்கும் இறைவனைப் பற்றிய விசுவாசத்தை ஏற்றுக் கொள்கின்றோம். சிலுவை அடையாளச் செபத்திற்குப்பின் சமயக் கோட்பாடு (Creed), பரலோகத்திலிருக்கிற எங்கள் பிதாவே, அருள் நிறைந்த மரியே வாழ்க, கிருபைதயாபத்திற்கு மாதாவாயிருக்கிற எங்கள் இராக்கினியே, பாவ மன்னிப்பு போன்ற செபங்களை இலத்தீன் மொழியிலிருந்து தமிழில் மொழிபெயர்த்துள்ளோம்''

என்று எழுதியுள்ளார். (lett 20-2)

மேற்கண்ட செபங்களை மொழிபெயர்த்தபின் மக்களுக்கு எவ்வாறு போதித்தார் என்பதை ஒரு கடிதத்தில் சவேரியார் பின்வருமாறு கூறியுள்ளார்.

''முதலில் நாங்கள் விசுவாசப் பிரமாணத்தை ஒப்பிக்கின்றோம். அது முடிந்தவுடன் 'இயேசு கிறிஸ்து இறைவனின் மகன். எவ்விதச் சந்தேகமுமின்றி முதல் விசுவாசச் சட்டப்பிரிவை (பரலோகத்தையும் பூலோகத்தையும் படைத்த எல்லாம் வல்ல பிதாவாகிய சர்வேசுரனை விசுவசிக்கிறேன்) நாங்கள் உறுதியாக நம்ப எங்களுக்கு அருள் புரிவீர்' என்று நான் சொல்லுவதை என்னுடன் சேர்ந்து மற்றவர்களும் சொல்வார்கள். மேலும் இறைவனின் அருள்வேண்டி நாங்கள் ஒரு 'பரலோகத்திலிருக்கிற எங்கள் பிதாவே' செபத்தைச் சொல்கின்றோம். அது முடிந்தவுடன் நாங்கள் எல்லோரும் சேர்ந்து இறைவனின் மகனான இயேசு கிறிஸ்துவின் தாயாகிய புனித மரியாளிடம் அவளது திருக்குமாரன் இயேசுகிறிஸ்துவிடமிருந்து எங்களுக்கு முதல் விசுவாசச் சட்டப் பிரிவை எவ்விதச் சந்தேகமுமின்றி உறுதியாக நம்ப அருள் பெற்றுத்தரும்படி அவளது பெயரில் 'அருள் நிறைந்த மரியே' என்ற செபத்தைச் சொல்கிறோம். நாங்கள் இதே முறையில் ஏனைய விசுவாசச் சட்டப்பிரிவுகளை ஒப்புவித்து, செபம் செய்வோம். பன்னிரண்டு விசுவாசப் பிரமாணங்களும் முடிந்தபின் அதே முறையில் நாங்கள் பத்துக் கட்டளைகளை (Ten Commandments) வரிசைக் கிரமமாக இதே முறையில் ஒப்புவிக்கின்றோம்.''

(Lett.-20-3-4)

சவேரியார் மற்றொரு கடிதத்தில்,

"தன்னுடைய குற்றத்தை ஏற்றுக்கொண்டு, பிதா, சுதன், தூய ஆவி என்று தொடங்கி அவர்களாகவே மூன்று முறை சிலுவை அடையாளம் வரைந்து கொண்டு ஒரே ஒரு கடவுளை ஏற்றுக் கொள்ளும்படியாகச் செய்கின்றேன். இது முடிந்ததும் நாங்கள் உத்தம மனஸ்தாப மந்திரத்தைச் சொல்கின்றோம். அதன்பின் சமயக் கொள்கைகள், தேவ அருட்சாதனங்கள், பரலோகத்திலிருக்கிற எங்கள் பிதாவே, அருள் நிறைந்த மரியே, கிருபைதயாளத்திற்கு மாதாவாயிருக்கிற எங்கள் இராக்கினியே ஆகிய செபங்களைச் சொல்வோம். இச் செபங்களையெல்லாம் இரண்டு ஆண்டுகளுக்கு முன்பே இப்பகுதி மக்களின் மொழியில் (தமிழில்) மொழிபெயர்த்துள்ளேன்''

என்று எழுதியுள்ளார்.

தமிழில் வினா-விடை வடிவில் எழுதிய சமயக் கோட்பாடுகளின் மூல நூல் பாடத்தைப்பற்றிச் சவேரியார் எந்தவிதக் குறிப்பும் எழுதவில்லை. ஆனால் மன்சில்ஹாசுக்கு எழுதிய ஒரு கடிதத்தில் அவர் தம்முடைய மொழிபெயர்ப்புப் பற்றிக் கூறுகின்றார்,

> ''சமயக்கோட்பாட்டு மூல நூலில் விசுவாசப் பிரமாணத்தில் 'வேணும்' என்பதற்குப் பதிலாக 'விசுவாசம்' என்று சொல்லவேண்டும். ஏனென்றால் வேணும் என்றால் நான் விரும்புகின்றேன், விசுவாசம் என்றால் நான் நம்புகின்றேன் என்று பொருள். இறைவனை ஆசிக்கின்றேன் என்பதைவிட இறைவனை நம்புகின்றேன் என்று சொல்வது மேல். அதேபோல் கட்டாயம் என்று சொல்லக்கூடாது. ஏனென்றால் கிறிஸ்து தானாகவே விருப்பத்தோடு துன்புற்றார். கட்டாயத்தினால் அல்ல.'' (lett.24.4)

1544ஆம் ஆண்டு 27ஆம் தேதி மார்ச் மாதம் மணப்பாட்டில் எழுதிய மேற்கண்ட கடிதத்திலிருந்து சவேரியாரின் முதல் மொழிபெயர்ப்பின் குறைகளையும் அவற்றிலுள்ள பிழைகளைத் திருத்துவதற்குச் சவேரியார் எடுத்துக்கொண்ட ஒரு விழிப்புணர்ச்சியையும் நாம் காணமுடிகிறது.

1548ஆம் ஆண்டுத் தொடக்கத்தில் மலாக்காவிலிருந்து திரும்பி வந்தபின் மீன்பிடிக் கடற்கரையோரத்தில் தந்தை கிரிமினாலி, தந்தை என்றி என்றிக்கஸ் உட்பட அனைத்து மறைப்போதகர்களையும் மணப்பாட்டிற்கு வரவழைத்து, அவர்களிடம் கிறித்தவ மதக் கோட்பாடுகளைக் கற்பிப்பதின் முக்கியத்துவத்தையும், இந்திய மறைமாவட்டக் குருவான தந்தை கோயெல்கோவிடம் ஒவ்வொரு வாரமும் ஆலயங்களில் வாசிப்பதற்காக அப்போஸ்தலர்களுடைய அடையாளமான 'அறிவிப்பு' என்பதைத் தமிழில் மொழிபெயர்க்கச் சொல்லியிருப்பதையும் சவேரியார் எழுதிய நெறிமுறையின் வாயிலாக அவர்களுக்கு நினைவூட்டினார். (Lett.64)

1549ஆம் ஆண்டில் தந்தை கிரிமினினாலி புறமதத்தவரால் கொலையுண்டபின் மறைப்போதகர்கள் என்றிக்கஸ் அடிகளைத் தலைவராகத் தேர்ந்தெடுத்தனர். அச்சமயம் அவர் கோவாவிற்கு எழுதிய கடிதத்தில்,

> "சவேரியார் எழுதிய செபங்களை புதிய மொழிபெயர்ப்பு செய்து கொண்டிருக்கிறேன். ஏனென்றால் சவேரியார் செய்த மொழிபெயர்ப்பில் சில பிழைகள் இருந்தன. அவர் எழுதிய மதக்கோட்பாட்டையும் செபங்களையும் மொழிபெயர்த்துள்ளேன்''.

என எழுதியுள்ளார்.

1607ஆம் ஆண்டு நொபிலி மதுரையில் அந்தணர்கள் மத்தியில் மறைபோதனைக்காக ஒரு துறையை நிறுவினார். அவர் செபங்களின் மொழியைச் செம்மைப்படுத்தினார். இவ்வாறாக மதக்கோட்பாடுகளும், செபங்களும் சவேரியாரால் மொழிபெயர்க்கப்பட்டு, தந்தை என்றிக்கஸ், தந்தை நொபிலி ஆகியோரால் செம்மைப் படுத்தப்பட்டன. சில சொற்களை இவர்கள் மூவரும் கையாண்ட விதத்தைக் கீழே காணும் அட்டவணையில் காணலாம்.

| Xavier | Henriques | De Nobili |
|---|---|---|
| **Credo (விசுவாசப் பிரமாணம்)** | | |
| 1. Creo<br>எனக்கு விசுவாசம் | vicchuvadikiren<br>விசுவசிக்கிறேன் | vicchuvadikiren<br>விசுவசிக்கிறேன் |
| 2. Deus<br>கடவுள் | Tambiran<br>தம்பிரான் | Saruvissuren(Sarvesureshiven)<br>சர்வேற்சுரன் |
| 3. Filho | Maguen(மகன்) | Sutan (சுதன்) |
| 4. Spiritu | Chutumana Ispiritu | Ireberidai Tondia nesan<br>(இருவரிடை தோன்றிய நேசன்) |
| 5. Padeceo(vaopinale) | Padupattu | Padupattu(பாடுபட்டு) |
| 6. Igreja Catholica | Katholika agina Ikiresa | Sarvissuren aria Poducuttam<br>(சர்வேஷ்ரனை அறியப் பொதுக்கூட்டம்) |
| 7. Ajuntamento dos Santos | Chutumanavergal cuttam | Nat palengalil perum berucu<br>(நற்பலன்களில் பெரும் பெருக்கு) |
| **Pater Noster (பரலோகத்திலிருக்கின்ற எங்கள் பிதாவே)** | | |
| 8. em os ceos ceo | vanamgalil chorcam (svargam)<br>வானங்களில் சொர்க்கம் | moquixam (moksam)<br>மோட்சம் |
| 9. Sanctificado Saja o | naaman chutuamana<br>சுத்தமான நாமம் | Naamatei ellarum condaranome<br>நாமத்தை எல்லோரும் கொண்டாரணும் |
| **Ave Maria (அருள் நிறைந்த மரியே வாழ்க)** | | |
| 10. graca | Kirushei(grace) | |
| **Commandments of the Church (திருச்சபைக் கட்டளைகள்)** | | |
| 11. Misa | Misa (Misei) | Pugei. Christu pugei (pusai)<br>பூசை, திருப்பலி |
| 12. Confesar | kompesari (confession)<br>ஒப்புரவு சாதனம் | |
| 13. Christao | Prangui christ<br>பரங்கிக் கிறித்தவன் | |

| | |
|---|---|
| 14. Coresma | Koresimai |
| 15. Comunham | Sanrisima sakiramento<br>திருவருள் சாதனம் |
| 16. Pascoa | Pasukui (இயேசுவின் உயிர்ப்புப் பற்றிய) |
| 17. Quatro Temporas | Katuru Temporas |
| 18. Disimo | tisimul |
| 19. Avaresa | |

**Moral Virtues (நன்நெறிப் பண்பு)**

| | |
|---|---|
| 20. castidade | |
| 21. temperance | temporanjai (temperance)<br>மட்டான குடிப்பழக்கம் |

**Theological Virtues (இறையியல் பண்புகள்)**

| | |
|---|---|
| 22. virtudes theologais | teylokayis-an virututhei |
| 23. ostia | ositia |
| 24. oalix | kalisu |

தமிழில் மதக்கோட்பாட்டை வினா விடை முறையில் மொழிபெயர்த்த அதே நேரத்தில் புனித பிரான்சிஸ் சேவியர் (சவேரியார்) சமயப் போதனையையும் எழுதினார். இச்சமயப் போதனையைப் புதிதாக மதம் மாற இருப்பவர்களுக்கு அவர் கூறுவது வழக்கம். இவ்வாறாகச் சவேரியார் மறைப் போதகத்துக்காகச் செபங்களையும், மதக் கோட்பாடுகளையும், சமயப் போதனையையும் அரும்பாடுபட்டுத் தமிழில் மொழிபெயர்த்துள்ளார்.

## தந்தை என்றி என்றிக்கஸ், சே.ச. (Hentrique Hentriques S.J.) 1520-1600

என்றி என்றிக்கஸ் 1520ஆம் ஆண்டு போர்ச்சுக்கல் நாட்டில் வில்லா விசியோசா என்னும் ஊரில் பிறந்தார். அவர் முதலில் பிரான்சிஸ்கன் துறவறச் சபையில் சேர்ந்தார். ஆனால் இவரது பெற்றோர் யூதர்களாய் இருந்ததால் அச்சபையை விட்டு விலக நேர்ந்தது. பின்பு 1545-ஆம் ஆண்டு வரை 'கோய்ம்பரா' பல்கலைக் கழகத்தில் சமயம் சார்ந்த சட்டங்களைக் கற்றார். ஒரு சில ஆண்டுகள் கழித்துத் தமக்கு வந்த சொத்தையெல்லாம் ஏழைகளுக்குத் தானமாகக் கொடுத்துவிட்டு இயேசு சபையில் துறவியாகச் சேர்ந்தார். 1546ஆம் ஆண்டு முழுநிலைக் குருவாகத் திருநிலைப்படுத்தப்பட்டபின் கோவாவை நோக்கிப் பயணமானார். அவர் அங்கு 1547ஆம் ஆண்டுத் துவக்கம் வரை தங்கியிருந்தார். பின்னர்த் தூய பிரான்சிஸ் சவேரியார், தந்தை

என்றி என்றிக்கஸ் அடிகளை மீன்பிடிக் கடற்கரையோரம் உள்ள கிறித்தவர்களைக் கண்காணிக்க அனுப்பினார். புனித சவேரியாரின் வேண்டுகோளுக்கிணங்க அச்சமயம் கோவாவில் இருந்த என்றி என்றிக்கஸ் என்னும் இளந்துறவியை மாநிலத் தலைவர் கன்னியாகுமரிக்கு அனுப்பி வைத்தார். 1546ஆம் ஆண்டு இறுதியில் கடற்கரை நகரமான தூத்துக்குடிக்கு வந்தார். தந்தை அந்தோணி கிரிமினாலின் வழிகாட்டலில் புன்னைக்காயல், தூத்துக்குடி, மற்றும் மிகப் பெரிய ஊர்களும் என்றிக்கஸ் அடிகளுக்கு மறைப்பணித்தளமாகக் கொடுக்கப்பட்டன. சில குறைந்த இடைவேளைகளைத் தவிரத் தம் வாழ்நாள் முழுவதையும் புன்னைக்காயலைத் தலைமையிடமாகக் கொண்டு கழித்தார். தூத்துக்குடி, வேம்பாறு, குமரிமுனை, மணக்குடி, காயல்பட்டணம், மன்னார் முதலிய இடங்களில் பணியாற்றினார் என்பதைத் தந்தை இவ்வூர்களிலிருந்து எழுதிய கடிதங்களிலிருந்து அறிய முடிகின்றது.

இவர் தமிழ் நாட்டில் 50 ஆண்டுகளுக்கு மேலாக உழைத்துத் தம் அறிவாலும், பண்பாலும், தூய வாழ்க்கையாலும், சேவை மனப்பான்மையாலும் மக்களின் மனத்தைக் கொள்ளை கொண்டார். இவர் 1600 பிப்ருவரி மாதம் 6ஆம் நாள் புன்னைக்காயலில் இயற்கை எய்தினார். அப்போது மக்கள் அவருக்குக் காட்டிய அன்பின் வெளிப்பாட்டிற்கு எல்லையே இல்லை. கிறித்தவ மக்கள் மட்டுமின்றிக் காயல் பட்டணத்தில் வாழ்ந்த முகம்மதியர்களும், அந்தச் சுற்றுவட்டாரத்தில் வாழ்ந்த இந்து மக்களும் தங்கள் கடைகளை மூடிவிட்டு அவருக்காக நோன்பிருந்ததாக வரலாற்றறிஞர் ஷெராமர் கூறுகின்றார். ஆறு தோணிகளில் மக்கள் புடைசூழ இவரது புனித உடல் தூத்துக்குடிக்கு எடுத்துச் செல்லப்பட்டு அங்குள்ள புனிதப் பனிமய மாதா ஆலயத்தில் அடக்கம் செய்யப்பட்டது. இதன்பின்பு பல போராட்டங்கள் தூத்துக்குடியில் நடந்த படியாலும், ஆலயங்களும் பிற கட்டடங்களும் அழிக்கப்பட்ட படியாலும் இவரது கல்லறை எங்கிருக்கிறது என்று அறியமுடியவில்லை. எனினும் பனிமய மாதா ஆலயத்தில் பல்லாண்டுகளாகக் கண்ணாடிப் பேழை ஒன்றில் வைக்கப்பட்டிருந்த எலும்புகள் இன்னும் இருக்கின்றன. இதே போன்று கொடைக்கானல் செண்பகனூரில் அமைந்துள்ள தூய இருதயக் கல்லூரியில் உள்ள மதுரை மறை மாநில ஆவணக் காப்பகத்தில் தந்தை என்றிக்கஸின் கை எலும்பு ஒரு கண்ணாடிப் பேழையில் உள்ளது.

1548-ஆம் ஆண்டு அக்டோபர்த் திங்கள் 31ஆம் நாளில் என்றிக்கஸ் அடிகள் உரோமையில் உள்ள சபைத் தலைவருக்கு எழுதிய கடிதத்தில்,

''முத்துக்குளித் துறைக்கு வந்த உடனே இங்குள்ள மொழியைப் பேசவும், படிக்கவும் முயன்றேன். ஆனால் அது எவ்வளவு கடினமாயிருந்ததென்றால் அதை நான் ஒருக்காலும் படிக்கமுடியாது என்று நினைத்துத் தளர்ச்சியுற்றுக் கைவிட்டேன். ஆகவே எப்பொழுதும் ஒரு தொம்பாசியைப் (மொழிபெயர்ப்பாளர்) பயன்படுத்தினேன். சவேரியார் மொலுக்காசு நாட்டிலிருந்து 1548 பெப்ருவரித் திங்களில் திரும்பி வந்த பொழுது எனக்கு இரண்டு தமிழ்ச் சொற்களுக்கு மேல் தெரியாது....''

இதே பிரச்சினையைப் புனித பிரான்சிஸ் சவேரியாரும் எதிர்கொண்டார். 1544 ஜனவரியில் இயேசுசபைத் தோழர்களுக்கு சவேரியார் எழுதிய கடிதத்தில் பின்வருமாறு கூறுகின்றார்.

''நாங்கள் ஒருவரை ஒருவர் புரிந்து கொள்ள முடியவில்லை. ஏனென்றால் நான் காஸ்திலியன் மொழி பேசுகின்றேன். அவர்கள் மலபார்(தமிழ்) மொழி பேசுகின்றனர். ....''

புகழ் பெற்ற இத்தாலிய இயேசுசபைக் குரு அலெக்சான்ரோ வலிங்னோ 1574-ஆம் ஆண்டு பார்வையாளராக இந்தியா வந்தார். மறு ஆண்டு தமிழகத்தின் மீன்பிடிக் கடற்கரையைப் பார்க்க வந்தார். அவர் கோவா சென்ற போது அவருடன் தந்தை என்றி என்றிக்கசைக் கூட்டிச் சென்றார். 1575ஆம் ஆண்டு இந்தியாவிலுள்ள இயேசுசபை மாநிலத் தலைவர்களின் குழு கூடியது. அக்கூட்டத்தில் வேறுபல காரியங்களோடு மறைப்பணி செய்வதற்கான படைப்புகளை அம்மண்ணின் கிறித்தவ மக்களுக்குத் தயார் செய்ய வேண்டும் என்று தீர்மானம் செய்யப்பட்டது.

பார்வையாளராக வந்த வலிங்னோ அடிகளார் தமிழ் மொழியில் கிறித்தவத் திருமறையின் போதனைகளைப் படிப்பிக்கும் நூல் ஒன்றும் இல்லாதது கண்டு, மிகவும் மனம் நொந்து அத்தகைய குறையைப் போக்குமாறு என்றிக்கஸ் அடிகளாருக்கு மறையைப் போதிக்கும் பணியிலிருந்து விடுவித்து நூல்களைத் தயார் செய்யுமாறு உத்தரவிட்டார். நான்கு நூல்களை அவர் உடனே இயற்ற வேண்டியிருந்தது.

மேல்நாட்டினருள் முதன் முதலாகத் தமிழ் மொழியை முறையாகவும், இலக்கண வரம்போடும் கற்றவர் என்றிக்கஸ் அடிகளாவார். இவர்தான் வெளிநாட்டவர் பேச்சுத் தமிழைக் கற்பதற்கு, முதன் முதலாக இலக்கணம் வகுத்தவர். இலக்கணம் வகுத்தபின் தமிழ்-போர்ச்சுக்கீசிய அகராதி ஒன்றையும் எழுதித் தமிழ் மொழியை முறையாகப்

பிற ஐரோப்பியர்களுக்குக் கற்றுக் கொடுத்தார். மேலும் நூல்கள் பல படைத்து அச்சிட்டுத் "தமிழ் அச்சுத் தந்தை" என்ற பெயரும் பெற்றார்.

என்றிக்கஸ் அடிகள் 1548 அக்டோபர் 31ஆம் நாள் உரோமைக்கு எழுதிய கடிதத்தில் பின்வருமாறு எழுதியுள்ளார்.

> "எனக்கு மொழி பெயர்த்தவர் வேறொரு வேலையாய்ப் போய்விட்டபடியால் இம்மொழியைக் கற்கத் தீர்மானித்து இரவு பகலாக இவ்வேலையிலேயே ஈடுபட்டேன். எனினும் எனது பொறுப்பிலிருந்த இடங்களைக் கண்காணிக்கத் தவறவில்லை. கடவுளும் மிகவும் உதவி செய்தார். இதைக் கற்க ஒரு புதிய முறையைக் கண்டுபிடித்தேன். இலத்தீன் மொழியைக் கற்கும்போது இணைப்புச் சொற்கள் (conjunctions), வினை வேற்றுமைகளை நாம் படிப்பதுபோல் இம்மொழியைப் படிக்கும் போது அவ்வினைச் சொற்களை வேற்றுமையோடு அதாவது அவற்றின் இறந்த காலம், எதிர்காலம், வினையெச்சம் முதலியவற்றோடு கற்றேன். இவ்வாறு செய்ய நான் மிக அதிகமாக உழைக்க வேண்டியிருந்தது. மேலும் இரண்டாம் வேற்றுமை, நான்காம் வேற்றுமை, ஆறாம் வேற்றுமை ஆகிய வேற்றுமைகளையும் கற்றேன். பெயர்ச்சொல்லா, இடப்பெயரா, அல்லது வினைச்சொல்லா, எதை முதலில் போடுவது என்பது பிறகு எனக்கு விளங்கிற்று. இதையெல்லாம் இந்த மக்களோடு அவர்தம் மொழியில் உரையாடுங்கால் இவ்வளவு குறுகிய காலத்தில் கற்று விட்டேன் என்று அனைவரும் மிக்க வியப்புற்றார்கள். நான்கு, ஐந்து அல்லது ஆறு ஆண்டுகளாகச் சில போர்ச்சுக்கீசியர்கள் இம்மொழியிலுள்ள சில சொற்களைக் கையாண்டு வருகிறார்கள். ஆனால் நிகழ்காலத்தைப் பயன்படுத்துவதற்குப் பதிலாக எதிர்காலத்தைக் கையாளுகின்றனர். எது எந்தக் காலத்தைக் குறிப்பிடுகிறது என்று அவர்களுக்குத் தெரியவில்லை. அவர்கள் மொழியை நான் தக்க காலம், இடம், பால் முதலியவற்றைப் பயன்படுத்திப் பேசுவதைக் கேட்கும்போது இந்த நாட்டு மக்களுக்கு வியப்பாய் இருக்கின்றது. மேலும் ஐந்து மாதத்திற்குள் இத்தகைய முன்னேற்றம் அடைந்து விட்டேன் என்பதைக் காணும்போது அவர்களது வியப்பு இன்னும் அதிகமாயிற்று. இவ்வாறு நான் செய்திருக்க முடியாது என்று சொல்லுகிறார்கள். இது தவிர எழுதவும், வாசிக்கவும்

நான் கற்றிருக்கிறேன். இதே மொழியில் நான் பேசுவதோடு சொற்பொழிவும் ஆற்றுகின்றேன். ஆனால் உச்சரிப்பு மிகக் கடினமாக இருப்பதாலும், நம்முடைய மொழியினின்று மிகவும் வேறுபட்டிருப்பதாலும் எல்லோரும் சில நேரங்களில் நான் செய்யும் தவறுகளைக் கண்டிப்பதில்லை.''

''குருக்கள் இம்மொழியை எளிதில் பயிலும் வண்ணம் சவேரியாரின் கட்டளைக்கிணங்கி ஓர் இலக்கணம் கடவுள் அருளால் செய்யப் போகின்றேன். இம்மொழியில் பேசினாலும் அல்லது மொழி பெயர்ப்பாளரின் உதவியோடு பேசினாலும் மிகவும் பயன்படக்கூடிய இலக்கண விதிகள், வினை வேற்றுமைகள், பெயர் வேற்றுமைகள் முதலியவற்றை அதில் அமைக்கப் போகின்றேன். சென்ற இரண்டு மூன்று மாதங்களாக நான் தங்கியிருக்கும் இந்த ஊரும் (வேம்பாறு) பக்கத்திலுள்ள வேறொரு சிற்றூரும் (வைப்பாறு- சிப்பிகுளம்) என் பார்வையில் இருக்கின்றன. இதனால் இம்மொழியைப் பயில்வதற்கு எனக்கு மிகுந்த நேரம் கிடைக்கின்றது....''

தமிழ் மொழியைச் சிறந்த முறையில் கற்று, அதைப் பேசவும் எழுதவும் தெரிந்தபின்பு என்றிக்கஸ் அடிகள் நூல்கள் எழுதவும் மொழி பெயர்க்கவும் தொடங்கினார். தமிழ் மொழியில் கிறித்தவத் திருமறையின் கொள்கைகளைப் படிப்பிக்கும் நூல்களைப் படைக்கத் தொடங்கினார்.

### அடிகளின் படைப்புகள்

1600ஆம் ஆண்டு எழுதிய வருடாந்திரக் கடிதத்தில் அடிகளின் படைப்புக்கள் பின்வருமாறு:

1. முக்கியமான புனிதர்களின் வாழ்க்கை வரலாறு (Flos Sanctorum)
2. பாவக் கழுவாய் செய்வதற்கான கையேடு. (Confessionary) தமிழில் மொழியாக்கம் செய்த நூல்கள் ''ஞான உபதேசம்'' ''பாவசங்கீர்த்தனம்'' ஆகிய இரண்டும் ஒரு பகுதியாக வெளியிடப்பட்டதில் ஒரு பிரதி ஆக்ஸ்போர்டு பல்கலைக் கழகத்தின் நூலகத்தில் உள்ளது.
3. கிறித்தவக் கொள்கைகள்.(Catechism) வினா-விடை (மார்க்ஸ் ஜார்ஜ் நூலின் மொழியாக்கம்)
4. கிறிஸ்துவின் வாழ்க்கை வரலாறு. (படைப்புக்காலம் தொட்டுக் கிறிஸ்து விண்ணகம் சென்றது வரை) 1601ஆம் ஆண்டு எழுதிய வருடாந்திரக் கடிதங்களில் என்றிக்கஸ் அடிகள் மேலும் சில நூல்கள் எழுதியுள்ளதைப்பற்றிக் கூறுகின்றார்.

5. தமிழ் இலக்கணம்
6. தமிழ்-போர்ச்சுக்கீசிய அகராதி
7. இந்துக்களின் கதைகளை விவாதித்து அவை தவறென மறுத்தும் தெய்வத் தன்மையுள்ள மறைக்குப் பாதுகாப்பு அளித்தும் எழுதியுள்ள நூல்.

இவர் போர்ச்சுக்கீசிய மொழியில் தமிழைப்பற்றி 70 கடிதங்கள் எழுதியுள்ளார். மேலே 5, 6, 7 என்று குறியிடப்பட்டுள்ள புத்தகங்கள் இதுவரை அகப்படவில்லை. லிஸ்பனில் உள்ள போர்ச்சுக்கீசிய மொழியில் உள்ள தமிழ் இலக்கணம் என்ற நூல் இவ்வாசிரியர் எழுதியதா அல்லது வேறொருவர் எழுதியதா எனத் தெரியவில்லை. மேலும் சகோதரத்துவ அன்பைப் பற்றி 13 பகுதிகளாகப் பிரித்து ஆய்வுக் கட்டுரைகள் அடங்கிய நூல் ஒன்றைப் படைத்துள்ளார். அது இன்னும் கடற்கரைப் பகுதிகளில் நடைமுறையில் உள்ளது. அதன் பெயர் 'கொம்பேரி சபை' யாகும். இந்த வார்த்தையின் முதல் எழுத்துச் சிதைந்து விட்டது. இதன் பொருள் 'சகோதரத்துவம்'.

### அச்சடித்த படைப்புக்கள்

1578இல் கொய்லானில் உருவாக்கிய தமிழ் அச்செழுத்துக்களைப் பயன்படுத்தி அச்சடிக்கப்பட்ட தமிழ்ப் படைப்புக்கள் அநேகமாகும். நம்மிடம் குறைந்தது மூன்று நூல்கள் உள்ளன. அவை தம்பிரான் வணக்கம், கிரீசித்தியானி வணக்கம், தமிழ் அடியார் வரலாறு ஆகும்.

### தம்பிரான் வணக்கம்

என்றி என்றிக்கஸ் அடிகள் எழுதிய செபங்கள் அடங்கிய முதல் நூல் இதுவேயாகும். கத்தோலிக்க மக்களால் பயன்படுத்தப்பட்ட இந்நூலில் அடங்கியுள்ள செபங்கள் பொதுவாக மனப்பாடம் செய்யப்பட்டன. அவை: 1. சிலுவை அடையாளம் 2. விசுவாச அறிக்கை 3. பத்துக் கட்டளைகள் 4. திருச்சபைக் கட்டளைகள் 5. பரலோகத்திலிருக்கிற எங்கள் பிதாவே 6. அருள் நிறைந்த மரியே 7. கிருபை தயாளத்துக்கு மாதாவாய் இருக்கின்ற எங்கள் இராக்கினியே 8. பாவக்கழுவாய் செபம் 9. i) திரு அருட் சாதனங்கள் ii) தலையாய பாவங்கள் iii) ஈகைச் செயல்கள்- ஆன்ம ரீதி-உடல் ரீதி (ஒவ்வொன்றிலும் 7) iv) ஐம்புலன்கள் v) இறையியல் சார்ந்த புண்ணியங்களான விசுவாசம், நம்பிக்கை, உள்ளன்பு vi) தலையாய புண்ணியங்கள் vii) ஆன்ம விரோதிகள்: உலகம், ஊன், சாத்தான் viii) இறுதிச் செயல்பாடுகள்: மரணம், தீர்ப்பு, விண்ணுலகம், நரகம் ix) எட்டுப் பேரின்பங்கள் ஆகியவை ஆகும். பதினாறு பக்கங்களை உள்ளடக்கிய இந்நூல் என்றிக்கஸ் அடிகள் தமிழில் எழுதிய முதல் நூலாகும். இந்நூல் கொல்லத்தில் 1578ஆம் ஆண்டு அக்டோபர்த் திங்கள் 20 ஆம் நாள் அச்சிடப்பட்டது. இந்நூல் கிறித்தவத் திருமறையில் கையாளப்படும்

செபங்களைக் கொண்ட மொழிபெயர்ப்பு நூலாகும். இப்பதிப்பின் ஒரே பிரதி தற்போது அமெரிக்காவிலுள்ள ஹார்வர்டு பல்கலைக்கழகத்தில் உள்ளது. 1963 ஆம் ஆண்டு இந்நூல் 'வணக்கம்' என்ற தலைப்பில் மறுபடியும் பதிப்பிக்கப்பட்டது. மேலும் இந்நூல் அடியார் வரலாற்றில் 645 ஆம் பக்கத்தில் மேற்கோளாகக் கையாளப்படுகின்றது.



தம்பிரான் வணக்கத்தின் பதினாறாவது பக்கம். 1577இல் கோவாவிலும் 1578-இல் கொல்லத்திலும் உண்டாக்கின எழுத்துக்களின் படம்.

**கிரீசித்தியானி வணக்கம்**

1579ஆம் ஆண்டு நவம்பர் மாதம் 14 ஆம் நாள் 122 பக்கங்கள் கொண்ட இந்நூல் கொச்சியில் அச்சடிக்கப்பட்டது. இந்நூல் 12 அதிகாரங்களாகப் பிரிக்கப்பட்டுள்ளது. இயேசு சபைக் குருவாகிய மார்க்கோசு சொரிசி என்பவரால் போர்ச்சுக்கீசிய மொழியில் எழுதப்பட்ட இந்நூல் என்றி என்றிக்கஸ் அடிகளால் தமிழாக்கம் செய்யப்பட்டது. இந்நூல் கொச்சியிலுள்ள இறைவனின் அன்னைக் கல்லூரியில் 1579 ஆம் ஆண்டு நவம்பர் 14ஆம் நாள் அச்சடிக்கப்பட்டது. பின்பு முகவுரையும் அதைத் தொடர்ந்து 12 அதிகாரங்களும் அடங்கியுள்ளன. முதல் அதிகாரம் கிறிஸ்தவன் என்ற சொல்லுக்குப் பொருளை விளக்குகின்றது. இரண்டாவது அதிகாரத்தில் சிலுவை அடையாளம். மூன்றாம் அதிகாரத்தில் பரலோகத்திலிருக்கிற எங்கள் பிதாவே, நான்காம் அதிகாரத்தில் அருள் நிறைந்த மரியே வாழ்க, ஐந்தாம் அதிகாரத்தில் கிருபை தயாளத்துக்கு மாதாவாய் இருக்கின்ற எங்கள் இராக்கினியே, ஆறாவது அதிகாரத்தில் விசுவாசப் பிரமாணம், ஏழாவது அதிகாரத்தில் விசுவாசக் கொள்கைகள், எட்டாவது அதிகாரத்தில் பத்துக் கட்டளைகள், ஒன்பதாவது அதிகாரத்தில் திருச்சபைக் கட்டளைகள், பத்தாவது அதிகாரத்தில் ஏழு தலையாய பாவங்கள், பதினோராவது அதிகாரத்தில் திரு அருட் சாதனங்கள், பன்னிரண்டாவது அதிகாரத்தில்

ஈகைக்கான வேலைகள், இறையியலைச் சார்ந்திருத்தல், தலையாய புண்ணியங்கள், எட்டுப் பேரின்பங்கள், பாவக் கழுவாய் ஆகியவை அடங்கியுள்ளன. இந்த நூல் தூய விவிலியத்திலிருந்து எடுத்த வார்த்தைகளைக் கொண்டு முடிவடைகின்றது. ''இயேசுவின் பெயரின் மூலம் தவிர்த்து மீட்புக் கிடையாது''. (இயேசுவின் மூலம்தான் மீட்பு உண்டு.) 122 பக்கங்கள் கொண்ட இந்நூலில் மூன்று தாள்கள் வெறுமையாய் உள்ளன. இரண்டாவது தாளின் முதல் பக்கத்தில் அறிமுகவுரை தமிழிலும் மறு பக்கத்தில் போர்ச்சுக்கீசிய மொழியிலும் உள்ளன. இப்பதிப்பின் ஒரே பிரதி பாரீசு அரசியலார் நூலகத்தில் உள்ளது. இந்த நூலும் 1963 ஆம் ஆண்டு 'வணக்கம்' என்ற தலைப்பில் மறுபதிப்பு செய்யப்பட்டது. இந்நூல் அடியார் வரலாற்றில் 414, 526 ஆகிய பக்கங்களில் மேற்கோளாக எடுத்தாளப்படுகிறது.

### கொம்பெசியோனாயரு

இந்நூல் 1586ஆம் ஆண்டிற்கு முன்பே அச்சடிக்கப் பட்டுள்ளது என்பதில் ஐயமில்லை. ஏனெனில் அவ்வாண்டில் அச்சாகிய இந்த ''அடியார் வரலாற்றில்'' மூன்று இடங்களில் இந்நூலைப்பற்றிய மேற்கோள்கள் காட்டப்பட்டுள்ளன. இதுபற்றி ஆசிரியர் 559ஆம் பக்கத்தில் கூறுவது:

> ''கொம்பசாரிக்கிறவன் நன்றாய்க் கொம்பெசாரிக்கத் தக்கதாகக் கொம்பெசியோனாயரு என்ற பொத்தகம் வாசிக்கிறது பெருக உதவும். அது வாசிக்க இடம் இல்லாதிருக்கில் அந்தக் கொம்பெசியோனாயரிலே எழுதியிருக்கிற முதலாம் கப்பீதுலையும் இந்தப் பொத்தகத்திலேயே அதுலெந்து என்ற நம்முடைய நாயன் இசேசுக் கிரீசித்து மானுஷ்சீகம் எடுத்த அவதாரத்திலே தோழ்சங்கள் நினைக்கத் தக்கதாக எழுதியிருக்கின்றதையும் வாசிக்கிறது உதவும்.''

மேலும் 560ஆம் பக்கத்தில் சொல்வது:

> ''செய்த தோழ்சங்களுக்கு வேண்டி எந்த வகையிலே விதனப்பட வேண்டுமென்று கொம்பெசியோனாயரு) என்ற பொத்தகத்தில் இரண்டாம் (கப்பீதுலி) லே காணலாம்.''

இன்னும் 648ஆம் பக்கத்தில் கூறுவது:

> ''இவ்வளவு கொம்பெசாரிக்கிற அடைமானம் சுருக்கி எழுதினோம் என்றால் கொம்பெசாரிக்கத் தக்கதாக விரிவாக எழுதியிருக்கிற (கொம்பெசியோனாயிரு

கொம்பெசாரிக்க) இருக்கிறவன் வாசித்தானாகிலும்! வாசிக்கிறது கேட்டானாகிலும் பெரு நல்லது."

## அடியார் வரலாறு (Flos Sanctorum)

இந்த நூல் என்றிக்கஸ் அடிகளின் படைப்பின் வேலைப்பாடு கொண்ட கலைப்பொருளாகும். முகவுரையைத் தவிர்த்து 668 அச்சடித்த பக்கங்கள் அடங்கியுள்ளன. இதில் பொருளடக்கப் பகுதி காணவில்லை. தலைப்புப் பக்கமும் நமக்குக் கிடைக்கவில்லை. எனவே அருட்தந்தை டாக்டர் ச. இராசமாணிக்கம், இயேசு சபை 1967இல் புதிய பதிப்பாக அச்சிட்டு வெளியிட்டுள்ளார். இதற்கு என்ன தலைப்பு கொடுப்பதென்று புரியாத நிலையில் இறுதியில் 'அடியார் வரலாறு' என்ற பெயரிட்டு வெளியிடப்பட்டது. ஏனெனில் இந்த நூல் புனிதர்களின் வாழ்க்கை வரலாறு அடங்கியதாகும். இந்நூலின் ஆசிரியரான என்றிக்கஸ் அடிகள் ஸ்பானிஷ் மொழியில் எழுதிய முகவுரையில் இந்தப் புனிதர்களின் வாழ்க்கை வரலாறு மூன்று நூல்களிலிருந்து எடுத்துத் தமிழில் மொழியாக்கம் செய்யப்பட்டது என்று கூறியுள்ளார்.

> "இப்படிப்பட்ட ஆழ்ந்த எண்ணங்களைச் சேர்த்துக் கொண்டு கிறிஸ்தவர்களுக்கு அதிக நன்மை பயக்கக்கூடியவைகளாக நமக்குத் தோன்றுகின்றது. இப்படிப்பட்ட எண்ணங்கள் முழுமையாக வழக்கத்திற்கு மாறானவை. மேலும் நான் சில உள்நாட்டில் தமிழ் மொழியில் அறிவு, ஆற்றல், அநுபவம் ஆகியவை பெற்றுள்ளவர்களிடம் இந்த அடியார் வரலாற்றை நல்ல முறையில் தமிழில் மொழியாக்கம் செய்ய மூன்று ஆண்டுகளுக்கு மேல் செலவழித்தேன். ஆகவே எனக்குத் தெரிந்த மொழியினாலும், மொழி தெரிந்தவர்களும் அதே போன்று ஏனைய திறமை வாய்ந்த இயேசு சபைத் தந்தையர்கள் அதையே கூறுவதினால் அந்தப் புனிதர்களின் வாழ்க்கை வரலாறு மொழி சார்ந்த தவறுகளிலிருந்து விடுபட்டும் செயல் திறத்துடன் எழுதியுள்ளதாக நான் நம்புகிறேன்."

1579ஆம் ஆண்டு அச்சான 'கிறிஸ்தவக் கொள்கை'யைவிட என்றிக்கஸ் அடிகளின் படைப்பான 'அடியார் வரலாறு' நிச்சயமாகச் சிறந்ததாக உள்ளது. தந்தை என்றிக்கஸ் இந்த நூலில் முக்கியமாகப் படிப்பறிவில்லாத ஏழை மீன்பரவர்களுக்காக எளிய நடையை மேற்கொண்டுள்ளார். மேலும் இது அவருக்கு ஒரு கடின உழைப்பாகும். அடியார் வரலாற்றில் வரும் மக்கள் சமூகத்தில் உள்ள உயர்குடியைச் சார்ந்தவர்கள், படைத்தளபதிகள், கன்னிப் பெண்கள், மறைசாட்சிகள், இன்னும் பலபேர் ஆகிய எல்லா வகையான மக்களையும் அடக்கியதாகும்.

இதில் அவர் கையாண்ட சொற்கள் வளமிக்கவை. இந்தப் படைப்பானது தமிழ் இலக்கியத்தில் என்றிக்கஸ் அடிகளுக்கு ஓர் நிரந்தர இடத்தைப் பெற்றுத் தந்துள்ளது.

**அடியார் வரலாற்றிலிருந்து ஒரு சிறு பகுதி சான்றாகக் கொடுக்கப்படுகின்றது:**

> "முதலாம் தகப்பன் (அதம்) செய்த தோழ்சம் அவனுடைய பிதிர்வழி யுள்ளவர்களுக்கெல்லாம் வந்து சம்புபிவித்திது. அந்தத் தோழ்சம் (பெகாதுவொரிசின்னால்) என்று சொல்லப்படும். அந்தத் தோழ்சம் தீரவேணுமென்று தம்பிரானார் சூதமார் மாறகத்திலான பிள்ளைகளுக் கெல்லாம் பிறந்த வெட்டானாள் சுன்னத்திடக் கட்டழையிட்டார். சுன்னத்திடக் கட்டழையிட்டது அந்தத் தோழ்சம் தீருகிற முகாந்தரமன்றியே வேறே சில முகாந்திரங்களுமுண்டு. அந்தத் தோழ்சம் தீறகத்தக்கதாகச் சுன்னத்திட்டதே யுண்டானாலும், நம்முடைய நாயன் இசேசுக் கிரீசித்து, முதலான தகப்பன் செய்த தோழ்சத்துக்கு வேண்டிக் குருசிலே பாடுபட்டுச் சாகுமழவும் ஒருதற்கும் சொறகத்துக்குப்போக இடம் வந்திதில்லை. யந்தத் தோழ்சம் எல்லார் பேரிலேயும் வந்து சம்புவித்ததாகிலும் நம்முடைய நாயன் இசேசுக் கிரீசித்துவின் பேரிலே வந்து சம்புவித்திதில்லை. அவர் சு.மரியாள் வயிற்றில் மனுதர் பிறபுத்தியில்லாமலே சனித்த தொழிந்து மற்றப்படியல்ல."

நூலின் அட்டவணை: மூல நூலான Flos Sanctorum என்ற நூலிலுள்ள எல்லா அடியார் வரலாறுகளையும் மொழிபெயர்க்க முடியாததால் பரவ மக்களுக்குப் பயன்படக்கூடிய ஒருசிலவற்றை மட்டும் தேர்ந்தெடுத்ததாக ஆசிரியர் இஸ்பாஞ்ஞிய மொழியில் எழுதிய தமது முகவுரையில் கூறுகிறார். இவ்வாறு தேர்ந்தெடுக்கப்பட்டவை 70. அவையாவன:

1. (1) சுன்னத்திட்டது
2. (6) மூவிராசாக்கள்
3. (12) சு.செவசித்தியம்
4. (28) சு.விசேந்தி
5. (34) சு.இஞ்ஞாசியு
6. (41) புரிப்பிக்கசம்
7. (49) சு.விறாசு
8. (56) சு.ஆகதாள்
9. (64) சு.அப்போலோனியாள்
10. (68) சு.மத்தீயசு
11. (71) சு.வேந்து
12. (85) சனித்த காரணிக்கம்
13. (93) சு.மரியாள் எசிசியாக்க
14. (109) சு.தாயிசு
15. (113) சு.பிலிப்பி
16. (116) சு.சந்தியாகு மேனோர்

17. (122) குருசு கண்டெடுத்தது
18. (129) சு.அந்தோனி
19. (146) சு.பவுலீனு
20. (150) சு.சோப்பியாள்
21. (156) சுவாம் வவுத்தீசித்தை
22. (165) சு.பேதுறு
23. (180) சு.பாவுலு
24. (204) சு.பெலிசிதாதி
25. (208) சு.அலேசு
26. (217) சு.மருகரிதாள்
27. (223) சு.எசித்தாக்கியூ
28. (233) சு.மரிய மதலேனாள்
29. (241) சு.கிரிசித்தினாள்
30. (245) சு.சந்தியாகு மாயோர்
31. (257) சு.கிரிசித்தோவம்
32. (264) ஏழு சுத்தவாளர்
33. (270) சு.தோமிங்குசு
34. (286) சந்த மரிய தசு நேவேசு
35. (290) சு.உலோரேஞ்சு
36. (300) சு.மரியாள் சொற்கம்
37. (306) சு.வெறுனாடுது
38. (314) சு.வெடுத்தோலமேயு
39. (321) சு.சென்னேசியு
40. (325) சு.அகுசித்தீனு
41. (332) சு.மரியாள் பிறந்தது
42. (340) சு.அதிரியானு
43. (351) சு.எவுசேனியாள்
44. (363) சு.குருசு சங்கை
45. (368) சு.மத்தேசு
46. (374) சு.மிகேலு
47. (379) சு.செரோனிமு
48. (386) சு.பிறஞ்சீசிக்கு
49. (405) சு.சிமாமு, சு.ததேயு
50. (413) எல்லாச் சொற்கவாதிகள்
51. (422) செத்தவர்கள் திருநாள்
52. (428) சு.மடித்தீனு
53. (440) சு.செசிலியாள்
54. (452) சு.கத்தரினாள்
55. (464) சு.அந்திரை
56. (481) சு.நிக்குலாவு
57. (497) சு.உலுசியாள்
58. (503) சு.தொம்மை
59. (515) கிரீசித்து பிறப்பு
60. (523) சு.எதித்தேவம்
61. (531) சு.சுவானி
62. (544) சு.சிலுவேசித்திரி
63. (557) கொரோசிமை
64. (565) பாடுபட்டது
65. (608) உயிர்த்தது
66. (615) வானங்களிலேறினது
67. (622) சு.இசிப்பீரித்து
68. (635) சந்தி சக்கிறமெந்து
69. (644) அதுவெந்து
70. (650) நடுத்தீர்க்கவருகிறது

**என்றிக்கஸ் அடிகளின் படைப்பைப் பற்றித் தந்தை தனிநாயகத்தின் மதிப்பீடு**

1954இல் தனிநாயகம் அடிகள் 'அடியார் வரலாறு' நூலை வத்திக்கான் நூலகத்தில் கண்டுபிடித்தார். 1958 ஆம் ஆண்டு அக்டோபர் மாதம் 'தமிழ்ப் பண்பாடு' என்ற இதழில் இந்நூலைப் பற்றி ஓர் ஆய்வுக் கட்டுரை எழுதித் தமிழ் அறிஞர்களுக்குத் தெரியப்படுத்தினார். இவர் இந்த நூலைப் பற்றிக் கூறுவதாவது:

''இது 668 பக்கங்கள் அடங்கிய ஒரு சிறப்பு வாய்ந்த நூலாகும். தமிழ் மொழியில் முதன் முயற்சியாகும். இது ஒரு மிகவும் தேர்ச்சி வாய்ந்த செயற்கரிய செயலாகும்... 16ஆம் நூற்றாண்டின் கிறித்தவச் சிந்தனைகளைத் தமிழ் மொழியின் ஊடகத்தின் வழியாக எடுத்துரைப்பதானது மிக மிகப் பெரிய முயற்சியாகும்.

1958ஆம் ஆண்டு ஜூலை மாதம் வெளியான நூல் மதிப்புப் பத்திரிக்கையில் மேற்கூறிய அதே ஆசிரியர் இந்த நூலைப்பற்றி அவரது 'தமிழில் அச்சடிக்கப்பட்ட முதல் நூல்கள்' என்ற கட்டுரையின் தலைப்பில் அநேக அக்கறையான செய்திகளைக் கூறுகின்றார். இன்னும் என்றிக்கஸ் அடிகளின் ஆண்டுக் குறிப்பேடு பற்றிக் கூறும்போது அருட்திரு இராபர்ட் நொபிலி உட்பட என்றிக்கசுக்குப் பின் வந்த மறைப்போதகர்கள் அனைவரும் அவர் எழுதிய ஆண்டுக் குறிப்பேட்டைப் பயன்படுத்தினர்.

## ஆண்டுக் கையேடு திருத்தம்

தமிழ் ஆண்டு ஏப்ரல் மாத நடுவில் தொடங்குகின்றது. இது கிரகோரியன் (ஜூலியன்) ஆண்டுக் கையேடோடு ஒத்துப் போகவில்லை. இந்த ஆண்டுக் கையேட்டைக் கொண்டுதான் கிறித்தவப் பொதுவழிபாட்டு ஆண்டு தீர்மானிக்கப் படுகின்றது. எனவே கிறிஸ்து பிறப்புப் போன்ற விழா, குறிப்பிட்ட நாளில் (டிசம்பர் 25) கிரகோரியன் ஆண்டுக் கையேட்டில் வருகின்றது. ஆனால் தமிழ் ஆண்டுக் கையேட்டில் நிரந்தரமாக அவ்விழாவை நிர்ணயம் செய்ய முடியாது. இது முந்தைய மறைப் போதகர்களுக்கு ஒரு பிரச்சினையாக இருந்து வந்தது. நமக்குத் தெரிந்த வரையில் என்றிக்கஸ் அடிகள்தாம் முதன் முதலாக இந்தப் பிரச்சினையைச் சமாளித்து ஒரு நடைமுறைக்கான தீர்வைக் கண்டுபிடித்தார். அவர் தமிழ் ஆண்டுக் கையேட்டைக் கவனமாகப் பரிசீலித்தார். எந்தத் தமிழ் மாதங்கள் கிரகோரியன் மாதங்களுக்கு ஒத்தவையாக இருக்கின்றன என்பதைக் குறித்துக் கொண்டார். 'தை' தமிழ் மாதம் ஏறக்குறைய ஜனவரி மாதத்தை ஒத்து வந்தது. எனவே அவர் அதை ஜனவரியோடு ஒத்ததாய் எடுத்துக் கொண்டார். அதற்கு அதே நாள்களின் எண்ணிக்கையையும் அதே நாளில் ஜனவரியில் தொடங்கவும் செய்தார். அடுத்து மாசி மாதம் லீப் ஆண்டில் 29 நாள்களைக் கொண்டதாகவும் சாதாரண ஆண்டில் 28 நாள்கள் கொண்டிருப்பதாகவும் இருக்கும்படி செய்தார். இதே முறையில் இதர மாதங்களும் கிரகோரியன் மாதங்களுக்கு ஒத்தவையாக இருக்கச் செய்தார். 1586இல் 668 பக்கங்கள் கொண்ட ''தமிழில் அடியார் வரலாறு'' என்ற நூலின் இறுதியில் என்றிக்கஸ் இரண்டு ஆண்டுக் கையேடுகளுக்கு ஒத்தவைகளை ஓர் அட்டவணை மூலம் கொடுத்துள்ளார். அதைக் கீழே காணலாம்.

| | | | |
|---|---|---|---|
| தை | ஜனவரி | 31 | நாள்கள் |
| மாசி | பிப்ருவரி | 28 (29) | நாள்கள் |
| பங்குனி | மார்ச் | 31 | நாள்கள் |
| சித்திரை | ஏப்ரல் | 30 | நாள்கள் |
| வைகாசி | மே | 31 | நாள்கள் |
| ஆனி | ஜூன் | 30 | நாள்கள் |
| ஆடி | ஜூலை | 31 | நாள்கள் |
| ஆவணி | ஆகஸ்ட் | 31 | நாள்கள் |
| புரட்டாசி | செப்டம்பர் | 30 | நாள்கள் |
| ஐப்பசி | அக்டோபர் | 31 | நாள்கள் |
| கார்த்திகை | நவம்பர் | 30 | நாள்கள் |
| மார்கழி | டிசம்பர் | 31 | நாள்கள் |

இந்த முறைப்படி தேதி மாறாத விழாக்களைத் தமிழ் ஆண்டுக் கையேட்டில் குறிப்பது மிக எளிதாகியது. கிறிஸ்து பிறப்பு எப்பொழுதும் மார்கழி மாதம் 25ஆம் நாள் வருகின்றது. கன்னி மரியாள் விண்ணேற்றம் ஆவணி 15, ஆண்களின் பிறப்புறுப்பின் நுனித்தோல் இதழ் அகற்றுதல் தை 1ஆம் தேதி வருகின்றது. என்றிக்கஸ் அடிகளுக்குப்பின் வந்த அனைத்து மறைப்போதகர்களும் இம்முறையைப் பயன்படுத்தினர்.

**அச்சுத் தந்தை**

என்றிக்கஸ் அடிகள் நான்கு நூல்களைப் படைத்தார். அவற்றை அச்சுப் பதிக்கத் தேவையான தமிழ் எழுத்துக்களை உருவாக்கத் தந்தை வலிங்னோ, இயேசு சபை துணைச் சகோதரர் சுவான் கொன்சால்வசு என்பவரைப் பணித்தார். தமிழ் எழுத்துக்களைப் பொறிப்பதற்கு இவருக்கு உதவியாகப் பெரோ லூயிஸ் என்னும் முதல் இந்தியர் கோவா சென்றார். கொன்சால்வசு தம் கடினமான உழைப்பாலும், தளரா ஊக்கத்தாலும் தமிழ் அச்சகத்தை அமைப்பதில் வெற்றி கண்டார்.

**என்றிக்கஸ் அடிகளின் முதல் தமிழ்ப் பேச்சு இலக்கணம்**

ஐரோப்பியர்கள், குறிப்பாகப் போர்ச்சுக்கீசியர்கள் தமிழகம் வந்த பின்புதான் பேச்சுத் தமிழுக்கு இலக்கணம் வகுக்கப்பட்டது. மக்களோடு உறவாட, அவர்களோடு கருத்துப் பரிமாற இத்தகைய இலக்கணம் தேவையாயிற்று. எனவே தமிழ் நாடு வந்த போர்ச்சுக்கீசிய மறைப் போதகர்களுள் ஒருவரான தந்தை என்றிக்கஸ் பேச்சுத் தமிழுக்கு இலக்கணமும் அகராதியும் எழுதினார்.

தந்தை என்றிக்கஸ் தம் இலக்கியப் பணியினால் தமிழ் இலக்கியத்தில் நிரந்தரமும் முக்கியமானதுமான இடத்தைப் பெற்றுள்ளார்.

நாம் இப்பணிக்கு அவருக்கு நன்றி கூறக் கடமைப்பட்டுள்ளோம். பேச்சுத் தமிழின் இலக்கணத்தை முதன் முதலில் எழுதியவர் என்பதோடு அல்லாது அவர் முதல் அகராதி தொகுப்பாளருமாவார். இவருக்குப்பின் உடனடியாகத் தமிழகம் வந்த அனைத்து மறைப்போதகர்களும் என்றிக்கஸ் அடிகள் படைத்த இலக்கணத்தையும், சொற்களஞ்சியத்தையும் பயன்படுத்தினார்கள். அடிகள் தமிழ் கற்றுக் கொடுக்க ஒரு பள்ளியைத் தொடங்கி நடத்தி மேலை நாட்டவருக்குத் தமிழை முறையாகக் கற்றுக் கொடுத்தார். அவர் படைத்த இலக்கணமும், அகராதியும் மறைந்து விட்டாலும் அவரது அச்சான படைப்புகள் தமிழில் முதலில் அச்சான படைப்புகளாக உள்ளன. அவை எப்பொழுதும் ஓர் அரும் பொருளாகப் பெருமதிப்புடையவையாகப் பாராட்டப்பட்டு எப்பொழுதும் நினைவில் இருத்தப் பட்டவையாகத் திகழ்கின்றன. அவர் தமிழ் அச்சகம் அமைக்க மக்களிடமிருந்து நிதி திரட்டித் தமிழ் நூல்களை அச்சடிக்க முதன் முதலாக அச்சு இயந்திரம் உருவாக்கினார். அவர் படைத்த அனைத்தும் நமக்குக் கிட்டவில்லை. எனினும் அவைகளில் மூன்று கிடைத்துள்ளன. இவை மூன்றும் அவர் "அச்சகத்தின் தந்தை" என்று கூறப் போதுமானவைகளாகும். தமிழ் நாட்டிலும் மேலை நாட்டிலும் வழங்கும் பஞ்சாங்கங்கள் ஒன்றுபடும்படி மேல் நாட்டு மாதங்களுக்கு அம்மாதத்தில் வரும் தமிழ் மாதங்களின் பெயரைச் சூட்டி அதே நாள் கணக்கை எடுத்துக் கொள்ளும்படி கொடுத்துள்ளார். மேலும் இவர்தான் முதன் முதலில் தமிழில் உரைநடை எழுதினார்.

இந்தியாவில் உள்ள ஏனைய மொழிகளுக்கும் மற்றைய நாடுகளிலும் மிகவும் தாமதமாகத்தான் அச்சகம் ஆரம்பிக்கப்பட்டது. ஆனால் தமிழுக்கோ அடிகள் அவர்களின் முயற்சியால் முன்னதாகவே ஆரம்பிக்கப்பட்டு விட்டது. இதை என்றென்றும் நம் தாய்த் தமிழகம் நினைவுகூரும் என்பதில் எள்ளளவும் ஐயமில்லை.

என்றிக்கஸ் பாதிரியாரின் முதல் தமிழ்ப் பேச்சு இலக்கணம் பற்றி முனைவர் தந்தை இராசமாணிக்கம் கூறுவதைக் காண்போம்:

ஐரோப்பியர்கள், குறிப்பாகப் போர்ச்சுக்கீசியர்கள் தமிழகம் வந்தபின்புதான் பேச்சுத் தமிழுக்கு இலக்கணம் தோன்றியது. அதற்கு முன்பு பேச்சுத் தமிழுக்குத் தமிழர் எவருமே இலக்கணம் செய்யவில்லை. ஒருபுறம் செய்யுளில் அமைந்த காவியங்கள் இருக்க, மறுபுறம் மக்களோடு உறவாட, அவர்களோடு கருத்துப் பரிமாற இத்தகைய இலக்கணம் தேவையாயிற்று. எனவே தமிழ்நாடு வந்த போர்ச்சுக்கீசிய மறைப்போதகர்களுள் ஒருவரான என்றிக்கஸ் அடிகள் பேச்சுத் தமிழுக்கு இலக்கணமும், அகராதியும் எழுதினார். அவர் மேல் நாட்டவருக்குத் தமிழ் கற்பித்தார். இந்நூல் 1582ஆம் ஆண்டு மே மாதம் ஜெர்மனியில் அச்சாகி முதல் ஐரோப்பியத் தமிழ் இலக்கணமாகப் போர்ச்சுக்கீசிய மொழியில்

வெளிவந்துள்ளது. இவ்வாசிரியர் தமிழ் இலக்கணத்தை "மலபார் (தமிழ்) இலக்கணச் சுருக்கம்" என்று போர்ச்சுக்கீசிய மொழியில் எழுதியுள்ளார். அவர் தமது இலக்கணத்தை எழுத்து, பெயர், வேற்றுமை, பெயரெச்சம், இடப்பெயர், வினை, தொடரியல் என்று மேலை நாட்டு முறையில் பகுத்து அமைத்துள்ளார்.

### 411.1. எழுத்து

(எழுத்தியல்) 16ஆம் நூற்றாண்டில் மெய்யெழுத்து மேல் புள்ளியிடுவது அச்சு நூலில் கூட இல்லை. எகர ஏகாரத்துக்கும், ஒகர ஓகாரத்துக்கும் வேறுபாடு இல்லை. தற்போது நெடிலைச் சுட்டும் கால் அக்காலத்தில் நெடிலையும் ஏகாரத்தையும் ஏகார உயிர் மெய்யையும் சுட்டிற்று. எழுத்துக்களைப் பிள்ளைகள் படிப்பது போல அனா, ஆவனா...கனா, காவனா எனச் சுட்டுகிறார். வேறுபட்ட லகரங்களையும், தகர, ரகர, நகரங்களையும் சுட்டிக்காட்டுகிறார். றகரம் ஓரிடத்தில் றகரமாகவும், வேறு இடத்தில் (ற்ற, ன்ற) தகரமாகவும் ஒலிப்பதை எடுத்துக் காட்டுகிறார். அவற்றிற்குத் தனிக் குறியீடு தர முயல்கிறார். ககர உயிர்மெய்களைத் தவிர ஏனையவற்றைத் தொகுத்துக் காட்டவில்லை. மேல் நாட்டு எழுத்து அல்லது உரோமன் எழுத்துக்களைப் பயன்படுத்தும் போர்ச்சுக்கீசிய மொழியில் கூறுவதால் உயிர்மெய் தேவைப்படவில்லை போலும்.

### 411.2. பெயர்ச்சொல்

எல்லாச் சொற்களுக்கும் பொதுவான எட்டு வேற்றுமை உருபுகள் ஒருபுறமிருக்க அவை பெயர்ச் சொற்களோடு சேரும்போது அடையும் வேறுபாடு நோக்கிப் பெயர்கள் ஒன்றில் அ,இ,உ, ஐ என்ற நான்கு உயிர்களில் முடிகின்றன. அல்லது ம்,ன்(ண்), ல்(ள்,ழ்) ர் என்ற நான்கு மெய்களில் முடிகின்றன. பெயர்களின் முடிவை நோக்கிப் பெயர்ச் சொல்லை ஐந்து வேற்றுமைப் படிவங்களாக வகுக்கிறார்.

2.1. முதல் படிவம் - மக்கட் பெயர்- னகரத்தில் முடிவன: இவை ஆண்பாலில் னகரத்திலும், பெண்பாலில் இகரத்திலும், மதிப்புப் பன்மையில் ரகரத்திலும், பன்மையில் கள்/அர்/மார் இலும் முடிகின்றன. மேலும் ஆறாம் வேற்றுமையை, உடைய என்ற சொல் ஒருமை பன்மை ஆகிய இரண்டிலும் காட்டும். இவ்வாறே பிற வேற்றுமை உருபுகளும் எல்லாச் சொற்களுக்கும் பொதுவாய் வரும். இப்படிவத்தில் வரும் சொற்களின் பட்டியல் வருமாறு:

**சாதிப்படி**

பிராமணன்- பிராமணச்சி, பரவன்-பரத்தி, சோன்னகன்-சோனகத்தி, பறையன்-பறைச்சி, கடையன்-கடையச்சி, முக்குவன்-முக்குவிச்சி.

### தொழில்படி

கொல்லன்-கொல்லத்தி, பாணன்-பாணச்சி, கன்னான்-கன்னாத்தி, கன்மாளன்-கன்மாளச்சி, நட்டான்-நட்டாத்தி, நாகவன்-நாகவத்தி

### பொது

மனிதன்-மனிச்சி, குருடன்-குருடி, செகிடன்-செகிடி,பேயன்-பேய்ச்சி(பைத்தியக்காரன்), முடவன்-முடத்தி, கிளவன்-கிளவி (கிழவன்)

### காறன் முடிவு

கிலேசக்காறன்-கிலேசக்காறி, பிறபுத்திக்காரன்- பிறபுத்திக்காறி, கட்டாமைக்காறன்- கட்டாமைக்காறி.

### முதல் படிவத்தில் வருவன

தொட்டியன்-தொட்டியர்- தொட்டிச்சி என்ற மூன்றும்

ஆண் ஒருமை: தொட்டியன்- உடைய- உக்கு- ஐ- யா

ஆண் பன்மை: தொட்டியர்- உடைய- உக்கு- ஐ- யாரே

பெண் ஒருமை: தொட்டிச்சி- உடைய- க்கு- ஐ

பெண் பன்மை: தொட்டிச்சியள்/கள்- உடைய- க்கு- ஐ

என்று வருகின்றன.

### 2.2 படிவம் 2

இ/ஐ என்ற உயிரில் முடிவனவற்றுக்குத் தொப்பி, தலையும் வர, ல், -ன், -ர் என்ற மெய்யில் முடிவனவற்றுக்குக் கால், ஊர், பீங்கான் சான்றாக வந்து எல்லா வேற்றுமை விகுதிகளையும் பெறுகின்றன.

### 2.3 படிவம் 3

ஒருமையில் -ம் பெறுவன, சில இடத்தில் -த் பெற்று, பன்மை கள் பெறுகின்றன. பண்டம், பண்டத்தை, பண்டங்கள்- முதலியன.

### 2.4. படிவம் 4

ஆ-வில் முடிந்து இடையில் (உடம்படு மெய்) வ் பெறுகின்றன. பன்மையில் -கள். இராசா- இராசாவுடைய, இராசாக்கள். அதுபோல மிடா, மாதா, பிதா, மோனா (மௌலானா).

### 2.5.படிவம் 5

உ வில் முடிந்து பன்மையில் கள் பெறும். இது மூவகைப்படும். முதலாவது உடன்படுமெய் பெறாது. இரண்டாவது அதைப் பெறும். மூன்றாவதன் பகுதி உ முன் இரட்டிக்கும்.

1. கம்பு- கம்புகள் (இதுபோலச் செருப்பு, பூட்டு, கதவு, நிலவு-)
2. உரு (கப்பல்), உருவுடைய, உருக்கள்
3. வீடு- வீட்டை, சோறு- சோற்றை, வீடுகள், சோறுகள்-

2.6. குறிப்பு

1. மதிப்புப் பன்மை: தொப்பாசி- தொப்பாசியார், தம்பிரான்- தம்பிரானார், பாதிரி-பாதிரியார்.

*சிறப்புப் பெயர்:* மெய்யகுட்டி- மெய்யகுட்டியார்.

2. பன்மை- அர்,-கள், இயள்: தொப்பாசியர், கிளவியார், கம்புகள், தொட்டிச்சியள்.
3. இலத்தீன் மொழியில் போல் தமிழில் பன்மை மிகுந்து பயன்படாது. ஒருமையே மிகுதியாய் வழங்கும். சான்றாகப் பத்துத்தலை, ஐந்து வீடு, இருபது கம்பு, ஒன்பது மிடா. இந்தப் பத்துத் தொப்பிகளை / தொப்பி கொண்டு போ என்று இரண்டாம் வேற்றுமை - ஐ உருபு சேர்க்காது கூறலாம். ஆனால் மக்களுக்கு இராசாவைப் போல் ஐ சேர்க்க வேண்டும்.

411.3.பெயரெச்சம்

3.1. பெயருக்கு முன் வரும்போது மாறுபடாமல் வழங்கும்.

இந்த மனிதன் நல்ல மனிதன்(ஆண்)

இந்தப் பிண்சாதி நல்ல பிண்சாதி (பெண்)

இந்த மாடு நல்ல மாடு (உயிர்)

இந்தப் பட்டயம் நல்ல பட்டயம் (பெட்டி)

3.2. ஆனால் பெயருக்குப் பின்வந்தால் மாறுபடும்.

இந்த மனிதன் நல்லவன்.

இந்தப் பிண்சாதி நல்லவள்.

இந்த மனிதர்கள் நல்லவர்கள்.

இந்தப் பிண்சாதிகள் நல்லவர்கள்.

இந்த மாடு நல்லது.

இந்த மாடுகள் நல்லது.

முன்னே நல்ல என்று வந்த பெயரெச்சம், நல்லவன்/ள்/து என்று மாறி வருகிறது.

3.3. இதே போலப பெயரடியாய்ப் பிறந்தவை:

சுத்தமான- சுத்தமானவன்/ள்/து (சுத்தம்)

3.4. பண்படியாய் வந்தவை:

உள்ளவன் என்ற சொல்லோடு சேர்ந்து மேற்கண்டவாறு வழங்கும்.

சுவான் மெத்த பெலம் உள்ளவன்(-ள், - ர், -து) முன்னே வரும்போது மெத்த பெலம் உள்ள சுவான்.

*3.5. இடப்பெயர் வழி வந்தவை:* தற்போது உள்ளபடி நான்- நாங்கள், நீ- நீர்- நீங்கள், அவன்- அவர்கள், இவர்- இவள், தான்- தாம், என்னுடையது, உன்னுடையது. உடைமைப் பொருளைச் சுட்ட, குள்ளது பயன்படுகிறது. இங்கு எனக்கு+உள்ளது என்று பிரிக்காமல் 'குள்ளது' என்று ஆசிரியர் பிரிக்கிறார். எனக்குள்ளது, அவருக்குள்ளது.

*3.6. வினையாலணையும் பெயர்:* விச்சுவதிக்கிறவன் /ர்/ர்கள் முதலிய முதல் படிவத்தைப் போல் வேற்றுமை உருபு பெறும். விச்சிவதிக்கிறவனை, வனுக்கு.

**411.4.வினைச்சொல்**

தமிழ் இலக்கணம் படிக்கும் வெளிநாட்டாருக்கு வினைச் சொல்லே கடினமான பகுதியாகும். கிறு, கின்று, ஆநின்று என்பன நிகழ்காலத்தையும், த்,ட், ற், இன் என்பன இறந்த காலத்தையும், ப்,வ் எதிர்காலத்தையும் சுட்டும் இடைநிலைகள் என்று தமிழ் இலக்கணம் அறிவித்தாலும் எந்த வினைச்சொல் எந்த இடைநிலையைப் பெறுகின்றது என்று காட்டவில்லை. அறிகிறேன், அறிந்தேன், அறிவேன் என்று ஒரு வினையும், படிக்கிறேன், படித்தேன், படிப்பேன் என்று வேறொரு வினையும், விடு, விட்டேன், விடுவேன் என்று மற்றொரு வினையும் வருகின்றன. இவற்றைப் பழக்கத்தால் தமிழர் அறிவர். வெளிநாட்டாருக்கு வழிகாட்ட, சில ஒழுங்குகள் தேவைப்பட்டன. அவற்றைத் தமிழ் இலக்கணம் கொடாததால், வெளிநாட்டாரே ஆராய்ந்து கண்டுபிடித்தனர். அவர்களுள் தலைசிறந்தவர் 1548இல் தமிழ் மொழிக்கு இலக்கணம் எழுதிய அண்டிறீக்கிப்(என்றிக்கஸ்) பாதிரியார்.

4.1. இவர் தமிழ் வினைச் சொற்களைப் பல ஆண்டுகளாய்க் கவனமாய் ஆராய்ந்தார். செய்கிறேன், தின்கின்றேன் என்று சில -கிறேன் இல் முடிய வேறு சில படிக்கிறேன், நடக்கிறேன் என்று -க்கிறேன் இல் முடிய, இன்னும் சில 'கி' இன்றி, போறேன், படுறேன் என்று றேன் இல் முடிந்தன. றேன் என்று முடியும் வினைகளைப் படித்தவர்கள் - கிறேன் என்று வழங்கியதாக ஆசிரியர் சுட்டுகிறார். இந்த முடிவை நோக்கித் தமிழ் வினைகளை மூன்று வகையாகப் பிரித்தார். வினைச்சொற்களின் அடிப்படை உறுப்புகள் இவ்வாறு பிரிப்பதற்கு உதவி செய்தன. அவை, செய்கிறேன், செய்தேன், செய்வேன், செய்யேன், செய்ய, செய் என்ற நிகழ், இறப்பு, எதிர், எதிர்மறை, நிகழ்கால வினையெச்சம், ஏவல் என்பனவாம். இவற்றிலிருந்து பிற காலங்கள் வருகின்றன. சான்றாகச்

செய்திருக்கிறேன், செய்திருந்தேன், செய்திருப்பேன், படிக்கப் போகிறேன், செய்யவில்லை முதலியன. ஆகவே -கிறேன், -க்கிறேன், -றேன் என்று முடியும் வினைகள் பெறும் அடிப்படைக் காலங்களை நோக்கித் தமிழ் வினைச் சொற்களை 9+3 பிரிவாகப் பிரித்தார். அவை வருமாறு:

## 4.2. பன்னிரு படிவங்கள்

### I. முதல் வகை (-க்கிறேன்)

| | |
|---|---|
| 1. படிக்கிறேன், படித்தேன், படிப்பேன், படியேன், படிக்க, படி | - இ/ய்/ஐ |
| 2 நடக்கிறேன், நடந்தேன், நடப்பேன், நடவேன், நடக்க, நட | - அ |
| 3.1. பார்க்கிறேன், பார்த்தேன், பார்ப்பேன், பாரேன், பார்க்க, பார் | - ர் |
| 3.2 கற்(க்)கிறேன், கற்றேன், கற்பேன், கல்வேன், கற்க, கல் | - ற் |

### II. இரண்டாம் வகை(-றேன்)

| | |
|---|---|
| 4. ஏத்துறேன், ஏத்தினேன், ஏத்துவேன், ஏத்தேன், ஏத்த, ஏத்து | - உ |
| 5.1. கொள்ளுறேன், -ண்டேன், -வேன், கொள்ளேன், கொள்ள, கொள் | - உ |
| 5.2 பூதுறேன், பூந்தேன், பூதுவேன், பூதேன், பூத, பூது | - உ |
| 6. பாயிறேன், பாஞ்சேன், பாய்வேன், பாயேன், பாய, பாய் | - இ/ய் |

### III. மூன்றாம் வகை

| | |
|---|---|
| 7. இடுகிறேன், இட்டேன், இடேன், இடுவேன், இடேன், இட, இடு | - டு/று |
| 8. அழுகிறேன், அழுதேன், அழுவேன், அழேன், அழ, அழு | - ழு |
| 9.1. தின்கிறேன், தின்றேன், தின்பேன், தின்னேன், தின்ன, தின் | - ன் |
| 9.2. காண்கிறேன், கண்டேன், காண்பேன், காணேன், காண, காண் | - ண் |

குறிப்பு1: -'க்கிறேன்'க்கு முன் 'இ/ய், ஐ, உ' முதல் வினையிலும், 'அ' இரண்டாம் வினையிலும், ர்/ற்

மூன்றாம் வினையிலும் வரும். இரண்டாம் வகை வினைகள், உ, இ(ய்) பெறும் மூன்றாம் வகை டு/று, ழு, ன்/ண் பெறும்.

4.3. பன்னிரு வகைக்கும் ஆசிரியர் தரும் பிறவினைகள் அழிக்கிறேன், அழி, சிவலி(சுவை), மேய், தேய், சமை, அரை, வை, நினை, அசை, பொறு.

2. பிள, தக(ர்), வள(ர்), கிட, திற, பிற.

3.1. கோர், கா, தீர், வார்.

3.2. நில், அவிழ்

4. எண், பாடு, எறி, உதவு, ஆடு, கழட்டு, காய்ச்சு, பருமாறு, மன்றாடு, வணங்கு, , நீக்கு, பழகு, நாள்போ, ஏதுவாரு, போ.

5.1. சொல்லிறேன், பேளு, மோளு.

5.2. தாறேன், வா, நேரு, வளரு, தவிரு.

6. மேயி, திரி, எய்யி, அறி, சொல், உய், பறை.

7. போடுகிறேன், படுகிறேன், தொடுகிறேன், பெறுகிறேன்.

8. விழு, பொரு (போராடு)

9.1. உண், களவாண்

9.2. தின், என்.

4.4. செயப்பாட்டு வினையைத் தனி வடிவமாக இவர் கருதவில்லை. ஏனெனில் செய்வினைப் படிவம் வருகிறதொழிய, இலத்தீன் கிரேக்க மொழிகளில் போல் தனிப் படிவம் தமிழில் வரவில்லை.எனினும் செயப்பாட்டு வினைப் பொருள் கொண்ட கீழ்க்கண்ட படிவங்களைக் கொடுக்கிறார்.

சிலவலிக்கிறேன்- சிலவலியுது, பிளக்கிறேன்- பிளந்திது

விற்கிறேன்- விற்கிது, அவிக்கிறேன்- அவிந்திது, அவிரும்;

தீர்க்கிறேன்- தீர்கிது, தீரிது, தீந்திது, தீரும்.

நீங்கிறேன்- நீங்கிச்சு, நீங்கிது; கழட்டினேன்- கழந்திது.

உடை- உடையுது, உடைஞ்சிது, உடைஞ்சுபோச்சு/போம்.

கொதிக்கிறேன்- கொதிக்குது.

அசைக்கிறேன்- அசைக்கும், அசையாது.

4.5. அண்டிறீக்கி பாதிரியார் செய்த இந்தப் பாகுபாடு எவ்வளவு சிறந்ததென்றால், தற்காலப் பாண்டிச்சேரித் தமிழ்-பிரெஞ்சு அகராதியும், தரங்கம்பாடி மலபார்-ஆங்கில அகராதியும் இதே பாகுபாட்டைப் பின்பற்றுகின்றன. இத்தகைய பாகுபாடு தமிழருக்குத் தேவையில்லை. ஆனால் அயலார் தமிழைக் கற்க இது இன்றியமையாதது.

411.5. தொடர் இலக்கணம்- சொற்கள் எவ்வாறு ஒன்றொடு ஒன்று சேர்ந்து வாக்கியமாக அமைகின்றன என்பதற்குச் சில சான்றுகள் காட்டி, இலக்கண நூலை முடிக்கிறார்.

1. முதல் வேற்றுமையில் சிக்கல் இல்லை என்கிறார்.
2. செயப்படு பொருளாய் வருங்கால் இரண்டாம் வேற்றுமை உருபு பெற வேண்டும் என்றும், மக்கள் அல்லாதவற்றிற்கு உருபு தேவை இல்லை

என்றும் கூறிச் சான்று காட்டுகிறார். 3. மேலும் ஒப்புமைப் பொருளில் வருவதை, 'நீ என்னைக் காட்டி(லும்) நல்லவன்' என்பதால் விளக்குகிறார். 4. நான்காம் வேற்றுமைக்குச் சான்றாகச் 'சுவானுக்கு நாலு பணம் குடு' என்பதும், 'நான் புன்னைக் கா(ய)லுக்குப் போறேன்' என்பதும் வருகின்றன. 5. ஏழாம் வேற்றுமைக்குப் 'பேதுரு வீட்டிலே இருக்கிறான், கப்பித்தான் புன்னைக்கா(ய)லிலே இருக்கிறான்' என்பன வருகின்றன. மேலும் இவர் காட்டும் வாக்கியங்கள் வருமாறு:

1. பேதுரு கிட்டப் போய் அவனைச் சடுதிக்கு இங்கே வரச்சொல்லு.

2. என்னுடைய மகன் செத்தது என்று விசேஷம் கேட்டு மெத்த வியாகுலப்பட்டிருக்கிறேன்.

3. மனிதர் என்னை நன்றாகக் கொண்டிராவிட்டாலும், தம்பிரான் என்னை நன்றாகக் கொண்டிருப்பான்.(-நடத்துவான்)

இறுதியாக விலைவாசி குதிரை விலை, யானை விலை என்று ஏறிக்கிடக்கும் இக்காலத்தில், அவர் கேட்கும் இக்கேள்விகள் வியப்பளிக்கும். அவையாவன.

1. ஒரு பணத்துக்கு எத்தனை கோழி விற்கிறாய்?
2. ஒரு காசுக்கு எத்தனை வாழைப்பழம்?

நன்னூல் போன்ற எத்தகைய இலக்கணத் துணையும் இன்றி, கடற்கரை ஓரத்தில் பாமர மக்கள் பேசும் தமிழை நன்கு ஆராய்ந்து இத்தகைய இலக்கணத்தை மேல்நாட்டுப் பாணியில் முதல் முதலாக அமைத்திருப்பது, வியக்கத்தக்கது. இப்பெரியார் தம்பிரான் வணக்கம், கிரீசித்தியாயினி வணக்கம், கொம்பெசியனாயரு, அடியார் வரலாறு முதலிய நூல்களை இயற்றி 1577 லேயே அச்சிடத் தொடங்கித் தமிழ் அச்சுத் தந்தை என்ற பெயர் பெறலானார். எனினும் 1578 லும் அதற்குப் பின்னும் அச்சான நூல்களே தற்போது கிடைக்கின்றன. இவர் தொகுத்த முதல் தமிழ்-போர்த்துக்கீசிய அகராதி இதுகாறும் கிடைக்கவில்லை.

இப்படியாக என்றிக்கஸ் அடிகள் தமிழுக்குப் பெருந்தொண்டு ஆற்றியுள்ளார்.

## தந்தை இராபர்ட் தெ நொபிலி சே.ச.
## (Rev.Fr.Robert De Nobili S.J.) 1577-1656

இத்தாலிய நாட்டின் தலைநகரான உரோமாபுரியில் பிரான்சிஸ் தெ நொபிலி என்னும் பிரபுக்கும் கிளாரிஸ் சியோலி சீமாட்டிக்கும் தலைச்சன் மகனாக 1577ஆம் ஆண்டு செப்டம்பர்த் திங்கள் இராபர்ட் தெ நொபிலி பிறந்தார். இவருடைய பெற்றோர் சம்பளத்திற்கு ஆசிரியரை

நியமித்துச் சிறுவனுக்குத் தொடக்கக் கல்வியை வீட்டிலேயே படிக்க வைத்தனர். இவர் உரோமிலுள்ள கல்லூரிக்குச் சென்று உயர்கல்வி கற்றார்.

இராபர்ட் தெ நொபிலி தம் பதினேழாவது வயதில் 1595ஆம் ஆண்டு நேப்பிள்சில் உள்ள இயேசு சபையில் சேர்ந்து இரண்டாண்டுகள் சந்நியாசம் மேற்கொண்டார். வெகு காலமாகவே இந்தியாவிற்குச் செல்ல ஆவல் கொண்டிருந்தார். ஏனென்றால் பெருமைமிக்க மரபுகளும் பண்பாடும் கொண்ட இந்தியா அவரை மிகவும் ஈர்த்தது. 1599இல் நொபிலி தத்துவம், தர்க்கவியல், அறிவியல், வானவியல், உளவியல், சமயத் தத்துவம் ஆகியவற்றைக் கற்றார். அவருடைய சொத்தின் பங்கை ஏழை எளியவர்களுக்காக ஒதுக்கி அவர்களுக்கு உதவினார்.

தந்தை இராபர்ட் இந்தியாவிற்குச் செல்லத் தம் குடும்பத்தினரிடமிருந்து அனுமதி பெற்று 1623ஆம் ஆண்டு போர்ச்சுக்கல் நாடு போய்ச் சேர்ந்தார். அந்நாட்டின் அரசரிடமிருந்து இந்தியா செல்ல அனுமதி பெற்று 1604ஆம் ஆண்டு ஏப்ரல் 28ஆம் நாள் டாம் மார்ட்டின் அல்போன்சா-டி-காஸ்டிக் மன்னருடன் இராபர்ட் தெ நொபிலி இந்தியா நோக்கிக் கடற்பயணம் மேற்கொண்டார்.

1605 மே திங்கள் நொபிலி கோவா வந்திறங்கினார். அவர் புனித பவுல் கல்லூரியில் தங்கித் தம் இறையியல் படிப்பைத் தொடர்ந்து முடித்துக் குருப்பட்டம் பெற்றார். பின்பு அவர் கொச்சிக்குச் சென்றார். 1606இல் இராபர்ட் அடிகள் கடுமையாக நோய்வாய்ப்பட்டார். அங்கிருந்து அவர் கிழக்குக் கடற்கரைப் பக்கம் செல்ல வேண்டியதாயிற்று. அங்கே ஓலை வேய்ந்த குடிசையில் தங்கினார். தந்தையவர்கள் அங்குள்ள மக்களிடமிருந்து தமிழ் கற்கத் தொடங்கினார். தமிழ் கற்பது அவருக்குக் கடினமாக இருந்தது. ஏழு மாதங்கள் கடும் உழைப்போடும் மிகுந்த ஆர்வத்தோடும் தமிழைக் கற்றபின் அவர் தமிழ் பேசவும் எழுதவும் திறன்கொண்டவரானார்.

1606ஆம் ஆண்டு நவம்பர் மாதம் 10 ஆம் நாள் மதுரை நகருக்கு வந்தார். தந்தை பெர்னாண்டசும், ஏனைய மறைப்போதகர்களும் இந்து மக்களை உண்மை மறைக்கு மனம் மாற்றுவதில் வெற்றி அடையவில்லை. எனவே இராபர்ட் அடிகள் மக்களை மெதுவாக அவர்களுடைய சொந்த நம்பிக்கைகளுடனும், பழக்கவழக்கங்களுடனும் தாம் சமய மாற்றம் செய்ய வேண்டும் என்று கண்டறிந்தார்.

இராபர்ட் தெ நொபிலி தம் இந்திய மயமாக்கும் கொள்கையினால் பல இந்தியர் அவருக்கு நண்பர்களாயினர். இந்தியர்களின் தேவைக்கேற்றவாறு அவர், அடிப்படை உண்மைகளைக் கைவிடாமல் அச்சமயத்தை மாற்றினார். ஆனால் அவருடைய சக பணியாளரான தந்தை

பெர்னாண்டஸ் எதிர்ப்புத் தெரிவித்து உரோமாபுரியிலுள்ள இயேசு சபைத் தலைவருக்குப் புகார்க் கடிதம் எழுதினார். நொபிலியோ அனைத்துப் புகார்களையும் மறுத்து 39 பக்கங்களில் விளக்கம் எழுத வேண்டியிருந்தது. இறுதியில் உரோமையில் உள்ள கத்தோலிக்கத் திருச்சபையின் தலைவரான போப்பாண்டவரும், இயேசு சபைத் தலைவரும் இந்திய மயமாக்கும் முறையை அனுமதித்தனர். நொபிலி, ஒரு 'முனிவர்' என்ற பேச்சு மதுரை எங்கும் பரவியது. அவர் "தத்துவப் போதகர்" அல்லது "உண்மை விளம்பி" என அழைக்கப்பட்டார். 1623ஆம் ஆண்டு திருமலைநாயக்கர் மதுரையின் அரசுப் பொறுப்பை ஏற்றார். அவர் நொபிலியுடன் இணக்கமான தொடர்பைக் கொண்டிருந்ததாகத் தெரிந்தது.

1654இல் நொபிலிக்கு 68 வயது. அப்பொழுது கோவாவில் இருந்த அவருடைய மறைமாநிலத் தலைவர் எம்மானுவேல் பாராட்ஸ் அடிகள் அவரை மதுரையை விட்டுச் செல்லுமாறு உத்தரவு பிறப்பித்தார். அவர் மதுரையிலிருந்து இலங்கையின் வட பகுதியில் உள்ள யாழ்ப்பாணத்திற்குக் கப்பலேறிச் சென்றார். பிறகு இலங்கையிலிருந்து தந்தை நொபிலி மயிலாப்பூருக்கு அனுப்பப்பட்டார். அவர் அங்கு ஈராண்டுக் காலம் மறைப்பணி ஆற்றினார். இராபர்ட் தெ நொபிலி சில நாள்கள் நோய்வாய்ப்பட்டுக் கிடந்தார். 1656ஆம் ஆண்டு ஜனவரி 16ஆம் நாள் அவர் இன்னுயிர் நீத்தார். அன்னாரது பூதவுடல் மயிலாப்பூரில் நல்லடக்கம் செய்யப்பட்டது.

இராபர்ட் தெ நொபிலி அடிகள் பன்மொழி அறிஞர். இவர் தமது தாய் மொழியாகிய இலத்தீன் மற்றும் போர்த்துக்கீஸ் போன்ற ஐரோப்பிய மொழிகளையும் தமிழ், தெலுங்கு, சமஸ்கிருதம் போன்ற இந்திய மொழிகளையும் நன்கு அறிந்திருந்தார். தந்தை நொபிலி சமஸ்கிருதத்தைக் கற்றறிந்த முதல் ஐரோப்பியராவார். அவர் மூன்று இந்திய மொழிகளில் பல நூல்கள் எழுதியுள்ளார்.

தெ நொபிலி மதுரையில் முதன்முதலாகத் தந்தை பெர்னாண்டஸ் அவர்களின் மறைப்பணியின்போது உருவாக்கிய பள்ளி ஆசிரியருடன் நட்புக்கொண்டார். அவ்வாசிரியரின் தாய்மொழியிலேயே உரையாடி அவருடைய அன்பைப் பெற்றார் நொபிலி அடிகள்.

**சமூக நிலைப்பாடு**

இந்திய சமூகத்தில் சாதி உணர்வு அதிகமாய் இருந்தது. மனிதனின் தொழில் அடிப்படையில் சாதி வேறுபாடுகள் உண்டாயின. அதனால் பல சாதிகள் நொபிலி காலத்தில் இந்தியாவில் இருந்தன. பன்றிக் கறியை உணவாகவும் மேலை நாட்டு முறையில் ஆடைகள் அணிந்தோரை இந்தியர் பறங்கியர் என்று அழைத்துவந்தனர். முதன்

முதலில் நொபிலிக்குத்தான் பறங்கி என்ற பெயர் மதுரையில் கொடுக்கப்பட்டது. அச்சமயம் கிறித்துவச் சமுதாயத்தில் கலப்புத் திருமணங்களும் நடைபெற்றன. பறங்கியர், பறையர், பள்ளர், அருந்ததியர்களைப் போன்று கருதப்பட்டனர். அதனால் மறைப்போதகர்கள் இந்துக்களில் எவரையும் கிறிஸ்தவச் சமயத்திற்கு மனமாற்ற முடியவில்லை.

## இந்திய மயமாக்கல்

எனவே இராபர்ட் தெ நொபிலி அனைவராலும் ஏற்றுக் கொள்ளக் கூடிய வழிவகைகளைப் பின்பற்றினார். அவர் கிறிஸ்தவ மதத்தை உண்மையான வேதம் என்று கூறினார். மேலும் அவர் தம் சமயத்தைப் பாதிக்காத சில இந்து சமயப் பழக்க வழக்கங்களை மேற்கொண்ட ார். தரையில் கால்களைச் சம்மணம் போட்டு அமர்ந்தார். ஊன் உண்பதையும், மதுபானம் அருந்துவதையும் கைவிட்டார். இந்து சந்நியாசியைப்போல் உடையணிந்தார். தன்னை உரோமன் அந்தணன் என்று அழைத்துக் கொண்டார். இறுதியாக அவர் மக்களுடன் அவர்களுடைய தாய்மொழியிலேயே உரையாடினார்.

## அரசியல் சூழ்நிலை

திருமலை நாயக்கர் நொபிலியுடன் இணக்கமான தொடர்பினைக் கொண்டிருந்ததாகத் தெரிகிறது. சில அரசியல் நிகழ்வுகளை முன்னிட்டு நொபிலி மதுரையை விட்டுத் திருச்சிராப்பள்ளிக்குச் சென்றார். 1640ஆம் ஆண்டு இராபர்ட் தெ நொபிலிக்கு எதிரான நிகழ்வுகள் நடந்தன. அவர் ஜூலை 22ஆம் நாள் சிறை செய்யப்பட்டார். அவ்வாண்டின் இறுதியில் திருமலை நாயக்கர் தம் படையெடுப்பிலிருந்து திரும்பினார். உடனே நொபிலியை விடுதலை செய்தார். நாயக்கர் இல்லாதபோது நொபிலியும் அவரது சக மறைப்பணியாளரும் சிறை பிடிக்கப்பட்டுச் சிறைச்சாலையில் அடைக்கப் பட்டிருந்தனர். அதே வேளையில் கிறிஸ்தவர்கள் துன்புறுத்தப்பட்டனர். 1641ஆம் ஆண்டு இறுதியில் அவர்கள் விடுதலை செய்யப்பட்டனர்.

## தெ நொபிலியின் தமிழ்ப் படைப்புகள்

தந்தை நொபிலி கடற்கரைப் பகுதிக்கு மறைப்பணிக்காக அனுப்பப்பட்டார். அங்குப் பேச்சுத் தமிழைக் கற்றார். ஆனால் மதுரைக்கு வந்த பொழுது அரச சபைத் தமிழ் அல்லது உயர் தமிழைக் கற்றார். மதுரையை வந்தடைந்த ஆறு மாதத்திலேயே தமிழில் திறமை வாய்ந்தவராகவும் மொழிபெயர்ப்பாளர்களின் உதவியின்றி எந்தப் பொருளைப் பற்றியும் பிராமணர்களோடு தமிழில் தர்க்கம் செய்யவும் முடிந்தது என்று அவரே கூறியுள்ளார். 1609ஆம் ஆண்டு நவம்பர் 20ஆம்

நாள் தந்தை லெரிசியோ உரோமில் உள்ள இயேசு சபைத் தலைவருக்கு எழுதிய கடிதத்தில்,

> "நொபிலி அடிகள் தூய்மையான தமிழைக் கற்றுள்ளார். மேலும் அவர் அதைச் சிறந்த முறையில் உச்சரிக்கின்றார். எவ்வாறெனில் மிக்க மனநிறைவு கொள்ளாத பிராமண அறிஞர்கள் அவருடைய சொல்லாண்மையை மேம்படுத்த முடியாத அளவுக்குத் திறமை மிக்கவராய் இருக்கிறார். ஏற்கெனவே அவர் அநேக நூல்கள் வாசித்திருந்தார். மேலும் இன்றியமையாத பகுதிகளின் விதிகளையும் மிகவும் பேர்போன கவிஞர்களின் அநேகக் கவிதைகளையும் மனப்பாடம் செய்து கொண்டார். அவர் அநேகப் பக்திப் பாடல்களை மனப்பாடம் செய்து அவைகளை இறைவன் புகழாகப் பாடி வந்தார். நொபிலி முழுமையாகவும் கவர்ச்சியாகவும் பாடுவதை அனைவரும் மகிழ்ச்சியோடு கேட்பார்கள். மேலும் அப்பாடல்களைப் பாடக் கேட்பவர்கள் தங்களின் வியப்பை மறைக்க முடியாதவர்களாக இருந்தனர்."

நொபிலி அடிகளின் சக மறைப்போதகரான தந்தை அந்தோணி புரோயன்சா அவருடைய இலக்கியப் படைப்பைப் பற்றிச் சுருக்கமாகக் கூறுவதாவது:

> "தந்தை இராபர்ட் தெ நொபிலி இந்த நாட்டில் பேசப்படும் மொழிகளான தமிழ், தெலுங்கு, சமஸ்கிருதம் ஆகிய மூன்று மொழிகளிலும் மிகவும் மேம்பட்டவராக இருந்தார். அவர் உள்நாட்டு அறிஞர்களின் வியப்பிற்குக் காரணமாய் இருந்தார். இந்த மொழிகளில் அவரது விரிந்த ஆழமான அறிவுக்கு யாரும் சமமாகவோ அல்லது மேம்பட்டவராகவோ இருக்க முடியாது. அவரது கவர்ச்சியான பேச்சு, உறுதியான வலிமை, சரளமாய்ப் பேசுவது அல்லது அளவளாவுவதில் அவரது நாவன்மை ஆகியவற்றில் யாரும் இவருக்கு நிகராக இருக்க முடியாது என்பது என்னுடைய அசைக்க முடியாத நம்பிக்கையாகும்."

நொபிலி அடிகள் தாம் எழுதிய 'தூஷணதிக்காரம்' என்ற படைப்பின் முகவுரையில் அவரே 1641இல் எழுதிய அநேகப் படைப்புகளைப் போதனா முறையிலும் தற்காக்கும் முறையிலும் எழுதியுள்ளார். தேர்வாய்வு வகையில் செய்யப்பட்ட நொபிலியின் படைப்புகளின் பட்டியல் வருமாறு:

**ஞானோபதேசக் காண்டம்**

ஞானோபதேச மந்திர வியாக்கியானம், ஞானோபதேசச் சத்திய வேத லக்ஷணம், ஞானோபதேச 26 பிரசங்கங்கள், ஞானோபதேச 28

பிரசங்கங்கள், ஞானோபதேச 30 பிரசங்கங்கள், ஞானோபதேச 32 பிரசங்கங்கள், ஆத்தும நிர்ணயம், தூஷணதிக்காரம், புனர்ஜென்ம ஆக்ஷேபம், நித்திய ஜீவன சல்லாபம், ஞான தீபிகை, பேதகப் பரீட்சை, ஞான சங்க்ஷேபம், விசுவாச சல்லாபம், உபதேச சல்லாபம், பத்துச் சல்லாபம், சிலுவையின் விஷேச சல்லாபம், மந்திரமாலை, கடவுள் நிர்ணயம், சேசுநாதர் சரித்திரம், அக்கியான நிவாரணம், அண்டபிண்ட வியாக்கியானம், உலகப் பிரமாண சாஸ்திரம், பரம சூக்ஷமாபிப்பிராயம், சகுன நிவாரணம், தத்துவக் கண்ணாடி, வியாகுலப் பிரசங்கம், திவ்விய மாதிரிகை, ஞான சஞ்சீவி, நீதிச் சொல், தபசு சதம், தபசுகாலப் பிரசங்கம், சின்னக் குறிப்பிடம், பெரிய குறிப்பிடம், தேவமாதா சரித்திரம், சின்ன உபதேசம், பெரிய உபதேசம், ஞானோபதேசக் குறிப்பிடம், இஞ்ஞாசியார் சரித்திரம்.

### தமிழ்ச் செய்யுள் படைப்புகள்

ஒப்பாரி, 700 வரிகளில் உண்மையான சமயத்தின் மன்னிப்பு (An apology of the true religion 700 lines), நித்திய ஜீவியம் (2000 வரிகள்). அடிகள் அநேக ஜெபங்கள் பாட்டுகள் ஆகியவற்றை இயற்றியும் மொழிபெயர்த்தும் உள்ளார். இவர் எழுதிய கடிதங்களும், ஒப்பந்தங்களும் இத்தாலிய, போர்த்துக்கீசிய, இலத்தீன் மொழிகளில் உள்ளன.

### சமஸ்கிருதப் படைப்புகள்

தத்துவக் கிரந்த சுலோகம், சத்திய வேத சங்கிரகம், மந்திர மாலா (திருமணச் சடங்கு), தெய்வப் பரீக்ஷா (பாரீஸ்), புனர் ஜென்ம ஆக்ஷேபம் (பாரீஸ்), கிறிஸ்து கீதா, கிறிஸ்து மத கிரந்தா, அன்னை மரியாயின் வாழ்க்கை வரலாறு கவிதை வடிவில்.

### தெலுங்குப் படைப்புகள்

ஞான சன்க்ஷேபமு (சின்னக் குறிப்பிடம் தமிழைப் போன்று)

புனர் ஜென்ம ஆக்க்ஷேமமு (பாரீஸ்)

### மதச் சொற்பொழிவுகள்

தமிழ்ப் படைப்புகளின் தெலுங்கு மொழிபெயர்ப்பு.

### நொபிலி அடிகளாரின் வாழ்நாள் சாதனையான ஞான உபதேசம்

இது தந்தை நொபிலியின் ஐந்து பகுதிகள் கொண்ட மிகப் பெரிய படைப்பாகும். மேலும் இது அவருடைய வாழ்நாள் சாதனையும், தலைசிறந்த படைப்பும்கூட. தந்தை பல்த்தசார் டா கோஸ்டா இப்படைப்பைப் போர்த்துக்கீசிய மொழியில் மொழிபெயர்த்துள்ளார். ஏனைய இந்திய மொழிகளில் மொழியாக்கம் செய்யும் பொருட்டுப் போர்த்துக்கீசிய மொழியாக்கம் செய்யப்பட்டது.

இந்த ஞான உபதேசத்தில் மூன்று வகையான உண்மைகள் கையாளப்பட்டுள்ளன. முதல் வகையில் மனிதனின் பகுத்தறிவிற்கு உட்பட்ட உண்மைகள் அதாவது இறைவன் இருக்கின்றார் என்றதும் அவருடைய ஆறு தனியியல்புகள் வருகின்றன. இரண்டாம் வகை இறையியல் இரகசியங்கள் கொண்டது. இறைவனின் வெளிப்பாடின்றிப் புரிந்து கொள்ள முடியும். அவ் இரகசியங்களாவன: காவல் தூதர்கள், மனிதனின் படைப்பு, அவர்களின் தன்மை, வீழ்ச்சி, அதனால் உண்டாகும் விளைவுகள். மூன்றாம் வகை மனித அறிவிற்கு அப்பாற்பட்ட இரகசியங்கள் அடங்கும். இறைவன் மனிதனுக்கு வெளிப்படுத்தினாலும் அவற்றைப்பற்றி மனிதன் புரிந்து கொள்வது அவனது அறிவுக்கு மேற்பட்டதாகும். எனினும் அவை மனித அறிவுக்கு ஒத்துப் போகும் தன்மை படைத்தவை. அவை யாதெனில் இறை மூவொருமைக் கோட்பாடு, மனிதப் பிறவி எடுத்தல், இரட்சிப்பு, திருவருட்சாதனங்கள் ஆகியவையாகும். நான்காம் வகை கீழ்வரும் செபங்களை விளக்குகின்றது. அவை: சிலுவை அடையாளம், பரலோகத்திலிருக்கிற எங்கள் பிதாவே, அருள் நிறைந்த மரியே வாழ்க, விசுவாசப் பிரமாணம், பத்துக் கட்டளைகள் ஆகும். இப்பகுதி மந்திர வியாக்கியானம் என்றும் அழைக்கப்படுகிறது. ஐந்தாம் வகையில் இறை சமயத்தைப் பற்றிய பதின்மூன்று குறிப்புகள் அடங்கியது. சத்திய வேத இலட்க்ஷணம் அல்லது வேத இலட்க்ஷணம் போன்ற மூன்று இறுதியில் நொபிலியால் சேர்க்கப்பட்டவைகளாகும். ஐந்து பகுதிகளில் உள்ள அதிகாரங்களும் அவற்றின் தலைப்புகளும் பின்வருமாறு:

**பகுதி I**

அதிகாரம் 1 - ஞான உபதேசத்தின் இலக்கும் தன்மையும்.

அதிகாரம் 2 - கடவுளின் இருத்தலும் ஒருமையும்.

அதிகாரம் 3 - கடவுளின் தன்மையும் அவருடைய தனி இயல்புகளும், முதல் மூன்று தாமாயிருத்தலும், எல்லையற்றதும், ஆன்மீகமும்.

அதிகாரம் 4 - நான்கு சின்னங்கள்- நல்ல ஒப்புயர்வற்ற தன்மை.

அதிகாரம்5 - பயன்படுத்துதல்- பாவ விளையாட்டு, சாதகமான பில்லிசூனியம், தூய்மையற்ற பலிகள், தற்கொலை, அவர்கள் கோயில்களில் நடக்கும் தீயொழுக்கம் ஆகியவை உண்மையான கடவுளின் தன்மைகள் அல்ல.

அதிகாரம் 6 - ஐந்து சின்னங்கள்- எங்கும் நிறைந்த தன்மை, அவருடைய அறிவு காணுதல், அவருடைய ஆற்றல் மிக்க சட்டங்களும் அவருடைய காரணகாரியம் ஒவ்வொன்றையும் பேணி வளர்க்கின்றன.

அதிகாரம்7 - ஆறு சின்னங்கள்- முதல் காரணம்- ஒன்றுமில்லாமையிலிருந்து படைத்தல்.

அதிகாரம் 8 - இவ்வுலகம் மனிதனுக்கு. அவன் படைத்த கடவுளைத் தவிர்த்து வேறு எதையும் வணங்கக்கூடாது.

பகுதி II

அதிகாரம் 1 - தேவதூதர்களைப் படைத்தல்.

அதிகாரம் 2 - பிரிவு: 9 பாடகர் குழு, 3 சமயக் குருமார்களின் ஆட்சி, 7 பிரதான தேவதூதர்கள்.

அதிகாரம் 3 - பேய்கள்- மனிதர்மேல் வெறுப்பு- அவை பொய்க் கடவுள்களை வணங்க நயந்து பேசிச் சிக்க வைத்தல்.

அதிகாரம் 4 - ஆதாம் ஏவாளைப் படைத்தல்-திருமணத்தின் புனிதத்தன்மை.

அதிகாரம் 5 - திருமணச் சடங்கை அவமதித்தல், மணவிலக்கு, விவாகரத்து, தகாத பாலுறவு கொள்ளுதல்.

அதிகாரம் 6 - திருமணத்தின் நோக்கம்.

அதிகாரம் 7 - ஒரு காலத்தில் கணவன் பலரைக் கொண்டிருக்கும் வழக்காறும் ஒரே காலத்தில் மனைவியர் பலரை மணந்து கொள்ளும் வழக்காறும்.

அதிகாரம் 8 - ஆதியிலிருந்த நீதி, விண்ணுலகம்.

அதிகாரம் 9 - கடவுளின் கட்டளையும் மனிதனின் கீழ்ப்படியாமையும்.

அதிகாரம் 10 - மனித சமூகத்திற்கு-ஆறு பாவங்களின் விளைவுகள்.

அதிகாரம் 11 - பேயிடமிருந்து இரண்டு வகையான தீங்குகள்.

அதிகாரம் 12 - மூன்றாம் வகைத் தீங்கு.

அதிகாரம் 13 - ஆதியில் செய்த பாவத்தின் விளைவு.

அதிகாரம் 14 - பொய்யான சமயங்களின் தன்மை.

அதிகாரம் 15 - குடும்ப வாழ்க்கையைவிடத் துறவற வாழ்க்கை மேலானது.

அதிகாரம் 16 - சமயக் கொள்கைகளில் நம்பிக்கை இல்லாதவர்களுக்கு - நொபிலி பேசுகிறார்.

அதிகாரம் 17 - பாவத்தின் கனாகனமும் தெரிந்தெடுத்த அதிசயமான மருந்தும்.

அதிகாரம் 18 - மனித அவதாரத்தைப் பற்றிய சில கேள்விகள்.

அதிகாரம் 19 - பரிகாரமும் மரியாயின் மாசற்ற கருவுறுதலும்.

அதிகாரம் 20 - மரியாளின் இளமை வாழ்க்கையும் அவளது திருமணமும்- சக்கரியாஸ்.

**பகுதி III**

அதிகாரம்1 - தெய்வத்தன்மை வாய்ந்த பெயர்களும் இந்து மும்மூர்த்திகளும்.

அதிகாரம் 2 - புனித இறை மூவொருமை.

அதிகாரம் 3 - கன்னிமரியாளுக்குத் தூதர் அறிவிப்பு.

அதிகாரம் 4 - மனித அவதாரம் உருவேற்பு.

அதிகாரம் 5 - சந்தித்தல்.

அதிகாரம் 6 - முன்னோடி- சூசையப்பரின் சந்தேகம்.

அதிகாரம் 7 - கிறிஸ்து பிறப்பு.

அதிகாரம் 8 - இடையர்கள்-ஏழ்மை.

அதிகாரம் 9 - மூவரசர்கள்.

அதிகாரம் 10 - நுனித்தோல் அகற்றுதல் - பெயரிடுதல்.

அதிகாரம் 11 - ஒப்புக்கொடுத்தலும் சுத்தமாக்குதலும்.

அதிகாரம் 12 - புனித மாசற்ற குழந்தைகள்.

அதிகாரம்13 - திருமுழுக்கு அருளப்பரும் கிறிஸ்துவின் திருமுழுக்கும்.

அதிகாரம் 14 - பிரச்சினைகள் தீர்வு- மூதாதையர் மரபு வரலாறு.

அதிகாரம் 15 - பாலைவனத்தில் கிறிஸ்து - சோதனை (மருட்சி).

அதிகாரம் 16 - உயிர்த்தியாகம்- திருமுழுக்கு அருளப்பர்.

அதிகாரம் 17 - மறைத்தூதர்கள்- இரட்சிப்பின் கொள்கை.

அதிகாரம் 18 - இலாசரின் உயிர்ப்பும், யூதரின் கடும் வெறுப்பும்.

அதிகாரம் 19 - கடைசி இராவுணவு.

அதிகாரம் 20 - கடைசிச் சொற்பொழிவு.

அதிகாரம் 21 - நெடுந்துயரும் கைது செய்தலும்-அன்னாஸ் கைப்பாஸ்.

அதிகாரம் 22 - பிலாத்துவும் ஏரோதும்.

அதிகாரம் 23 - மரணதண்டனையும் சிலுவையில் அறைதலும்.

அதிகாரம் 24 - விண்ணகத்திற்கும் நரகத்திற்கும் இடைப்பட்ட இடம்.

அதிகாரம் 25 - ஏன் கிறிஸ்து தேவையற்ற முறையில் வேதனை அடைய வேண்டும்?.

அதிகாரம் 26 - எல்லோருக்காகவும் அவர் இறந்தபொழுது ஏன் சிலர் மட்டும் காப்பாற்றப்படவேண்டும்?

அதிகாரம் 27 - உயிர்த்தெழுதலும் பெண்கள் முன் தோன்றுதலும்.

அதிகாரம் 28 - எம்மாவுஸ் சீடர்களுக்கும் 11 திருத்தூதர்களுக்கும் காண்பித்தல்.

அதிகாரம் 29 - என் ஆடுகளை மேய்ப்பாயாக.

அதிகாரம் 30-31-திருச்சபையைக் கட்டுவதற்காக ஏழு அருட் சாதனங்களை நிறுவுகின்றார்.

அதிகாரம் 32- அருட் சாதனங்களை நிறுவுதல் - விண்ணேற்றம்.

அதிகாரம் 33- நற்செய்தி பிரகடனப்படுத்துதல்.

அதிகாரம் 34- புனித மரியாளின் இறுதி நாள்கள் - கடந்த காலத்தை மீண்டும் நினைவுக்குக் கொண்டு வருதல்.

அதிகாரம் 35- அவள் ஏன் இறந்தாள்? நான்கு காரணங்கள்.

அதிகாரம் 36- மரணமும் ஆரோபணமும்- காவல்தூதர்கள் வரவேற்றல்- மரியன்னை மீது பலவகையான பக்திகள்

அதிகாரம் 37- அந்தி கிறிஸ்துவும் உலக முடிவும்.

அதிகாரம் 38- எல்லாவற்றிற்கும் உரிய உயிர்ப்பு.

அதிகாரம் 39- உயிர்ப்பின் தன்மை- ஒழுக்கக்கேடானவனின் கடுந்துயரம்.

அதிகாரம் 40- இறுதித் தீர்ப்பு.

அதிகாரம் 41- நேர்மையானவர்களுக்குக் கைமாறு.

அதிகாரம் 42- ஒழுக்கக்கேடானவர்களின் மீளா நரகம் (சாபம்).

**பகுதி IV செபங்களின் விளக்கம்**

அதிகாரம் 1 - சிலுவை அடையாளம்-10 கருத்துக்கள்.

அதிகாரம் 2 - பரலோகத்தில் இருக்கிற எங்கள் பிதாவே 40 கருத்துக்கள்.

அதிகாரம் 3 - அருள் நிறைந்த மரியே வாழ்க- 40 கருத்துக்கள்.

அதிகாரம் 4 - விசுவாசப் பிரமாணம்- 73 கருத்துக்கள்.

அதிகாரம் 5 - பத்துக் கட்டளைகள்- ஒவ்வொரு கட்டளைக்கும் கருத்துக்களின் எண்ணிக்கை.

1- 20 2- 13 3-12 4- 8 5- 7

6- 5 7- 13 8-14 9- 3 10- 5

இவை அனைத்தும் இரண்டாகக் கூட்டப்படும்.

**பகுதி V:** உண்மையான சமயத்தின் அடையாளங்கள்- முகவுரை- படைப்பின் பிரிவுகள்.

*குறிப்பு 1:* பாவத்தை விலக்கு (தடுத்து நிறுத்து). பாவங்களுக்கான மருந்து சேகரித்துக் கொடுக்கிறது.

*குறிப்புகள் 2-3:* பரம இரகசியங்கள் அடங்கியுள்ளன. ஆனால் அவை பகுத்தறிவுக்கு மாறானவை அல்ல.

*குறிப்புகள் 4-5:* உண்மையானதும் அகண்ட தன்மையுமான தீர்க்கதரிசனங்கள்.

*குறிப்பு 6:* அதிசய விசுவாசப் பரப்புதல்.

*குறிப்பு 7:* கிறிஸ்து செய்த புதுமைகள்.

*குறிப்பு 8:* திருத்தூதர்கள் செய்த புதுமைகள் - உண்மையும் பொய்யானதுமான புதுமைகள் - இன்று ஏன் ஒருசில புதுமைகள்?.

*குறிப்பு 9:* அநேக பாவிகளின் மனந்திருப்புதல்.

*குறிப்பு 10:* புனிதர்களின் உயிர்த் தியாகம்.

*குறிப்பு 11:* உண்மையான தாழ்ச்சி, கற்பு, உள்ளன்பு, இறையன்பு இங்கே மட்டும்தாம் காணப்படுகின்றன.

*குறிப்பு 12:* உற்று நோக்குபவர் புனித வாழ்க்கை நடத்துகிறார்.

*குறிப்பு 13:* இது மட்டுமே பேயினால் துன்புறுத்தப்படும்- விசுவாசத்தை அறிக்கையிடுதல். ஞான உபதேசம்- 26 சொற்பொழிவுகள்.

இந்தப் படைப்பு காண்டத்தின் முதல் மூன்று பகுதிகளின் சுருக்கமாகும். இது காண்டத்திற்கு முன்பே எழுதப்பட்டதாகும். இதில் 26 சொற்பொழிவுகள் அடங்கியுள்ளன.

1. ஞான உபதேசத்தின் நோக்கமும் தன்மையும்.
2. கடவுளின் இருத்தலும் இறை ஒருமையும் - கடவுளின் மூன்று தனியியல்புகள் - தனித்திருத்தல், ஆதி அந்தமில்லாததும் ஆன்ம சம்பந்தமானதும்.
3. நான்காம் தனியியல்பு - ஒப்புயர்வற்ற தன்மை பயன்படுத்தல்- இவ் இயல்புகள் இல்லாத கடவுள்கள்.
4. ஐந்தாம் தனியியல்பு - எங்கும் நிறைந்திருத்தல், அறிவு, வல்லமை, காரண காரியம்.
5. ஆறாம் தனியியல்பு - எல்லாவற்றின் முதல் காரணம் அனைத்தும் அவரால் படைக்கப்பட்டன. அவரை மட்டுமே வணங்க வேண்டும்.
6. தேவ தூதர்கள் - அவர்களுடைய பிரிவுகளும் அவர்களின் வீழ்ச்சியும் - பேயின் தந்திரங்கள், வீழ்ச்சியுற்ற தேவதூதன்.
7. மனிதனின் படைப்பு: அவனது சிறப்புரிமைகளும் வீழ்ச்சியும் - ஆதியில் செய்த பாவம்.
8. ஆன்மாவைப் பற்றிய தவறான போதனைகள்- மறு பிறப்பு கிடையாது அல்லது விதி.
9. வெவ்வேறான மதங்களின் தொடக்கம்- வெளிப்படுத்திய ஒரு மதம்.

10. இறை மூன்றொருமையும் மனிதவுருவெடுப்பும்.
11. புனித மரியாளின் பிறப்பும் திருமணமும் - முன்னோடி.
12. தேவதூதர் மரியாளுக்கு அறிவிப்பு - மரியாளின் சந்திப்பு- சூசையின் கவலை.
13. இயேசுகிறிஸ்துவின் பிறப்பு - இடையர்கள் - இயேசுவின் பெயர்
14. மூன்று அரசர்கள் - காணிக்கை - எகிப்து - நாசரேத்து.
15. முன்னோடி - கிறிஸ்துவின் திருமுழுக்கு - சோதித்தல்.
16. இயேசுவின் போதனை - பரலோகத்திலிருக்கிற எங்கள் பிதாவே - பேரின்பங்கள் - புதுமைகள் - கானாவூர் - குருடன் - 38 ஆண்டுகளாக வியாதியுள்ள மனிதன் வீட்டின் கூரையின் மேலிருந்து இறக்கிய வியாதியுள்ள மனிதன் - செந்தூரியனின் வேலையாள்.
17. புதுமைகள் - பேய் பிடித்த மகன், கனானியப் பெண், விதவையின் மகன், இலாசர்.
18. குருக்களின் சதித்திட்டம் - கடைசி இராஉணவு.
19. நற்கருணையை நிறுவுதல் - மும்முறை நீ என்னை மறுதலித்தாய்.
20. துயரமும் இயேசு கைது செய்யப்படுதலும் - இராயப்பரின் மறுதலிப்பு - அன்னாஸ் கைப்பாஸ்.
21. யூதாஸ் - பிலாத்து, ஏரோது முன்பு - தீர்வையிடுதல்.
22. சிலுவைப்பாதை - ஏழு வாக்கியங்கள் - மரணம் - அடக்கம் - சிலுவையின் பொருள் (அர்த்தம்).
23. நரகத்தில் இறங்குதல்: நரகம், உத்தரிக்கிற இடம், குழந்தைகளுக்கான இடைப்பட்ட இடம், குடும்பத் தலைவர்களின் இடைப்பட்ட இடம்.
24. உயிர்த்த இயேசு - பெண்களுக்குத் தோன்றுதல் (காட்சியளித்தல்).
25. தூய ஆவி இறங்கி வருதல் - திருச்சபை.
26. நீதித் தீர்ப்பு - நரகம்- விண்ணகம்.

### 3. தூஷணதிக்காரம்

ஐந்து காண்டங்கள் அடங்கிய ஞான உபதேசம் நொபிலியின் மிகச் சிறந்த சுருக்கமான ஒன்றும், புறச் சமயத்தினருக்கு எதிரானதுமாகும். பின்பு நொபிலி கற்பித்தலின் வழியாக அவர் எழுதிய ஆறு நூல்களைப் பட்டியலிடுகின்றார். 1. ஞான தீபிகை 2. விசுவாச சல்லாபம் 3. பேதக பரீக்ஷை 4. ஞான சன்க்ஷேபம் 5. ஞான உபதேசம் (1காண்டம்) 6. ஆத்தும நிர்ணயம், தவறென மறுத்ததின் மூலம் ஏற்கெனவே அவர் 'நித்திய ஜீவன சல்லாபம்' எழுதியுள்ளார். இரண்டாவது ஞான உபதேசக் காண்டம் எழுதத் தொடங்குவதற்கு முன் தூஷணதிக்காரம் எழுதத் திட்டமிட்டார்.

**நூலின் அமைப்பு: அவதூறுகளுக்கு எதிராக மறுத்தல்.**

**I. உண்மையான மதம் (1-5).**

1. அனைவருக்கும் உண்மையான மதம்.
2. உண்மையான மதத்தைப் பின்பற்றுபவன் தன் சாதியை இழப்பதில்லை.
3. எல்லோரும் இந்தச் சமயத்தைச் சட்டப்படி பின்பற்றக் கட்டுப்படுத்தப்படுகின்றனர்.
4. இவ்வுலகில் ஏனைய மதங்களைப் பின்பற்றுபவர்கள் பாவிகள், மறு உலகில் அவர்கள் நரகத்திற்குப் போவார்கள்.
5. தப்பான மதங்கள் கடவுளை அறியாதவர்களின் கண்டிப்புகளாகும்- 3 சான்றுகள்.

**II. மனுவுறுதல் (6-12)**

6. மனுவுறுதலும் அவதாரமும்.
7. மனுவுறுதலின் புனிதத்துவம் - பன்றிகள், ஆமைகளின் அவதாரம் முட்டாள்தனம்.
8. மனுவுறுவாதல் உண்மை. அதே வேளை முன்னாள் அரசர்கள் - ஆட்சியாளர்களின் அவதாரம் தவறாகும்.
9. கன்னிமரியாளின் பிறப்பு புனிதத்தன்மையுடையது.
10. ஏன் கிறிஸ்து ஒரு ஏழைபோன்று வாழ்ந்தார்?.
11. கிறிஸ்துவின் கடுந்துன்பங்கள் மதிக்கத்தக்கவையேயன்றி மதிப்புக் குறைவானவைகளல்ல.
12. கிறிஸ்துவின் வாழ்வு புனிதமானது.

**III சிலைகளின் வணக்கம் (13-18)**

13. பொருள்களுக்குத் தனிப்பட்ட வணக்கம்.
14. கிறிஸ்துவின் உருவ வணக்கம் செய்வது தவறு என்பதை மறுத்துக் கூறப்பட்டது.
15. சிலைகளின் வணக்கத்திற்கான காரணங்கள்.
16. சரீர உடம்பில்லாத விண்ணகத் தூதர்களின் சிலைகளுக்கு வணக்கம் செய்தல்.
17. புற சமயத்தார் விக்கிரகங்களை ஆராதிக்கின்றனர். தூதருக்குச் செலுத்தும் மரியாதை அரசனுக்குச் (கடவுள்) செலுத்துவது தவறு.
18. புற மதத்தாரின் பொருள்களால் ஆன ஆராதனை அவைகளோடு நின்றுவிடுகின்றன.

## IV. கிறிஸ்தவர்களின் சமுதாய நிலைப்பாடு (19-28)

19. கிறிஸ்தவர்கள் சமுதாய ரீதியில் ஓர் ஏழ்மையான வகுப்பாகும் - அரசர்கள், உயர்குடிமக்கள், அறிஞர்கள் போன்றவர்கள் இல்லை - அவர்கள் வெறுப்புக்கும் துன்புறுத்தலுக்கும் ஆளாகிறார்கள்.
20. கடவுள் ஏன் பாவிகளுக்குத் தற்காலிகக் கொடைகளைக் கொடுக்கின்றார்? ஆனால் நேர்மையானவர்களுக்குக் கொடுப்பதில்லை.
21. திருமுழுக்குப் பெறப் பயப்படுபவர்களுக்கு அறிவுரை கூறு. ஏனென்றால் பிற மதத்தோடும் அவர்கள் திருமுழுக்குப் பெறுபவர்களுக்குச் செய்யும் தீமைக்கும் பயம் கொள்கின்றனர்.
22. கடவுள் கிறிஸ்தவர்களைத் துன்பப்படுத்துவோரைத் தண்டிப்பதுமில்லை. அவர் புதுமைகளும் செய்வதில்லை - மறுத்துக் கூறல்.
23. மதுரையில் நடப்பிலுள்ள நிகழ்ச்சிகள். கிறிஸ்தவ மதத்திற்கு மனம் மாறிய பிராமணர்களோ, ஏனையோர்களோ அவர்கள் கிறிஸ்தவ மதத்திற்கு எதிரானவற்றைக் கேட்கும் பொழுது தங்கள் விசுவாசத்தின் மேல் தொந்தரவு கொள்ளக்கூடாது.
24. கடவுளின் மதம். புலன்கள் சார்ந்த மனிதனின் சுவைக்குட்பட்டதல்ல - பகுத்தறிவுக்கு உட்பட்டது. ஏன்.?
25. கடவுளின் மதம் இறுமாந்தவருக்கு மகிழ்வூட்டுவதற்காக இல்லை - பகுத்தறிவு - பாவங்களைப் போக்கக்கூடிய வழிவகைகளாகும்.
26. செபமும் தபமும் பாவத்தைப் போக்க உதவி செய்கின்றன. மேலும் அவை அருளைப் பெறுவதற்கும் பிரச்சினைகளைத் தீர்க்கவும் செய்கின்றன.
27. புண்ணியமான செயல்களைச் செய்கின்ற அரசர்கள் எங்கே போனார்கள், இருப்பினும் அவர்கள் பாவம் செய்கிறார்கள்?
28. கடவுள் உண்மையான இறையருளை மனம் திரும்பியவர்களுக்குக் கொடுக்கும் முறை- கவனக் குறைவுள்ள சிலர் அதனால் நன்மையடைகின்றனர்.

## V. கிறித்தவ மறையைப் போதிப்பவர்கள் (29-32)

29. போதிப்பவர் கற்பதோடு, அவரைக் கேட்பவர்களின் நிலைமைகளுக்குத் தன்னைத்தானே மாற்றியமைத்துக் கொள்ள வேண்டும்.
30. சமயத்தை மக்களுக்கு எடுத்துரைப்பதற்கான விதிமுறைகளைப் பின்பற்ற வேண்டும்.
31. மறைப்போதனை எவ்வித அதிருப்தி உண்டாக்காமல் அல்லது எவரையும் துரத்தவும் அல்லது குழப்பம் உண்டாக்காமல் இருத்தல் வேண்டும்.

32. ஒரு போதகர் தாம் செய்யும் தபம், செபம், பொறுமை, பழக்க வழக்கங்களில் தேர்ச்சி பெற்றவராகவும் மக்களின் மனநிலையை அறிந்த மனிதராகவும் இருத்தல் அவசியம்.

**4. ஞானஉபதேசக் குறிப்பிடம்**

இந்த நூல் ஞானஉபதேசம் கேட்கின்றவர்கள் எந்த நிலையில் இருக்க வேண்டும் என்பதைக் கூறி விளக்கத்தோடு தொடங்குகின்றது. பின்பு இந்நூல் கடவுளின் இருத்தல், தனி இயல்புகள், படைப்பு, பாவம், மீட்பு ஆகியவற்றைப் பற்றிக் கூறுகின்றது. இந்நூல் அன்னை மரியாளின் பிறப்போடு முடிகின்றது. அதில் அடங்கிய அதிகாரங்களின் தலைப்புகள் கீழ் வருமாறு:

1. நான்கு வகையான சமயக் கோட்பாடுகளைக் கற்பவர்கள் - வினாவிடை மறைக்கோட்பாட்டைக் கேட்க மாசற்ற எண்ணம் இருக்க வேண்டும்.
2. சமயக் கோட்பாடு மூன்று காரியங்களைப் பற்றிக் கூறுகின்றது: கடவுள், பாவம், இறையருள். கடவுளைப் பற்றி ஆறு கேள்விகள் உள்ளன. மறைக்கொள்கையின் பலன் விண்ணகம்.
3. கடவுளின் இருத்தலும் ஒன்றிணைத்தமையும் - மூன்று இயல்புகளைக் கொண்டுள்ளன: தாமே இருத்தல், எல்லையற்றமை, ஆன்ம சம்பந்தமாக.
4. இறையியல்பு 4: எல்லாவற்றிற்கும் மேலான நன்மை, இந் நான்கு இறையியல்புகள் கடவுளிடம் காணப்படுவதில்லை; அவர்கள் (கடவுள்கள்) உண்மையான கடவுளின் பிரதிநிதிகளும் கிடையாது.
5. இறையியல்புகள் 5,6: கடவுள் தமது அறிவு, வல்லமை, காரண, காரியத் தொடர்பு ஆகியவற்றால் எங்கும் நிறைந்துள்ளார். கடவுள்தான் அனைத்திற்கும் முதல் காரணமானவர்.
6. ஆன்மாக்கள் - நல்லவையும் கெட்டவையும் - பேயின் ஆறு சூழ்ச்சிகள்.
7. மனிதனைப் படைத்தல் - அவனது வீழ்ச்சியும் அதன் விளைவுகளும் - ஆதியில் கட்டிக் கெ ாண்ட பாவம் (முதலாவதான பாவம்).
8. பாவத்தின் விளைவு - இரண்டு வகையான அறிவின்மை - மறுபிறப்பும் விதியும் - நான்கு வகையான தவறான ஆராதனை- பேய்களையும் இறந்தவர்களையும் மூலப் பொருள்களையும் ஆராதிப்பதும் மேலும் குருட்டுத் தனமாகப் பரம்பரைப் பழக்க வழக்கங்களைப் பின்பற்றுதலும்.
9. விதியும் மறுபிறப்பும் தவறென மறுத்தல்.
10. வெளிப்படுத்திய மதம் - அதனுடைய ஆறு இயல்புகள் - ஏன் அது பின்பற்றப்படவில்லை?.
11. புனித திருத்துவம் (தமதிருத்துவம்).

12. பாவத்திற்குப் பரிகாரம் - மீட்பின் திட்டம் - உண்மையும் தவறான மனிதவராதம்-மரியின் பிறப்பு. குறிப்பு: 28 மறைச் சொற்பொழிவுகளில் காணப்படும் ஞான உபதேசத்தைப் பின் சேர்க்கையாக வைத்துக் கொள்ளவும்.

## 5. கடவுள் நிர்ணயம்

இது சிற்றேடு உருவத்தில் அல்லது சிறிய ஆய்வுக் கட்டுரை வடிவத்தில் எழுதப்பட்டது. இது பிற மதத்தாரிடையே சமய உணர்வையும் இதை எழுதிய சன்னியாசியிடம் மேலும் வேண்டிய செய்திகளை விசாரிக்க அவர்களைக் கட்டாயப் படுத்தும். அவருடைய ஆசை என்னவென்றால் ஒவ்வொருவரும் உண்மையான கடவுளைத் தெரிந்து கொண்டு விண்ணுலகை அடைய வேண்டும் என்பதாகும். இதை அடைய விரும்புவர் ஒவ்வொருவரும் குறைந்தது ஒரு மணி நேரமாவது இதைப்பற்றித் தியானிப்பதில் கழித்தல் வேண்டும். மனிதனின் உடல் மரணத்திற்குப் பின்பு தூசியாகி விடுகின்றது. அவனது ஆன்மா அப்படியன்று, அது விண்ணுலகத்திற்கோ அல்லது நரகத்திற்கோ செல்லும். ஆனால் உண்மையான கடவுள் மட்டுமே அவரது பாவங்களை மன்னித்து அவனை விண்ணகத்திற்கு இட்டுச் செல்வார். எனவே மனிதன் தான் வணங்கும் கடவுளைக் கவனமாகப் பரிசீலித்துச் சிறிதளவிலும் இந்தக் கனமான காரியத்தில் தவறு செய்யக்கூடாது. விவேகமுள்ள மனிதன் ஒரு காசை வாங்குமுன் அதைப் பரிசீலிக்கின்றான். இதைவிட மேலாக அவன் உண்மையான கடவுளை இறைவழிபாடு செய்கின்றான் (வணங்குகின்றான்) என்பதை உறுதிப்படுத்திக் கொள்ள வேண்டும். உண்மையான கடவுளின் ஆறு தனியியல்புகள் சமஸ்கிருதச் சுலோகத்தில் சுருக்கி எழுதப்பட்டுள்ளன. இவை விரிவாக விளக்கப் பட்டுள்ளன: கடவுள் தாமாய் இருக்கின்றார், நிரந்தரமானவர், ஆன்மீகமானவர், ஈடு இணையற்ற நன்மை, எங்கும் பரவி இருக்கின்றார், மேலும் அவர் அனைத்திற்கும் காரணகாரியமானவர். பின்பு இந்த நாட்டில் உள்ள கடவுள்களைப் பரிசீலனை செய்து அவர்களிடம் இவ் அதிமுக்கியமான குணங்கள் இல்லாதிருப்பது கண்டுபிடிக்கப்பட்டது. விவேகமுள்ள மனிதன் இம்மாதிரியான கடவுள்களை வணங்க வேண்டுமா இல்லையா என்பதைத் தீர்மானிக்க வேண்டும்.

ஆறு ஐயங்கள் அவனுடைய மனதில் எழலாம். அவைகளுக்குப் பதில்களாவன:

1. கடவுள்களின் செய்கைகள், லீலைகள் அல்லது விளையாட்டுக்கள்:

   பதில்: கடவுள் இம்மாதிரியான விளையாட்டுக்களை அனுபவிக்க முடியாது.

2. அவர்கள் கடவுளின் பிரதிநிதிகள்:

பதில்: அவர்கள் தங்களுடைய வழக்கங்களைக் கருத்திற் கொள்ள முடியாது.

3. எவ்வாறு வேதங்கள், புராணங்கள், அவைகளைக் கடவுள் என்று அழைக்க முடியும்?

பதில்: கவிஞர்கள் அதைப் பணத்திற்காகச் செய்துள்ளார்கள். குருக்களும் ஆசிரியர்களும் தங்களுடைய வயிற்றுப் பிழைப்பிற்காகச் சம்பாதிக்க வேண்டும். மூன்றாவதாகப் பாலுடன் கலந்த நஞ்சு கொல்லுகின்றது.

4. அக் கடவுள்களிடமிருந்து பெற்ற பயன்களைப் பற்றியது என்ன?.

பதில்: அவை மீன்பிடிக்கத் தூண்டிலில் மாட்டப்படும் உணவைப் போன்றன.

5. உண்மையான சமயத்தைப் பின்பற்றுவது கடினம்.

பதில்: நோயாளி குணமாவதற்காகக் கசப்பான மருந்து எடுப்பதைப் பார். விவசாயி அறுவடைக்காகக் கடினமாக உழைப்பதைப் பார். இவற்றிற்கு மேலாக நாம் நமது இரச்சிப்புக்காகப் பாடுபடவேண்டும்.

6. நமது முன்னோர்கள் பழைய சமயத்தைப் பின்பற்றினர்.

பதில்: அவர்கள் ஒரு குறிப்பிட்ட சாலையில் அவர்களிடமிருந்ததைத் திருடிக் கொலை செய்தால் அதை நீ எடுப்பாயா? ஏனென்றால் அவர்கள் ஏழைகள். நீயும் ஏழையாய் இருக்கத் தேர்ந்து கொள்கின்றாயா? அவர்கள் சபிக்கப்பட்டது உனக்குத் தெரிந்திருந்த பொழுது இன்னும் நீ அவர்களின் பாதையைப் பின்பற்றினால் நீ விவேகமற்றவனாய் இருப்பாய். நீ உன்னுடைய குடும்பம் அல்லது சமூகப் பழக்க வழக்கங்களை விட்டுவிடக் கட்டாயப் படுத்தப்படுவதில்லை. நீ பாவத்தை மட்டும் விலக்க வேண்டும். நீ உண்மையான சமயத்தைப் பின்பற்றும் பொழுது முட்டாள்கள் மட்டுமே உன்னிடம் குற்றம் கண்டுபிடிக்கக்கூடும். இதைப்பற்றி நீ சிந்தி. மேலும் இதைப்பற்றி அறிந்தவர்களிடம் கேள். உண்மையான சமயத்தின் அடையாளங்களைச் சேர்க்க விரும்பினோம். ஆனால் கடவுள் கொடுத்த பத்துக் கட்டளைகளைக் கூறிய பின்பு இதை முடிக்க எண்ணியுள்ளோம்.

### 6. ஆத்ம நிர்ணயம்

ஒருவர் உலகம் முழுவதையும் தமதாக்கிக் கொண்டாலும் தம் வாழ்வையே இழப்பாரெனில் அவருக்குக் கிடைக்கும் பயன் என்ன? (மாற்கு 8:36) நொபிலி கூறுகின்றார்.

> "எவனொருவன் இந்த இறை வார்த்தைகளைப் புரிந்து
> கொள்கின்றானோ, அவன் நான் ஏன் இந்த நூலை எழுதப்

போகிறேன் என்பதைப் புரிந்து கொள்வான். ஒருவனுடைய ஆன்மாவின் இரட்சிப்பு மிக முக்கியமானதாகும். அவன் அதற்காக எவ்விதத் தியாகமும் செய்யத் தயாராக இருக்க வேண்டும். அதன்பின்பு அவன் படைப்பாளரான கடவுளின் உண்மையான தன்மையை அறிய முயற்சி செய்கிறான். மேலும் அவன் புண்ணிய வழியில் நடக்கிறான்.''

அநேகம் பேர் அழிந்து போகின்றார்கள். ஏனென்றால் அவர்களுக்கு ஆன்மாவைப்பற்றிச் சரியான அறிவு கிடையாது.

**பகுதி I ஆன்மாவின் தன்மை**

நொபிலி முகவுரையில் இந்த நூலில் அடங்கியுள்ள எல்லா அதிகாரங்களின் சுருக்கத்தைக் கொடுக்கின்றார். இந்நூல் மூன்று பகுதிகளாகப் பிரிக்கப்படும்: தன்மை, தொடக்கம், ஆன்மாவின் முடிவு.

ஆன்மாவின் தன்மை முதல் ஒன்பது அதிகாரங்களில் எழுதப்பட்டுள்ளது. அவர் முதல் அதிகாரத்தில் ஆன்மா உடலின் உருவம் என்றும் அது ஒரு கூண்டில் உள்ள பறவையைப் போல அல்ல என்றும் கூறுகின்றார். அவர் உருவத்திற்கு என்று பயன்படுத்தும் வார்த்தை 'மாத்திரை' ஒரு பொருளின் குறிப்பிட்ட உருவகமாகும். மேலும் அவர் தாவர, உணர்வு, அறிவு ஆகியவற்றின் செயல் காரணம் என்று கூறுகின்றார். மேலும் ஆன்மா ஆன்மீகச் செயல்களை உண்டாக்கமுடியும் தன்மை வாய்ந்தது. இவை உடலைச் சாராமல் தனித்தன்மை யுடையனவாகும். இது பொருளினின்று தனித்தன்மையுள்ளது. எனவே இது உடல் அழியும்போது ஆன்மா அழிவதில்லை (1) அறிவின் வெவ்வேறு நிலைகளான சாதாரணக் கருத்தைப் புரிந்துகொள்ளல், தீர்ப்பு, சுருக்கமுறை பயன்படுத்தல் ஆகியவை விளக்கப்படுகின்றன (2-3), 4-9 அதிகாரங்களில் உறுதிப்பாடும் விடுதலையும் விளக்கப் பட்டுள்ளன. அவைகளின் உண்மையான நிலை கடவுளின் அனைத்து வல்லமையில் காண்பிக்கப்படுகின்றது. விடுதலையை மறுக்கும் விதி மறுத்துக் கூறப்பட்டுள்ளது.

**பகுதி II ஆன்மாவின் தோற்றம்**

1. இரண்டாம் பகுதியில் ஆன்மாவின் தோற்றம் 10-22 அதிகாரங்களில் விளக்கப்பட்டுள்ளது. இவ் அதிகாரங்கள் இரண்டு உட்பிரிவுகளைக் கொண்டவை. முதல் உட்பிரிவு (10-14) ஆன்மாவின் தோற்றத்தைப் பற்றியது. ஆன்மா கடவுள் இல்லை அல்லது கடவுளின் பகுதியாகவும் இல்லை. கடவுளின் உருவச்சாயலும் இல்லை. என்றென்றும் வாழ்வதுமில்லை. பெற்றோர்களால் விளைவிக்கப் படவுமில்லை. மூலப் பொருட்களால் ஒன்றுகூடி உருவாகவில்லை

என்பதை நொபிலி மெய்ப்பிக்கின்றார். ஆன்மா கடவுளால் நேரடியாகப் படைக்கப்பட்டது. பெற்றோர்கள் உயிரைக் கொடுக்கின்றனர். கொலையாளி உயிரைக் கொலை செய்து எடுப்பது போல மரணத்திற்குப் பின்பு ஆன்மா அழியாமல் இருக்கும். ஏனென்றால் அது ஆன்மீகம் சம்பந்தமானது.

2. இரண்டாவது உட்பிரிவு (15-22) அதிகாரங்களையுடையது. இவைகளில் நொபிலி ஆன்மாவின் மறு பிறப்பைப்பற்றி எழுதுகின்றார். இது கூடுவிட்டுக் கூடு பாயும் கோட்பாட்டைப் போன்றது. இந்தக் கோட்பாடு நிச்சயம் என்று நடைமுறையிலுள்ள பல்வேறு சமய உட்பிரிவுகளால் ஏற்றுக் கொள்ளப்பட்டுள்ளது. அவர் ஒரு குறிப்பிட்ட கூற்றை மறுத்துக் கூறுகின்றார். இந்த நாட்டின் இந்தத் தலைப்பின் முக்கியத்துவத்தினால் ஒரு தனியான நூலில் 'புனர் ஜென்ம அக்ஷயத்தில்' மறுபடியும் இதை நொபிலி விவாதித்து எழுதியுள்ளார்.

**பகுதி III ஆன்மாவின் முடிவு**

மூன்றாம் பகுதி ஆன்மாவின் முடிவைப்பற்றிப் பேசுகின்றது. அதில் 23-38 அதிகாரங்கள் அடங்கியுள்ளன. இப்பகுதி நான்கு பகுதிகளாகப் பிரிக்கப்பட்டுள்ளது.

i) தவறான இடங்கள் (23-25)
ii) தவறான நிலைமைகள்(25-27)
iii) நல்ல முடிவு - விண்ணகம் (28-35)
iv) தீய முடிவு - நரகம் (36-38)

**அதிகாரங்களின் தலைப்புகள்**

ஆன்மாவின் தன்மை (1-9)

1. ஆன்மா உடலின் அனைத்து நடவடிக்கைகளின் வடிவமாயுள்ளது.
   a) ஆய்வுணர்வுத் திறமை
2. ஆய்ந்துணர்வுத் திறமையான அறிவுக்கூறு உடலிலிருந்து சுதந்திரமானது. ஆனால் அது ஆன்மாவைச் சார்ந்துள்ளது.
3. ஒரு மனிதன் குழந்தையாய் இருக்கும்போது அவன் பைத்தியம் அல்லது தூக்க நிலை என்று அவனுக்கு எவ்வாறு தெரியும்?
   b) உறுதிப்பாடும் விடுதலையும்
4. சுதந்திரமான உறுதிப்பாடு வினைத்திறம் ஆன்மாவைச் சார்ந்துள்ளது.

5-6 கடவுளின் சுதந்திரமான உறுதிப்பாட்டின் தன்மையும் ஆசீர்வதிக்கப்பட்டதுமாகும். மனிதனுக்கும் மிருகத்திற்கும் இடையேயுள்ள வேறுபாடு அவர்களுடைய செயல்பாடாகும்.
   c) விதி

7. விதி என்று ஒன்று இருந்தால் போதனை தேவையில்லை. மனிதன் எவ்வளவு தூரம் சுதந்திரமாய் உள்ளான்?

8. ஏன் கடவுள் பாவத்தைத் தடுக்கவில்லை? ஏனெனில் அவர் இதைக் காலங்காலமாகப் பார்த்தார்.

9. கடவுள் நீதியற்றவர் அல்ல. ஏனென்றால் அவர் மனிதனின் உறுதிப்பாடும் விடுதலையும் கொண்டுள்ளவர்.

**ஆன்மாவின் தோற்றம் (10-22)**

10. ஆன்மாவானது கடவுளோ, அவருடைய ஒரு பகுதியோ கடவுளின் அதேமாதிரியான உருவமோ கிடையாது.

11. ஆன்மா தன்னாலேயே இல்லை அல்லது எப்பொழுதும் எல்லையில்லாக் காலம் வரையில் இல்லை அல்லது எல்லையில்லாக் காலத்திலிருந்து படைக்கவில்லை அல்லது உலகம் தொடக்கத்திலிருந்தும் படைக்கவில்லை அல்லது பெற்றோர்களால் உற்பத்தி செய்யவில்லை அல்லது மூலப் பொருள்களின் கலவையால் உண்டாகவில்லை.

12. ஆன்மா இறவாதது. அது இயற்கையிலேயே உடலைச் சார்ந்து இல்லாமல் தனியாய் உள்ளது. கடவுள் அதை மற்ற உருவங்களைப் போன்று பொருளை நேசிக்க அது அறிவிக்கின்றது.

13. இதரக் காரணங்களால் நிரூபித்து, ஆன்மா கால வரையற்றது இல்லை. ஆனால் கடவுளால் படைக்கப்பட்டது. பகுத்தறிவற்ற ஆன்மாக்களையும் உடலோடு அழிக்கப்படுவது போன்றில்லாமல் ஆன்மா இறவாத தன்மையுடையது. ஆனால் ஆன்மா உயர்ந்ததும் தாழ்ந்ததுமான இயற்கை உளச்சார்புடையது.

14. இதே தலைப்பு ஏனைய வாதங்களுடன் உள்ளது. ஆன்மா உடலை விட்டுச் சென்ற பொழுது ஆன்மாவின் செயல்பாடு உயிருள்ளவைகளின் தனிச் சிறப்புப் பண்புகள் அழியக்கூடியதும் அழியாததுமாகும்.

15-22. கூடு விட்டுக் கூடு பாய்தல் தவறு என்று நிரூபிக்கப்படுதல்.

**ஆன்மாவின் முடிவு (23-38)**

i) தப்பான இடங்கள்

23. ஆன்மாவின் முடிவு இந்த உலகம் இல்லை.

24. ஆன்மாவின் முடிவு சுவர்க்கம் இல்லை.

25. ஆன்மாவின் முடிவு வைகுண்டமோ அல்லது கைலாசமோ இல்லை.

ii) தவறான நிலைமைகள்

26. 'சனித்தியா', 'சமீபியா', 'சயூச்சா' போன்ற மற்ற விண்ணகங்கள் தவறென மறுத்தல்.

27. 'சரூபியா' நிலைமையில் ஆன்மா தனது தனித்தன்மையை இழக்கின்றது; தவறென மறுக்கப்பட்டுள்ளது.

iii) நல்ல முடிவு: விண்ணுலகம்

28. விண்ணுலகத்தின் உண்மையான இயல்பு. எப்படி ஆன்மா கடவுளை அறியும்?

29. இவ்வுலகில் மனிதன் விசுவாசத்தின் மூலம் தெரிந்து கொள்கிறான். மண்ணுலகில் இருக்கும் மனிதனின் உள்ளுணர்வு முழுமையற்றதாகும்.

30. தவிர இரண்டு வகையான அறிவுகள் உள்ளன: உறுதியானது அல்லது உறுதியற்றது. எந்தப் பொருளும் கடவுளின் உறுதியான அறிவை நமக்குக் கொடுப்பதில்லை. அளவுள்ள ஆய்வுணர்வுத்திறம் முடிவில்லாக் கடவுளைப் புரிந்து கொள்ள முடியாது. கடவுள்தான் அதற்கான தொடக்கம்.

31. விண்ணுலகம் இயற்கை ஆற்றல்களுக்கு அப்பாற்பட்ட முடிவு. எனவே இறைவன் அருள் தேவைப்படும். விண்ணுலகத்திற்குச் செல்லத் தகுதியான, மதிப்பான செயல்களைச் செய்வதற்கு உயிரினம் ஒரு காரணக் கருவியாய் மட்டும் இருக்கின்றது.

32. விண்ணுலகம் தெய்வீகமான காட்சியில் அடங்கியுள்ளது. அதில் படிப்படியாகக் காட்சியின் நான்கு சிறப்புப் பண்புகள்.

33. இவ்வுலகில் நீதிமானின் அறிவு தெய்வீகக் காட்சியோடு முற்றிலும் வேறுபடுத்திக் காட்டுகின்றது. ஆசிர்வதிக்கப் பட்டவர் இறைவனிடத்தில் ஒவ்வொன்றிலும் வழியைக் காண்கிறது.

34. அளவில்லா ஆனந்தம் விண்ணுலகத்தில் உள்ளது. நவ விண்ணகத்தூதர்களின் பாட்டுக் குழுவோடு ஆன்மாக்கள் சேர்க்கப்படுகின்றன.

35. ஆசிர்வதிக்கப்பட்டவர் உலகில் நீதிமான் மேலும் அநீதியுள்ளவர் மேலும் கடவுள் ஆட்சி செய்கின்ற முறையில் மகிழ்வு கொள்கின்றார். ஒழுக்கக் கேடானவர்களைக் கடவுள் நரகத்தில் தண்டிக்கின்றார்.

ii) கெட்ட முடிவு (36-38)

36. நரகத்தின் தன்மையும் அதில் உள்ளவர்கள் நிலைப்பாடும்.

37. ஆன்மீக ஆன்மாக்களும் பேய்களும் எப்படித் தீயினால் துன்புறுத்தப்படுகின்றனர்.

38. நரகத்தின் எல்லையற்ற காலத்திற்கு நான்கு காரணங்கள்.

## 7. புனர்ஜென்ம ஆட்க்ஷேபம்

நொபிலி மறுபிறப்பைப் பற்றி ஆத்தும நிர்ணயத்தில் கருத்துப் பரிமாற்ற முறையில் எழுதிய போதிலும் அதை மறுபடியும் தனியாகக் குருவும் சீடனும் உரையாடும் முறையில் 8 உரையாடல்களில் கூறுகின்றார். ஏனென்றால் இந்தியாவில் எங்கும் மக்கள் அதை முற்றிலும் உறுதியாகக் கூறுகின்றனர்.

கீழே ஒவ்வொரு உரையாடலின் சுருக்கத்தைக் காணலாம்.

அதிகாரம் 1. கூடு விட்டுக் கூடு பாய்தலுக்கு நான்கு காரணங்கள் கொண்டு வரப்பட்டுள்ளன.

1. ஆன்மா உடலைப் போன்றல்லாது உருவமற்றது. ஆனால் அது கூண்டில் இருக்கும் பறவையைப் போன்றது. (பறவை ஒரு கூட்டிலிருந்து மற்றொன்றிற்குச் செல்லமுடியும்)
2. அனைத்து ஆன்மாக்களும் ஒரே மாதிரியாய் உள்ளன.
3. உயர்ந்த சாதி தாழ்ந்த சாதி என்று பல சாதிகள் உள்ளன. மேலும் உடல் நலத்திலும் செல்வத்திலும் இன்பத்திலும் பெரும் வித்தியாசம் உள்ளது. இவை பிறப்பிலிருந்து வருவதால் இவை நல்ல செய்கையின் விளைவு அல்லது தீய செயல்களின் விளைவாகும். இவை முந்தைய பிறப்பின் கூடுவிட்டுக் கூடுபாய்தலுக்குத் தலையாய தர்க்கமாகும்.
4. புராணம் மறுபிறப்பு உள்ளது என்று கூறுகின்றது. ஆனால் இப் புராணங்கள் எல்லோராலும் ஏற்றுக் கொள்ளப் படவில்லை. எனவே அவைகளை முன்னுக்குக் கொண்டுவர முடியாது.

அதிகாரம் 2: ஒரு பறவை கூண்டில் இருப்பதைப் போன்று ஆன்மா உடலில் இல்லை என்பதை உறுதிப்படுத்தி ஆறு காரணங்கள் உள்ளன.

1. ஒரு மனிதன் தனது வீட்டினுள் இருக்கும்போது வீடு வளர்கின்றதா? அதேபோல் ஆன்மா உடலோடு ஒன்றித்திருக்கும் போது உடலைப் போன்று வளருமா?.
2. உயிர் வாழும் மனிதன் உடலாலும் ஆன்மாவாலும் ஆக்கப்பட்டது. ஒரு மனிதன் ஓர் இடத்திலிருந்து மற்றொரு இடத்திற்குப் போகின்றான். வீடு மனிதனைப் பின்பற்றிச் செல்வதில்லை.
3. ஆன்மாவைக் கொண்டிருக்கும் உடல் பல வகையான செயல்களை ஆற்றுகிறது. இதேபோன்று வீடும் செய்கின்றதா?.
4. உடலும் ஆன்மாவும் ஒன்றோடொன்று தொடர்பு கொண்டுள்ளன. இவை ஓர் உயிரின் உருவத்தைக் கொண்டுள்ளன. அதன் விளைவாக எது ஒன்றைப் பாதிக்கின்றதோ மற்றொன்றும் பாதிக்கப்படும்.

5. மனிதன் தனது வீட்டை விட்டு வெளியே போகவும் முடியும். உள்ளே வரவும் முடியும். ஆனால் ஆன்மா இதை உடலோடு மனிதனைப் போன்று செய்ய இயலாது.

6. மேலும் ஆன்மா உடலைவிட்டுப் போகும்போது உடல் அழிக்கப்படுகின்றது. மனிதன் வீட்டை விட்டு வெளியே போகும்போது உடலைப் போன்று அழிக்கப்படுவதில்லை.

7. அன்றியும் மனிதனைப் போன்று ஆன்மாவும் ஒரு முழுமையான உயிர் என்றால் அது மனிதனிடத்திலோ, பிராணியிடத்திலோ அல்லது ஒரு மரத்திலோ இருக்கும்போது ஆன்மா ஒரே குணம் படைத்ததாக இருக்கும்.

அதிகாரம் 3. பல்வேறு வகையான உருவங்கள் பல்வேறு வகையான உடல்களுக்கு உறுதிப்படுத்தப்படுகின்றன. ஒரு மனித ஆன்மா மனித உடலில்தான் உருவாகின்றது. வேறு எந்த உடல்களில் உருவாவதில்லை. இந்தக் குறிப்பிட்ட ஆன்மா இந்த உடலுக்குத் தெரிவிக்கின்றதேயொழிய வேறு எதற்கும் தெரிவிப்பதில்லை. எனவே அதே ஆன்மா பலவகையான பிராணிகளுக்கோ அல்லது அதே மனித ஆன்மா பல்வேறு வகையான மனித உடல்களுக்கோ தெரிவிக்க முடியாது. இது தன் சொந்த உடலுக்குத்தான் தெரிவிக்க முடியும். எனவே இது நாயைப் போன்று, நரியைப் போன்று அல்லது மற்ற எந்த மனிதனைப் போன்று மறுபடியும் பிறப்பதில்லை.

அதிகாரம் 4. செல்வம், பதவி, இன்பம், உடல்நலம், முந்தைய வாழ்க்கையின்போது செய்த நல்ல காரியங்களுக்காகக் கொடுக்கப்படும் வெகுமதி என்று கருதப்படுகின்றது. இது உண்மையில்லை. ஏனென்றால் விதியை ஏற்றுக் கொள்கின்றவர்கள் அவர்கள் எவ்விதச் சுதந்திரமின்றி எவ்விதப் புண்ணியத்தையும் செய்யவில்லை என்பதை ஒத்துக்கொள்ள வேண்டும். அவர்கள் எவ்விதச் சுதந்திரமில்லாமல் எவ்வாறு அவர்களுக்குக் கைமாறு கொடுக்க முடியும். அவர்கள் அதற்காகப் பலவந்தத்தால் செயல்பட்டனர். இரண்டாவதாக ஆளுபவரின் அலுவலகங்கள் ஏனையவைகளும் சமூகத்திற்குத் தேவையானவை. இதற்கு முந்தின பிறப்பு தேவையில்லை. மூன்றாவதாக எவ்வாறு முந்தைய பிறப்பில் ஒருவர் இன்பத்தை விட்டுவிட்டுத் தவம் செய்பவருக்கு எவ்வாறு இன்பம் அவருக்குக் கைமாறாக முடியும்? அநேக வகைகளை அநுபவித்து இன்பம் பெறுவது புண்ணியத்தின் கனி என்றால், பிறகு பொதுப்பெண்கள் தங்களுடைய முந்தைய பிறப்பில் மிக்க புண்ணியமுள்ளவர்களாய் இருந்திருக்க வேண்டும். மேலும் ஒரு மனிதன் தான் செய்த நற்காரியங்களுக்காக அநேக பெண்களைப் பெறுகின்றான் என்றால் அவனுடைய பக்தியுள்ள மனைவி மறுபிறப்பில் அநேக கணவன்மார்களைப் பெறுவார் என்று ஏன் நாம் சொல்லக்கூடாது? மேலும்

பல்வேறு சாதிகள் பிரம்மாவிடமிருந்து பிறந்து வந்தால், முதலில் பிறந்தவர்கள் முன்பு எவ்வித நற்செயல்கள் செய்யாமல் தங்கள் முதல் நிலையைப் பெற முடியும். இதையே அவர்கள் குழந்தைகளுக்கும் பேரக் குழந்தைகளுக்கும் சொல்ல வேண்டும். நாம் மூன்று தலைமுறையினருக்கு ஒத்துக் கொள்ளும்போது ஏன் மற்ற மனிதர்களுக்கும் நாம் சொல்ல முடியாது? இவ்வுலகில் சமூக அந்தஸ்து முந்தைப் பிறவியின் விளைவாக இருக்க முடியாது என்பது நிரூபிக்கப்படுகின்றது.

அதிகாரம் 5. உலகில் காணப்படும் தாழ்ந்த சாதி மக்கள், கடுந்துயரமுறுவோருக்கும் இதே வாதம் பொருந்தும். மேலும் ஆன்மா உடலில் கைதியாக அடைக்கப்பட்டிருந்தால் சிறையை விட்டு வெளியேற முயலும் கைதியைப்போல் முயற்சி செய்யும். ஆனால் கீழ்ச்சாதி ஆள் எவனும் தன் உடலைவிட்டு மரிக்க விரும்புவதில்லை. மேலும் ஒரு மனிதன் தனது பாவத்திலிருந்து விலகினாலொழிய அவரிடமிருந்து பாவம் போகாது. தற்பொழுது மனிதன் தான் என்ன பாவங்கள் கட்டிக்கொண்டதை அறியவில்லை. எப்படி அவன் அதற்காக மனம் வருந்த முடியும். எனவே இந்தக் கடுந்துயரம் முந்தைய பிறப்பினால் வந்தது என்றால் இந்தத் தர்க்கம் தவறாகும்.

அதிகாரம் 6. கொடுத்த அடுத்த வாதம் கூடுவிட்டுக் கூடு பாய்தலுக்கு அவர்களுடைய வேத நூல்களான யசூர் வேதம், புராணங்கள் இவை பல்வேறு சாதிகள் பிரம்மாவின் பல்வேறு அங்கங்களிலிருந்து வந்தன. இது ஏற்கெனவே மறுக்கப்பட்டது. மேலும் இவ்வுலகத்தின் மிகத் துயரம் முந்தைய பிறவியில் செய்த பாவங்களுக்குப் பரிகாரம் செய்வது சரியல்ல. ஏனெனில் கடவுள் துன்பங்களை நல்ல மனிதனுக்கு அனுப்பக்கூடும். எதற்கென்றால் அவன் பாவத்தில் விழுவதைத் தடுப்பதற்காகத்தான் என்று கூறலாம். தவிர யார் கூடுவிட்டுக்கூடு பாயுதலை ஏற்றுக் கொள்கின்றார்களோ அவர்கள் விண்ணுலகத்தையும் நரகத்தையும் மறுக்க வேண்டும். கைமாறும் தண்டனையும் ஒருவருடைய செயல்களுக்கு இந்த உலகிலேயே அடுத்த பிறப்பாலும் கொடுக்கப்பட்டுள்ளன.

அதிகாரம் 7. உடலில் பல்வகையான அங்கங்கள் தலை, கால்கள், ஏனையவை இருப்பதுபோல உடலின் அரசியலுக்குப் பல்வேறு மக்கள் தேவைப்படுகின்றனர். மேலும் படைவீரர்களுக்கு யுத்த தளத்தில் பல்வேறு வகையான வேலைகள் கொடுக்கப் படுவதைப் போல மனித சமுதாயத்தில் மனிதனுக்குப் பல்வேறு வகையான வேலைகள் கொடுக்கப்படுகின்றன. மனிதனின் சமூக நிலையைக் கணக்கில் கொள்வதில்லை. இது இந்த வகையில் ஒவ்வொருவரும் தமது கடமையை நிறைவேற்றுவதில் அடங்கியுள்ளது. எனவே ஓர் உயர்ந்த அல்லது தாழ்ந்த நிலை எவ்விதமான முந்தைய பிறவியின் குறிப்பையும் கொடுப்பதில்லை.

அதிகாரம் 8. சிலபேர் குருடாகவும், செவிடாகவும் பிறக்கின்றனர். இது முற்பிறவியை நிரூபிப்பதில்லை. இயற்கைக் காரணங்களால் இதை விளக்க முடியும். தாயின் நோயினாலும், தந்தையின் தீய ஒழுக்கத்தினாலும் குழந்தைகள் குருடாகவோ அல்லது செவிடாகவோ பிறக்கலாம். சூளையில் எல்லா மண்பாண்டங்களும் நன்றாக வேகுவதில்லை. அல்லது வயலில் விதைத்த எல்லா விதைகளும் ஒரே அளவான தானியத்தை விளைவிப்பதில்லை. மண், தண்ணீர் போன்றவை விளைவைப் பாதிக்கக்கூடும். சில சமயங்களில் கடவுள் இவ்வுலகிற்குத் துன்பங்களை அனுப்புகின்றார். இது கீழ்வரும் காரணங்களில் ஒன்றாக இருக்கலாம்.

1. பாவ வாழ்க்கையிலிருந்து பாவியை மனந்திருப்புவதற்கு.

2. நீதிமான் அதிகமாகச் சிறப்புத் தேடிக் கொள்ளச் செய்தல். தங்கம் உலையில் போட்டால் தூய்மையாகிறது. எனவே மனிதனும் துன்பங்களையும் பரிசோதனைகளையும் சிறந்த முறையில் நேருக்கு நேர் சந்திக்கும்பொழுது மேலும் அவன் நல்லவனாகிறான்.

**8. தேவமாதா சரித்திரம் (நமது அன்னையின் வாழ்க்கை வரலாறு)**

தந்தை பொரென்சா 1656இல் தெ நொபிலியைப் பற்றிய குறிப்புகள் எழுதினார். அதில் நொபிலி மரியன்னையின் வாழ்க்கை வரலாற்றைச் சமஸ்கிருதத்தில் எழுதியதாகச் சொல்லுகின்றார். அந்த நூல் நொபிலி 1641இல் மதுரையில் கைது செய்யப்பட்டுச் சிறைச்சாலையில் இருந்தபோது தொலைந்து விட்டது. நொபிலி மரியன்னை மீது மிகுந்த பக்தி கொண்டிருந்ததினால் தமிழில் மரியன்னையின் வாழ்க்கை வரலாற்றை எழுதியிருக்க வேண்டும். ஏனெனில் சாதாரணக் கிறிஸ்தவர்கள் சமஸ்கிருதம் எழுதப் படிக்கத் தெரியாதவராயிருந்தனர். 1694இல் மரியன்னையின் வாழ்க்கை வரலாறு அச்சடிக்கப்பட்டது நொபிலி எழுதியதாகும். அந்நூலின் சுருக்கம் எவ்விதப் பிரிவு இல்லாமல் ஒரு கட்டுரை போல் எழுதப்பட்டதாகும். கீழ்க்காணும் தலைப்புகள் அன்னை மரியின் வாழ்க்கையைப் பற்றிய ஒரு கருத்து.

அன்னை மரியின் பிறப்பு - ஆலயத்தில் அர்ப்பணம் செய்தல் - திருமணம்- வானதூதரின் அறிவிப்பு - கன்னிமரியாள் எலிசபெத்தைச் சந்தித்தல் - சூசையின் கவலை - ஆண்டவரின் பிறப்பு - கோவிலில் காணிக்கையாக ஒப்புக் கொடுத்தல் - எகிப்துக்குத் தப்பியோடுதல்- இயேசு காணாமல் போய்க் கோயிலில் கண்டுபிடித்தல்- நாசரேத்தில் வாழ்க்கை - நம் ஆண்டவரின் வெளியுலக வாழ்வு - பாடுகள் - உயிர்ப்பு - தொடக்கக் காலத் திருச்சபையுடன் - அவளுடை தோன்றுதல் - அவளது மரணம்- விண்ணுலகத்தில் அவளது ஆன்மா - புதைத்தல் - அவளுடைய உடலின் தோற்றம்- அவளது உதவி - புனித பெர்னாடின் செபம்- அவளுடைய புதுமைகள்- பாவிகளின் அடைக்கலம் - முடிவுரை.

## 9. இயேசுநாதர் சரித்திரம்

ரிபாடி நெய்ரா எழுதிய கிறிஸ்துவின் சரித்திரம் தெ நொபிலியின் காலத்தில் பிரபலமானதாய் இருந்தது. 1612இல் எழுதப்பட்ட ஆண்டறிக்கை ஒரு சில ஆண்டுகளுக்கு முன்பு இந்தக் கிறிஸ்துவின் சரித்திரம் தமிழில் மொழிபெயர்க்கப் பட்டதாகக் கூறுகின்றது. எனவே இது நொபிலி தொடக்கக் காலத்தில் எழுதிய நூல்களில் இதுவும் ஒன்றாகும். ரிபாடி நெய்ரா எழுதிய நூலில் கிறிஸ்துவின் வாழ்க்கை பகுதிகளாகப் பிரிக்கப்படவில்லை. ஆனால் சில தமிழ்க் கையெழுத்துப் பிரதிகளில் பிரிவுகள் காணப்படுகின்றன. அதன் தலைப்புகள் கீழ் வருமாறு:

மீட்பின் மறைபொருள் (இரகசியம்) - அறிவித்தல் - பிறப்புக்கு முன்பு- பிறப்பு- பிறப்புக்குப் பின்பு - சுன்னத்துச் சடங்கு - மூன்று அரசர்கள் - காணிக்கையாக ஒப்புக்கொடுத்தல் - எகிப்து - யூதேயா திரும்புதல் - அறிஞர்கள் நடுவில் - நாசரேத்தில் - திருமுழுக்கு- நோன்பு - திருத்தூதர்கள் - போதனை - புதுமைகள் - யூதவிசேஷம்- சூழ்ச்சிகள் - லாசர்- சதித்திட்டம் - எருசலேம்- பாஸ்கா- பாதம் கழுவுதல் - திவ்ய நற்கருணை - பூங்காவனத்தில் இரத்த வியர்வை- கைது செய்தல் - கைபாஸ்கள் - அவமதிப்பு(இழிவு, புண்படுத்துதல்)- பிலாத்து - ஏரோது - சாட்டையடி - முள்முடி சூடுதல் - மரண தண்டனை - சிலுவைப் பாதை - மரணம் - மரணத்திற்குப்பின்- அடக்கம் செய்தல்- அடக்கத்திற்குப் பின்பு - உயிர்த்தெழுதல்.

## 10. சின்னக் குறிப்பிடம்

பாரம்பரியம் இந்தப் படைப்பின் மூலம் நொபிலிக்குக் காரணம் கற்பிக்கிறது. இது தெலுங்கில் 'ஞான சன்க்ஷேபமு' என்னும் தலைப்பில் மொழியாக்கம் செய்யப்பட்டுள்ளது. நடை, கருத்துக்கள், வார்த்தைகள் எல்லாம் நொபிலியுடையன.

புது நன்மைக்கும் திருமணத்திற்கும் முன்பு கத்தோலிக்கக் கிறிஸ்தவர்கள் இந்தச் சிறிய நூலைக் கற்க வேண்டியது அவசியமாகத் தமிழகத்தில் உள்ளது. இன்னும் குழந்தைகள் இந்தச் சின்னக் குறிப்பிடத்தை மனப்பாடமாக ஒப்பிக்க வேண்டும். இது ஏழு சிறிய அதிகாரங்களைக் கொண்டது. முதல் அதிகாரம் கடவுள் வகையில் ஒருவராகவும் ஆள்வகையில் மூவராகவும் உள்ளதை விவரிக்கின்றது. இரண்டாம் அதிகாரம் படைப்பையும் மனிதனின் வீழ்ச்சியையும் பற்றியது. மூன்றாம் அதிகாரம் இரட்சிப்பைப் பற்றியது. நான்காவது திருச்சபையைப் பற்றியது. ஐந்தாவது கடைசிக் காரியங்களைப் பற்றியது. ஆறாவது கட்டளைகளையும் பாவத்தையும் பற்றியது. இறுதியாக ஏழாவது பொதுவாக அருட்சாதனங்களைப் பற்றியது. திருமுழுக்கு, பாவமன்னிப்பு முக்கியமாகத் திவ்விய நற்கருணை. சின்னக் குறிப்பிடம்

பெரிய படைப்பான மந்திரமாலையின் மூன்றாம் பகுதியான ஞான உபதேசத்தில் நொபிலியால் கூறப்படுகின்றது.

## 11. நித்திய ஜீவன சல்லாபம்

முடிவற்ற வாழ்க்கையின் உரையாடல்: இந்த நூலின் சுருக்கம் - விண்ணுலகத்தை அடைய மதிநலம் அல்லது அறிவுக்கூர்மை தேவை. அறிவுக்கூர்மையை அடைய ஒருவர் கடவுளால் வெளியிடப்பட்ட மதத்தைத் தழுவுவது அவசியமாகும். தற்பொழுது ஏமாற்றாதவரும் அல்லது ஏமாற்றப்படாதவருமான கடவுள் ஒன்றையொன்று மறுத்துக் கூறும் பல்வேறு மதங்களை வெளியிடமாட்டார். நொபிலி அடிகள் இங்கு அநேக மதங்கள் இருக்கின்றதற்கு அருகில் கடவுளால் வெளியிடப்பட்ட மதத்தை விளக்குவதற்கான காரணத்தைக் கூறுகின்றார். சிலைகளை ஆராதிக்கும் மதங்கள் தங்கள் தொடக்கத்தை நான்கு காரணங்களுக்குக் கடன்பட்டிருக்கின்றன - அதிகாரம், துயரம், ஆச்சரியம், அன்பு. அச் சிலைகள் ஓர் ஆளையோ அல்லது ஒரு கருத்தையோ சுட்டிக்காட்டலாம். சுருங்கக் கூறவேண்டுமாயின் இது வெளியிடல் அல்லது உண்மையான சமயத்தின் ஆய்வுக் கட்டுரை. இந்த நூல் ஒன்பது உரையாடல்களைக் கொண்டுள்ளது. இந்தப் படைப்பு முக்கியமானதும் நொபிலியின் மூல முதலாவதுமாக அளிக்கப்பட்டதாகும். ஒவ்வொரு உரையாடலின் சுருக்கத்தை இங்குக் காண்போம்.

1. வெளியிடம் அவசியம்: உண்மையான அறிவு அல்லது மதிநலம் கடவுளைப் பற்றியும் அவரை அடையும் வழியைப் பற்றியும் கற்பிக்கின்றது. இந்த அறிவைப் பெறப் புத்தி கூர்மை மட்டும் போதாது. ஏனென்றால் இருப்பதும் அல்லது இல்லாததுமான குடும்பம், இன்பம், ஏழ்மை, நோய், இளமை, கெட்ட பாரம்பரியம் அல்லது தவறான முறையைக் கையாளுதல் ஆகியன இந்த அறிவை அடைவதற்குத் தடையாக இருக்கலாம். எனவே கடவுள் இவ் உண்மைகளை வெளியிட்டார். ஏனெனில் எல்லோரும் இவைகளைச் சுலபமாகப் புரிந்து கொள்ளலாம். அவருடைய இரகசியங்களை வெளியிடுவதைத் தவிர வேறுவழிகளில் தெரிந்து கொள்ள முடியாதவை.

மனிதனைப்போல் அல்லாமல் கடவுள் ஏமாற்றவோ அல்லது ஏமாற்றப்படவோ முடியாது. எனவே கடவுள் நம்பக்கூடிய மேம்பாடுடையவர். இறைவன் நேரடியாகவோ அல்லது மறைமுகமாகவோ தன்னிடமிருந்து தூது செல்பவர்கள் மூலம் வெளியிடுகிறார். அதுதான் வெளியிடப்பட்ட மதம். தந்தை தனது குடும்பத்தை உணவு, உடை மட்டுமின்றி அவனுக்கு விண்ணுலகம் செல்லும் வழியைக் கற்பித்து மனிதனைப் பேணிக் காக்கின்றார். ஏனென்றால் கடவுள் மனிதனை விண்ணுலகத்திற்குப் படைத்தார். விண்ணுலகம் இயற்கைக்கு அப்பாற்பட்ட ஓர் அன்பளிப்பாகும். மனிதன் அதை எவ்வித உதவியுமின்றி அடைய

முடியாது. ஆனால் அவன் கடவுளால் வெளியிடப்பட்ட சமயத்தை விசுவசித்து அதைப் பின்பற்றினால் அவன் தனக்குச் சேரவேண்டிய விண்ணகத்தை அடைய முடியும். மேலும் செய்திகளைத் தெரிந்துகொள்ள விரும்புவோர் நொபிலி படைத்த ஞான தீபிகையை வாசிக்கும்படி கேட்டுக் கொள்கின்றார்.

2. இறைவனைப்பற்றி முழுமையாக அறிந்து கொள்வது முற்றிலும் முடியாததாகும்.

1. கேள்வி: விண்ணுலகத்தில் உள்ள பாக்கியவான்களை ஏமாற்றவோ அல்லது ஏமாற்றப்படவோ முடியாத மேம்பாட்டுடன் நம்ப முடியாதா? இல்லை. ஏனென்றால் இந்தக் குணம் இயற்கைக்கு மேலான அன்பளிப்பின் மூலம் அவர்களுக்கு வருகின்றது. அப்படி இருக்க இது கடவுள் ஒருவருக்கு இயற்கை. மேலும் அவர்கள் இறை அறிவை வெறுமையாக்க முடியாது. அவர்கள் நல்லவை அனைத்தையும் நமக்குக் கூறமுடியாது.

2. உள்ளுணர்வு: உண்மைகள் இருவகைப்படும். அவை மனத்தால் உணரவோ அல்லது உணர முடியாததாகவோ இருக்கும். மனித ஆன்மா மனித உடலோடு ஒன்றிணைந்து இருக்கின்ற வரையில் உடல் சம்மந்தப்பட்ட உள்ளுணர்வு கொள்ளும். ஏனெனில் கடவுள் ஒரு அரூபி. அவரைப் பார்க்க முடியாது.

3. ஊகித்தல்: ஒரே பொருள் கொண்டதும் இருபொருள் கொண்டதும் - மலையில் தீ இருப்பதை அதிலிருந்து வரும் புகையை வைத்து எவ்வாறு ஊகிக்கின்றோமோ அதேபோல் கடவுள் படைத்த உலகத்தைப் பார்ப்பதினால் கடவுள் இருக்கின்றார் என்பதை ஊகிக்க முடிகின்றது. பலன், காரணத்தை ஒத்திருந்தால் அது ஒரே பொருள் கொண்டு ஊகித்தலாகும். ஒரே பொருள் கொண்ட பலனால் காரணம் முழுமையாகத் தெரிந்து கொள்ளலாம். ஒப்புமையுள்ள பலனால் காரணத்தை அரை குறையாகத் தெரிந்து கொள்ளலாம். இவ்வாறு ஒரு சிலை அதைச் செய்தவனைச் சுட்டிக் காட்டுகின்றது. ஆனால் அது அவனைப் புத்திசாலி, பணம் படைத்தவன், மரியாதைக்குரியவன் என்று கூறுவதில்லை. இதே போன்று இரு பொருள் பலன் கொண்ட படைக்கப்பட்ட உலகம் அதனுடைய படைப்பாளியைப் பற்றி எல்லாமே கூறமுடியாது. தங்கமும் வைரமும் அவைகளின் பிரகாசத்திற்குச் சூரியனைச் சுட்டிக் காட்டுகின்றன. ஆனால் அவை அதே சூரியன் மேகங்களுக்குக் காரணம் என்றோ, அது பன்னிரெண்டு விண்மீன் கூட்டங்களைப்பற்றியோ, மேலும் அது ஒவ்வொரு நாளும் சுற்றிக்கொண்டு செல்லுகிறதென்றோ நமக்குக் கூறுவதில்லை. இதேபோன்று படைக்கப்பட்ட இரு பொருள் கொண்ட பலன் கடவுளைப் பற்றிய எல்லாவற்றையும் சொல்லுவதில்லை.

4. பேறுபெற்றவர்கள் விண்ணுலகில் கடவுளை நேருக்குநேர் காண்கின்றனர். ஆனால் அப்பார்வை முழுமையாக முற்றுப் பெறாததாகும். ஏனென்றால் இது இயற்கைக்கு அப்பாற்பட்டது. மேலும் கடவுள் விண்ணக ஒளியை (அருளை) அவர்களுக்குக் கொடுத்துள்ளார். இது ஆளுக்கு ஆள் வேறுபடுகின்றது.

### 3. வெளியிடப்பட்ட அறிவுக்கூர்மை தேவை

நாம் நமது கண்களால் பார்க்கும் பொருட்களின் உள்ளுணர்வு நம்மிடம் உள்ளது. நம் கண்களுக்கு முன்னால் இல்லாத பொருட்களை ஊகித்தல் மூலம் நம்மால் தெரிந்து கொள்ள முடியும். இன்னும் மற்ற பொருள்கள் அவற்றைப் பார்த்தவர்கள் கூறும் சாட்சியத்தினால் அறிந்து கொள்ள முடியும்.

கடவுளைப் பற்றிய உண்மைகளை அவரது சாட்சியத்தினாலும் அல்லது வெளியிடுதலினாலும் நாம் தெரிந்து கொள்கிறோம். இருந்த போதிலும் அவர் சில உண்மைகளை வெளிப்படுத்தியுள்ளார். அவைகளை நம்பும்படி மனிதனைக் கடவுள் கேட்டுக்கொள்கின்றார். எனினும் மனிதன் தன் இயற்கையான வல்லமையால் அவைகளைத் தெரிந்துகொள்ள முடியும். இது மூன்று காரணங்களுக்காக: 1. எல்லோரும் அவைகளைச் சுலபமாகத் தெரிந்து கொள்ள முடிவதில்லை. ஏனென்றால் அவர்கள் மற்றபடி சுறுசுறுப்பு, நோய், சோம்பேறித்தனம், நேரமின்மை ஆகியவற்றால் அவைகளை அறிந்து கொள்ள முடியாத நிலை. காரணம் எல்லோரும் பலனைப்பற்றிய விவாதத்தை எளிதில் புரிந்து கொள்வதில்லை.

2. மனம் சுத்தமாக இல்லை. ஏனென்றால் கோபமும் மோகமும் வாலிபர்களிடையே சாதாரணமாகக் காணப்படும் பிந்திய அறிவு கடவுளுக்குரிய பக்தியைப் பாதிக்கின்றது.

3. பகுத்தறிவதில் தவறான வாதம் சந்தேகத்தை உண்டாக்கும். எனவே கடவுள் இந்த உண்மைகளை வெளிப்படுத்தினார். அதனால் எல்லோரும் சுலபமாகக் குறிப்பிட்ட அறிவை வைத்துக் கொள்ளலாம்.

4. உண்மையான மதத்தின் அடையாளங்கள்: கடவுள் ஒன்று அல்லது அநேக சமயங்களை வெளிப்படுத்தினாரா? ஒரு சமயத்தை வெளிப்படுத்தினால் நாம் எவ்வாறு அநேக சமயங்கள் இருக்கும்போது அதைக் கண்டுபிடிக்க முடியும்? கடவுள் ஒரே ஒரு சமயத்தை வெளிப்படுத்தினார். அது பல்வேறு கட்டளைகளைக் கொண்டதாகும். அவர் அநேக சமயங்களை, ஒன்றுக்கு முரண்பாடான சமயங்களை வெளிப்படுத்த முடியாது. பழைய புதிய ஏற்பாடுகளுக்கிடையே எவ்வித முரண்பாடும் கிடையாது. அதே கடவுள் இவை இரண்டையும் வெளிப்படுத்தியுள்ளார். ஆனால் ஒரு தந்தை குழந்தைகளையும்

வாலிபர்களையும் வெவ்வேறு விதமாக நடத்துவது போன்று கடவுள் மனிதனை நடத்துகின்றார்; அல்லது சாதாரண மனிதனுக்கும் சன்னியாசிக்கும் இடையில் எவ்வித மறுத்தலும் உண்டா? கோட்பாடுகளில் மறுத்தல் வருகின்றது. சிலர் கூறலாம்: நகரத்தை நோக்கி அநேக பாதைகள் செல்லலாம். கடலை நோக்கி அநேக ஆறுகள் செல்லலாம். நாம் ஏன் அநேக மதங்கள் வைத்துக் கொள்ளக் கூடாது? நகரத்திற்கு அநேக பாதைகள் இருந்த போதிலும் அவை எல்லாம் நகரத்தை நோக்கிச் செல்லவேண்டும். நீ வடக்கில் உள்ள நகரத்திற்குத் தெற்கு நோக்கிச் செல்லக்கூடாது. நீ சூரியனுக்குச் சென்றடைய விரும்பினால் நீ மேல் நோக்கிச் செல்ல வேண்டும். கீழ் நோக்கியல்ல. இதேபோன்று புண்ணியத்தாலும் உண்மையாலும் நீ கடவுளை அடைய விரும்பினால் மேலே போக வேண்டும்.

## 5. உண்மையான சமயம்

a) உண்மையான சமயம் மனதிற்குத் திருப்தியளிக்கின்றது. கடவுளின் உண்மையான சமயத்தைக் கண்டுபிடிப்பது சுலபமான காரியமில்லை. ஏனென்றால் நாம் விதவிதமான சமயங்களைப் பார்ப்பதில் பழகிவிட்டோம். மேலும் பித்த மயக்கமுள்ள மனிதன் சர்க்கரையைக் கசப்பாகக் காண்கின்றவனைப்போல் நாம் பாவமுள்ள தவறான அபிப்பிராயத்தைக் கொண்டுள்ளோம். எனினும் நமது தவறான அபிப்பிராயத்தை விட்டுவிட்டுப் பார்க்க முயற்சித்தால் நாம் வெற்றியடையக்கூடும். ஏனென்றால் உண்மையான சமயத்தின் முதல் தனிச்சிறப்புப் பண்பு உண்மையில் மட்டுமே அடங்கியுள்ளது. இது மனதிற்கு உகந்ததாக உள்ளது. இது ஒரு நல்ல தந்தை அல்லது ஆசிரியர் கற்பிப்பது அல்லது கஸ்தூரி மஞ்சள் தனது நறுமணத்தின் மூலம் நம்மை மயக்கும் ஆற்றல் படைத்தவை. தவறான காலங்கள் குற்றம் நிறைந்தவையாய் இருப்பதால் மனதைத் திருப்திப்படுத்த முடியாது.

b) நாத்திகம் உண்மையான சமயமில்லை

மிருகங்கள் கீழ் நோக்கிப் பார்க்கின்றன. மனிதன் மேல் நோக்கிப் பார்க்கின்றான். ஏனென்றால் மிருகங்கள் இவ்வுலகில் மரிக்கின்றன. மாறாக மனிதன் விண்ணுலகம் செல்கின்றான். இவ்வுலகைத் தேடுகின்றவர்கள் தங்களைத்தாமே மிருகங்களாக்கிக் கொள்கிறார்கள். கடவுளின் சமயத்தை மறந்தும் கைவிட்டும் விடுகின்றார்கள். ஏனென்றால் இது பாவத்தைத் தடை செய்கின்றது. நீதிமான்களுக்குச் சன்மானமும் பாவிகளுக்குத் தண்டனையும் அளிக்கும் கடவுளை மறுத்து மனிதன் தைரியமாகப் பாவம் கட்டிக் கொள்கின்றான். மேலும் ஊகித்தல் சாட்சியம் ஆகியவைகள் மூலம் கடவுள் இருக்கின்றார் என்பதை மறுத்து, மனிதன் மற்றவர்களையும் பாவம் செய்யக் கற்றுக் கொடுக்கின்றான். ஒரு வீடு அதைக் கட்டினவனைச் சுட்டிக் காட்டுகின்றது. வெள்ளப் பெருக்கு மழையைச் சுட்டிக் காட்டுகின்றது. மழை, மேகத்தைச் சுட்டிக்காட்டுகின்றது.

அதுபோல ஊகித்தலினால் உலகம் கடவுளிடம் நம்மை இட்டுச் செல்கிறது.

ஒரு சிறுவன் தன்னுடைய பெற்றோரைச் சாட்சியத்தின் மூலம் அறிந்துகொள்கின்றான். நாம் தவறு செய்கின்ற மனிதர்களை நம்புகிறபோது நாம் ஏன் கடவுளை நம்பாமல் இருக்கக்கூடும்? பெரும் பேரழிவிலும் அல்லது ஆபத்து வேளைகளிலும் நாம் இயற்கையாகக் கடவுளை அழைக்கின்றோம். உரோமாபுரியும் பெங்காலும் சாட்சியத்தினால் இருக்கின்றன என்று நாம் நம்புகிறோம். அதேபோல் சாட்சியத்தினால் கடவுள் இருக்கின்றார் என்பதை நாம் நம்ப வேண்டும்.

### 6. தவறான ஆராதனை

மனிதன் சமயம் இல்லாமல் வாழ முடியாது. எனவே அவன் எப் பொருள்களிலிருந்து நன்மைகள் பெற்றானோ அவைகளை ஆராதிக்கத் தொடங்கினான். இவ்வாறு சூரியன், சந்திரன், தீ, தண்ணீர் போன்றவைகளை ஆராதித்தான். அவை மனிதனின் வாழ்வுக்கான உபகரணங்களாவும் பயன்பட்டன. அறிவற்ற மிருகங்கள் பசு, பாம்பு போன்றவைகளும் ஆராதனை செய்யும் பொருள்களாகின. இவையெல்லாம் நடந்தது பாவத்தின் காரணம் என்று நொபிலி கூறுகின்றார்.

### 7. சிலை வழிபாடு

a) அதிகாரம் - சிலை வழிபாடு இக் காரணங்களில் ஒன்றினால் இருக்கலாம். அதிகாரம், துன்பம், வியப்பு அல்லது அன்பு, அரசர்கள் குடிமக்களிடம் தங்களைக் கடவுளைப் போன்று அல்லது கடவுளின் அவதாரம் போன்று நினைக்கக் கட்டாயப்படுத்தினார்கள். நம்மிடம் செம்மையான உதாரணம் இரேனியக் கதையில் உள்ளது. சிலைகள் வடிக்கப்பட்டன. கோயில்களைப் பராமரிக்க நிலங்கள் ஒதுக்கப்பட்டன. புராணங்களைப் படைக்க உத்தரவு பிறப்பிக்கப்பட்டது. குடிமக்கள் பயத்தினால் கீழ்ப்படிந்தார்கள். ஆனால் அவர்கள் அரசன் கடவுள் என்று ஒருபோதும் நம்பவில்லை. சில தலைமுறைகளுக்குப் பின் இந்த அரச வழிபாடு மறக்கப்பட்டது. அரசன் தானே இவ்வகையான வழிபாட்டை நிறுத்தக் கட்டளையிட்டானோ அல்லது அரசனின் குழந்தைகள் தங்கள் தந்தைக்கு இந்த முறையில் மரியாதை செய்யாததினாலோ நிறுத்தப் பட்டிருக்கலாம். பிற்காலத்தில் புராணங்கள் கடவுளினால் வெளியிடப் பட்டன என்று அறிவிக்கப்பட்டது. ஆனால் புராணங்களைப் படிப்பதினால் உண்மையைக் கண்டுபிடிக்க முடியும். இந்தப் புராணங்கள் கடவுளின் அநீதியான ஒழுக்கங்கெட்ட நடத்தைகளை அந்தக் கடவுள்களுக்குச் சாற்றுகின்றன. இவ்வகையான செயல்கள் உண்மையான கடவுளைச் சாரா.

b) துன்பம்-மேற்குடி மக்கள் தங்கள் குழந்தைகளின் பெருமதிப்பிற்காகக் கோயில்கள் கட்டி எழுப்பினார்கள். ஏனென்றால் அவர்கள் தங்கள்

குழந்தைகளின் மரணத்தினால் உண்டான துயரத்தைத் தாங்கொண்ணாததின் காரணமாகவே தான். மற்றவர்களும் இவ்வரசர்களைப் பின்பற்றித் தங்கள் மறைந்துபோன குழந்தைகளுக்குக்; கோயில்கள் கட்டினார்கள். சில தலைமுறைகளுக்குப் பின்பு இக் குழந்தைகள் உண்மையான அவதாரங்கள் என்று கருதப்பட்டனர்.

c) வியப்பு - அறிவின்மையிலிருந்து வியப்பு வருகின்றது. மக்கள் ஒரு மனிதனிடத்தில் அசாதாரணமான அறிவு, அதிகாரம் போன்றவைகளைக் கண்டு அவர்கள் அவனைத் தெய்வப்பிறவி என்று எண்ணினர். எனவே அவர்கள் அவனுக்குச் சிலை வடித்து ஆராதனை செய்தனர். இவர்கள் தொண்டை மண்டலத்தில் 40 அல்லது 50 ஆண்டுகளுக்கு முன் ஆனந்தா பட்டும் வைகுண்ட பட்டும் சாற்றினர். அவர்களுடைய அசாதாரண அறிவுக் கூர்மையின் காரணமாக அவர்களைக் கடவுள் போன்று ஆராதனை செய்து வந்தனர். மேலும் அவர்கள் பெயர்களில் கோயில்கள் கட்டினர் என்று நொபிலி கூறுகின்றார். அவர்களுடைய சிலைகள் மற்றுமொரு சிலையை ஆராதிக்க, எப்படியென்றால் ஒரு கடவுள் மற்றொரு கடவுளை ஆராதனை செய்வது போலாகும். இவ்வாறு அவர்கள் உண்மையான கடவுள் இல்லை. இராமர் சிவனை ஆராதனை செய்தார். இராமேஸ்வரரும் சொக்கநாதரும் இமய நன்மை தருபவனை ஆராதனை செய்தனர் என்பது உண்மை என்பதை உறுதி செய்கின்றார் நொபிலி. ஏனென்றால் மற்ற கடவுளை ஆராதனை செய்வதினால் அவர்கள் தங்களைத் தாழ்ந்தவர்கள் என்று காண்பிக்கின்றனர். இந்தக் காரியத்தில் லீலையின் விளக்கம் நொபிலியால் தள்ளுபடி செய்யப்படுகின்றது. இந்தக் காரியத்திலும் அவர்கள் தங்களைத்தாமே தாழ்ந்தவர்கள் என்று காண்பித்துக் கொள்கின்றனர். எனவே அவர்கள் கடவுள் இல்லை.

d) அன்பு - அதிகாரம், துன்பம், வியப்பைப்போன்று அன்பும் அநேக சிலைகளுக்குக் காரணமாய் உள்ளது. மனித குலத்திற்குப் பெரும் சேவை செய்பவர்களுக்கு அவர்களது நினைவு மறைந்து போகாதபடிக்கு அவர்களுக்கு மக்கள் சிலைகள் செய்தனர். சில காலம் கழித்து இந்தச் சிலைகள் கடவுள்களாக மாறின. இதை அடுத்து உபயோகமான விவசாயம், சிற்பக்கலை, மருத்துவம், வண்ணச் சித்திரம், கட்டடக்கலை, விற்றொழிற்கலை, போர் நடவடிக்கை, இசை ஆகியவை கற்றுக் கொடுக்கப்பட்டன. இத்தோடு கல்வி, சோதிடம் போன்ற நுண்கலைகளும் கற்பிக்கப்பட்டன. இப்படிப்பட்ட மக்களுக்கு சிலை வடித்தார்கள். பின்பு அவற்றை ஆராதித்தனர். இந்த முறையில் 'பாறியா', 'கீதா' எழுதியவர்கள் கடவுளாவார்கள். இதுபோன்று வியாசர், ஆழ்வார்கள், சங்கராச்சாரியார் போன்ற ஏனையோர் பல வகையான அறிவியல்கள் கற்பித்தவர்கள் மகரிஷிகள் ஆகியோர் கடவுளாக ஆராதிக்கப்பட்டனர். இதேபோல் பாண்டிய அரசன் சொக்கநாதனைக் கடவுளாக **ஆராதனை**

செய்தான். நியாயமென்று தோன்றும் காரணத்திற்கு ஏனையோரும் கடவுளாக்கப்பட்டனர். தேவகி பெண் தெய்வமாக்கப்பட்டாள். ஏனென்றால் அவள் பரத்தமையைக் கற்பித்தாள். மன்மதன் கடவுள் ஆனார். ஏனென்றால் அவருடையது மடனா சாஸ்திரம் (கழிமோகம்). அதேபோல் வடநாட்டில் சங்கராச்சாரியார். அவருடைய அமாருக் என்ற நூல் கெட்டொழுக்கம் நிறைந்துள்ளது. மன்மதன் கடவுளாக ஆராதனை செய்யப்பட்டான்.

## 8. உண்மையானதின் கோட்பாடும் குறியீட்டு மரபும் தெரிவித்தல்

வர்ணனை நேரடியாக அல்லது உருவகமாக இருக்கலாம். ஒரு மரம் கிளைகளைக் கொண்டது. இது நேரடி வர்ணனை. மாறாகப் 'படைத்தளபதி ஆண்கள் நடுவில் ஒரு சிங்கம்'. இது உருவகமாகும். ஏனென்றால் ஒப்புமை மதிப்பில் ஒரே மாதிரி. ஆனால் சிங்கத்தின் தோற்றத்தில் இல்லை. இதேபோன்று, வாளும் தராசும் கொண்ட ஒரு பெண் மூலம் நீதி தெரிவிக்கப்பட்டுள்ளது. இரக்கம் ஒரு பெண், குழந்தைகளுடன் இருப்பதாகத் தெரிவிக்கப்படுகின்றது. தராசு பார பட்சத்தையும் வாள் நீதி வழங்கும் அதிகாரத்தையும் காட்டுகின்றன. ஏழைகள் இரக்கத்தைக் காட்டுகின்றது. இரண்டும் பெண்களைச் சுட்டிக் காட்டுகின்றன. ஏனெனில் இருவரும் அன்பு செலுத்தப்பட வேண்டும். ஒரு மனிதன் தன்னுடைய மனைவியை அன்பு செய்து பற்றிக் கொள்வது போல் மனைவியும் அன்பு செய்து பற்றிக் கொள்ள வேண்டும். கடவுள் அரூபியாய் இருப்பதால் ஒரு பொருளைச் சுட்டிக்காட்டுவதுபோல் அவரைச் சுட்டிக்காட்ட முடியாது. கடவுளுடைய தனி இயல்புகளைக் கொணரச் சில உருவப்படங்கள் செய்யப்படுகின்றன அல்லது வரையப்படுகின்றன.

வண்ணம் தீட்டிய படம் படிக்காதவனுடைய நூல். ஏனென்றால் வாசிக்கத் தெரியாதவர்கள் கூட அதைப் புரிந்துகொள்கின்றனர். இம்மாதிரியான வண்ணப்படம் ஒரு பொருளைச் சுட்டிக் காட்டும் பொழுது உண்மையாக இருக்கலாம். குறியீடாகச் சுட்டிக் காட்டும் பொழுது அது ஒரு கருத்தாய் (எண்ணமாய்) இருக்கலாம். இவ்வாறு கடவுள் ஒரு வட்டத்தினால் சுட்டிக்காட்டப்படுகின்றார். அவருக்குத் தொடக்கமும் முடிவும் இல்லை என்பதைச் சுட்டிக்காட்டுவதற்கு அறிவற்றவர்கள் மட்டுமே வட்டத்தைக் கடவுளாகப் பாவித்து எடுத்துக் கொள்கின்றனர். மேலும் அவர்கள் கடவுளை மூன்று கண்களோடு சுட்டிக் காட்டுவது கடவுள் கடந்த காலம், நிகழ்காலம், எதிர்காலம் ஆகிய மூன்றையும் அறிந்தவர் என்று காண்பிக்க அல்லது அவருடைய மூன்று வேலைகளைச் சுட்டிக்காட்டுவதற்காக. படைப்பு, காத்தல், அழித்தல் உறுதியாக அவருக்கு மூன்று கண்கள் கிடையா. மேலும் சிலர் ஐந்து முகங்கள் அவருடைய ஐந்து செயல்களைக் குறிக்கிறதாகும். அதாவது படைப்பு, காத்தல், அழித்தல், மறைத்தல், இரக்கம் ஆகியவை.

நிச்சயமாக அவருக்கு ஐந்து முகங்கள் கிடையா. அவை கருத்தைக் குறிக்கின்றதேயொழிய முகத்தையல்ல.

### இராபர்ட் தெ நொபிலியின் உரைநடை

1607ஆம் ஆண்டுத் தொடக்கத்தில் தெ நொபிலி அடிகள் சோராவில் உள்ள கோமானின் மனைவிக்குப் பின்வருமாறு எழுதுகின்றார்:

> ''நான் இந்தியா வந்து சேர்ந்தவுடன், முதலாவதாக நான் செய்ததாவது இங்குள்ள மக்களின் மொழியைக் கற்பதாகும். இந்த மொழி மிகுந்த அழகும் மிக்க வளமானதும் நேர்த்தியானதுமாகும். எனவே இம்மொழியைக் கற்பதென்பது கடினம். ஆனால் இறைவனின் அருளால் அவருக்காக நான் உழைக்கின்றேன். ஆறு மாதங்கள் அம்மொழியைக் கற்ற பிறகு அதில் நான் வல்லுநரானேன். திருமறையைப் போதிக்கவும், மக்களோடு பழகவும், பாவ சங்கீர்த்தனம் கேட்கவும் மொழிபெயர்ப்பாளர் உதவி எனக்குத் தேவைப்படவில்லை''.

அடிகள் எழுதிய மற்றுமொரு வருடாந்திரக் கடிதத்தில் இதே கருத்தைக் கூறியுள்ளார். தெ நொபிலி அடிகள் தமிழ்மொழி ஒரு பண்பட்ட மொழி என்று கருதுகின்றார். அவர் தமிழ்மொழியின் வளமையைப் பற்றியும் நேர்த்தியைப் பற்றியும் கூறுகின்றார். தமிழ் அவரை மயக்கியது. அவர் இந்தியா வந்தபின் கற்ற மொழிகள் தமிழ், சமஸ்கிருதம், தெலுங்கு ஆகும். ஆனால் அவர் தமிழ் மேல் கொண்ட அன்பு என்றும் மாறவில்லை. இதை அவர் தமிழில் எழுதிய பல்வேறு படைப்புகள் நமக்குத் தெரிவிக்கின்றன.

தெ நொபிலியின் காலத்தில் இந்தியாவில் மெய்யியல் சமஸ்கிருதத்தில் கற்பிக்கப்பட்டது. ஆனால் நொபிலி மிகவும் கடுஞ்சிக்கலான கருத்துக்களைத் தமிழில் விளக்கிக் கூறமுடியும். மெய்யியலில் உள்ள சிக்கல்களைத் தமிழில் விளக்குவதைக் காணவேண்டுமாயின் அவர் எழுதிய 'ஆத்ம நிர்ணயம்' என்னும் நூலை மட்டும் வாசித்தால் போதுமானதாகும். தமிழ் அறிஞர்கள்கூடப் பழகினால் மட்டுமே மெய்யியலில் உள்ள சிக்கல்களை விளக்க முடியும். பொதுவாக அவர்கள் ஆங்கிலத்தைத்தான் தங்கள் வாதங்களில் பயன்படுத்துகின்றனர்.

பல்த்தசார் டா கோஸ்தா அடிகள் நொபிலியின் தமிழ்ப் படைப்பைப் போர்த்துக்கீசியத்தில் மொழிபெயர்த்ததின் முகவுரையில் கூறுகின்றார்:

> ''நொபிலியின் காலத்தில் சாதாரண மனிதனுக்குக் கிடைக்கக்கூடிய நூல்கள் எல்லாம் செய்யுளில் இருந்தன. அவைகளைப் புரிந்து கொள்வது சாதாரண மனிதனுக்கு

அவ்வளவு சுலபமல்ல. நொபிலி தனது நாற்பது ஆண்டுகள் உழைத்துக் கற்ற பரந்த தமிழ் மொழி அறிவைப் பயன்படுத்தி எழுதிய படைப்புகள் செழுமையாகவும் நேர்த்தியாகவும் இருப்பதைக் காட்டுகின்றன''.

என்று கூறுகின்றார்.

தந்தை புரேயென்சா நொபிலியின் படைப்பைப்பற்றிக் கூறும்போது,

''நொபிலியின் முக்கியப் படைப்பின் பட்டியல், அவற்றின் கருத்துக்கள் வியக்கத்தக்கவையாகவும் அவற்றின் இலக்கிய நடை, பெரும்பான்மையான இந்திய அறிஞர்களின் கருத்துப்படி முழுமையான இலக்கிய நயம் உள்ளதாகும்.''

என்று கூறுகின்றார்.

மேலும் புரேயென்சா 1660இல் எழுதிய வருடாந்திர அஞ்சலில் கூறுகிறார்:

''நொபிலியின் படைப்புகளைக் கற்பதற்காகத் தமிழ் மொழியைக் கற்பது தகுதியாகும்.''

நாம் நொபிலியின் படைப்புகளை வாசிக்கின்றபொழுது தமிழ் மொழியில் அவருக்கிருந்த திறமையும் ஆற்றலும் நம்மை வியக்கவைக்கின்றன. குறிப்பாக அவர் எழுதிய விண்ணுலகின் வர்ணனையில் அதைக் காணலாம். அவர் இதைக் கண்பார்வை இழந்தபின்னர் எழுதினார். 1656இல் புரேயென்சா அடிகள் எழுதிய அஞ்சலில்

''நான் அவற்றில் மிகுந்த வியப்படைவது பொருளின் மேன்மை, அமைப்பு, பொருள்களின் வரிசைக்கிரமம் ஆகியவற்றைக் காட்டிலும் அவர் முற்றிலும் கண்பார்வை இழந்தபின் படைத்த படைப்புகள் உண்மையிலேயே வியக்கத்தக்கவையாக உள்ளன''

என்று எழுதுகின்றார்.

**நொபிலியின் நடை - சொற் தொகுதி**

நொபிலிதான் தமிழில் கிறிஸ்தவக் கலைச் சொற்களுக்கு ஆசிரியர். கிறிஸ்தவ எழுத்தாளர் என அவர் மேலும் ஓர் அடையாளத்தை ஏற்படுத்தியுள்ளார். நொபிலியின் நடை, சொற்கள், இலக்கணம் ஆகியவை ஒவ்வொரு படைப்பின் முகவுரையில் கொடுக்கப்பட்டுள்ளன.

### பேச்சுத்தமிழ்

நொபிலி தற்காலத்துக்குரிய தமிழ் உரைநடையினைத் தோற்றுவித்தவராகையால் அவர் யாரையும் பின்பற்றி எழுதுவதற்கான சாத்தியக்கூறு அவர் காலத்தில் இல்லை. அவ்வளவுக்கு ஒரு வகையில் செய்யுளின் விதிகளிலிருந்தும், மற்றொரு வகையில் பேச்சுத் தமிழிலிருந்தும் இலக்கிய உரைநடை தன்னைத்தானே விடுவித்துக் கொள்ளக் கூடும். எனவே பேச்சு மொழியாகக் காணப்படும் ஐயத்திற்கு இடமற்ற கூறுதல்கள் அவருடைய படைப்புகளில் காணப்படுகின்றன. பேச்சுத் தமிழை அவர் பயன்படுத்தாமல் விட்டிருக்கலாம். ஆனால் கற்றறிந்த அநேக அறிஞர்கள் சாதாரணப் பேச்சில் இவ்வகையான கூறுதல்களை உபயோகிப்பதைக் கண்டு, நொபிலியும் அவற்றைப் பயன்படுத்தினார். தமிழ் இலக்கண ஆசிரியரான தொல்காப்பியரின் கூற்றுப்படி படித்தவர்கள்தாம் பேச்சின் தரத்தை நிலைப்படுத்தினார்கள். 'வழக்கெனப் படுவது உயர்ந்தோர் மேற்றே' (1592) . இக் கூற்றுகள் ஆத்தும நிர்ணயத்தில் உள்ளன. 'ஆச்சுது, போற, தோர்வை, ... குறிப்பிடத்தக்கன.

### இலக்கிய வடிவம்

நொபிலி அடிகள் உரையாடல் வடிவத்தின்பேரில் பிரியமாய் இருந்தார். இவ்வகையான உரையாடல் முறைப் பேச்சில் சலிப்புத் தட்டாமல் இருக்க உதவுகின்றது. திரும்பத் திரும்பக் கூறுவதைத் தவிர்க்கின்றார். அவர் படைப்பை உயிர்த்துடிப்புள்ளதாகவும், நாடகப் பாணியாகவும் அமைத்துள்ளார். மேலும் இந்திய ஆசிரியர்கள் இம்முறையை உபனிஷத, பகவத்கீதை விளக்கவுரைகளிலும் மற்ற படைப்புகளிலும் பயன்படுத்தியுள்ளனர். புனர்ஜென்ம ஆட்க்ஷேபத்தில் தெ நொபிலி அடிகள் உரையாடலைக் கையாண்டுள்ளமையைக் காணலாம்.

### செயப்பாட்டு வினை

இந்தத் தொடர்ச்சியில் செயப்பாட்டு வினையைப்பற்றி ஒரு வார்த்தை சொல்ல வேண்டும். இலக்கிய ஆசிரியர்கள் இதைத் தவிர்க்கின்றார்கள். ஆனால் தெ நொபிலி அடிகள் இதைப் பயன்படுத்துகின்றார். இந்த அமைப்பு முக்கியமாக அவர் இலத்தீன் அல்லது திருவிவிலியத்திலிருந்து மொழிபெயர்க்கும் போது பயன்படுத்துகின்றார். ஏனென்றால் அவை செயப்பாட்டு வினை வடிவில் உள்ளன. இந்த வகையான அமைப்பு மூலத்தில் ஈடுபாடு கொண்டுள்ளது.

### எழுத்து நடை மனிதனாக்கும்

'எழுத்து நடை மனிதனாக்கும்' என்று கூறப்படுகின்றது. மனிதன் எப்படியோ அப்படியே அவனது பேச்சு அல்லது எழுத்து நடையும்

அமையும். ஒரு வகையான ஆச்சரியமாய் இருக்கும். நொபிலி அவர் காலத்து ஆசிரியர்கள் பேசுவதைப் போன்று பேசினார். அதிகாரம், வாத எதிர்வாதத் தொனி, ஊடுபரவுகின்ற அவருடைய பேச்சு நடை அனைத்தும் அவர் வாழ்ந்த சுற்றுப்புறச் சூழலைப் பிரதிபலிக்கின்றன. ஆனால் அவரிடம் உள்ள தகைமை காலத்தையும் நிலத்தையும் தாண்டிப் போகின்றது. இது அவரது படைப்புகளிலும் பிரதிபலிக்கின்றது.

தந்தை பல்த்தசார் டா கோஸ்தா மதுரை மறை மாநிலத் தலைவராக இருந்தபோது உரோமையில் உள்ள இயேசு சபைத் தலைவருக்கு எழுதிய கடிதங்கள் ஒன்றில் ''நொபிலி அடிகள் ஒரு வகையான 'ஒப்பாரி' எழுதினார்'' என்று கூறியுள்ளார். பெண்கள் தங்களுடைய கணவன்மார்களையோ அல்லது நெருங்கிய உறவினர்களையோ மரணத்தால் இழக்கும்போது இந்த ஒப்பாரி பாடப்படும். நொபிலி எழுதிய ஒப்பாரிப் பாட்டின் கருப்பொருளானது கிறிஸ்துவின் பாடுகள், அவருடைய தாய் மரியாளின் துயரங்கள், காவல் தூதர்கள், மனிதர்கள் ஆகியோர் செய்த பாவங்களும் அவற்றின் விளைவாக வரும் துயரங்களும் ஆகும். மேலும் நொபிலி 700 வரிகள் அடங்கிய கிறிஸ்துவ சமயத்தைப் பற்றியும், மற்றுமொரு இரண்டாயிரம் வரிகள் கொண்ட முடிவில்லா வாழ்வைப் பற்றியும் எழுதினார். ஆனால் இதுவரையிலும் எந்தப் படைப்பையும் எவ்வித ஆவணங்களிலும் காணமுடியவில்லை. இவை நொபிலியின் சமஸ்கிருதம், தெலுங்கு, தமிழ் மொழிகளைப் பற்றிய அறிவாற்றலையும் கற்கும் திறமையையும் பற்றிய கருத்தை நமக்குக் கொடுக்கின்றன.

புகழுரை - பாராட்டு

நொபிலியின் உருவப்படங்கள் பலவிதம். அவற்றில் உண்மையான அல்லது நம்பகமான உருவப்படம் நொபிலி அடிகள் எழுதிய ஞான உபதேசம். போர்த்துக்கீசிய மொழியில் மொழியாக்கம் செய்ததில் காணப்படும் உருவப்படத்துக்கு இணையாகாது. பல ஆண்டுகளாக நொபிலியோடு வாழ்ந்தவரும் அவரை நேரில் கண்ட சாட்சியும் உருவப்படம் வரைபவருமான பல்த்தசார் டா கோஸ்டா வரைந்த நொபிலியின் உருவப்படம் ஏனையோர் வரைந்ததைவிட மிகச் சிறந்ததாக உள்ளது. உருவப்படமட்டுமல்லாது அவர் நொபிலியின் உருவப்படத்தைப் பற்றி எழுதிய கவிதையும் மீண்டும் உருவாக்கப் பட்டுள்ளது. டா கோஸ்டா அடிகளின் சமயம் சார்ந்ததும் உலகியல் சார்ந்ததுமான இலக்கிய மறைக்காப்புக் கொண்ட மிக அழகான கவிதை இது. டா கோஸ்டா அடிகள் இதை எழுதும்பொழுது தெய்வீக ஊக்கமளிக்கப்பட்டார். இந்தக் கவிதை இலத்தீன் மொழியில் எழுதப்பட்டது. தந்தை அகஸ்டின் சொலியர் இதை ஆங்கிலத்தில் மொழிபெயர்த்து அம்மொழிபெயர்ப்பு 1966இல் வெளிவந்த 'காரித்தாஸ்' மாதாந்திர வெளியீட்டில் வெளியிடப்பட்டது. இக்கவிதையின்

கருப்பொருள் என்னவென்றால் இது உரோமாபுரி நகரை நோக்கிப் பேசப்பட்டது. குறிப்பாக, உரோமாபுரியில் உள்ள கத்தோலிக்கத் திருச்சபை பற்றியதாகும். நொபிலியின் உருவப்படத்தை டா கோஸ்டா அடிகள் உரோமாபுரியை நோக்கிக் கேட்கின்றார். உரோமை நகரம் இந்த உடையில் நொபிலியை அடையாளம் காண்கின்றதா அல்லது வெறுக்கின்றதா? ஏனெனில் அவர் தமிழர்களின் உடையையும், மொழியையும், பழக்க வழக்கங்களையும் தத்தெடுத்துக் கொண்டு தமிழனாகி விட்டார்.

ஓ உரோமாபுரி நகரமே நீ உன்னுடைய இராபர்ட் நொபிலியை அடையாளம் கண்டு கொள்கின்றாயா? ஏனென்றால் அவர் தன் உடை, மொழி ஏன் தனது இயற்கைத் தன்மையையும் மாற்றி ஒரு தமிழனாக மாற்றிக் கொண்டார். இவ்வாறு தமிழர்களை உன்னுடைய குழுவிற்குள் கொண்டு வர மாற்றினாரா?

நொபிலியின் முன்னோர்கள் திருச்சபையில் வழிவழியாய் போப்பாண்டவர், கர்தினால்கள் அணிந்த கறுஞ்சிவப்பை வெறுத்த பின்பு இந்த அதிமிக அறிஞர் இந்தக் கிழிந்த கந்தல்களை உரிமையாய் அணிந்து கொள்வது அவரது அசாதாரணச் செய்கையோ? என்று நீ கேட்கலாம்.

கோர்துவின் தியாக உள்ளத்தால் ஓ! உரோமாபுரியே, மரணத்தையும் ஆபத்துக்களையும் எதிர்கொண்டு உனக்கு வெற்றியையும் புகழையும் எதிர்கொண்டு வர அவர் இந்த எளிமையான அந்நிய உடையைப் புதுப்பித்தார்.

ஒரு திறமையான வேட்டைக்காரன் இரையின் மேல் கவனம் கொண்டும் எந்த ஆன்மாவையும் பயமுறுத்தாமல் அநேக ஆன்மாக்களைப் பிடிக்கத் தன்னையே மாறுவேடப்படுத்திக் கொண்டார்.

உருவப்படத்தில் உள்ள கோடாரி, பூணூல், கம்பிலுள்ள கணுக்கள், கையில் உள்ள கமண்டலம் எல்லாவற்றையும் கண்டு வியப்படைகின்றாயா? அதில் காணப்படும் ஒவ்வொன்றும் விளங்காச் செய்திகளாக இல்லை.

அவர் அநேக நூற்றாண்டுகளாக நற்செய்தி நுழைய முடியாமல் இருந்த மதுரை வனத்தை அந்தக் கோடாரியைக் கொண்டு வெட்டி அதில் நுழைந்தார்.

அவர் பூணூலால் வழிகாட்டப்பட்டுப் பிராமணர் அல்லாதவர் தண்டனையில்லாமல் வேதத்தில் நுழைய முடியாத சிக்கலாய்ச் சுழன்று சுழன்று செல்லும் வழிகளில்

பூணூல் வழிகாட்டியைக் கொண்டு அவ்வேதத்தில் நுழைந்தார்.

அன்பின் பிணைப்பான இந்த முப்பிரிக்கயிறு அவருடைய இதயத்திலிருந்து எடுத்துக் கம்புக்குள் கொடுக்கப்பட்டதை எவரும் நொறுக்க முடியாது.

இந்தப் புதிய அலெக்ஸாண்டர் உதவியின்றி ஆயிரம் இன்னல் இடர்களை முறியடித்து ஆன்மாக்களை வென்று மதுரை மறைப்பணித்தளத்தை நிறுவினார்.

ஓ! உரோமாபுரியே! மாணவனாக உன் வகுப்பறைகளில் இருந்தாவது ஆன்மாக்களின் தாகத்தால் படு வேதனைப்பட்டு, இத்தாகத்தை அவர் இந்திய நாட்டிற்குத் தன்னுடன் எடுத்துக்கொண்டு சென்று அத் தணியாத் தாகத்தைக் கமண்டலத்திலுள்ள தண்ணீரைக் கொண்டு ஆயிரமாயிரம் மக்களுக்குத் திருமுழுக்குக் கொடுத்து ஆன்ம தாகத்தைத் தணித்துக் கொண்டார்.

அவர் ஏன் வெறுங்காலோடு செல்கின்றார் என்று கேட்காதே. ஏனென்றால் அவை சமாதானத்தை அறிவிக்கின்றன. அந்த அழகு வாய்ந்த கால்களைக் காண்பிக்க வேண்டுமே யொழிய அவைகளை மறைக்கக்கூடாது.

மெலிந்து சுருங்கிய முகத்தைக் கண்டு திகைப்படையாதே. ஏனெனில் அவர் தம்முடைய சொந்த பந்தங்களை ஒரேயடியாக விட்டுப் பிரிந்து, ஐம்பதாண்டுகள் முழுமையாகப் புலாலைத் தவிர்த்துக் காய்கறிகளைக் கொண்ட சைவ உணவை உண்டு வந்தார். புலாலை உண்பதும் திராட்சை இரசம் அருந்துவதும் புனிதத்தன்மையை மதியாது செய்கிற அவச்செயல் என்று நம்பினார்.

நீ ஏன் துளைக்கப்பட்ட வலயம் அணிந்துள்ள அவருடைய காதுகளைக் கண்டு அச்சத்தில் திடுக்கிடுகின்றாய்? இது பெண்தன்மையுள்ள ஆணின் அடையாளமா? இது ஆண்டவர் தம் அடியாரின் காதுகளை முழுமையாக்கியுள்ளார் என்பதாகும். ஏனென்றால் இவ்வாறு அவர் அவரை (இறைவனை) நிரந்தரமான பிணைப்பில் கொள்ளும்படியாய் இருப்பதற்காகவே.

அவருடைய நெற்றியில் உள்ள சாம்பலின் இரகசியம் என்ன? அவர் இந்த வீணான மாட்சியிலிருந்து தப்பவும், அம்மேன்மையாலும் அவர் சாதித்த சாதனைகளாலும் ஒரு

வேளை தன்னைத்தானே கடவுளாக எண்ணாமல் இருக்கும் பொருட்டுப் பயன்படுத்தப்படும் மருந்தாகும். அவர் தாம் ஒரு மனிதன் என்பதை நிரூபித்தார்.

தாம் உயிரோடு இருந்தபொழுது உன் திருப்பெயரை உரக்க எதிரொலிக்கச் செய்த அவர் தம் மரணத்திலும் உன்னைப்பற்றிப் பேசாமல் அமைதியாய் இருக்க முடியவில்லை. உம்மைப் பற்றியே பல மொழிகளில் எழுதிய அநேக நூல்கள் வழியாகப் பேசுகின்றார். எனவே உன் மகனை ஏற்றுக்கொள். மேலும் நீ அநேக இராபர்ட்டுகளை உயர்த்திவிட ஒருபோதும் நின்று விடாதே!

## தந்தை கஸ்பார் தெ அக்குவிலார், சே.ச.
## (Gaspar de Aquillar S.J.) 1588-1648

தந்தை கஸ்பார் தெ அக்குவிலார் 1588ஆம் ஆண்டு போர்ச்சுக்கல் நாட்டிலுள்ள 'லாமெக்கோ' (Lamego) என்னும் ஊரில் பிறந்தவர். இவர் 1610ஆம் ஆண்டு தமது 22ஆம் வயதில் இயேசு சபையில் சேர்ந்தார். தந்தையவர்கள் புத்திக்கூர்மையும் உடல் திடகாத்திரமும் கொண்டவராய் இருந்தார். 1619-20 வரையில் இலங்கையின் தலைநகரான கொழும்பில் பணியாற்றினார். 1623இல் சென்னை புனித தோமையார் பேராலயத்தில் மறைப்பணியாற்றிவிட்டு 1627இல் கேரளாவிலுள்ள கொச்சி நகரத்திற்குச் சென்றார். இவர் அங்குள்ள மறைக் கல்லூரியில் குருவாகப் பயிற்சி பெறும் இளந் துறவிகளுக்கு இலக்கணமும் இறையியலும் கற்றுக் கொடுக்கும் பேராசிரியராகப் பணிபுரிந்தார். ஓராண்டுக்குப் பின்பு அடிகள் கர்டிவாவுக்கு (Cardiva) மறைப்பணியாளராகச் சென்றார். மறுபடியும் 1644இல் கொச்சிக்குத் திரும்பி வந்து இயேசு சபையின் நிரந்தர உறுப்பினராக்கப்பட்டார், 1648ஆம் ஆண்டு தந்தை அக்குவிலார் கருத்து வேற்றுமையின் பொருட்டு இயேசு சபையை விட்டு விலகினார்.

### அடிகளின் பங்களிப்பு

'Arte Tamul Sive institutio linguae Malabariae' என்னும் நூலுக்கு அக்குவிலாதான் ஆசிரியர். தந்தை பல்த்தசார் டா கோஸ்டா தாம் படைத்த 'Arte Tamulica' என்ற இலக்கண நூலில் அக்குவிலாரின் படைப்பிலிருந்து தக்க மேற்கோள்களை எடுத்துக் காட்டியுள்ளார். டா கோஸ்டா எழுதிய தமிழ் இலக்கணம் 1720ஆம் ஆண்டு ஹாலேயில் (Hale) அச்சானது.

# தந்தை எம்மானுவேல் மார்ட்டின்ஸ், சே.ச.
# (Emmanuel Martins S.J.) (1597-1656)

எம்மானுவேல் மார்ட்டின்ஸ் போர்த்துக்கல் நாட்டிலுள்ள அலமெட்ஜோ மாநிலத்திலுள்ள அல்விட்டோ என்னும் ஊரில் 1597ஆம் ஆண்டு பிறந்தார். பக்தி நிறைந்த பெற்றோரின் அன்பிலும், நல்லொழுக்கத்திலும் வளர்ந்து வந்தார். ஆரம்பக் கல்வி, உயர்நிலைப் பள்ளிக் கல்வியைக் கற்றுத் தேர்ந்தபின் ஈவோராவில் உள்ள கல்லூரியில் இளங்கலைப் பட்டப்படிப்பை முடித்தார். மார்ட்டின்ஸ் அடிகள் தமது 18வது வயதில் 1615இல் மார்ச்சு 25ஆம் தேதி இயேசு சபைக் குருமடத்தில் நவசந்நியாசியாகச் சேர்ந்தார். தந்தை மார்ட்டின்ஸ் துறவறப் பயிற்சியை மேற்கொண்டு குருவாவதற்கான மெய்யியல், இறையியல் கற்றுக் குருவானவராகத் திருநிலைப் படுத்தப்பட்டார். அங்குள்ள கல்லூரியில் மார்ட்டின்ஸ் அடிகள் அறிவியல் கலையைப் பயிற்றுவித்தார். 1624ஆம் ஆண்டு இந்தியா வந்து மதுரை மறை பரப்புத் தளத்திற்குச் சென்றடைந்தார். ஜெகனிவாசகர் என்பது இவரது தமிழ்ப் பெயராகும். தந்தையவர்கள் 1644-48லும் 1653லும் மறைத்தளத்தின் தலைவராக மறைமாநிலத்தைச் சிறப்புடனும் பொறுப்புடனும் நடத்தி வந்தார்.

அடிகள் இம் மறைத் தளத்தில் பணியாற்றிய பெரும் பணியாளர்களில் ஒருவராவார். மதுரையில் தந்தை பிராமண சந்நியாசியாகப் பணிபுரிந்தார். தந்தை இராபர்ட் தெ நொபிலிக்கு உதவியாளராக இருந்து பணியாற்றினார். அடிகள் திருச்சிராப்பள்ளியிலும், சத்திய மங்கலத்திலும் மறைப்பணி யாற்றினார். இவரது மறைப்பணிக் காலத்தில் அவமதிப்புகள், இகழ்ச்சிகள், அச்சுறுத்தல்கள் இவருக்கு அன்றாட உணவாயிருந்தன. விசுவாசத்தின்மேல் உள்ள வெறுப்பினால் விரோதிகளால் நான்கு முறை கைது செய்யப்பட்டார். முதல் தடவை மதுரையில் இருந்த பொழுது தந்தை ஆன்ட்ரூஸ் லோப்சுவும் எம்மானுவேல் மார்ட்டினும் சேர்திருந்த பொழுது ஒவ்வொரு நாளும் காலை நேரத்தில் அநேக நாள்கள் குண்டாந்தடியால் கொடூரமாக அடிக்கப்பட்டனர்.

இரண்டாவது முறையாக எம்மானுவேல் மார்ட்டின்ஸ் அடிகள் திருச்சிராப்பள்ளியில் இருந்தபொழுது கொடூரமாக அடிக்கப்பட்டதால் அவருடைய எல்லாப் பாகங்களிலிருந்தும் இரத்தம் கசிந்து வந்தது. அதனால் அவரது அடிபட்ட புண்கள் ஆறுவதற்கு நீண்ட நாள்கள் ஆகின. ஒருமுறை அவர் சத்தியமங்கலத்தில் இருந்தபொழுது கடுமையாய்ச் சாட்டையால் அடிக்கப்பட்டார். மற்றொருமுறை அவர் மரக்கட்டையாலான காலணியால் முகத்தில் திரும்பத் திரும்பத் தாக்கப்பட்டார். அவர் நான்கு முறை ஊர் கடத்தப்பட்டார். இரண்டு முறை திருச்சிராப்பள்ளியிலிருந்து

கடத்தப்பட்டார். அவரை அவமானத்தோடு பார்த்த இந்து மக்கள் இரக்க உணர்ச்சி கொண்டு அழுதனர். கற்களும் இலைகளும் சேர்த்துக் கட்டிய கயிற்றை மாலையாக அவருடைய கழுத்தில் தொங்கவிட்டு ஒரு பைத்தியக்காரனைப் போன்று நகரத்தில் வேட்டையாடப் பட்டதைக் கண்ட குழந்தைகள் கூச்சல் கூப்பாடு போட்டு எள்ளி நகையாடவும் செய்தனர். எல்லாத் தருணங்களிலும் இறைவனின் ஊழியர் இரத்தத்தால் தோய்ந்திருந்த போதிலும் அவமதிப்பால் முற்றிலும் நிரப்பப்பட்ட போதிலும் மகிழ்ச்சியோடு சித்திரவதைகளைச் சகித்துக் கொண்டார். ஏனெனில் ஆண்டவருக்காகத் துன்பப்படுவதை அவர் அறிந்திருந்தார். இறைவனுக்காகத் தம் இன்னுயிரையே கையளிக்க ஆவல் கொண்டிருந்தார்.

அவர் ஒவ்வொரு நாளும் மக்களுக்குப் போதனை செய்வதும் அவர்களைத் தியானிக்கச் செய்வதும் ஆத்தும சோதனை செய்வதும் அவருக்கு வழக்கமாய் இருந்தது. அதனால் ஏற்பட்ட விளைவு என்னவென்றால் அவருடைய கிறிஸ்தவர்களை அவர்களுடைய பக்தியினால் ஏனையோரிடமிருந்து இலகுவாக வேறுபடுத்திக் கண்டறிய முடியும். இயேசு சபையில் முதல் முதலாகச் சேர்ந்த இளம் சந்நியாசிகள் கூட எம்மானுவேல் மார்ட்டின்ஸ் அடிகளைக் காட்டிலும் நன்மாதிரியாய் இருந்ததில்லை. எந்தக் கிறிஸ்துவனும் அவரைத் தேடிச் சென்றால் அவர் எந்த வேலையாக இருந்தாலும் உடனே தம்மைத் தேடி வந்தவருக்குப் பணிபுரியத் தயங்க மாட்டார். அவர் தன்னிடமிருந்து யாராவது எப்பொருளையாவது கேட்டால் அவைகளை அவர்களுக்குக் கொடுக்க மறுக்க மாட்டார். அவருக்குத் தேவைப்படும் பொருட்களை மற்றவர்களுக்குக் கொடுக்க அதிகாரிகள் அவருக்குத் தடை விதித்தனர். கிறிஸ்தவர்கள் அவரை எவ்வளவுக்கு அன்பு செய்தார்கள் என்பதைப் பற்றி வியப்புக் கொள்ளத் தேவையில்லை. இந்த மறைப்பணித்தளத்தில் எவ்விதச் சந்தேகமுமின்றி மக்கள் அவரை நல்ல மதிப்புக் கொடுத்து மனத்தின் உயர்ந்த இடத்தில் வைத்திருந்தார்கள்.

எம்மானுவேல் மார்ட்டின்ஸ் அடிகளின் வாழ்வு எளியதும் ஏழ்மையானதுமாகும். அவரது மரணத்திற்குப்பின் அவரது வீட்டில் காகிதம், தேவ அன்னையின் உருவப்படம், ஒரு சிறிய மரக்கட்டையால் ஆன சிலுவை, மைக்கூடு வைக்கும் குழியுள்ள மரக்கட்டை, பேனா வைக்கும் கருவி, கிழிந்த உடைகளைத் தைக்க ஊசியும் நூலும் அடங்கிய டப்பா, தீ மூட்டுவதற்கான சிக்கிமுக்கிக்கல், பழுதடைந்த பழைய தகரப் பெட்டி, உடைந்த பூட்டு போன்ற ஒரு சில அற்பப் பொருட்கள்தாம் காணப்பட்டன. அவரது நூலகம் இரண்டு ஆன்ம சம்பந்தமான நூல்கள் அடங்கியதாகும். அவர் தமிழில் எழுதியுள்ள சில நோட்டுப் புத்தகங்கள், அவரது செபப் புத்தகம், ஒரு மூக்குக் கண்ணாடி ஆகிய பொருள்களையெல்லாம் மிகவும் விலைமதிப்பில்லாத புனிதப்

பொருள்களாக எண்ணி அவரது அறையில் இருந்தவர்கள் பொக்கிஷம்போல் எடுத்து வைத்துள்ளார்கள்.

அவர் கையாண்ட உண்ணாவிரதம் அசாதாரணமானதாகும். இந்த மறைப்பணித் தளத்தில் நம் மறைப்போதகர் தமது 31 ஆண்டுப் பணியில் மாமிசமோ அல்லது மீனோ சாப்பிடவில்லை. சந்நியாச வாழ்க்கையின் விதிப்படி கீழ்ப்படிவதுமட்டுமின்றித் தாம் எடுத்துக் கொண்ட தனிப்பட்ட வாக்குறுதியின்படியும் உண்ணாவிரதம் மேற்கொண்டார். அவ்வாறு மேற்கொண்ட உண்ணாவிரதம் அவருக்கு நிரந்தரமானதாக இருந்தது. அவரது உணவு எப்பொழுதும் சாமை, தினையிலான ரொட்டி ஆகியவையாகும். அவர் உட்கொண்ட உணவின் அளவு ஒரு மஞ்சள் நிறப் பறவையின் உணவை யொத்ததாகும்.

அவர் தன்னையே ஒறுத்துக் கொள்வதற்காகப் பல ஒறுத்தல் முயற்சிகளை மேற்கொண்டார். காலணி இல்லாமல் வெகுதூரம் பயணம் செய்தல், கட்டாந்தரையில் தூங்குதல், ஒவ்வொரு நாளும் தன்னைத்தானே சாட்டையால் அடித்துக் கொள்ளுதல் போன்ற ஒறுத்தல் முயற்சிகளோடு வேறு பல ஒறுத்தல் முயற்சிகளையும் செய்து வந்தார். அவர் கடைசியாக நோய்வாய்ப்பட்டபோது படுக்க அவர் ஒரு கட்டில்கூட வைத்துக்கொள்ளவில்லை. ஒரு கிறிஸ்தவரிடமிருந்து ஒரு கட்டிலைக் கடன்வாங்கி அந்தப் பழைய கயிறுகளைச் சரிசெய்து அதை அவர் பயன்படுத்தும்படி கட்டாயப்படுத்தப்பட்டார். ஆனால் அதிசயிக்கத்தக்க காரியம் என்னவென்றால் தமது தலையை வசதியாக வைத்துக் கொள்ள நேரிடும் என்பதற்காக அவரிடம் தலையணைகூடக் கிடையாது. உண்மையிலேயே அவர் ஒருபோதும் தலையணையைப் பயன்படுத்தியதில்லை. அவரைச் சுற்றி இருந்த சக மறைப்பணியாளர்களிடமும் தலையணையைக் காண்பது மிக அரிது.

அவர் இறுதியாக நோய்வாய்ப்பட்டிருந்த போது எல்லா விதத்திலும் அவருக்குக் கவனம் செலுத்தப்பட்டது. ஒரு தகுதி வாய்ந்த பெரிய மனிதர் வெறும் சகோதரனைப் போன்று மட்டும் அல்ல ஒரு தந்தையைப் போன்று நம்மால் அன்பு செய்யப்படுவது தகும்.

என்றாலும் இந்த மறவநாட்டுப் பகுதியில் அவரது நாக்குக்கு ருசியான சாப்பிடும் பொருள் எதுவும் கிட்டவில்லை. அவர் உணவு என்றாலே வெறுப்புக் கொண்டிருந்தார். அந்த வெறுப்பைப் போக்கும் அளவிற்கு எந்தவிதமான உணவுப் பொருளும் கிடைக்கவில்லை. ஈகைக்குப் பெயர் போன தந்தை கஸ்பார் பெரேரா நாகபட்டினத்திலிருந்து கணிசமான அளவுக்கு இனிப்புப் பண்டங்களும் பழங்களும் அனுப்பி வைத்தார். அதை உண்டு பலவீனத்திலிருந்து மீண்டு மறுபடியும் உடல்நலம் பெற்றார் மார்ட்டின்ஸ் அடிகள். ஆனால் இறைவன் அவரைத் தன்னிடம் அழைத்துக் கொள்ள எண்ணியபோது மனிதன் கையாளும்

வழிவகைகள் அவரை மரணத்திலிருந்து காப்பாற்ற முடியுமா? அவர் தமது கடைசி மூன்று நாள்களில் இருகைகளையும் சிலுவை வடிவில் விரித்துக் கடைசி வரைக்கும் தமது நாவையும் ஏனைய புலன்களையும் தொடர்ந்து பயன்படுத்தினார். தந்தை எம்மானுவேல் மார்ட்டின்ஸ் தமது 61வது வயதில் மரணமெய்தினார். ஆனால் அவரது சிறப்புக்கள் அவர் வாழ்ந்த நாள்களைவிட எண்ணிக்கையில் அதிகமாய் உள்ளன. அவரது அழகிய ஆன்மா எவ்விதப் போராட்டமும் கடுந்துயரமும் இன்றி 1656 ஆம் ஆண்டு ஜூலை 22ஆம் நாள் திருச்சிராப்பள்ளியில் எல்லையில்லா மகிழ்ச்சியை அனுபவிக்க விண்ணரசை நோக்கிச் சென்றது. இவரது பூதவுடல் திருச்சிராப்பள்ளியிலுள்ள வரகநேரியில் அமைந்த புனித சவேரியார் ஆலயத்தில் நல்லடக்கம் செய்யப்பட்டது.

### இம்மானுவேல் மார்ட்டின்ஸ் அடிகளின் படைப்புக்கள்

அடிகள் பன்மொழி அறிந்த அறிஞராவார். இவருக்கு இலத்தீன், கிரேக்கம், போர்த்துக்கீஸ் போன்ற ஐரோப்பிய மொழிகளைத் தவிர்த்து, சமஸ்கிருதம், தெலுங்கு, தமிழ் போன்ற மொழிகளும் நன்கு தெரியும். இவர் நீண்ட நடைப்பயணம் மேற்கொண்டு கிறிஸ்தவ மக்களின் ஆன்ம ஈடேற்றத்துக்காகவும், அவர்கள் விசுவாசத்தில் உறுதியாய் நிலை நிற்பதற்காகவும், அம்மக்களின் நல்லொழுக்கத்திற்காகவும் அயராது உழைத்து வந்தார். இந்தக் கடின உழைப்பிற்கிடையில் தமக்குக் கிடைத்த ஓய்வு நேரத்தைப் பயன்படுத்திச் சில கிறிஸ்தவ நூல்களைத் தமிழில் எழுதியும் மொழிபெயர்த்தும் உள்ளார். தந்தையவர்கள் அநேக நூல்களை எளிமையான நடையில் பக்தியில் எழுச்சியூட்டக்கூடிய வகையிலும், மக்களின் விசுவாசத்தைப் பாதுகாக்கும் வகையிலும் எழுதியுள்ளார்.

இவரது முதல் படைப்பானது ஒருவகையான கையேடு. அது ஆன்மீக நேசக்கை (Nesagay) என்னும் தலைப்பைக் கொண்டது. உண்மையிலேயே அதற்குத் தகுந்த பெயர் சூட்டப்பட்டுள்ளது. பின்பு இயேசுக் கிறிஸ்துவின் பாடுகளின் பேரில் ஒரு நூலும், மற்றொன்று முதல் நூலைவிட மேம்பட்ட நூலான திவ்விய நற்கருணையின் பேரில் ஒரு நூலும் எழுதினார். மார்ட்டின்ஸ் அடிகள் முத்துக்களால் ஆன கழுத்தணி என்னும் நூலை 'ஞானமுத்து மாலை' என்ற தலைப்பில் தமிழில் மொழிபெயர்த்துள்ளார்.

மேலும் பெல்லார்மின் எழுதிய சின்னக் குறிப்பிடத்தைத் தமிழ் மொழியாக்கம் செய்துள்ளார். புதுமைகளும் பின்பற்றத்தக்க நடத்தைகளும் என்ற தலைப்பில் ஒரு நூலைப் படைத்துள்ளார்.

முதல் முதலில் தந்தை மார்க்கு ஜியோர்ஜினால் மீன்பிடி கடற்கரையில் பேசப்படும் சற்று நேர்த்தி குறைந்த தமிழில் எழுதிய சின்னக் குறிப்பிடத்தை எம்மானுவேல் மார்ட்டின்ஸ் அடிகள் எளிய நடையிலும் மிக்க நேர்த்தியாகவும் மறுபடியும் தமிழில் எழுதினார்.

தந்தை என்றி என்றிக்கஸ் எழுதிய அடியார்கள் வரலாற்றை மறுபடியும் சாதாரணத் தமிழில் தொண்டர்களின் திருமலர் என்ற தலைப்பில் எழுதினார். எனினும் மக்களால் வியந்து பாராட்டக் கூடியதும் அவர்களால் மாதிரியாகப் பின்பற்றக்கூடியதுமான புனிதர்களின் வாழ்க்கை வரலாற்றை மட்டும் தேர்ந்தெடுத்தார். இந்த வேலை முடிக்காமல் விட்டுவிடப்பட்டது. புனித பிரான்சிஸ் போர்ஜியாவின் முழு வாழ்க்கையை ஒரு தனிக் கையேட்டில் எழுதினார்.

கிறிஸ்துவைப் பின்பற்றல் (Imitation of Christ) என்னும் நூலை 'லோக நியதி' என்னும் தலைப்பில் மொழிபெயர்த்தார். ஆனால் அது முடிவுபெறாமல் நின்றுவிட்டது. பரிசுத்த தமதிருத்துவத்தின் பரம இரகசியத்தைப்பற்றிய சமயக் கொள்கைகளைப் பற்றிய ஆய்வுக் கட்டுரையும், ஒரு கிறிஸ்துவனுக்கும் ஒரு இந்து மதத்தவனுக்கும் இடையே நடைபெறும் இறைவனின் சட்டத்தைப்பற்றிய உரையாடலையும் எழுதியுள்ளார். இந்நூலே தந்தையின் மிகச் சிறந்த படைப்பாகும்.

இறுதியாக அவர் அநேக ஜெபங்கள், திருப்பாடல் தொகுதிகள், பக்தி வழிபாட்டு வழக்கங்கள் போன்றவைகளைக் கிறிஸ்தவர்களின் பயன்பாட்டுக்காகவும், கட்டாயமாகக் குறிப்பிட்ட நேரங்களில் ஜெபிக்கவும் தமிழில் மொழிபெயர்த்துள்ளார். மார்ட்டின்ஸ் அடிகள் அநேக வருடாந்திரக் கடிதங்கள் உரோமையிலுள்ள சபைத் தலைவருக்கு எழுதியுள்ளார். மேலும் தந்தை பல பக்தி நிறைந்த நூல்கள் எழுதி மொழியாக்கமும் செய்துள்ளார்.

தந்தை எம்மானுவேல் மார்ட்டின்ஸ் எழுதிய நூல்களை அவர்தான் எழுதினார் என்று உறுதியாய்க் கூறத் தந்தை ஹியாக் தெ மாஜிஸ்திரிஸ், சே.ச. 1661ஆம் ஆண்டு மார்ட்டின்ஸ் அடிகளைப்பற்றி எழுதிய வரலாற்றில் பக்கம் 348-61களில் காணலாம். அவர் படைத்த நூல்களின் பட்டியல் ஒன்றை இலத்தீன் மொழியில் கொடுத்துள்ளார். இதில் அடங்கிய நூல்கள் அனைத்தும் தமிழில் உள்ளன என்றும் கூறியுள்ளார்.

# பதினேழாம் நூற்றாண்டு

## பல்த்தசார் டா கோஸ்டா, சே.ச.
## (Fr.Balthasar Da Costa S.J.) 1610-1673

போர்த்துக்கீசிய நாட்டில் குவார்டா மறை மாவட்டததிலுள்ள அல்டியா நோவாவில் பக்தி நிறைந்த பெற்றோருக்குத் திருமகனாகப் பிறந்த அந்தக் குழந்தைக்குத் தேவாலயத்தில் பல்த்தசார் டா கோஸ்டா என்ற பெயர் சூட்டித் திருமுழுக்குக் கொடுத்தார்கள். சிறுவன் டா கோஸ்டா தொடக்கப்பள்ளி, உயர்நிலைப்பள்ளிப் படிப்புகளை முடித்துவிட்டு, கோயிப்பிராப் பல்கலைக் கழகத்தில் உயர்கல்வி கற்றுத் தேர்ந்தான். பின்பு துறவறம் மேற்கொள்ள எண்ணி அந்நகரில் உள்ள இயேசு சபையில் 1627ஆம் ஆண்டு ஜூன் மாதம் 20ஆம் நாள் நவசந்நியாசியாகச் சேர்ந்து இரண்டாண்டுகள் ஞானப் பயிற்சிக்குப் பின்பு மெய்யியல், இறையியல் போன்றவற்றைக் கற்றுக் குருவாகத் திருநிலைப்படுத்தப் பட்டார். நான்காவது வார்த்தைப்பாடு கொடுத்து இயேசு சபையில் நிரந்தர உறுப்பினரானார்.

தந்தை டா கோஸ்டா 1635ஆம் ஆண்டு இந்தியா வந்து மதுரை மறை மாநிலத்தில் தமது மறைப்பணியைத் தொடங்கினார். வேம்பார், மதுரை, தஞ்சை, தென்காசி, நெல்லை முதலிய இடங்களுக்குச் சென்று தொண்டாற்றினார். இவர் மதுரையில் தந்தை இராபர்ட் தெ நொபிலி என்னும் தத்துவப் போதகருடன் சகபணியாளராக உழைத்தார். 1640ஆம் ஆண்டு வேம்பாரில் பணியாற்றியபோது இறையியல் கல்லூரியில் பேராசிரியராக அமர்த்தப்பட்டார். ஆனால் தந்தை மதுரை மாநிலத்தின் அதிபரிடமிருந்து அனுமதி பெற்று மறைப் போதகராகப் பணியாற்ற விரும்பினார்.

மதுரையில் பிராமணர் அல்லாத மக்களைக் கண்காணிப்பதற்கு வந்த முதல் பண்டாரம் சாமி டா கோஸ்டா அடிகள்தாம். அங்குத் தந்தை மறைத் தூதுவக் குழுவைத் தொடங்கினார். கரூரில் 70 பறையர்களுக்குத் திருமுழுக்குக் கொடுத்துத் திருமறையில் சேர்த்தார். 1644இல் திருச்சிராப்பள்ளியில் பணியாற்றிய பின்பு 1655இல் மதுரைக்குச் சென்றார். 1662இல் மறை மாநிலத்தின் அதிபராயிருந்தார். தமிழ்நாடு பற்றி நான்கு ஆண்டறிக்கைகளை (1643, 1644-46, 1648, 1653) எழுதியுள்ளார்.

அதில் அவரும் அவர்தம் சக மறைப்பணியாளர்களும் செய்தது மட்டுமன்று நாட்டில் நடக்கும் நடவடிக்கைகளையும் விரிவாய் எடுத்துரைத்ததால் வரலாற்று அறிஞர்களுக்கு அவை மிகவும் பயன்படும்.

டா கோஸ்டா அடிகள் தமிழ் மொழியை நன்கு கற்றுத் தமது மறைப்பணிக்காகப் பயன்படுத்தியதோடு அல்லாது புதிதாக மறை பரப்ப வரும் ஐரோப்பியப் போதகர்களுக்காகப் போர்த்துக்கீசிய மொழியில் ஓர் இலக்கணமும் (Arte Tamulica) எழுதி அச்சிட்டிருக்கின்றார். தத்துவப் போதகர் தமிழில் எழுதிய ஐந்து காண்டங்களைக் கொண்ட ஞானோபதேசத்தை இவர் போர்த்துக்கீசிய மொழியில் மொழியாக்கம் செய்துள்ளார். அந்நூலில் தத்துவப் போதகரின் உருவம் ஒன்றை வரைந்து அவர் மீது இரண்டு இலத்தீன் பாடல்கள் இயற்றி அப்பெரியார் ஆற்றிய தொண்டையும், கையாண்டவழி வகைகளையும் விளக்கிப் பெருமைப்படுத்தியுள்ளார். 1670இல் தந்தையவர்கள் பொருளாளராக ஐரோப்பா சென்றார். அவர் தமிழ்நாட்டில் மறைப்பணியாற்றுவதற்குப் பல அடியார்களை அழைத்து வந்தார். அருட்தந்தை பல்த்தசார் டா கோஸ்டா வரும் வழியில் கடலின் கொந்தளிப்பினால் 1673ஆம் ஆண்டு ஏப்ரல் மாதம் 21ஆம் தேதி உயிர் துறந்தார்.

**பல்த்தசார் டா கோஸ்டா அடிகள் தமிழுக்காற்றிய பணி**

1. போர்த்துக்கீசிய மொழியில் ஓர் இலக்கணம் எழுதி அச்சிட்டிருக்கிறார்.
2. தத்துவப் போதகரான தந்தை இராபர்ட் தெ நொபிலி எழுதிய ஐந்து காண்டங்களடங்கியஞானே
ாபதேசத்தைப் போர்த்துக்கீசிய மொழியில் மொழியாக்கம் செய்துள்ளார்.
3. போர்த்துக்கீசு - தமிழ் அகராதி இயற்றியுள்ளார்.

**பல்த்தசார் டா கோஸ்டா அடிகள் எழுதிய இலக்கணம்**

அகிலார் இலக்கணத்தைப் பயன்படுத்திச் சுருக்கமான இலக்கணமாகப் பல்த்தசார் டா கோஸ்டா எழுதினார். அவரோடு தமிழ் நாட்டில் உழைத்த பிரயோன்சா அடிகள் தாம் எழுதிய தமிழ்-போர்த்துக்கீசிய அகராதியின் முடிவுரையில் வரும் ஆறு பெரும் பிரிவுகளில் இரண்டாம் பிரிவாக இதைச் சேர்த்திருக்கிறார். ஆறு அதிகாரங்களில் போர்த்துக்கீசிய மொழியில் அமைந்த இந்த நூல் இன்னும் அச்சாகவில்லை. அதிலுள்ள சுருக்கம் பொருள் இங்குச் சுட்டிக்காட்டப்படுகிறது.

1. பெயர்ச்சொல் 2. வினைச்சொல் 3. செயப்பாட்டு வினை 4. கூட்டு ஏவல் வினைகள் 5. துணை வினை 6. பிற சொற்கள் -

Prepositions, adverbs, interjections, conjunctions, disjunctions என்று முன் இடைச்சொல், வினை உரிச்சொல், வியப்புச்சொல், இணைக்கும் சொல், பிரிக்கும் சொல் என்பன பற்றி முறையே ஆறு அகராதிகளில் விளக்குகிறார்.

அகிலார் இலக்கணத்தைத் தாம் பயன்படுத்தியதாகவும், நீண்ட விளக்கம் வேண்டின் அந்நூலைப் பார்க்கும் படியும் அறிவுறுத்துகிறார். டா கோஸ்டா இயற்றிய இலக்கணம் எல்லா இலக்கணங்களிலும் எளிதாகவும் தெளிவாகவும் இருப்பதால் அதை இரண்டாம் பிரிவாகத் தமது அகராதி முகவுரையில் சேர்த்ததாக அகராதி ஆசிரியர் கூறுகிறார்.

## முதல் அதிகாரம்

இது பெயர்ச்சொல், இடப்பெயர், பெயரெச்சம், பால் பற்றிப் பேசுகிறது.

a) பெயர்ச்சொல்: 1. கற்றதன் - கற்தர், 2.செயம் - செயங்கள் 3. வீடு - வீடுகள் 4. ஆறு- ஆறுகள் ஆகிய நான்கும் வேற்றுமை பெறுகின்றன. இடப்பெயர் (சுட்டுப் பெயர்): நான் - நாங்கள்- நாம், நீ - நீங்கள் - நீர் (உம்), அவர் - அவர்கள் - அவர், அது - அதுகள், தான் - தாம் - தாங்கள். இவ் இடப்பெயர்களுக்கும் முன் சுட்டிய 4 பெயர்களுக்கும் முழு வேற்றுமை வடிவம் தருகிறார். ஏழாம் வேற்றுமை கூறும்போது அவர்- இடத்தில், அவர் - ஆலே, அவர் - ஓடே, அவரைப்பார்த்து, அவரைக் குறித்து, அவருக்காக, அவரைக்கொண்டு என்ற முறையில் பல வடிவங்கள் தருகிறார். அவர்கள் என்ற சொல்லைப் பிராமணர் அவாள், அவாளுடைய என்று கூறுவதாகச் சுட்டுகிறார். நாம் - நாங்கள் இரண்டுக்கும் வேறுபாடு காட்டுகிறார்.

பின்பு விசுவசிக்கிற, விசுவசித்த போன்ற வினையடியாய்ப் பிறந்த பெயரெச்சங்களைச் சுட்டி மேல்நாட்டு இலக்கணத்தோடு தொடர்பு காட்டுகிறார். (Relative Pronoun)

பெயரெச்சம் பற்றி அவர் கூறுவது - 1. மேல்நாட்டு மொழிகளில் உள்ள முறைப்படி தமிழில் பெயரெச்சம் இல்லை. 2. அதில் உள்ளவை, எல்லாப் பாலுக்கும் பொதுவானவை. 3. இவை எப்போதும் பெயருக்கு முன் வரும். ஆனால் அடங்கலும், எல்லாம், நாள்ஏழும் போன்ற முறையில் தொகுத்துச் சொல்லும்போது பின்னே வரலாம். 4. பெயரெச்சம் தோன்றும் முறை: 4.1 வினையடியாக வருபவை: விசுவசிக்கிற, விசுவசித்த, விசுவசியாத முதலியன. 4.2 உள்ள, ஆன, ஆகிற, இல்லா, ஆகாத முதலியன (பண்புப்) பெயர்ச் சொல்லோடு சேர்ந்து வருபவை, மகிமையுள்ள, சுத்தமில்லாத, கடினமான, என்று வரலாம், 5. இரண்டு பெயர்ச்சொற்கள் ஒன்றாகி வருகையில் முந்தையது பெயரெச்சம் போல் வரும், சுத்தம்+வெள்ளை - சுத்த வெள்ளை, குளிர்காற்று முதலியன.

பால்-ஆண்கள் ஆண்பால், பெண்கள் பெண்பால், பிற அலிப்பால். எனினும் 'தேவரீர் சொல்லிற்று' என்ற விடத்தில் ஆண்பாலோடு மதிப்புக்காக ஒன்றன்பால் வருகிறது.

**அதிகாரம் 2. வினைகளின் வேற்றுமைப் படிவம்**

*a) நிகழ்காலம்*

ஒருமை - விசுவசிக்கிறேன், - றாய், - றான்/றாள், க்ருது, க்கிறது

பன்மை - விசுவசிக்கிறோம், - றீர்கள் - றார்கள்

(அதுகள் விசுவசிக்கிறது)

மதிப்பு - விசுவசிக்கிறோம், - கிறீர், - கிறார்

எதிர்மறை - விசுவசிக்கவில்லை, - க்கிறதில்லை, - த்ததில்லை

நான் விசுவசிக்கிறேன் இல்லை முதலியன

*b) இறந்த காலம்*

நீ விசுவசிக்கிறாயே/யோ, அப்போ நான் விசுவசிக்கிறேன்

நீ விசுவசிக்கிறாயோ, அப்போ நான் விசுவசிப்பேன்

நீ விசுவசிக்கிறாயோ, அப்போ அவன் விசுவசித்தான்

என்பதில் முன் பகுதியில் 'எப்போ' தொக்கி நிற்கிறது என்கிறார்.

எதிர் மறை - நான் விசுவசித்தேன் இல்லை, முதலியன

அப்போ - அதுக்குமுன்னே

விசுவசிக்கின்றாயே, அதுக்குமுன்னே நான் விசுவசிப்பேன்.

*c) எதிர்காலம்*

விசுவசிப்பேன், - பாய், - பான், - பாள், - க்கும், - போம், - பார்கள், -க்கும் இன்னொரு வகை எதிர்காலம் - விசுவசிக்கப் போகிறேன் என்று போகிறேன் என்ற வினையோடு வருகிறது.

*d) எதிர்மறை எதிர்காலம்*

விசுவசியேன், யாய், யாள், யாது, யோம், யீர்கள், யார்கள், யாது

மதிப்பு - விசுவசியோம், விசுவசியீர், விசுவசியார்.

*ஏவல் (கட்டளை)*

விசுவாசி, விசுவசித்துக்கோ, விசுவசிப்பாயாக, விசுவசியும், விசுவசிப்பீராக, விசுவசிக்க, விசுவசிக்கட்டு பன்மை:

விசுவசிப்போம், விசுவசியுங்கோள், விசுவசிக்கட்டும், விசுவசிக்கக் கடவார்கள்.

*ஏவல் (உத்தரவு)*

விசுவசிக்கட்டு, -டும், ட்ட, கட்டும்- கோள்

*ஏவல்- எதிர்மறை*

விசுவசியாதே, -யாமல், -க்கவேண்டாம், - யாதேயும், - யாதேயும் பிள்ளாய். விசுவசியாதேயுங்கள், நீ விசுவசிக்கத் தேவையில்லை.

நடவாது- நடவாமல், பண்ணுகிறது- பண்ணாமல், செய்ய வேண்டாம்.

*ஏவல்- மன்றாட்டு- பழக்க முறையாய்*

விசுவசியாமல் ஏன், விசுவசிக்க வேண்டாமோ, விசுவசிக்கத் தேவையில்லையோ, விசுவசியுங்காணும் (காண்கிறது).

*வியங்கோள்*

நான் விசுவசியேனோ - யாரோ

நீ விசுவசிக்க வேண்டாமோ, நான் விசுவசிக்கக்கடவது, கடவதாக, நீ விசுவசிக்கக்கடவாய்.

*இணைப்பு*

விசுவசிக்கச்சே, ச்செய்தே, -கையிலே, கிறபோது/பொழுது, -குமிடத்தில், விசுவசிக்கும்போது/பொழுது.

*எதிர்மறை*

விசுவசியாதச்சே/செய்தே, விசுவசியாதபோது/பொழுது.

விசுவசிக்கிறேனாம், றாயாம், எழுதினாயாம், விசுவசிக்கிறதாம், விசுவசிக்குமாம்.

என்பர்

*எதிர்மறை- 2*

a) விசுவசிக்கவில்லையாம், -கிறதில்லையாம், -த்தில்லையாம், விசுவசிக்கப் போறதில்லையாம்.

-யாமலாம், - யாதேயாம், பேசுகிறதில்லையாம், வாங்கப் போறதில்லையாம்.

b) விசுவசிக்கிறேன் என்கிறான், றாய், என்றார்கள்.

கட்டுப்பாடு- ஆனால்

விசுவசித்தேன் ஆனால், -தாய்/தான் ஆனால், விசுவசித்தால், விசுவசித்ததே உண்டானால்.

ஆனால், ஆனாக்கால், ஆகில், என்கில், என்றால், போக்கச்சடிச்சால், உண்டானால்.

எதிர்மறை-விசுவசியாதிருந்தால்/யாதே இருந்தால் (போனால்).

விசுவசியாமல் போனால், விசுவசியாவிட்டால்.

ஆனாலும்- விசுவசித்தாலும், விசுவசித்ததே உண்டானாலும்.

போல- விசுவசிக்கிறாப்போல, த்தாப்போலே.

படி- விசுவசிக்கிறதின்படியே, விசுவசிக்கிறபடி/படியே, விசுவசிக்குமாப்போலே- செய்யுமாப்போலே.

தக்கதாக- விசுவசிக்க, விசுவசிக்கத் தக்கதாக.

வினைப்பெயர்-விசுவசிக்கிறது, த்தது, ப்பது, யாதது.

எதிர்மறை விசுவசியா தே/மல் போனேன்.

பெயரெச்சம்- விசுவசி த்த, விசுவசி க்கும், விசுவசி யாத.

விசுவசிக்கலாம்- க்கலாச்சு, லாகாது, கலான், கலாகாது.

கேள்வி- விசுவசித்தது உண்டோ, விசுவசிக்கட்டோ, க்கவோ, ஏன் விசுவசிக்கிறாய், ஏன். விசுவசிக்கிறதில்லை, விசுவசியாமலேன், விசுவசிப்பானேன், என்னத்துக்கு விசுவசிக்கிறாய்.

விசுவசிக்கிறேனல்லோ, வி. கிறதா?.

விசுவசிப்பார் உண்டோ, இல்லையோ.

படியாலே- விசுவசிக்கிறதினாலே, விசுவசித்த படியினாலே, விசுவசிக்கின்றாய் என்கிறதினாலே, விசுவசிக்கக் கொள்ள , கிறதுக்காக, கிறதைக்கண்டு, விசுவசிக்கிறதுக்கு வேண்டி, விசுவசியாததுக்காக. படிக்கு- விசுவசிக்கிறதுக்கு, -கும்படிக்கு, க்கவேண்டி, க்கத்தக் கதாக, விசுவசியாதபடிக்கு/ (வண்ணம்).

முன்/ பின்- விசுவசிக்கிறதுக்கு முன்னே, நீ பிறக்கிறதுக்கு முந்தி.

விசுவசிக்கிறதுக்குப் பிற்பாடு, பிறகு, பின்பு.

மட்டும்- விசுவசிக்கும் மட்டும்/தனையும்.

போது- விசுவசிக்கிற போதே, க்கச்செய்தே, வராத போதே.

விசுவசித்தவுடனே/மட்டிலே, விசுவசிக்கப்போய்.

ஆக்கும்- விசுவசித்தாக்கும் ஈடேறுவாய், விசுவசிக்க வந்தாயாக்கும். விசுவசிக்கிறதுக்கு ஒக்கும்/சரி.

உத்தாரம்- விசுவசித்தால் என்ன, -யாதிருந்தால் என்ன.

வந்தாலும் உத்தாரம், வராதிருந்தாலும் உத்தாரம்.

தவிர- அல்லாமல், அல்லாதே, அன்றியே தவிர- விசுவசிக்கிறதல்லாதே/ தவிர,

விசுவசிக்கத்தக்கது/வன்

காட்டிலும்- பார்க்க, காட்டிலும், காட்டி- தேவபத்தியைப் பார்க்க, புண்ணியமில்லை.

*அதிகாரம் 3. செயப்பாட்டு வினை*

1. முகிக்கிறேன்- முகிகிறேன், முறிக்கிறேன்- முறிகிறேன்

2. a) படுகிறேன் என்பதோடு சேர்த்து- அடிக்கப்படுவான்

உண்கிறது - படைப்புண்டேன்

விசுவசிக்கிற (விசுவசிக்கப்பட்ட) காரியம்- செயப்படு பொருள்

*அதிகாரம் 4. கூட்டுவினை, ஏவல் வினை: இரு வினைகள் சேர்ந்து வருவது.*

1. விசுவசித்துக்கொள், சொல்லிவிட்டேன், கொண்டு போனான்.

2. விசுவசிக்கச் செய்கிறேன், செயம் கொண்டேன்.

3. -பி, -வி அழைப்பிக்கிறேன், செய்விக்கிறேன்.

*அதிகாரம் 5. துணைவினை, ஒழுங்கற்ற வினை*

*1. துணைவினை*

ஆகிறேன்-றாய், -றான்/றாள், றது, றோம், றீர், றார், றோம், றார்கள், றதுகள்.

ஆனேன், ய்,/ன்/ள், ஆச்சு/து, ஆனோம், னீர், னார், னீர்கள், னார்கள், ஆச்சுது.

ஆவேன், ய், ன்/ள், ஆகும்/ஆம், வோம், வீர், வார், வோம், வீர்கள், வார்கள்.

ஆகேன், காய், ஆகாது, கோம், கீர், கார், கார்கள், ஆகாது.

ஆகட்டு, ஆகாதே, ஆகாமல், ஆனால், ஆனாக்கால்.

ஆனாலும், ஆகிலும், ஆக, ஆகத்தக்கதாக: ஆகிறது, ஆனது,

ஆவது: ஆல், ஆகில், ஆகிய, ஆகாதவன்/ள், ஆகாது.

*2. ஒழுங்கற்ற, வினை*

உண்டு, உண்டானால், உண்டானாக்கால்

உண்டாகில், உள்ளில்

உண்டானாலும், உண்டானாக்காலும், உண்டாகிலும், உள்ளிலும் உள்ள, உண்டான, உண்டாக, உண்டாகிறது, உண்டானது ஆயிருக்கிறது, உண்டாயிருக்கிறது.

*3. குறைவினை*

a) இல்லை, இல்லாதே, இல்லாமல், இல்லாவிட்டால் -லும், இல்லாதவன்
b) வேண்டாம்- வேண்டிச்சு, வேண்டின், வேண்டினவன், வேண்டாத, வேண்டா
c) போதாது, போதா, போதும்
d) கூடும்- கூடிச்சு, கூடுகிற, கூடின, கூடாத/து கூடாவிட்டால்/திருந்தால்
e) ஒக்கும்-ஒவ்வாது- ஒவ்வாத.

*அதிகாரம் 6. பிற சொற்கள்.*

Preposition முன்உரிச்சொல், Adverb வினை உரிச்சொல், Interjection வியப்புச்சொல், Conjunction.

இணைக்கும் சொல், Disjunction பிரிக்கும் சொல்

a) முன்உரிச்சொல்: முன்- முன்னாக, முன்னுக்கு, முன்னாலே. பிறமொழிகளில் உள்ள

   முன்னிலைகள் போல் பின்வருவனவற்றைக் குறித்த வேற்றுமையில் கொள்ளும் - அகிலார்

   இலக்கணம் காண்க (இதற்கு முன் தோன்றியது).

b) 1. வினைஉரிச்சொல்: இடப்பெயர் வழியாய் வருவன இப்போ- அப்போ, எப்போ.

   2. பெயர் வழியாய் வருவன- நேற்று - நேற்றைக்கு.

c) பெயர்ச்சொல் ஆக/கொண்டு பெற்று வரும்

   பிரகாசமாய் (ஆக, ஆய்), பிரகாசமாகக்கொண்டு.

d) வியப்புக் குறிகள்- பல. அவற்றை அகராதியில் காண்க.
e) இணைப்புக் குறிகள்- நானும் நீயும், தையிரிமுள்ளவனும் பயப்படுவான், ஒன்றும் இல்லை- (-உம்).
f) பிரிப்பு 1. ஆனாலும், என்கிலும், ஆகிலும்: நானாகிலும், நீயாகிலும்: ஒன்றில் இது, ஒன்றில் அது.

g) 2. ஓ இடைச்சொல் ஏற்பது - நானோ, நீயோ. இங்கு வருவனவற்றை வீரமாமுனிவர் தமிழ் இலக்கணத்தில் சிறப்பாக நான்காம் அதிகாரத்தில் பயன்படுத்தியிருக்கிறார்.

### ஞானோபதேசம்

நொபிலி தமிழில் எழுதிய வினா-விடை மறைக்கோட்பாடு எனும் நூல் ஏனைய அந்நிய மொழிகளில் மொழிபெயர்க்கப்பட்ட முதல் நூலாகும். இது 1661ஆம் ஆண்டில் மொழிபெயர்க்கப்பட்ட நூலாகும். டா கோஸ்டா மொழிபெயர்த்ததைப் பற்றிக் கூறுவதாவது:

> ''இந்த நூலைப் பயன்படுத்தி நொபிலி மக்களுக்கு மறை உண்மைகளைப் போதித்தார். மேலும் இதே நூலைத்தான் அவருக்குப்பின் இங்கு வந்த மறைப்போதகர்களான நாங்களும் மக்களுக்குக் கற்பித்தோம். ஒரு மரத்தைப்பற்றி அதன் கனியைக் கொண்டு அறிய முடியும். இந்த மதக்கோட்பாடு அதைப்படைத்த ஆசிரியரின் தெளிவான முறையைப் பற்றி நமக்குத் தெரிவிக்கின்றது. ஆனால் தமிழ்ப் பணியாளர்கள் எல்லோராலும் புரிந்துகொள்ள முடியாததினால் நான் இதைப் போர்த்துக்கீசு மொழியில் மொழிபெயர்க்கும் பணியை மேற்கொண்டேன்.
>
> நான் செய்யும் மொழிபெயர்ப்பு கிழக்கிந்திய மறைப்போதகர்களுக்கு ஒரு நல்ல சேவையாக இருக்கும் என்று எனக்குத் தோன்றியது. இந்த நூல் மிகப் பயனுள்ளதாகவும், உதவியாகவும் இருக்கும் என்பதால் ஒவ்வொன்றையும் குறிப்பாக மறைப்போதகர்கள் தங்கியிருக்கும் பகுதிகளில் உள்ளவர்களுக்காக மொழி பெயர்த்துள்ளேன்''.

அண்மையில் இம் மொழிபெயர்ப்பு கோவாவிலும் ஸ்பெயினிலும் கண்டுபிடிக்கப்பட்டது.

தந்தை பல்த்தசார் டா கோஸ்டா ஐந்து ஞான உபதேசக் காண்டங்களைப் போர்த்துக்கீசியத்தில் மொழிபெயர்த்துள்ளார். அவர் கூறுகின்றார்,

> ''இந்த நாட்டில் கடினமான செய்யுளில் எழுதப்படும் நூல்கள் மறைப்போதகர்களுக்கு முற்றிலும் உபயோகமற்றதை இராபர்ட் தெ நொபிலி நன்கு அறிவார். எனவே 40 ஆண்டுகளாக உழைத்து அறிந்த தன்னுடைய விரிவான மொழி அறிவாற்றலை அம்மறை

போதகர்களுக்குப் பயனுள்ளதாகச் செய்யத் தீர்மானித்தார். அதனால்தான் அவர் படைத்த இந்த ஞானோபதேசம் மிகச் செழுமையாய் உள்ளது''.

அவர் இந்த நூலைத்தான் மக்களுக்குக் கற்பித்தார். அவருக்குப்பின் இங்கு வந்த நாங்களும் இதையே மக்களுக்குக் கற்பிக்கின்றோம்.

பல்த்தசார் டா கோஸ்டா நொபிலியின் ஞானோபதேசத்தைப் போர்த்துக்கீசிய மொழியில் மொழிபெயர்த்துள்ளார். அவரைப்பற்றி இலத்தீன் மொழியில் அங்கதச் செய்யுள் எழுதியுள்ளார். அதன் மொழி பெயர்ப்பு கீழ்வருமாறு:

1. பவுல் விசுவாசத்தை நட்டார்; அவரது சகப்பணியாளரான அப்பல்லோ அதற்குத் தண்ணீர் பாய்ச்சினார். இறைவனே அதைப் பண்மடங்காக்கினார். இராபர்ட்டார் விசுவாசம் உலகம் முழுவதிலும் பண்மடங்காக அதிகரிக்கின்றது.

   நீ உன் எழுதுகோல் மூலம் நடுகின்றாய். பின்பு ஆர்வமிக்க உன்னுடைய பேசும் வார்த்தையால் தண்ணீர் பாய்ச்சுகிறாய். ஒருவர் உன்னுடனும் உன்னுடைய படைப்புகளுடனும் நல்ல விதமாகப் பழக்கப்படுத்திக் கொள்வார். உரத்துக் கூவு: உண்மையிலேயே, இங்கு நாம் பவுலும், அப்பல்லோவும், இறைவனும் நம்மிடையே உள்ளனர்.

2. வாசகரே இந்தப் படைப்பானது நொபிலியின் மிகச் சிறந்த எண்ணத்தைச் சுட்டிக்காட்டுகிறது. மேலும் நொபிலியின் பெரும் எண்ணம் இந்தப்படைப்பு ஒரு சிறப்பு வாய்ந்த எண்ணத்தைச் சுட்டிக் காட்டுகிறது. அவருடைய சிறந்த எண்ணம் அவரது மிகப்பெரிய படைப்புக்கு நிகரானது. இதில் எதை மிக்க வியந்து பாராட்டுவது, எண்ணத்தையா அல்லது படைப்பையா? உண்மையிலேயே பெரிய எண்ணம் பாராட்டப்பட வேண்டியது, ஏனென்றால் அதனுடைய சொந்தச் சிறப்புத் தன்மையே.

போர்த்துக்கீசு - தமிழ் அகராதி: அடிகள் போர்த்துக்கீசு - தமிழ் அகராதி ஒன்றும் இயற்றியதாக அறிகிறோம். இந்த அகராதியின் படி ஒன்று கோவாவில் நடுவண் நூல் நிலைய ஆவணக் காப்பகத்தில் உள்ளது. பேராசிரியர் கபி. சேவியர்ராஜ் தமது ஆய்வுப் பயணங்களின்போது கோவா நூல் நிலையத்தில் ஆறு தமிழ் அகராதிகள் கைப்பிரதிகளாக உள்ளதைக் கண்டு தம் ஆய்வுக்கட்டுரையில் அதைக் குறித்துள்ளார்.

## அந்தோணி தெ புரோயென்சா, சே.ச.
## (Antam de Proença S.J.) 1625-1666

அந்தோணி தெ புரோயென்சா அடிகளார் போர்த்துக்கல் நாட்டில் 1625ஆம் ஆண்டு குவார்டியா அருகிலுள்ள ரெமல்லாவில் உயர் குடும்பத்தில் பிறந்தார். ஏவோராவில் 'தேவதாய்' கல்லூரியை புரோயென்சா அடிகளின் பெற்றோர்கள் நிறுவினர். அவர் இக்கல்லூரியில் இறையியல் பாடம் பயின்று இயேசு சபையில் நுழைந்தார். தந்தையவர்கள் துறவிக்கான பயிற்சிகளையும், குருவாவதற்கான மெய்யியல், தர்க்கவியல் ஆகியவற்றைக் கற்றபின்பு 1643ஆம் ஆண்டு இந்தியா வந்து சேர்ந்தார். கொச்சி நகரில் உள்ள குருமடத்தில் தமது இறையியலை முடித்துக் குருவானவராகத் திருநிலைப் படுத்தப்பட்டார். பின்பு 1653இல் மதுரை மாநிலத்தில் பண்டாரசாமியாக மறைப் பணியாற்றினார். தந்தையவர்கள் 1656இல் உரோமாபுரியில் உள்ள இயேசு சபைத் தலைவருக்கு எழுதிய கடிதத்தில் ஒருவகையான களிம்பைக் கண்டுபிடித்துத் தமக்கு அனுப்பும் படியாகக் கேட்டார். அக்களிம்பு அவரது நிறத்தை மாற்றி அவரை எளிதாக இந்தியர் நடுவில் நடமாட வழிவகுக்கும் என எண்ணினார். இயேசு சபையில் நான்காவது வார்த்தைப்பாடு எடுத்து, சபையில் நிரந்தர உறுப்பினரானார்.

1653-1656 வரை இவர் திருச்சிராப்பள்ளியில் மறைப் பணியாற்றினார். பழைய பாச்சூர் கைவிடப்பட்டது. இரண்டு பங்குகள் அந்த ஊருக்கு அருகில் இருந்தன. தொட்டியமும், கங்குப்பட்டியும் திருச்சிராப்பள்ளிக்கு அருகில் இருந்தன. 1665இல் புரோயென்சா கங்குப்பட்டிப் பங்கில் பணியாற்றியபோது மறைமாவட்டத்தின் அதிபராக நியமிக்கப்பட்டார். அடிகள் 1655-56, 1656-59, 1659-1662,1663-1665 ஆண்டுகளுக்கான வருடாந்திரக் கடிதங்கள் உரோமாபுரியிலுள்ள சபைத்தலைவருக்கு எழுதினார். திருச்சிராப்பள்ளியிலுள்ள புனித சவேரியாரின் பேரில் உள்ள ஆலயத்தை மறுபடியும் கட்டி எழுப்பினார். இங்கேதான் தந்தையர் எம்மானுவேல் மார்ட்டினும், லென்றேகோஸ்கியும் புதைக்கப்பட்டனர். புரோயென்சா உள்ளார்ந்த பண்பு மிக்கவர். இவரது உடம்பு சற்றுப் பருமனானது. அதன் பொருட்டுச் சற்று அசௌகரியமாய் இருப்பதைத் தந்தை உணர்ந்தார். இவர் தம் சகத் தோழப் பணியாளர்களுக்கு மகிழ்ச்சியூட்டுபவராய் இருந்தார். நற்செய்தி பரப்புவதாக இருந்தால் எல்லா வகையான துன்பத் துயரங்களுக்கு ஆளாக்கப்பட்டு நீதிமன்றங்களுக்கு இழுத்துச் செல்லப்பட்டும், அட்டூழியத்திற்கும் இகழ்ச்சிக்கும் ஆளாக்கப் பட்டார். 1666ஆம் ஆண்டு டிசம்பர் 14ஆம் நாள் தொடக்கத்தில் தொட்டியத்திற்கு அருகில் உள்ள கங்குப்பட்டியில் அந்தோணி தெ புரோயென்சா அடிகள் இறைவனடி சேர்ந்தார்.

கங்குப்பட்டியில் பிராமணர்கள் அதிகமாக வாழ்ந்தனர். அதனால் அவரை அங்கு நல்லடக்கம் செய்யவில்லை. கிறித்துவ மக்கள் அவரது உடலைக் காவேரிக் கரையில் அடக்கம் செய்தனர். இருபது நாள்களுக்குப் பிறகு இரவு நேரத்தில் அவரது இறந்த உடலுக்கு நல்லடக்கம் செய்யக் கல்லறை தோண்டப்பட்டபோது உடல் அழுகாமல் எவ்விதத் துர்நாற்றமும் இல்லாமல் இருந்ததைக் கண்டனர். உயிர் உள்ள ஓர் உடலைப்போன்று எவ்விதச் சிதைவில்லாமல் வளைந்து கொடுப்பதைக் கண்டனர். இந்தச் சம்பவத்தைத் தந்தை பிரய்யர் (Fr.Freyre) 1667ஆம் ஆண்டு எழுதிய வருடாந்திரக் கடிதத்தில் குறிப்பிட்டுள்ளார். மேலும் அவர் கூறியுள்ளதாவது:

> ''இந்த அழிவில்லாமல் காக்கப்பட்ட உடல் இயற்கையாகத் தோன்றியது. இது வழக்கமாகப் பெரிய புகழ் பெற்றவரைப் போன்றும் துறவியரைப் போன்றுமிருந்தது. ஒரு குறிப்பிட்ட அளவு உப்பு கல்லறைக் குழியில் போடப்பட்டிருந்தது. ஆனால் அங்கு இருந்தவர்கள் இடுப்பிலிருந்து தலைவரைக்கும் உப்பைக் கொட்டவில்லை என்று எனக்கு உறுதியளித்தார்கள். உப்புப் போடுவதற்கு முன் மண் சரிந்து உடலை மூடிவிட்டது. நன்மனம் படைத்த தந்தை அந்தோணி தெ புரோயென்சா தற்போது தொட்டியத்திலுள்ள ஆலயத்தில் புதைக்கப்பட்டுள்ளார்.''

அருட்தந்தை லியோ பெஸ் கூறியுள்ளதாவது:

> ''அவரது கல்லறையில் எப்பொழுதும் ஒரு விளக்கு எரியவிடப்பட்டுள்ளது என்றும் வருடாந்திர விழாக் காலத்தின்போது இந்து மக்கள், முகமதியர்கள் இன்னும் அவரது உடலுக்கு வணக்கம் செலுத்தக் கூட்டமாக வருகின்றனர். பரமானந்த சுவாமி என்பது தந்தையின் தமிழ்ப் பெயர்.''

## தமிழுக்கு அடிகளின் பங்களிப்பு

அந்தோணி தெ புரோயென்சா அடிகள் எழுதிய தமிழ் - போர்த்துக்கீசிய அகராதியின் அச்சடித்த பிரதியும், கைப்பட எழுதிய கைப்பிரதியான போர்த்துக்கீசிய - தமிழ் அகராதியும் தற்போது உள்ளன. அச்சடிக்கப்பட்ட பிரதிகளில் ஒன்றே ஒன்றின் பிரதி உரோமாபுரியில் வத்திக்கான் நூல் நிலயத்தில் இந்தியாவைப்பற்றிய குறிப்பில் உள்ளது (No Ind 12).

"Vacabulario Tamulico Con a Signigicao Portuguesa Composto pello Pe Antonio de Proenca da Companhia de Jesu, Missionaria de Madurey, Ambalacata, 1679 in 4; 247FF".

பல்த்தசார் டா கோஸ்டா எழுதிய "De Arte Tamulica" தமிழ் இலக்கணத்தைவிட அந்தோணி தெ புரோயென்சா எழுதிய தமிழ்-போர்த்துக்கீசிய அகராதி சிறந்த முறையில் அச்சடிக்கப்பட்டுள்ளது என்று போலின் தெ S.பர்த்தலேமேயு கூறுகின்றார். கொடைக்கானல் செம்பகனூரில் உள்ள தூய இருதயக் கல்லூரியில் மதுரை மறைமாநிலப் பழஞ்சுவடிக் காப்பகத்தில் இரு அகராதிகளின் கைப்பிரதிகளும் உள்ளன. இவ்விரண்டு அகராதிகளும் புரோயென்சா எழுதியதுதாமா என்பது தெளிவாக இல்லை. ஆனால் போர்த்துக்கீசு கையெழுத்துப் பிரதி புரோயென்சாவின் அச்சாகிய தமிழ் - போர்த்துக்கீசிய அகராதிக்கு முழுமையாக ஒத்துப் போகின்றது. கோவாவில் நடுவண் நூலகத்தில் (முன்னாள் தேசிய நூலகம்) டா கோஸ்டா அடிகள் எழுதிய தமிழ் இலக்கணமும் (De Arte Tamulica) தந்தை புரோயென்சாவின் அகராதியும் உள்ளன. மேலும் 1750ஆம் ஆண்டில் தந்தை தெமிங்கோஸ் மடேயராவால் எழுதப்பட்ட மற்றுமொரு போர்த்துக்கீசிய அகராதி உள்ளது. இந்த அகராதி தந்தை புரோயென்சாவால் எழுதப்பட்டதா அல்லது மடேயராவால் விரிவாக எழுதப்பட்ட அகராதியா என்பது தெளிவாக இல்லை. புரோயென்சா அடிகள் கவனமாக வாசிக்கக் கூடியவர். தந்தை தெ நொபிலியைப் பற்றியும், மார்ட்டினைப் பற்றியும் எழுதிய குறிப்புகளிலிருந்து இவருக்குத் தமிழ்க் கிறித்துவ இலக்கியங்களில் இருந்த ஈடுபாட்டை நம்மால் புரிந்து கொள்ள முடிகிறது. இவர் சில தமிழ் நூல்களும் எழுதியிருக்க வேண்டும். ஆனால் அவற்றைப் பற்றிய தகவல்கள் எதுவும் நமக்குக் கிடைக்கவில்லை. தந்தை புரோயென்சாவைப் பற்றிய குறிப்பு பிரேய்ரா அடிகளால் எழுதப்பட்டதாகும்.

இந்த அகராதியின் அறிமுக உரையில் திட்டமிட்டபடி எழுத்துக்கள் வரிசைப்படுத்தப்பட்டபடி மற்றொரு பகுதியில் விளக்கப்படும். வெவ்வேறு தலைப்புக்களிலும் நாம் கையாளப் போகின்றோம். கீழ்க்கண்ட வரிசைப்படி நாம் அறிமுக உரையை ஆறு பாகங்களாகப் பிரித்துக் கொள்வோம். முதல் பாகத்தில் (தலைப்பு) பயனையும் எழுத்துக்களை உச்சரிக்க அறிகுறிகளையும் (அடையாளங்களை) முதலில் போட்டு விளக்குவோம். சொற்கள் தெரிந்தபொழுது இலக்கணம் தொடரும். இவ்வாறு இரண்டாவது பாகத்தில் தமிழ் இலக்கணத்தை அறிமுகம் செய்வோம். (Arte Tamulica) இந்த இலக்கணம் தந்தை பல்த்தசார் டா கோஸ்டாவால் எழுதப்பட்டது.

இந்த இலக்கணம் தெளிவாகவும் சுருக்கமாகவும் உள்ளது. இதுநாள் வரையிலும் வந்துள்ள இலக்கணங்களும் ஏனைய இலக்கணங்களைப் போன்றே தோன்றுகின்றன. பின்பு இறந்தகாலச் சொல் பற்றிச் சில பொது விதிகளைக் கொடுப்போம். இவ் விதிகள் புதிதாக இலக்கணம் படிக்கத் தொடங்குபவர்களுக்குத் தலைவலிக்குக் காரணமாய் இருக்கின்றன. இந்தப் பொதுவிதிகளை எப்படி உபயோகப்படுத்துவது என்பதை அறிமுக உரையில் வார்த்தைகளோடு அகராதியில் காண்பிக்கப்படும். மூன்றாவது பாகத்தில் இதேபோன்று ஏவல்வினை, எதிர்காலம், வினை எச்சம் மேலும் பன்மைப் பெயர்ச்சொற்கள் போன்றவற்றைச் சுட்டிக் காட்டுவோம். நான்காவது பாகத்தில் நாம் எழுத்திலக்கணத்தைப் பற்றிய விதிகளைக் கொடுப்போம். ஐந்தாவது பாகத்தில் இந்த அகராதியில் நாம் பின்பற்றும் முறையைப் பின்பற்றிப் போர்த்துக்கீசிய எழுத்துக்கள் வரிசையில் தமிழ் எழுத்துக்களை வரிசைப்படுத்துவோம். இறுதியாக நாம் இந்த அகராதியில் பயன்படுத்தும் அடையாளங்களைக் கொடுப்போம். இதனால் இப்பகுதிகளைக் கீழ்க்கண்டவாறு முறைப்படுத்தலாம்.

1. தமிழ் எழுத்துக்களின் வடிவம், அமைப்பு, உச்சரிப்பு.
2. பல்த்தசார் டா கோஸ்டா எழுதிய இலக்கணம் (Arte Tamulica).
3. இறந்த காலம், எதிர்காலம், ஏவல், வினை எச்சம், பன்மை முதலியன பல ஒழுங்குகளால் விளக்கம் பெறுகின்றன.
4. புணரியல்: மகர ஈறு, உடம்படு மெய், வலிமிகும் இடங்கள்.
5. எந்தப் போர்த்துக்கீசிய எழுத்துக்கடியில் எந்தத் தமிழ் எழுத்துக்கள் அடங்கியுள்ளன.
6. அகராதியில் வரும் சில குறியீடுகள் - எழுத்துச் சீர்திருத்தம், தாம் செய்த எழுத்துச் சீர்திருத்தம் தவிர மீதிப் பகுதிகளை வீரமாமுனிவர் அப்படியே பின்பற்றுகிறார்.

முகவுரை மூன்றாம் பிரிவில் வெளிநாட்டார் பொருட்டு இறந்தகாலம், எதிர்காலம், ஏவல், வினை எச்சம், பன்மை, விகுதிகள் முதலியவற்றில் வல்லினம் இரட்டிப்பது பற்றியும் இரட்டியாதது பற்றியும் தெளிவான ஒழுங்குகளைத் தருகிறார். இறந்த காலத்துக்கு 12, எதிர்காலத்துக்கு 3, வினை எச்சத்திற்கு 6, கள்/க்கள் விகுதிகளுக்கு 6, வலிமிகுமிடங்களுக்கு 9 ஒழுங்குகளைத் தருகின்றார். பழக்கத்தால் உணர்ந்த இவற்றைப் பிறருக்காக ஒழுங்காய்ப் பாகுபடுத்தித் தருகிறார். இவற்றை வீரமாமுனிவரும், கால்டுவெல்லும் அப்படியே பயன்படுத்தியுள்ளனர். ஒரு சில இடங்களில் முனிவர் மாறுபடுகிறார். அது யாதெனில் - கொடுந்தமிழ் பத்திஎண் 17இல் காண்பது. நிலை மொழி இரட்டித்து உகரத்தில் முடிய, வருமொழியில் வரும் வல்லினம் இரட்டிக்கும் என்பது ஒழுங்கு. எனினும் பெயருக்குப் பின் வினை வந்தால்

வல்லினம் இரட்டிக்காது என்பது புரோயென்சாவின் கருத்து. அவர் தரும் சான்று கூற்றுப் (கூத்து) பார்த்தான், பல்லு தேய்ச்சான் என்பன. இதை வீரமாமுனிவர் மறுக்கின்றார். முன்கூறிய ஒழுங்குக்கு விதிவிலக்கு இல்லை என்கிறார் எனினும் புரோயென்சா அடிகளின் சார்பாக அஃறிணை இரண்டாம் வேற்றுமை பின் வலி மிகாது என்ற ஒழுங்கையும், நெருப்பு பெரிது என்பது எழுவாய்த் தொடராகையால் வலி மிகாது என்ற ஒழுங்கையும் கூறலாம். கால்டுவெல் அறிஞர் தமிழில் இரட்டித்தல் பற்றித் தொகுத்துக் கூறும் ஒழுங்குகளோடு புரோயென்சா கூறுவது ஒத்து வருகின்றது.

இதைத் தவிர இவர் இணைத்திருக்கும் டா கோஸ்டா இலக்கணத்திலிருந்து 'ஒக்கும், வேணும், உண்டு, போதும், காட்டும் முதலிய குறைவினைகளை முனிவர் எடுத்திருக்கிறார். ஆனால் தமது கொடுந்தமிழ் எண் 113இல் இறந்தகாலம் பற்றிப் பேசுகையில் டா கோஸ்டாவை மறுக்கிறார். 'நீய் விசுவசிக்கிறாயே யப்போது அவன் விசுவசித்தான்' (யப்போ நான் விசுவசிப்பேன்) என்பதையும் 'நீய் விசுவசிக்கிறாயே, அதுக்கு முன்னே நான் விசுவசிப்பேன்' என்பதையும் எடுத்துக்கூறி அவை போன்றன தாம் படித்ததோ, கேட்டதோ இல்லை என்றும் அவை தமிழ் என்றோ, என்ன சுட்டுகின்றன என்றோ சொல்வோரைக் காணவில்லை என்றும் கூறி மறுக்கிறார். இவ்வாறு வீரமாமுனிவரது இலக்கணம் அவருக்கு முன்னோர் எழுதியனவற்றைப் படித்ததாலும், சொந்த ஆராய்ச்சியாலும் அமைந்துள்ளது.

'Vocabulario Tamulico lusitano' தமிழ் - போர்த்துக்கீசிய அகராதியைத் தந்தை அந்தோணி தெ புரோயென்சா எழுதினார். இந்த அகராதி தமிழர்கள் மத்தியில் நற்செய்தி பரப்ப இறைப்பணியில் ஈடுபட்டவர்களுக்கு அர்ப்பணிக்கப்பட்டது. இந்த அகராதிதான் முதன்முதலில் அச்சடிக்கப்பட்டதாகும். 1679ஆம் ஆண்டு அம்பலக் காட்டில் மரக்கட்டையால் தயாரித்த அச்செழுத்துக்கள் தேய்வடையாமல் பதிப்பு தெளிவாகவும், நன்றாகவும் இருந்தது. தமிழ்- போர்த்துக்கீசிய அகராதி பற்றி முனைவர் தந்தை இராசமாணிக்கம் அவர்களின் கருத்தைக் காணலாம்.

> ''புரோயென்சா அடிகளின் கையெழுத்துப் பிரதியில் முகவுரை மிக நீண்டதாக உள்ளது. 1666ஆம் ஆண்டு ஆசிரியரின் மறைவுக்குப் பதிமூன்று ஆண்டுகளுக்குப் பிறகு 1679ஆம் ஆண்டு ஜூலை மாதம் அச்சடிக்கப்பட்ட பிரதிகளில் அநேக பகுதிகள் வேண்டுமென்றே நீக்கப்பட்டுள்ளன.''

நீக்கப் பட்டவைகளைப் பற்றிப் புரிந்து கொள்ளத் தந்தை புரோயென்சா தமது அகராதியில் பின்பற்றியுள்ள திட்டம் ஆறு தலைப்புகள் அல்லது பகுதிகளைக் கொண்டதை மேலே பார்த்தோம்.

அவைகளில் கடைசி ஐந்து பகுதிகள் விடப்பட்டுள்ளன. எனவே அருட்தந்தை டா கோஸ்டாவின் தமிழ் இலக்கணம் Ante Tamulica முகவுரையின் பகுதியாக உள்ளது நீக்கப்பட்டுள்ளது. பகுதிகள் 3-4 வெவ்வேறு இலக்கண விதிகளைக் கொடுக்கின்றன. அவைகள் டா கோஸ்டா அடிகளின் இலக்கணத்திலுள்ள பற்றாக்குறையை நிவர்த்தி செய்வதற்காக. பின்னர்த் தொடர்ந்து வந்த இலக்கண ஆசிரியர்களான சீகன்பால்கு, பெஸ்கி, மற்றும் ஏனையோரும் இவ் விதிகளைப் பயன்படுத்தினார்கள். ஐந்தாவது பகுதி போர்த்துக்கீசிய நெடுங்கணக்குப்படி தமிழ் எழுத்துக்களை வரிசைப்படுத்தி உள்ளது. நெடுங்கணக்கைப் புரிந்து கொள்வது இன்றியமையாததாக இருக்கிறது. ஏன் ஆறாவது பகுதி விடப்பட்டது என்பதை நம்மால் புரிந்து கொள்ள முடியும். புரோயென்சா அடிகள் இருபொருள் கொண்ட வெவ்வேறு தேவைக்கு அதிகமான எழுத்துக்களை வேறுபடுத்திக் கண்டறிவதற்கு அநேக வேறுபடுத்திப் பிரித்தறியப் பயன்படுகின்ற குறிகளைக் கொடுக்கின்றார். இது அதிக எழுத்துக்களையும் அதிகப் பிரச்சினையையும் கொடுக்கும். இந்தப் பகுதியை நீக்கிவிட்டனர். கையால் எழுதிய பிரதி கோவாவில் உள்ள தேசிய நூலகத்தில் கண்டுபிடிக்கப் பட்டுள்ளது என்று தந்தை முனைவர் ச. இராசமாணிக்கம் கூறுகிறார். இப்பிரதி புரோயென்சா அடிகள் பின்பற்றிய திட்டத்தையும் வரிசை முறையையும் நம்மைப் புரிந்து கொள்ள வைத்தது. காணப்பெறாத பகுதியின்றி, அச்சடித்த முகவுரை முழுமை பெறாததும் இருளார்ந்ததுமாகும். தந்தை புரோயென்சா தனது அகராதியை அகராதியாகச் சேவகம் செய்வதோடு மட்டுமின்றி இலக்கணமாகவும் பயன்பட வேண்டும் என்று விரும்பினார். எனவே அவர் அருட்தந்தை பல்தசார் டா கோஸ்டா எழுதிய இலக்கணத்தை இரண்டாவது பகுதியில் சேர்த்தார். மேலும் அது அநேக பயனுள்ள விதிகளால் நிறைவு செய்யும் வகையில் சேர்க்கப்பட்டது. இது முதல் முறையாகப் படிக்கத் தொடங்குபவர்களுக்குப் பயனுள்ளதாகவும் உதவியாகவும் இருக்கும். எவ்வகையிலும் இது போர்த்துக்கீசிய மொழியில் இருக்கின்றது. மிகச் சொற்பமானவர்கள் மட்டும் போர்த்துக்கீசிய மொழியைப் பேசுகின்றனர். இது சாதாரணமாகத் தமிழ் பேசுபவர்களுக்கு மட்டுமல்லாமல் தமிழ்ப் பேராசிரியர்களுக்கும் ஆய்வாளர்களுக்கும் மூடப்பட்ட நூலாக உள்ளது என்பது முனைவர் அருட்தந்தை இராசமாணிக்கத்தின் கருத்தாகும். போர்த்துக்கீசு-தமிழ் அகராதியையும் புரோயென்சா அடிகள் எழுதியதாகக் கூறப்படுகிறது. அது பகுதி இரண்டாகக் கருதப்பட்டது. அதே வேளையில்

தமிழ்- போர்த்துக்கீசிய அகராதி முதல் பகுதி என்று அறிஞர் ஜூலியன் வேன்சான் கருதுகின்றார்.

## அறிமுகக் கட்டுரைகள்

பன்மொழி வல்லுநரான ஜூலியன் வேன்சோன் (Julien Vinson) 'அச்சிடப்பட்ட முதல் தமிழ் அகராதி' என்ற தலைப்பில் ஒரு கட்டுரை எழுதினார். இக்கட்டுரை 1909ஆம் ஆண்டு பெப்ருவரி 4ஆம் நாள் திருவாளர் கார்விக் டெரென்பர்க்குக்கு மரியாதையினிமித்தம் வெளியிடப்பட்ட நினைவு மலரில் வெளியிடப்பட்டது. அதே அரங்கத்தில் ஜூலியன் வேன்சோனும் பாரிசிலுள்ள தேசிய நூல் நிலயத்தில் காணப்பட்ட தமிழ்க் கையெழுத்துப் பிரதிகளின் அட்டவணையைத் தயாரித்து மேற்கூறப்பட்ட நினைவு மலரில் வெளியிட்டார். இக்கட்டுரையில் வேன்சோன், புரோயென்சா யாத்த அகராதியைப்பற்றி வர்ணிப்பதாவது:

> ''இந்த அகராதி கேரளாவிலுள்ள அம்பலக் காட்டில் அங்கிருந்த இக்னேசியஸ் அச்சமோனி என்ற அச்சுப் பதிப்பாளரால் மரத்தால் ஆன அச்சுப் பொறியில் அச்சடிக்கப்பட்டது. இந்தப் பதிப்பு அந்தோணி தெ பெரேரா, வலேரியன் கட்டானேயோ, ஜான் தெ மாயா போன்ற தந்தையர்களாலும் ஏனையவர்களாலும் ஒப்புதல் அளிக்கப்பட்டது. இவ்வகராதி இக்னேசியஸ் புருனோ, இராபர்ட் தெ நொபிலி, எம்மானுவேல் மார்ட்டின் ஆகியோரின் படைப்புகளிலிருந்தும் என்றிக் என்றிக்கஸ் அடிகள் எழுதிய புனிதர்கள் வரலாற்றிலிருந்தும் தொகுத்து அச்சடிக்கப் பட்டதாகும்.''

நூலாசிரியர் தமிழ் அகரவரிசையில் குறைபாடு இருப்பதைக் கண்டார். வெவ்வேறு வார்த்தைகளுக்கு வெவ்வேறாக உச்சரிக்க வேண்டும். இந்தத் தகவல் எல்லாம் வேன்சோன் வீராப்போலியில் 1685ஆம் ஆண்டு ஜூன் மாதம் 25ஆம் தேதி வெளியிட்ட இலத்தீன் வர்ணனையிலிருந்து பெற்றார். அவர் இதைக் கார்மேல் சபையைச் சேர்ந்த தந்தை பீட்டர் பால் பிரான்சிசிடமிருந்து பெற்றார். இந்தச் சந்நியாசி அனைய்ராவின் தலைமை ஆயராகவும் மொகலாய அரசின் திருத்தூதரின் பிரதிநிதியாகவும் இருந்தார். இந்த அகராதியின் பிரதியை ஜெர்மனியில் உள்ள காலிலோ அல்லது கோவாவிலோ அல்லது போர்ச்சுக்கல்லிலோ அல்லது ஸ்பெயினிலோ காணவில்லை. ஆனால் உரோமாபுரியில் வத்திக்கானிலுள்ள நூலகத்தில் போர்ஜியன் அருங்காட்சியகத்தில் தந்தை சோமர்வோக்கல் என்பவரின் வழி நடந்தலால் இப்பிரதி கண்டுபிடிக்கப்பட்டது.

ஜூலியன் வேன்சோனின் கருத்துப்படி இந்த நூல் 215 x161x41mm அளவு கொண்டது. இதில் இரண்டு நூல்கள் அடங்கியுள்ளன. முதல் நூல் 36 mm கனம் XI+247 தாள்கள் அடங்கியுள்ளன. இந்த நூலுடன் கைப்பிரதி 5mm கனம் 29 தாள்கள் அடங்கியது. ஒரு பக்கத்துக்கு 27 வரி வீதம் இரு பக்கங்களிலும் எழுதப்பட்டுள்ளது. இதன் தலைப்பு 'Arte Tamulica' composto pello Pre Baltasar da costa da comphanhia do Iesu, missionario da Madurai- தமிழ் இலக்கணம் தந்தை பல்த்தசார் டா கோஸ்டா, இயேசு சபை, மதுரை மதபோதகர் அவர்களால் எழுதப்பட்டது. இதுதான் புரோயென்சாவின் ஒரே ஒரு பிரதியாகும். செம்பகனூர் பழஞ்சுவடிக் காப்பகத்தில் வேன்சோனின் அச்சிட்ட மறுபதிப்புக் கட்டுரை உள்ளது.

அடுத்து, தந்தை சேவியர் தனிநாயகம் அடிகள் புரோயென்சாவின் தமிழ்-போர்த்துக்கீசிய அகராதியைப்பற்றித் *தமிழ்ப்பண்பாட்டில்* ஒரு கட்டுரை எழுதினார். அவர் அதில் புரோயென்சா எழுதிய அகராதியின் அளவும் வடிவும் அதில் அடங்கியவைகளைப் பற்றியும் விவரித்துள்ளார். இக்கட்டுரை ஆங்கில மொழியில் உள்ளது. கட்டுரை மிகக் கவர்ச்சிகரமானதும் ஒளியூட்டுவதாயும் இருப்பதால் நாம் மிகுந்த கவனத்தோடு படிக்க வேண்டும்.

எட்கார் சி நோல்டன் (Edgar C. Knowlton) இவரும் அதே *தமிழ்ப் பண்பாட்டில்* ஒரு கட்டுரை எழுதியுள்ளார். அது 135-164 (29) பக்கங்களைக் கொண்டதாகும். இக்கட்டுரையில் ஆசிரியர் 99 வார்த்தைகளைத் தேர்ந்தெடுக்கிறார். அவற்றின் வரையறையைக் கொடுக்கின்றார். இது ஒரு நல்ல திரட்டாகும்.

அறிஞர்களான நோல்டனும் தனிநாயகம் அடிகளும் புரோயென்சாவின் அகராதியிலுள்ள முகவுரையை ஆங்கிலத்தில் மொழிபெயர்த்துள்ளனர். இது அகராதியின் நிழற்படப் பதிப்போடு வெளியிடப்பட்டது. இது முதல் உலகத் தமிழ் மாநாட்டின்போது கோலாலம்பூரில் 1966ஆம் ஆண்டு வெளியிடப்பட்டதாகும். 1966இல் நிழற்படப் பதிப்பின் முகவுரை அநேக கவர்ச்சிகரமான கருத்தறிவிப்புகளைக் கொண்டுள்ளது. முகவுரை முழுமை பெற்றதாகக் காணப்படவில்லை. மேலும் பக்கங்களின் வரிசைமுறை எப்பொழுதும் துல்லியமாக இல்லாமல் இருப்பது ஒன்றாகும்.

**புரோயென்சா அடிகள் - நொபிலியின் படைப்புக்களின் காவலர்**

நொபிலியின் இலக்கியப் பணியைப்பற்றிப் புரோயென்சா இரண்டு கோணங்களில் அளிக்கும் கூறுகள்: 1. அந்தோணி தெ புரோயென்சா நொபிலியை நேரில் நன்றாக அறிந்தவர்.

> "நான் ஓராண்டுக் காலமாகச் சென்னையில் அவரோடு வாழ்ந்தேன் என்பதைப்பற்றி பெருமைப்படுகின்றேன். நெருங்கிய வகையில் நொபிலியின் ஒரு தனிப்பட்ட அன்பின் அடையாளமாக வாழ்ந்தேன்".

புரோயென்சா நொபிலியைப்பற்றி எழுதிய வாழ்க்கைக் குறிப்பிலிருந்து ஒரு விரிவான படைப்பின் பட்டியலைப் பெற்றுள்ளோம். இதில் வருந்தத்தக்கது என்னவென்றால் புரோயென்சா அடிகளுக்குச் சமஸ்கிருதமும் தெலுங்கும் தெரியாததுதான். வேறுவிதமாய் நொபிலியின் நல்லதும் விரிவானதுமான படைப்பின் பட்டியலை அந்த இரு மொழிகளிலிருந்து பெற முடிந்திருக்கும். தமிழைப் பொறுத்த மட்டில் அவரது பட்டியல் முற்றுப் பெறாத ஒன்று. ஏனென்றால் அவரே கூறுவது என்னவென்றால் நொபிலியின் தமிழ்ப் படைப்புகள் அனைத்தையும் படிக்கவில்லை என்பதாகும். புரோயென்சாவின் இரண்டு கோணங்களில் அளிக்கப்படும் கூறுகளில் நொபிலியின் படைப்புகளின் பட்டியல் காணப்படுகிறது. அவை 1656 செப்டம்பர் திங்கள் 20ஆம் நாள் எழுதிய முதல் கடிதத்திலும் 1660இல் எழுதிய இரண்டாம் கடிதத்திலும் காணக்கிடக்கின்றது. மறைப்போதகர்கள் ஒரே செய்தியை இரண்டு முறை எழுதுவது வழக்கம். ஏனென்றால் அவர்கள் எழுதும் கடிதங்கள் அடிக்கடி போகும் வழியில் தொலைந்து போகும்.

### நொபிலியின் படைப்புகளின்மேல் புரோயென்சாவின் கவனிப்பு

மேலும் 1659ஆம் ஆண்டு ஜூலை 22ஆம் நாள் எழுதிய வருடாந்திரக் கடிதத்தில் நொபிலியின் படைப்புகளைப்பற்றிக் கூறுகிறார்:

> "கள்ளர்கள் குருமார்களின் மேல் வைத்திருந்த எல்லா மரியாதைகளையும் இழந்து விட்டனர். எங்களிடம் உள்ள சில நூல்களையும் ஏனைய உண்மைகளையும் பத்திரமான இடத்தில் வைப்பதென்பது நடக்காத ஒன்று. தந்தை இராபர்ட் தெ நொபிலியின் நூல்களின் பிரதிகளா என்று எனக்கு உறுதியாகத் தெரியவில்லை. பனை ஓலைகளில் எழுதப்பட்டவைகள் தப்பித்திருக்கக் கூடும். இவைகள் எங்களுக்கு ஒரு பொக்கிஷம். நாங்கள் இவற்றைக் கண்ணும் கருத்துமாய்க் காத்து வருகிறோம். தந்தை ஆன்ரூ பிரையர் அவற்றில் சிலவைகளை இரண்டரை ஆண்டுக் காலமாகத் தாளில் எழுதிக் கொண்டிருந்தார். அவர் பண்டார சாமி உடையில் பணியாற்றினார்".

மறைப்போதகர்கள் நிரந்தரமாக ஓரிடத்திலிருந்து பணியாற்ற முடியாத காலமாய் இருந்தது. தந்தையர்கள் புரோயென்சாவும், ஆன்ரூ பிரையர்

இருவரும் நொபிலி படைத்த இந்நூல்களைப் பாதுகாக்க அக்கறை எடுத்தனர். இவர்கள் மேற்கொண்ட அக்கறையின் காரணமாகத்தான் எதையும் இழக்கவில்லை.

### புரோயென்சாவின் அகராதி

தமிழ்-போர்த்துக்கீசிய அகராதி தந்தை புரோயென்சாவால் எழுதப்பட்டதாகும். இங்கு நொபிலியின் படைப்பைப் படிக்க புரோயென்சா செய்த சேவையைக் கூற நாம் மறக்கக்கூடாது. இந்த அகராதி மறு அச்சாக நிழற் பிரதியாக 1966இல் கோலாலம்பூரில் நடந்த கருத்தரங்கில் தனிநாயகம் அடிகளால் எடுக்கப்பட்டது.

### புரோயென்சா கூறுகிறார்

'அவர் தனது தமிழ்-போர்த்துக்கீசு அகராதியில் நொபிலியின் படைப்புகளில் கண்ட அனைத்து வார்த்தைகளை அதில் சேர்த்துள்ளதாகச் சொல்கின்றார். ஏனெனில் மறைப்பணியாளர்கள் இந்த அகராதியின் உதவி கொண்டு நொபிலியின் படைப்புகளை நல்ல முறையில் புரிந்து கொள்ளக்கூடும். நொபிலியின் படைப்புகளில் கடினமான வார்த்தைகளுக்குப் புரோயென்சா தமது அகராதியில் சரியான விளக்கம் கொடுத்துள்ளார். இந்த அகராதி நொபிலியின் படைப்புகளைக் கற்க இலகுவாகவும், பிரசித்தியானதுமாக இருந்தது. அவற்றைக் காக்கவும் உதவியாய் இருந்தது.

## பிலிப்பஸ் பால்தேயுஸ்
## (Baldaeus Phillippus) 1632-1672

பிலிப்பஸ் பால்தேயுஸ் ஒரு டச்சுக்காரர். நெதர்லாந்தைச் சேர்ந்தவர். இவர் 1632ஆம் ஆண்டு டெல்ப்டில் (Delft) பிறந்தார். 1655ஆம் ஆண்டு கீழை நாட்டுப் பகுதிக்கு, அதிலும் இலங்கையிலுள்ள ஜாப்னாவிற்கு 17ஆம் நூற்றாண்டில் டச்சு ஆக்கிரமிப்புப் படையுடன் மறைப்போதகராக வந்தார். வடக்குப் பகுதியில் வாழ்ந்த தமிழ் மக்களின் வாழ்க்கை, மொழி, பண்பாடுகளைப்பற்றிய ஆதார மூலங்களைத் திரட்டிய முதல் ஐரோப்பியர் ஆவார். இங்கு இவ்வறிஞர் சமஸ்கிருத மொழியைக் கற்றார். 1664ஆம் ஆண்டு ஜனவரி 28ஆம் நாள் அவர் மலபார் வந்து சேர்ந்தார். இலங்கை, மலபார், தமிழ்நாடு பற்றி எழுதிய அவருடைய நூல் அவரது மறைவுக்குப் பிறகு 1672இல்தான் அச்சிடப்பட்டது. இவர் புரோட்டஸ்டாண்ட் மறைப்போதகராகத் தமிழகம் வந்தார். எனவே அவர் போர்ச்சுக்கீசிய மொழியையும் தமிழ் மொழியையும் பயின்றார். இவர் தமிழ் மொழியைக் கற்றதின் நோக்கம் மக்களை மறுநெறிக் கிறித்துவச் சமயத்திற்கு மனம் திருப்புவதற்காகத்தான். இலங்கையில் உள்ள யாழ்ப்பாணத்தில் இவரது மறைப்போதகம் வெற்றி நடைகண்டது.

ஆனால் தூத்துக்குடியில் வாழ்ந்த மீன் பரதவர்களை மனந்திருப்ப அவரால் முடியவில்லை.

பால்தேயுஸ் அநேக கையெழுத்துப் பிரதிகளைச் சேகரித்து அவற்றைப் பாதுகாத்து வந்தார். பனை ஓலைகளில் எழுதிய தமிழ்ப் பிரதிகள் போர்த்துக்கீசிய மொழியில் மொழியாக்கம் செய்யப் பட்டுள்ளன என்பது தெரிந்ததே. இவர் டச்சு மொழியில் தமிழ் இலக்கணம் எழுதி அதை 1672ஆம் ஆண்டில் வெளியிட்டார். இந்நூலின் ஒருசில பகுதிகள் மட்டுமே கிடைத்துள்ளன. சில பகுதிகள் தமிழில் மொழியாக்கம் செய்யப்பட்டு டெக்கான் கல்லூரியின் நினைவு மலரில் வெளியிடப்பட்டுள்ளன.

இவர் இந்தியாவைப் பற்றி ஒரு நூல் எழுதினார். அதில் ஒரு பகுதி தமிழில் உள்ளது. பெயர்ச்சொல்லின் வெவ்வேறான வேற்றுமைகள், வினைச் சொற்களும் எடுத்துக்காட்டுகளும் இந்தத் தமிழ்ப் பகுதியில் விரிவாகக் கையாளப்பட்டுள்ளன. யேசுவினுடைய 'கடவுளின் செபம்', 'இயேசு கற்பித்த செபம்' என்ற தலைப்பில் தமிழாக்கம் செய்து பால்தேயுஸ் இந்நூலில் இணைத்துள்ளார்

பால்தேயுஸ் ''மலபார், கோரமண்டல், சிலோன் ஆகியவை பற்றிய வர்ணனை'' என்ற தலைப்பில் ஒரு நூல் எழுதியுள்ளார். பதினேழு பதினெட்டாம் நூற்றாண்டு வரலாற்று நூல்களில் ஆசியாவில் இந்த நூல்தான் முதன் முதலாக வெளியிடப்பட்டது. போர்த்துக்கீசிய மொழியிலும், திராவிட மொழிகளிலும் மேலும் பேச்சு வழக்குகளிலிருந்து இவர் சேகரித்த செய்திகள் இந்நூலின் மூலப் பொருளாக உள்ளன. சமய, சமூக, பொருளாதார நிலைமைகள் இந்நூலில் சிறப்பாக இடம் பெற்றுள்ளன. இந்நூல் மூன்று பகுதிகளாக டச்சுமொழியிலும், ஜெர்மன் மொழியிலும் அழகிய படங்களுடன் வெளியிடப்பட்டுள்ளது.

Naauwkeurige Beschrvvinge Van Malabar En Choromandel Derzeiver Anngrenzende Ryken En Ket Machtige Eyiand, Ceylon, 1672.

## ஜே.புல்னுவா
## (J.Boulnois)

பிரான்ஸ் நாட்டவரான இவ்வறிஞர் பெரும்பாலும் சிற்றூர்களில் காணப்படுகின்ற சிற்சில பழக்க வழக்கங்களை ஆராய்ந்தார். அரசு, வேம்பு முதலிய மரங்களைப் பற்றித் தமிழர்கள், அதிலும் சிறப்பாகச் சிற்றூர் மக்கள் கொண்டிருந்த கருத்துக்களையும், அம்மரங்களுக் கடியில் நாகக்கல் அமைத்து வழிபடுவதையும் இவர் ஆராய்ந்தார். இதனால் 'மரம்,கல், நாகம் முதலியன பற்றித் திராவிடர் கோட்பாடு' என்னும்

தலைப்பில் பிரெஞ்சு மொழியில் ஒரு நூலை வெளியிட்டார். இந்நூலில் மேற்கொண்ட பொருள்கள் ஒன்றோடொன்று கொண்டிருக்கும் தொடர்பு விளக்கப்பட்டிருக்கிறது.

## லுஜான்தில்
## (Legentle)

இவர் பிரெஞ்சுக் குடிமகன். பயணியாகத் தமிழ்நாட்டுக்கு வந்து தமிழரின் கலைச் செல்வங்களைக் கண்டறிந்தார். வானநூல் சம்பந்தமாகத் தமிழர்கள் கொண்டிருந்த கருத்துக்கள் இவருக்கு மகிழ்ச்சியை அளித்தன. வானநூல் தமிழர்களிடையே எந்த அளவிற்கு வளர்ந்திருக்கின்றது என்பதையும் அந்நூல் கொண்டு அவர்கள் எத்துணை அநுபவம் பெற்றிருக்கிறார்கள் என்பதையும் இவர் கண்டு வியந்தார். இந்த ஒரு துறையில் மாத்திரம் இவர் கருத்துச் சென்றமையால் இதனையே நன்கு ஆராய்ந்து தம் நூலை வெளியிட்டார். இவர் ஒரு புதுமையான பெயரையே தாம் எழுதிய நூலுக்குத் தந்துள்ளார். 'இந்தியக் கடற் பயணம்' என்பது அந்நூலின் பெயர்.

## லேயோ செயின்ட் ஜான்
## (Leon Saint Jean)

இவ்வறிஞர் 'காரவேலன்' என்ற புனை பெயரில் சில தமிழ் நூல்களின் சிறந்த பகுதிகளைப் பிரெஞ்சு மொழியாக்கம் செய்துள்ளார். காரைக்காலம்மையாரின் 'திருவாலங்காட்டு மூத்த திருப்பதிகம்', ஔவையாரின் 'ஆத்திசூடி', சுப்ரமணிய பாரதியாரின் 'புதிய ஆத்திசூடி', அவருடைய கவிதைகளில் சில பகுதிகள், மாணிக்கவாசகரின் சில பாட்டுக்கள், தேவாரப் பாடல்களில் சில அவரால் பிரெஞ்சு மொழியில் மொழியாக்கம் செய்யப் பட்டுள்ளன. இவையன்றிச் சிலப்பதிகாரத்தில் சில பகுதிகளும், ஐங்குறுநூற்றின் பாக்கள் சிலவும் பிரெஞ்சில் மொழியாக்கம் செய்யப்பட்டுள்ளன.

## மதாம் புருனே
## (Madame Bruner)

இவர் ஒரு பிரெஞ்சுக்காரர். தமிழ் நாட்டில் நிலவிவரும் சமயங்கள் மீதும் தம் கருத்தைச் செலுத்தினார். சமயத் தலைவர்களோடு தொடர்பு கொண்டு அவற்றை ஆராய்ந்தறிந்தனர். தமிழகத்தில் சிறப்பாய் விளங்கும் வைணவம், சைவம் என்னும் இரண்டு சமயங்களின் தத்துவங்களைப் பயின்றனர். சிலர் சைவ சமயத்தைப் பற்றிய கொள்கைகளை ஆராய்ந்து அவற்றைப் பற்றித் தங்கள் மொழியில் நூல்களை இயற்றியுள்ளனர். சைவ

சமயத்தைப் பற்றி ஜான் பிலியோசவும், மதாம் புருனேவும் ஆராய்ச்சிக் கட்டுரைகளை எழுதி வெளியிட்டுள்ளனர்.

வைணவம் சம்மந்தமாக ஆராய்ச்சி செய்தவருள் சிறப்பாகக் குறிப்பிடத்தக்கவர்கள் ஆன் மரி எனுல் (Anne Marie Esnoul) என்னும் அம்மையாரும் மேற்சொன்ன ஜான் பிலியோசவும் ஆவர். ஆன் மரி எனுல் இராமானுசரைப் பற்றியும், விசிட்டாத்துவைத்தைப் பற்றியும் ஓர் ஆராய்ச்சி நூல் எழுதி வெளியிட்டுள்ளார்.

## தந்தை வெனோன்சியுஸ் புசே, சே.ச. (Fr.Venantius Bouchet S.J.) 1655-1732

பிரான்ஸ் நாட்டில் போந்தனே லு கோந்து (Fontenay le Conte) என்னும் ஊரில் 1655ஆம் ஆண்டு ஏப்ரல் 10ஆம் தேதி பிறந்தார். அக்கித்தேன் மறைமாநிலத்தில் 1670ஆம் ஆண்டு அக்டோபர் மாதம் 7ஆம் நாள் சேர்ந்தார். இவர் அங்குள்ள கல்லூரியில் இலக்கணம், கலைவியல்கள், சொல்லாட்சிக்கலை ஆகியவற்றைக் கற்பித்தார். பின்னர் சியாமுக்கு 1687இல் தந்தை தட்சாடுடன் (Fr.Tachard) சென்றார். 1689ஆம் ஆண்டு மதுரை மறைமாநிலத்திற்கு வந்து பணியாற்றினார். இவரது தமிழ்ப் பெயர் சஞ்சீவநாதர் ஆகும்.

தந்தையவர்கள் திருச்சிராப்பள்ளிக்கு அருகில் உள்ள ஆவூரைப் பங்குத்தளமாகக் கொண்டு அதன் பங்குக் குருவாகப் பணியாற்றினார். திருவரங்கத் தீவில் ஒரு சிற்றாலயம் கட்டி எழுப்பினார். 1702ஆம் ஆண்டு தந்தை தட்சாடுவின் வேண்டுகோளுக் கிணங்கப் பாண்டிச்சேரியில் கர்நாட்டிக் மறைத்தளம் தொடங்க வந்தார். அந்தப் புதிய மறைத்தளத்திற்குத் தந்தை புசே தலைவரானார். 1713இல் அரியாங்குப்பத்தின் பங்குத்தந்தையாகப் பணியாற்றினார். 1732ஆம் ஆண்டு மார்ச் மாதம் 13ஆம் நாள் இறைவனடி சேர்ந்தார்.

### தந்தையின் ஆன்மீகத் தமிழ்ப் படைப்புகள்

அடிகள் 18ஆம் நூற்றாண்டின் முதல் பகுதியில் முன்னோடி மறைப்போதகராகப் பணியாற்றினார். இப்பணிக்கிடையே தன்னைத்தானே ஒரு சிறந்த எழுத்தாளராகத் தயார்படுத்தினார். மறைப்போதகர்களுக்கும், அவர்களுக்கு உதவி புரியும் உபதேசிமார்களுக்கும் மிகத் தேவையான திருமறை உண்மைகளைத் தமிழில் எழுத முற்பட்டார்.

### தந்தையவர்கள் எழுதிய நூல்கள்

1. நல்ல மரணம் 2. தர்ம நடக்கை 3. திவ்வியமாதிரிகை 4. ஞான சஞ்சீவி 5. ஞான நட்சத்திரமாலை 6. ஞான ஆறுதல் 7. ஞான போதகம் 8. ஆனந்த பிண்ட வியாக்கியானம் 9. சகுன நிவாரணம்

10. பரம சூட்சண அபிப்பிராயம் 11. உலகப் பிரமாண சாஸ்திரம் 12. அஞ்ஞான நிவாரணம்.

முதல் ஆறு நூல்கள் எவ்விதச் சந்தேகமுமின்றித் தந்தையின் படைப்புக்களாகும். ஏனையவை இவருடையன என்று ஏற்றுக் கொள்ளலாம். அஞ்ஞான நிவாரணம் நூலுக்கு இவர் ஆசிரியர் அல்ல என்ற பரவலான கருத்து நிலவுகிறது.

## தந்தை சார்லஸ் மிக்கேல் பெர்த்தோல்டி, சே.ச. (Charles Michael Bertholdi S.J.) 1662-1740

தந்தை பெர்த்தோல்டி, வால்பெர்க் (Valperg) என்னும் ஊரில் இறைப்பற்றுள்ள தம்பதியருக்கு மகனாக 1662ஆம் ஆண்டு நவம்பர் மாதம் முதல் தேதியன்று பிறந்தார். இவர் தமது இருபதாவது வயதில் 1682 ஜூலைத் திங்கள் ஒன்பதாம் தேதி இயேசு சபையில் நவசந்நியாசியாகச் சேர்ந்து, குருத்துவத்துக்கான அனைத்துப் பயிற்சிகளையும் முடித்துக் குருவாகத் திருநிலைப் படுத்தப்பட்டார். 1702 சனவரி முதல் தேதி இயேசு சபையில் நிரந்தர உறுப்பினரானார். 1697-இல் மதுரை மறைமாநிலத்திற்குப் பணியாற்ற வந்தார். மதுரை மறை மாநிலத்தின் தலைவர் பொறுப்பை (1708-11, 1718-21) இரண்டு முறை வகித்து, சிறந்த முறையில் நிர்வகித்து வந்தார். தந்தையவர்கள் ஆவூரில் பங்குத் தந்தையாகப் பணியாற்றிக் கொண்டிருந்த பொழுது 1740ஆம் ஆண்டு மார்ச்சுத் திங்கள் 10ஆம் நாள் தனது ஆன்மாவை இறைவனிடம் ஒப்படைத்தார். இவர் ஞானப்பிரகாசியார் சுவாமி என்று தமிழில் பெயர் வைத்துக் கொண்டார்.

### தந்தையின் பங்களிப்பு

பெர்த்தோல்டி அடிகள் தமிழில் 'ஞான முயற்சி' (Spiritual Exercises) என்னும் நூலை எழுதினார்.

## லூயிஸ் நோயல் தெ பூர்ஜெஸ், சே.ச. (Louis Noel de Bourzes S.J.) 1673-1735

லூயிஸ் நோயல் தெ பூர்ஜெஸ் 1673ஆம் ஆண்டு அக்டோபர்த் திங்கள் 18ஆம் தேதி ரோன்-ஆல்ப்ஸ் என்னும் பகுதியில் ஆர்தெஷ்ஷில் உள்ள சபிலியர்ஸில் பிறந்தார். இவர் தமது உயர்நிலைப் பள்ளிப் படிப்பை லியோனில் இயேசு சபையினர் நடத்திய நிறுவனத்தில் முடித்தார். துறவறச் சபையான இயேசு சபையில் சேர 16 வயதிலேயே விண்ணப்பித்தார். வழக்கமாக 18 வயதில்தான் இயேசு சபையில் நுழைய அனுமதிக்கப்படுவர். ஆனால் பூர்ஜெஸ் முதிர்ச்சியான அறிவுள்ள

வாலிபனாய் இருந்ததால் விதிவிலக்காக 16 வயதில் 1689ஆம் ஆண்டு செப்டம்பர் மாதம் 8ஆம் தேதி இயேசு சபையில் அனுமதிக்கப்பட்டார். அவர் இரண்டு ஆண்டுகள் சந்நியாசத்தை முடித்தபின் (1689-1691) பிலெஷ்சுக்கு மெய்யியல் படிக்க அனுப்பப்பட்டார் (1691-1693). இடைப்பட்ட ஆண்டுகளில் இலக்கணமும், சமூகவியலும் ருவேனில் (Roven) கற்றுக் கொடுத்தார். 1698-99இல் மேடைப் பேச்சுக் கலையைக் குய்பரில் (Quiber) கற்றுத் தந்தார். 1699இல் இறையியல் கற்கப் பாரீசு நகருக்கு அனுப்பப்பட்டார். 1702ஆம் ஆண்டு குருவாகத் திருநிலைப் படுத்தப்பட்டார். இயேசு சபையின் கடைசிப் பயிற்சியையும் முடித்து விட்டு 1707, பெப்ருவரி மாதம் 2ஆம் தேதி சபையின் நிரந்தர உறுப்பினரானார்.

**தமிழ் கற்றல்**

தந்தை பூர்ஜெஸ் 1707இல் கோவா வந்து சேர்ந்தார். 1709இல் திருவிதாங்கூர்க் கடற்கரைப் பகுதியில் மறைத்திரு சூசியேவிடம் தங்கித் தமிழ் கற்றார். அதே சமயத்தில் மறைத் தொண்டும் ஆற்றி வந்தார். பின்பு அம்பலக்காட்டிற்கு இறையியல் கற்றுக் கொடுக்கச் சொல்லி மேலிடத்திலிருந்து கட்டளை வந்தது. 1710ஆம் ஆண்டு பூர்ஜெஸ் அடிகள் மதுரை மாநிலத்தில் நுழைந்தார்.

**மறைப்பணி**

தந்தை காமநாயக்கன்பட்டி (1711), அய்யம்பட்டி (1713) ஆகிய ஊர்களில் பணியாற்றிய பின் 1714 ஆம் ஆண்டு மதுரை அதிபராக நியமனம் பெற்றார். இவர் வடுகர்பட்டியைத் தமது இறைப்பணிக்காகத் தேர்ந்தெடுத்தார். அடிகள் தமிழில் நன்றாகப் பேசக் கற்றுக் கொண்டதாக ஒரு நண்பருக்கு 1715இல் அக்டோபர் 29ஆம் தேதி எழுதிய கடிதத்தில் கூறியுள்ளார். 1721இல் கல்லுப்பட்டியில் பணியாற்றினார். பின்பு தந்தையவர்கள் சென்னைக்கு ஆயரவர்களுக்கு உதவியாளராகவும் ஜான் டி பிரித்தோவைப் புனிதராக்குவதற்கான ஏற்பாடுகளில் ஈடுபட்டிருந்தார். ஆறு ஆண்டுகளுக்குப் பின் 1729இல் இராஜாக்கள் மங்கலத்திலிருந்து 1730இல் குளச்சலிலும் 1731-32இல் அஞ்சகோவிலும் (Anjego) கடைசியாக 1734-35இல் மணப்பாட்டிலும் பணியாற்றினார். அவர் தமது மரணத்தைப்பற்றி முன்பே அறிந்திருந்தார். 1735ஆம் ஆண்டு பெப்ருவரி மாதம் 25ஆம் நாள் பரமனடி சேர்ந்தார்.

**படைப்புகள்**

அருட்தந்தை பூர்ஜெஸ் இலத்தீன் மொழியில் நன்கு பாண்டித்யம் பெற்றிருந்தார். இவர் இம்மொழியைக் கல்லூரியில் கற்றுக் கொடுத்துள்ளார். மேலும் தமது மேலதிகாரிகளுக்குக் கடிதம் எழுதும்

மொழியாக இலத்தீனைப் பயன்படுத்தினார். இவர் கிரேக்கத்தையும் எபிரேயத்தையும் இறையியல் கற்பதற்காகப் படித்திருந்தார். இயற்கையாக இவருக்குத் தமது தாய்மொழியான பிரெஞ்சும் தெரியும். இவர் அவசியத்தின் பொருட்டுப் போர்த்துக்கீசு மொழி கற்றிருந்தார். அடிகள் தாம் பணியாற்றத் தேர்ந்தெடுத்த தளம் மதுரை மாநிலம். எனவே அங்குப் பேசப்படும் தமிழ் மொழியையும் நன்கு கற்றுத் தேர்ந்தார். மேலும் அவருக்கு நேரம் கிடைக்கும்போது சமஸ்கிருதம் போன்ற ஏனைய இந்திய மொழிகளைக் கற்றறிந்திருந்தார். 'தமிழ் மொழி ஒரு தனி மொழி' என்று சுசியேவுக்கு 1727 செப்டம்பர் 28ஆம் தேதி எழுதிய கடிதத்தில் கூறியுள்ளார். அவருடைய சகோதரர் "நீங்கள் தமிழைப் பிரெஞ்சைப் போன்று இலகுவாகப் பேசுகின்றீர்களா-" என்று பூர்ஜெஸிடம் கேட்டதற்கு அவர் "ஏறக்குறைய முன்பு எப்படிப் பேசினேனோ அதேபோன்று தமிழில் பேசுகின்றேன். நான் தமிழில் அறிவுரை எழுதி வாசிக்கின்றேன். மேலும் நான் திருமறைக் கொள்கைகளைத் தமிழில்தான் போதிக்கின்றேன்.

தமிழ் மொழி சமஸ்கிருதத்திலிருந்து வேறுபட்ட மொழி. 1719ஆம் ஆண்டு மார்ச் திங்கள் 23ஆம் நாள் எழுதிய கடிதத்தில்,

> "தமிழ் சமஸ்கிருதத்திலிருந்து சில வார்த்தைகளைக் கடன் வாங்கியுள்ளது. எனினும் கவிஞர்கள் அவ்வார்த்தைகளை இன்று தூய தமிழாக்கிக் கவிதை புனைகின்றனர்".

என்று கூறியுள்ளார்.

1721ஆம் ஆண்டு சனவரி 12ஆம் தேதி எழுதிய கடிதத்தில் கீழ்க்காணுமாறு கூறியுள்ளார்:

> "தமிழ் மொழி கற்றுக் கொள்ள அதிகக்கடின உழைப்புத் தேவை. கீப்ரு மொழியைக் கற்பதைவிடத் தமிழைக் கற்பதில் சிரமமும் களைப்பும் அதிகம்."

என்று கூறியுள்ளார்.

பூர்ஜெஸ் அடிகள் தமிழகத்தில் உள்ள அனைத்துப் பகுதிகளிலும் பணியாற்றியுள்ளார். சென்னை, திருச்சிராப்பள்ளி, கோரமண்டல்பகுதி, மதுரை, திருநெல்வேலி ஆகிய இடங்களில் பணியாற்றிய போது பல்வேறு தரப்பட்ட மக்களைச் சந்தித்து அவர்களோடு உரையாடியுள்ளார். இவர் மக்கள் பேசுவதை மிக உன்னிப்பாகக் கவனித்து அகராதி எழுதுவதற்காகக் குறிப்புகள் எடுத்தார். பின்னர் ஒரு பெரிய அகராதியைத் தொகுத்து எழுதினார். அவர் படைத்த நான்கு அகராதிகளும் அதாவது 1.பிரெஞ்சு-தமிழ் அகராதி (1724) 2. இலத்தீன்-தமிழ் அகராதி (1710 தன் சொந்த உபயோகத்திற்காக எழுதியது) 3. தமிழ்-இலத்தீன் அகராதி (1731) 4. தமிழ்-பிரெஞ்சு அகராதி

ஆகியவை பிரான்ஸ் நாட்டின் தலைநகரான பாரீசில் உள்ள தேசிய நூலகத்தில் உள்ளன. அகராதி தொகுப்பாளர்களான முசேயும், துப்புயியும் இவ்வகராதிகளைப் பயன்படுத்தினர்.

## கான்ஸ்டன்டைன் ஜோசப் பெஸ்கி, சே.ச. (C.J.Beschi S.J. 1680-1747)

இத்தாலிய நாட்டிலுள்ள வெனிஸ் மாநிலத்தில் காஸ்திவியோனே தெல்லோ ஸ்டிவியரே ஊரில் 1680ஆம் ஆண்டு நவம்பர் மாதம் 8ஆம் நாள் புகழ் மிக்க வீரரும் முனைவருமான கவுதியோசோ பெஸ்கிக்கும், அவரது மனைவி எலிசபெத்துக்கும் மகனாகக் கான்ஸ்டன்டைன் ஜோசப் பெஸ்கி பிறந்தார். இவர் உரோமை நகரில் கல்லூரிப் படிப்பை முடித்துவிட்டுத் தமது 18வது வயதில் 1698ஆம் ஆண்டு அக்டோபர்த் திங்கள் 21ஆம் நாள் இயேசு சபையில் நவசந்நியாசியாகச் சேர்ந்தார். அதன்பின்பு மூன்று ஆண்டுகள் தத்துவ இயல் கற்றபின் நான்கு ஆண்டுகள் இறையியல் பயின்றார். அதையடுத்து 1709இல் குருவாகத் திருநிலைப்படுத்தப் பட்டார்.

1710ஆம் ஆண்டு பெஸ்கி அடிகள் இந்தியாவில் தமிழகத்திலுள்ள மதுரைப் பணித்தளத்தில் பணியாற்ற வேண்டிப் போர்ச்சுக்கல் நாடு சென்று அங்கிருந்து இந்தியா வந்து சேர்ந்தார். இவர் தமது 30 வது வயதில் தமிழ் படிக்க ஆரம்பித்தார். 1711இல் மதுரைப் பணித்தளத்திற்கு வந்த பொழுது முனிவரது தமிழ் அறிவு குறைவே. எனினும் எவ்வளவு கருத்தோடும், கடின உழைப்போடும் தமிழைக் கற்பதில் ஈடுபட்டார் என்றால் நான்காண்டுகளில் தமிழை நன்கு கற்றதோடு அதில் கவிபாடும் திறமையும் பெற்றார். இதற்கு முனிவருடன் பணிபுரிந்த பூர்ஜேஸ் அடிகள் 1715ஆம் ஆண்டு எழுதிய ஆண்டறிக்கை சான்று பகர்கின்றது. 'முனிவர் வாழ்க்கை' என்ற நூலில் அவரது தமிழ்க் கவிதை பற்றி,

> ''தமக்கு எதிர்பாராமல் கிடைத்த வாய்ப்பைப் பயன்படுத்திப் பெஸ்கி அடிகள் தமிழில் கவிதை இயற்றும் பயிற்சியில் ஈடுபட்டார். இந்நாட்டில் செய்யுளுக்குள்ள செல்வாக்கு வேறு எதற்கும் இல்லை. இதில் ஒரு சில மாதங்களில் இவர் கண்ட முன்னேற்றம் இப்பணித்தளத்தில் துவக்கத்திலிருந்து உழைத்த எவரும் கண்டதில்லை. இதன் பலனாக மிக நேர்த்தியான தமிழ்க் கவிதைகளை இயற்றுகிறார். இதனினும் கடினமானது என்ன வென்றால் பழங்காலப் புலவர்களின் படைப்புக்களை மிகவும் பயனுள்ள வகையில்

கற்றிருக்கிறார். இவர்களிடமிருந்து அழகான மூதுரைகளை எப்பொழுதாவது தேர்ந்தெடுத்துத் தொகுக்க முடியும். இப்புலவர்களையே கண்மூடித்தனமாக நம்பும் இம்மக்களிடையே அம்மூதுரைகள் நம் மதத்திற்கும், நல்லொழுக்கத்திற்கும் சிறந்த சான்றாக அமையும். ஆனால் அது கடினமான வேலை. ஏனெனில் தமிழ்க் கவிதைகள் விளக்கமின்மையும், தெளிவின்மையும் உடையன. எளிதில் விளங்குவதைக் கவிதை என்று எவரும் ஏற்றுக் கொள்வதில்லை. தமிழ்க் கவிதை பழைய, புதிய ஐரோப்பியக் கவிதைகளினின்றும் மிகவும் வேறுபட்டுள்ளது என்று மேல்வாரியாகக் கூறலாம். நம்மிடம்போல் அவர்களிடம் பலவகைப்பட்ட செய்யுள்கள் இருக்கின்றன. இலத்தீன் மக்களிடையே ஹீராயிக், அல்கியிக், சாப்பிக் (Heroic, Alcaic, Sapphic) முதலிய செய்யுள் வகைகள் இருப்பதுபோல் தமிழர்களிடையே வெண்பா, கலித்துறை, வண்ணம், விருத்தம் போன்றவையும் அவற்றின் இனங்களும் இருக்கின்றன. ஓரடி என்பது நமது அடிபோல் இல்லாமல் மேனாட்டார் சீரை, அடி என்கின்றனர். ‘அடி’ என்று தமிழ் கூறுவதை மேநாட்டார் வரி என்கின்றனர். குறில், நெடில் எழுத்துக்களும், தொடக்கமும் இறுதியும் கவனிக்கப்படுகின்றன. மேலும் செய்யுளை வாசிப்பதைக் காட்டிலும் பாடுவதே மரபு. ஒவ்வொரு வகைச் செய்யுளுக்கும் அதற்குரிய பண் இருக்கிறது. ஆகவே எத்தகைய செய்யுள் என்று அறிந்ததும் எந்தப் பண்ணில் பாடவேண்டும் என்று தெரியும்’’.

முனிவர் வாழ்க்கை, லியோ பெஸ் ப. 67.

பெஸ்கி அடிகள் மறைப்பணியாற்றிய இடங்கள்: காமநாயக்கன்பட்டி, குருக்கள்பட்டி, வரதராசன்பேட்டை என்ற ஐயம்பட்டி, ஆவூர், மதுரை, மறவநாடு, வடுகபட்டி ஆகிய இடங்களில் பங்குத் தந்தையாக இருந்து திருமறை போதித்து வந்துள்ளார். எனினும் அடிகள் தொடர்ந்து பல்லாண்டுகள் பணியாற்றிய இடம் திருமானூருக்குக் கிழக்கேயும், ஏலக்குறிச்சிக்கு வடக்கேயுமுள்ள திருக்காவலூர். இலத்தீனிலும், தமிழிலும் முனிவர் இயற்றி வெளியிட்ட பல அரிய நூல்களுள் பெரும்பாலானவை இங்கிருந்து வந்தவை. தந்தை எழுதிய பெருங்காப்பியமான தேம்பாவணியும் இங்கிருந்து வந்திருக்கலாம்.

**வீரமாமுனிவரது இறுதி வாழ்க்கை**

தமிழுக்கும், தமிழ் மக்களுக்கும் சிறந்த பணியாற்றி வந்த முனிவர் வாழ்க்கையில் 1742இல் ஒரு பெரிய திருப்பம் ஏற்பட்டது. அந்த

ஆண்டில் இவர்தம் காவலரும் கொடையாளியுமான சந்தா சாகிபு தோல்வியுற்றது முனிவரை வெகுவாகப் பாதித்தது. சந்தா சாகிப்பின் எதிரிகள் இவரைப் பிடித்துத் துன்புறுத்தி வந்தனரோ, அல்லது வேறு என்ன நடந்ததோ தெரியவில்லை. அன்போடு தாம் கண்காணித்து வந்த மக்களையும், தாம் படைத்த எண்ணற்ற நூல்களையும் விட்டுவிட்டு மறைவாகக் கடற்கரைக்கு விரைந்து செல்ல வேண்டிய நெருக்கடி அவருக்கு ஏற்பட்டது. அங்குச் சென்றவர் சாகும் வரையில் மதுரை மறைப் பணித்தளத்திற்குத் திரும்பவில்லை. கடற்கரையில் 1745 வரை பணிபுரிந்தபின் 1746-47 ஆண்டுகளைக் கேரள நாட்டிலுள்ள அம்பலக் காட்டில் அமைந்த குருமடத்தில் செலவழித்து 1747ஆம் ஆண்டு பெப்ருவரி நான்காம் நாளில் தமது 67 ஆம் வயதில் உயிர் துறந்தார். முனிவர் 1746-47 ஆண்டுகளில் கேரள நாட்டு அம்பலக்காட்டில் வாழ்ந்தார் என்பதையும், அங்கே மரணமடைந்தார் என்பதையும் அக்கால அதிகாரப்பூர்வமான அறிக்கையின் வாயிலாக உறுதியாக அறியலாம். முனிவர் பிறந்த இத்தாலிய மண்ணில் சிறப்பான பாராட்டுக்கள்: வீரமாமுனிவர் தமிழுக்கு ஆற்றிய அரும் பெரும் தொண்டும், தமிழ் மக்களைக் கண்போல் காத்தும், அவர்களை உண்மையான கிறித்துவ விசுவாசத்தில் நிலைத்து நிற்கப் பல மறை இலக்கியங்கள், உரைகள், சொற்பொழிவுகள் எழுதியும் சிறந்த முறையில் பணியாற்றி வந்துள்ளார். இதை உணர்ந்து ''ஈன்ற பொழுதில் பெரிதுவக்கும் தன்மகனைச் சான்றோன் எனக் கேட்ட தாய்'' என்றபடி 1980-இல் வீரமாமுனிவர் பிறந்த மூன்றாம் நூற்றாண்டை அவர் பிறந்த ஊர் மக்கள் சிறப்பாகக் கொண்டாடினர். அப்போது முனிவர் சிலை ஒன்றை நிறுவி அவர் பெயரால் பதக்கம் ஒன்றும், அஞ்சல் முத்திரையும் வெளியிட்டனர். அம்மக்கள் முனிவரைத் ''தமிழ் மொழியின் தந்தை'' (Il Dante della lingua Tamil) என்றழைத்து அத்தகையப் பெரும்புலவரைத் தாம் தமிழுக்கு அளித்தது குறித்துப் பெருமைப்பட்டனர்.

**வீரமாமுனிவர் பன்முகக் கலைஞர் - இலக்கண ஆசிரியர்**

கொடுந்தமிழ் அல்லது பேச்சுவழக்குத் தமிழுக்கு இலத்தீன் மொழியில் ஓர் இலக்கணமும், செந்தமிழுக்குத் தமிழில் உரையோடு கூடிய தொன்னூல் விளக்க நூலும், இலத்தீனில் 'செந்தமிழ் இலக்கணம்', 'திறவுகோல்' என்ற இரண்டோடு மூன்று இலக்கண நூல்களையும் இயற்றினார். அவைகளை மேனாட்டு இலக்கண நூல்களோடு ஒப்பிடுகிறார். நம் நாட்டில் வழங்கிய பல இலக்கணங்களைப் பயின்று அவற்றின் பொருளைச் சுருக்கமாகவும், தெளிவாகவும் கூறியிருக்கின்றார். மேநாட்டார் முனிவர் எழுதிய இலக்கணத் துணைகொண்டு கொடுந்தமிழையும், செந்தமிழையும் எளிதில் கற்றனர். நாட்டில் உள்ள இலக்கணங்கள் எல்லாம் அவர் காலத்தில் செய்யுள் வடிவில்

அமைந்திருந்தன. ஆதலால் அவை பொது மக்களுக்கும் அயல் நாட்டாருக்கும் பயன்படவில்லை.

### அகராதி தொகுத்த ஆசிரியர்

வீரமாமுனிவர் தொகுத்ததாகக் கருதப்படும் அகராதிகள் வருமாறு: 1.சதுரகராதி 2.தமிழ்-இலத்தீன் அகராதி 3. போர்ச்சுக்கீசியம்-இலத்தீன்-தமிழ் அகராதி 4. தமிழ்-பிரெஞ்சு அகராதி 5.பிரெஞ்சு-தமிழ் அகராதி ஆகியவை. வீரமாமுனிவருக்குமுன் தமிழில் அகராதி இல்லை. அகராதியின் உள்ளடக்கத்தில் அகராதி என்ற பெயரே வீரமாமுனிவர் ஏற்படுத்தியதுதான். எனினும் மனப்பாடம் செய்யப் பெரும்பாலும் செய்யுளில் அமைந்த நிகண்டுகள் பல இருந்தன. மேலும் தமிழ்-போர்ச்சுக்கீசியம் போன்ற இரட்டை மொழி அகராதி பலவற்றை முனிவருக்கு முன்னரே பிரயோன்சா போன்ற மேல்நாட்டவர் தொகுத்துள்ளார்கள். முனிவர் இயற்றிய அகராதி அனைத்திலும் சிறந்தது தமிழ்-இலத்தீன் அகராதியாகும். மேலும் முதல் முதலாகத் தமிழில் அமைந்த இச்சதுரகராதியால் முனிவர் 'அகராதியின் தந்தை' என்ற பெயரும் பெற்றுள்ளார்.

### நகைச்சுவை நூல் எழுதும் ஆசிரியர்

முனிவர் காலத்தில் தமிழ் பயில்வோருக்கு நல்ல பாடப் புத்தகங்கள் இல்லை. இக்குறையை நீக்க, 'பரமார்த்த குரு' என்ற நூலைக் கொடுந்தமிழுக்கு முன்மாதிரியாகவும், தேம்பாவணியிலிருந்து எடுத்த வாமன் கதையைச் செந்தமிழ்ப் பாடமாகவும் எழுதினார். அயல் மொழியைப் பயிலும்போது ஏற்படும் சோர்வு, மனத்தளர்ச்சியைப் போக்க நகைச்சுவையோடு கூடிய பரமார்த்த குரு கதையை எழுதியதாகச் சொல்கிறார். இவ்விரு பாடப் புத்தகங்களும் மாணவருக்கு எளிதில் விளங்கும் வண்ணம் தமிழை ஒட்டித் தாம் அமைத்த இலத்தீன் மொழிபெயர்ப்பை இரண்டு பாடங்களோடும் இணைத்திருக்கிறார்.

### எழுத்துச் சீர்திருத்தம் செய்த ஆசிரியர்

முனிவர் காலத்தில் தமிழ் நெடுங்கணக்கு தெளிவாய் அமையவில்லை. ஏடுகளிலும், கல்வெட்டுகளிலும் மெய்யெழுத்து புள்ளி பெறவில்லை. எகர ஒகரங்களில் குறில் நெடில் வேறுபாடு குறிக்கப் பெறவில்லை. அகர நெடிலைச் சுட்டும் காலுக்கும், ஒகர ஓகார உயிர்மெய்யில் வரும் காலுக்கும், ரகர மெய்க்கும் உயிர்மெய்க்கும் வேறுபாடு இல்லை. நான்கும் ஒரே வடிவில் அமைந்திருந்தன. தமிழ் தெரியாதவர்களுக்கு இந்நிலை எத்தகைய தொல்லை அளித்தது என்பது சொல்லத் தேவையில்லை. தேம்பாவணி முதலிய நூல்கள் எழுதிய பிறகு தமக்கிருந்த செல்வாக்கைப் பயன்படுத்தி எகர ஒகரங்களில் சுழித்து

வேறுபாடு காட்டினார். மேலும் ரகரம் புள்ளி பெற, ரகர உயிர்மெய் கீழே வளைவு பெற்றது. கால் முன் உள்ளபடி விடப்பட்டது.

**பஞ்சாங்கம் அமைத்த ஆசிரியர்**

தமிழ் மக்கள் பஞ்சாங்கத்தைப் பார்க்காமல் எதையும் செய்வதில்லை. ஆகவே பஞ்சாங்க அறிவு அவர்களைக் கண்காணித்த வேதியருக்குத் தேவைப்பட்டது. வாக்கிய சித்தாந்த பஞ்சாங்கத்தை முனிவர் நன்கு ஆராய்ந்து, மேல்நாட்டுக் கிரகோரியன் நாள்காட்டியுடன் ஒப்பிட்டு, நூலொன்று எழுதி, ஒன்றிலிருந்து அதைக் கணிக்கும் முறையைத் தெரிவிக்கின்றார். மேலும் தமது தமிழ்-இலத்தீன் அகராதியில் தமிழ் மாதம், வருடம், நட்சத்திரம், இராசி முதலியனவற்றுக்கு நல்ல விளக்கம் தருகின்றார். தமது நூல்களிலும் இத்தகைய பஞ்சாங்க வழக்கைக் கையாண்டுள்ளார். சிறப்பாகச் சதுரகராதியை எழுதிய நாளைப் பஞ்சாங்க முறையில் தனிச் செய்யுள் ஒன்றில் சுட்டுகிறார்.

**வீரமாமுனிவர் ஒரு கவிஞர்**

3615 பாடல்கள் கொண்ட தேம்பாவணி என்ற பெருங்காப்பியத்தையும், கித்தேரியம்மாள் அம்மானை, திருக்காவலூர்க் கலம்பகம், அன்னை அழுங்கல் அந்தாதி, அடைக்கல மாலை, வெண்கலிப்பா, தேவாரம் (கருணாம்பரப் பதிகம்) வண்ணம் முதலிய சிற்றிலக்கியங்களையும் எண்ணற்ற தமிழ்ப் பாடல்களையும் பாடியுள்ள வீரமாமுனிவர் தலை சிறந்த கவிஞர் என்பதில் எள்ளளவும் ஐயமில்லை.

**வீரமாமுனிவர் ஒரு தமிழாசிரியர்**

தமிழ் ஆசிரியராக முனிவர் ஆற்றிய பணிகள் யாதென்றால் அவர் இலக்கணம் இயற்றியவர், அகராதி தொகுத்தவர், பாடநூல் எழுதியவர், எளிய இனிய உரைநடையும், நகைச்சுவையுடன் கூடிய சிறுகதையையும் தோற்றுவித்தவர். சோதிட அறிஞர். எழுத்தைச் சீர்திருத்தியவர். இத்தோடு நெடுங்கணக்கைச் சீர்திருத்தியும், நூல்களை மொழிபெயர்த்தும் தமிழ் பயிலும் மாணவருக்குச் சிறந்த ஆசிரியராக முனிவர் திகழ்ந்தார். மேலும் கார்கம் அடிகள் அவரிடம் தமிழ் கற்று வந்தார் என்றும், முனிவரினும் சிறந்த தமிழ் ஆசிரியர் கிடைப்பதரிது என்றும் பூர்ஜேஸ் அடிகள் 1721 சனவரித் திங்கள் 12ஆம் நாள் நண்பர் சூசியேவுக்கு எழுதுகிறார்.

**மொழிபெயர்ப்பாளர்**

தமிழ் இலக்கியத்தில் தனிச்சிறப்பு வாய்ந்த திருக்குறளைப் படித்துச் சுவைக்குமாறு மொழிபெயர்ப்பு, பதவுரை, விளக்கவுரை முதலியன தந்து உதவுகிறார். இதேபோலத் தாவீது முதல் சங்கீதத்தைக் கலிவெண்பாவில் இலத்தீனிலிருந்து தமிழில்

மொழிபெயர்த்திருக்கின்றார். காட்சியாகமத்தில் வரும் 9, 1-12 இலத்தீன் பகுதியை லுத்தேரினத்தியல்பில் அகவல் பாவாய்த் தமிழில் பாடியிருக்கின்றார்.

அன்றியும் திறிதேந்து பொதுச் சங்கம் இயற்றிய விசுவாசப் பிரமாணத்தை, வேத விளக்கம் பதினெட்டாம் அதிகாரத்தில் இலத்தீனிலிருந்து தமிழில் மொழிபெயர்த்துத் தந்திருக்கின்றார். பரமார்த்த குருவின் கதையும், வாமன் கதையும் இலத்தீனில் மொழியாக்கம் பெற்றமை இங்கு நினைவு கொள்ளத்தக்கது. மேலும் இவர் இயற்றிய தமிழ்-இலத்தீன், போர்ச்சுக்கீசியம்-பிரெஞ்சு அகராதிகளில் ஒவ்வொரு தமிழ்ச் சொல்லுக்கும் பிறமொழியில் மொழிபெயர்ப்பு வருகிறது.

தமிழைப் படித்து இன்பம் கண்ட முனிவர், பிறரும், சிறப்பாக மேல்நாட்டார் தமிழை அறிந்து சுவைக்கும்படி இலக்கணம், அகராதி, பாடநூல் முதலியவற்றை எழுதியதோடு திருக்குறளை அக்காலத்தில் பொதுமொழியாயிருந்த இலத்தீனில் மொழிபெயர்த்து அதற்கு விளக்கவுரையும் அளித்துள்ளார். இது மட்டுமின்றித் தமிழ் மக்களும் அதை நன்குணர, 208 பாடல்களைத் தேர்ந்தெடுத்து அவற்றிற்கு எளிய உரை எழுதியிருக்கிறார். இலக்கிய இலக்கணம் எழுதியதோடு தமிழ் இலக்கியத்தைப் பரப்பும் வேலையிலும் ஈடுபட்டிருந்தார்.

**பன்மொழி வித்தகர்**

1822ஆம் ஆண்டு வீரமாமுனிவரின் வாழ்க்கை வரலாற்றை முத்துசாமிப்பிள்ளை தமிழில் எழுதினார். அந்நூல் 1840இல் ஆங்கிலத்திலும் 1843இல் தமிழிலும் அச்சானது. அதில் அவர்

> "வீரமாமுனிவர் தமது ஜென்ம தேசத்திற்றானே தமது சுய பாஷையாகிய இத்தாலிய பாஷையோடு எபிரே, கிறீக்கு, லத்தீன், போர்ச்சுக்கீசு ஆகிய அநேக பாஷைகளிலே தேர்ந்த பாண்டித்தியராய் இருந்தன்றியும், இந்து தேசத்துக்கு வந்தபின்பு சமஸ்கிருதமும் தெலுங்கும் படித்துப் பற்பல அரிய நூற்களைச் செய்தார். தெலுங்கு பாஷைக்கு லத்தீனிலே வியாகரணமும் செய்தார். திருச்சிராப்பள்ளிக்கு நவாப்பாய் இருந்த சந்தா சாகிப்பைத் தாம் சந்தித்துப் பேசவேண்டுமென்று பார்சும், இந்துஸ்தானியும் மூன்று மாதத்திற்குள்ளாகப் படித்தார்"

என்று கூறுகிறார். ஆகவே முத்துசாமி பிள்ளையவர்கள்படி வீரமாமுனிவருக்குப் பத்து மொழிகள் தெரிந்திருக்கின்றன. ஆனால் இதை முனைவர் எஸ்.இராசமாணிக்கம் அடிகளார் மறுத்து,

“முனிவருக்குத் தெரிந்த மொழிகள் தாய்மொழி இத்தாலி, முனிவர் எழுதிய நூல்களில் பாதி இலத்தீன் மொழியிலும், விவிலியத்தின் முதற் பகுதியாகிய பழைய ஏற்பாடு எபிரேய மொழியில் இருந்ததால் அதைக் கற்றிருக்க அதிக வாய்ப்பிருந்திருக்கிறது என்பது உறுதி. மேலும் வீரமாமுனிவர் மறைப் பணியாற்றிய தளத்தில் போர்ச்சுக்கீசியம் அதிகாரப்பூர்வமான மொழியாகப் பயன்பட்டு வந்தது. முனிவர் அம்மொழியில் அகராதி முதலிய நூல்கள் எழுதியுள்ளார். ஆனால் பார்சும், இந்துஸ்தானியும் கற்றதற்கு எவ்விதச் சான்றும் இல்லை. மேலும் முனிவரது தெலுங்கு அறிவுக்கோ, சமஸ்கிருத அறிவுக்கோ தக்க சான்றுகள் இல்லை. முனிவர் வேறு சில மொழிகளை அறிந்திருக்க வேண்டும். பிரெஞ்சு மொழியில் அகராதி இயற்றியிருப்பதால் அது அவருக்குத் தெரிந்த மொழி. மேலும் போர்ச்சுக் கீசியத்தை ஒட்டி இஸ்பாஞ்ஞ மொழி அமைந்திருப்பதாலும், முனிவர் காலத்தில் (1680-1747) போர்ச்சுக்கல் இஸ்பாஞ்ஞ நாட்டோடு ஒரே நாடாக 1680 தொடங்கி 1740வரை இணைந்திருந்ததாலும், இஸ்பாஞ்ஞ மொழியே ஆட்சி மொழியானபடியாலும் அதை முனிவர் அறிந்திருக்க வேண்டும். ஆக மொத்தம் கணக்கிடுங்கால் வீரமாமுனிவருக்குத் தெரிந்த மொழிகள் என்று உறுதியாகக் கூறக்கூடியவை. இத்தாலி, இலத்தீன், கிரேக்கம், எபிரேயம், போர்ச்சுக்கீசியம், பிரெஞ்சு, இஸ்பாஞ்ஞம், தமிழ் என்று எட்டு மொழிகள் ஆகும்”.

**கல்வியாளரும் ஆசிரியரும்**

திருமறைத் தொண்டர்களுக்கு உறுதுணையாய் இருந்து பணியாற்றிய வேதியர் அல்லது உபதேசிமார்களுக்காக ஒரு பயிற்சிப்பள்ளி நிறுவினார். அவர் மேற்கொண்ட பணியில் சிறந்து விளங்கும்படி வீரமாமுனிவர் ‘வேதியர் ஒழுக்க நூலை’ எழுதியதோடு ‘ஞான உணர்த்துதல்’ என்ற தியான நூலையும் எழுதினார். அவர்கள் கல்வியிலும் சிறந்து விளங்கத் ‘தொன்னூல் விளக்கமும்’ அதன் உரையும் எழுதியபின் ‘சதுரகராதியும்’ தொகுத்துத் தந்து அவர்களுக்குச் செந்தமிழைக் கற்றுத்தந்தார்.

**முனிவரின் சுமூகச் சமூகத் தொடர்பு**

முனிவர் தமது அறிவுத் திறனாலும், பிறரோடு பழகத் தெரிந்த பண்பாட்டினாலும் பெரிய பதவியில் உள்ளவர்களோடும்,

அரசர்களோடும், ஆளுநர்களோடும் நல்ல பழக்கமும் தொடர்பும் வைத்திருந்ததாக ஆண்டறிக்கை மட்டுமின்றித் தரங்கம்பாடியாரும் கூறுகின்றார். இப்பெரியோர்கள் வழியாய்த் தம் கூட்டாளிகளுக்கும், தாம் கண்காணித்து வந்த மக்களுக்கும் பல சலுகைகளை இவரால் பெற முடிந்தது. காட்டு மன்னார் கோவில் அருகிலுள்ள கீழப்புளியம்பட்டு என்ற எய்யலூரில் முகலாய ஆளுநர் உதவி கொண்டு கோவில் கட்டினார். கயத்தாறின் பாளையக்காரரும் வேறிரு பிரமுகர்களும் முனிவருக்கு நண்பர் ஆவர். இராமநாதபுர மன்னரின் தம்பி வடுகநாதத் தேவர் வீரமாமுனிவருக்கு மிகுந்த வணக்கத்தோடு திருமுகம் அனுப்பி, தம்மைப் பார்க்க வரும்படி அழைத்ததாகத் தெரிகிறது. இதுகாறும் காணப்படும் கல்வெட்டு அறிவிப்பது போல ஏலாக்குறிச்சி கோவிலுக்கு இவர் காலத்தில் அதாவது சாலிவாகனம் இராக்ஷத ஆண்டு 26ஆம் நாள் (5.8.1734) அரியலூர் இரங்கப் மழவராயர் பெரிய நஞ்சை நிலத்தை மானியமாக அளித்தார். மேலும் வேலூரில் ஆண்ட நவாப்பைக் கண்டு அவருக்கு அன்பளிப்பும், இயேசு சபைத் தலைவரின் ஆசீர் மடலும் வழங்கியதாகவும், மதுரை பங்காருத் திருமலை நாயக்கரின் தலைமுறையைக் காட்டும் வாரிசு மரம் ஒன்றை தம் சொந்தக் கையால் வரைந்து அளித்ததாகவும், மதுரையில் முதலமைச்சர் பதவியில் இருந்த முதலியாரை வரவேற்றுத் தம் நூல்களைக் காட்டி அவரோடு தொடர்பு கொண்டதாகவும் ஆண்டறிக்கை கூறுகிறது.

திருச்சியை ஆண்டுவந்த சந்தா சாகிபு இவருக்குப் பல உதவிகள் செய்ததோடு ஓராண்டு மதுரைப் பணித்தளத்தில் ஏற்படும் செலவு அனைத்துக்கும் ஈடாக 350 தங்க நாணயங்கள் கொடுத்ததாகத் தெரிகிறது. வீரமாமுனிவர் தத்துவப் போதகரைப்போல் பிராமண சந்நியாசி அல்லது பிராமண ஆச்சாரியார் அல்ல. ஆனால் வீரமாமுனிவரோ ஒரு ராஜரிஷி அல்லது பண்டாரசாமி என்ற வகையைச் சேர்ந்தவர். வேத விளக்க இறுதியில் ''உரோமன் திருச்சபைச் சந்நியாசியாராய்க் காரணக் குருவாகிய தைரியநாத இராசரிஷி குருசாமியார் அவர்கள்'' என்று வீரமாமுனிவர் அழைக்கப்படுகின்றார்.

**சமூகத் தொண்டர்**

அடிகள் மக்களின் ஆன்ம வாழ்வைக் கவனித்ததோடு அவர்களின் உடல் நலத்திலும் அக்கறை கொண்டு அவர்கள் நோய்வாய்ப்படும் நேரத்தில் அவர்களுக்குத் தமக்குத் தெரிந்த மருந்துகளைக் கொடுத்துச் சேவை செய்தார்.

தமிழுக்கும், தமிழ் மக்களுக்கும் அரும் பெரும் தொண்டாற்றிய முனிவரைச் சிறப்பித்து நன்றி உணர்வோடு தமிழக அரசு அவருக்குச் சென்னை மெரினா கடற்கரையில் ஒரு சிலை வடித்துப்

பெருமைப்படுத்தியுள்ளது. ஆனால் கேரளாவிலுள்ள அம்பலக்காட்டில் மரித்து, புதைக்கப்பட்ட கல்லறை திப்பு சுல்தான் காலத்தில் நடந்த வேதகலாபனையில் இடந்தெரியாமல் அழிந்துவிட்டது மிக்க வருந்தத்தக்கதாகும்.

## முனிவர் அருளிய நூல்கள்

**1. செய்யுள்**

1.1. தேம்பாவணி 1726
1.2. அன்னை அழுங்கல் அந்தாதி 1715
1.3. திருக்காவலூர்க் கலம்பகம் 1731
1.4. கித்தேரியம்மாள் அம்மானை 1731
1.5. அடைக்கல மாலை
1.6. வெண்கலிப்பா
1.7. கருணாம்பரப் பதிகம் (தேவாரம்) 1731
1.8. வண்ணம் 1731
1.9. தனிப்பாடல்கள்

**2. உரைநடை**

2.1. வேதியர் ஒழுக்கம் 1727
2.2. வேதியர் ஒழுக்கச் சோதனை
2.3. வேத விளக்கம் 1728
2.4. பேதக மறுத்தல் 1728
2.5. லுத்தேரினத்தியல்பு 1727
2.6. பொது நிருபம்
2.7. திருக்கடையூர் நிருபம் 1727
2.8. பரமார்த்த குரு கதை 1744
2.9. வாமன் கதை 1744
2.10. ஞான உணர்த்துதல் 1720

**3. அகராதி**

3.1. சதுரகராதி 1732
3.2. தமிழ்-இலத்தீன் அகராதி
3.3. போர்த்துக்கீசியம்-இலத்தீன்- தமிழ் அகராதி 1744
3.4. தமிழ்-பிரெஞ்சு அகராதி 1733
3.5. பிரெஞ்சு-தமிழ் அகராதி 1733

**4. இலக்கணம்**

4.1. கொடுந்தமிழ்- இலத்தீனில் 1728
4.2. செந்தமிழ் - இலத்தீனில் 1730
4.3. கிளாவிஸ் - இலத்தீனில்
4.4. தொன்னூல் - தமிழில்

5. உரைகள்

5.1. தேம்பாவணி உரை (1729)

5.2. தொன்னூல் விளக்கவுரை (1730-31)

5.3. திருக்குறளுரை- இலத்தீனில்

5.4. திருக்குறளுரை (208 குறள்) - பேச்சுத்தமிழ் நடையில்

5.5. திருக்குறளுரை (பரிமேலழகர் உரைத் தொகுப்பு)

6. பஞ்சாங்கம்

6.1. இந்தியப் பஞ்சாங்கம் (1733) இலத்தீனில் (கிடையாது)

6.2. தமிழ்ப் பஞ்சாங்கம் (1744) இலத்தீனில் (மறுபதிப்பு)

7. மொழிபெயர்ப்பு

7.1. தமிழ் - இலத்தீன்

7.1.1. திருக்குறள்- 1080 பாடல்கள் 1725

7.1.2. தமிழ்-இலத்தீன் அகராதி

7.1.3. பரமார்த்த குருவின் கதை

7.1.4. வாமன் கதை

7.1.5. இலக்கணங்களில் வரும் மேற்கோள்

7.2. இலத்தீன்-தமிழ்

7.2.1. தாவீது சங்கீதம்-1 (தொன்னூல், கிளாவிஸ், செந்தமிழ்)1730

7.2.2.காட்சியாகமம்-9,1-12 (லுத்தேரினத்தியல்பு)

7.2.3. திறேந்து விசுவாசப் பிரமாணம் (வேத விளக்கம்)

7.2.4.போர்த்துக்கீசியம்-இலத்தீன்-பிரெஞ்சு-தமிழ் அகராதி

8. இலத்தீனில்

8.1. கொடுந்தமிழ் இலக்கணம்

8.2. செந்தமிழ் இலக்கணம்

8.3. கிளாவிஸ்

8.4. கடிதங்கள், அறிக்கைகள்

8.5. முகவுரைகள்

9. எழுத்துச் சீர்திருத்தம்

9.1. கொடுந்தமிழ் இலக்கணத்தில்

9.2. சதுரகராதி முகவுரையில்

9.3. தமிழ்-இலத்தீன் அகராதி முகவுரையில்

9.4. தொன்னூலில்- ஒரு சூத்திரம்

**காப்பியம்-தேம்பாவணி - கதைச் சுருக்கம்.**

பாட்டுடைத் தலைவன் வளன் பிறந்த நாடு சூதேயா. அதன் தலைநகரம் எருசலேம். அவன் பிறந்த ஊர் பெத்திலேம். பெற்றோர் சகோபன், நீப்பி என்போர். இளமையிலேயே தவம் நாடி வளன் கானகம் செல்ல அங்கு வானவன் ஒருவன், முதியவன் வடிவில் தோன்றி, இல்லறம் துறவறம் இரண்டும் இணைந்த தன்னலமற்ற இன்பறத்தை உலகில் மேற்கொள்ளும்படி அறிவுறுத்த, ஊர் திரும்பினான். மரியாள் என்ற பெண்ணை மணந்தான். இருவரும் உடலுறவு கொள்ளாது ஈரறம் இணைந்த வாழ்வு வாழ்கின்றனர். இந்நிலையில் மரியாள் கற்பமுற்று இருப்பதைக் கண்ட வளன் அவளை விலக்கிவிட நினைக்கிறான். கடவுள் வல்லமையால் மரியாள் கருவுற்றதையும், பிறக்க இருக்கும் மகன் மீட்பர் என்பதையும் வானதூதனால் உணர்ந்து, அவளைப் பெருமையோடு ஏற்றுக் கொள்கிறான். தத்தம் கடமைகளை இருவரும் மகிழ்ச்சியோடு செய்கின்றனர். உரோமைப் பேரரசன் கட்டளைப்படி வளன் தன் சொந்த ஊரான பெத்லேமுக்கு மரியாளோடு சென்று பதியப் போனபோது, ஊரில் இடமின்றிக் குகை ஒன்றில் தங்க, அங்குப் பாலன் சேசு பிறக்கிறார். வானவரால் இடையரும், விண்மீனால் மூவேந்தரும் குழந்தை பிறந்ததை உணர்ந்து, அதைக் கண்டு வணக்கம் செலுத்துகின்றனர். யூத முறைப்படி பிறந்த எட்டாம் நாள் சேசு என்று பெயரிடுகின்றனர். மேலும் குழந்தை பிறந்த 40 ஆம் நாள் செருசலேம் கோவில் சென்று குழந்தைக்கும் தாய்க்கும் உரிய காணிக்கை செலுத்தும்போது, அக்கோவிலில் வாழ்ந்த சீமையோனும் அன்னாளும் குழந்தையையும் தாயையும் வாழ்த்துகின்றனர். இதோடு முதல் காண்டம் முடிகிறது.

யூதேயா நாட்டரசன் ஏரோது குழந்தை சேசுவைக் கொல்லக் கருதியதை வானவர் வழியாய் வளன் உணர்ந்து, குழந்தையோடும் தாயோடும் எகிப்து நாடு நோக்கி ஓடுகிறார். நாடு கடந்து செல்லும் குழந்தையின் எளிய நிலை கண்டு வளன் வருந்த, அக்குழந்தையின் தெய்வ வல்லமையைக் காட்ட, எகிப்தில் யூத மக்களை மீட்டு வந்ததையும், சோதோமை அழித்ததையும் மிக்கேல் கூற, நோவே தவிரப் பிறரைப் பிரளயத்தால் அளித்ததைக் கபிரியேல் கூறுகிறார். எரிக்கோவைப் பிடித்து முப்பதுக்கு மேற்பட்ட மன்னரைச் சோகவன் வென்ற வரலாற்றை மிக்காயேல் கூறுகிறார். களரிமாபுரம் வழி சென்றபோது அங்குக் காளமும் தீபமும் தாங்கி நிற்கும் பாவைச் சிலையை விளக்குவதுபோல், கடவுள் துணையாய் முந்நூறு பேரோடு நூற்றிருபதாயிரம் பேரைச் சேதையோன் வென்றதைக் கபிரியேல் கூறுகிறார். மேற்சென்று காசை நகரை அடைந்தபோது அறஞ்செயன் என்ற வானவன் அங்கு வாழ்ந்த சாஞ்சோன் வரலாற்றைக் கூறுகிறார். தொடர்ந்து சென்று சீனாயி மாமலையை அடைந்தபோது சட்சதன் என்ற

வானவன் பத்துக் கற்பனையைக் கொடுத்த வரலாற்றையும், அங்குப் பரந்துநின்று திடீரெனப் பட்டுப்போன மரத்தின் வரலாற்றையும் கூறுகிறான். பேற்சபை என்னும் கொடிய பாலைவன வழி மூவரும் செல்லுகையில், முன் காலத்தில் அங்குத் தங்கிவாழ்ந்த எலியா முனிவர் வரலாற்றைச் சில வானவர் கூறுகின்றனர். அடுத்துச் சித்திரக்கூடம் வந்தபோது அங்குள்ள அதிட்ட முனிவர் வளனை வரவேற்று நீபகன் வரலாறு கூறி, அவன் அமைத்த சித்திரங்களைக் காட்ட, அவை தம் பேர்கொண்ட ஆணரன் வரலாற்றைச் சித்திரிக்கின்றன என்று வளன் விளக்கம் கூறுகிறான். நெடுந்தூரம் சென்றபின் மோயீசனைக் கையால் ஏந்திய கையாறு தென்பட, அதைக் கடந்து சுனை ஒன்றில் திருமகன் ஆடையைக் கழுவ, அந்நீர் பிணிபோக்கும் வரம் பெற்றது. எசித்து நாட்டில் உள்ள எருமுமாபுரம் சென்றபோது, பேய் குடிகொண்ட ஒரு மரம் தாழ்ந்து வணங்கி, நோய்போக்கும் வரம் பெறுகிறது. பெத்லேம்விட்டுப் புறப்பட்ட ஐம்பதாம் நாள் இரவிமாபுரம் என்ற தலைநகரை மூவரும் அடைந்தனர். இங்கு வரும் பல நிகழ்ச்சிகள் விவிலிய நூலில் வரும் கால அட்டவணைப்படி வருகின்றன என்று நினைவுகூரத்தக்கன. எளிதில் எகிப்துநாடு செல்வதற்குப் பதிலாக, திருக்குடும்பம் இக்காரணத்தால் பல இடம் சென்று சுற்றிவந்து எகிப்து அடைகின்றனர். எகிப்து நாடு சேர்ந்ததும் அந்நாட்டுப் பேய்கள் எல்லாம் நரகத்தில் விழுந்தன. அதுபற்றிப் பேயரசன் கூட்டாளிகளுடன் எட்டு மாதம் ஆலோசனை செய்கிறான். இறுதியாய்ப் பேய்கள் திரண்டு வந்து திருக்குடும்பத்தைத் தாக்கப் பார்த்தபோது, ஒன்றும் இயலாமல் மாயப்போர் செய்து, அச்சுறுத்த முயன்றன. திருமகன் சூசையைப் பார்த்து முதல்முறையாக 'அப்பா' என்றழைக்கப் பேய்கள் எல்லாம் நரகத்தில் விழ, அவற்றை விரட்டும் அதிகாரம் சூசை பெற்றார். இரண்டாம் காண்டம் இங்கு முடிகிறது.

யூதர் அரசராகப் பிறந்த சேசுவை ஏரோது அரசன் பிடிக்கத் தவறியபின், ஆலோசனை செய்து பெத்திலேம் வட்டாரத்திலுள்ள ஆண் குழந்தைகளைக் கொன்றான். தெய்வாதீனமாகத் தப்பித்த கருணையன் என்ற முன்னோடி அருளப்பரின் பிறப்பு வளர்ப்பு கூறப்பட்டு, இனி அவர் வேதசாட்சியாய் மரிப்பது திருமகனால் முன்னறிவிக்கப் படுகிறது. அறிவுரை என்று பொருள்படும் ஞாபகப் படலத்தில், நல்வினைப் பலனை விளக்க வளனார் தொபியா வரலாறு கூறுகிறார். அதற்கு எதிராகச் சிவாசிவன் ஊழ்வினை மறுபிறப்புப் பற்றி வினா எழுப்பியபோது அதனை மறுத்துத் தொல்வினைக்கு விளக்கம் தந்து, அவனையும் பலரையும் சத்திய மறையில் சேர்க்கிறார். எகிப்து போர்வீரனும் சிற்றின்பம் நாடுவோனுமாகிய வாமன், சூசையின் போதகத்தால் காமத்தை மேற்கொள்ளும் வழி உணர்ந்து, நரகப் பயங்கரத்தையும் மோட்ச மகிமையையும் கேட்டு நல்வழிப்படுகிறான். சினக்கரன், நசூக்கன்,

எல்லியோதுரன் என்ற மூவர் வரலாறு வழியாகச் சத்திய வேதத்தின் பெருமையைக் குண்ணன், தன் மகனும் சேனாதிபதியுமாகிய நாவகனுக்கு எடுத்துரைக்கிறான். ஏழு ஆண்டுகள் எகிப்தில் தங்கியபின் திருக்குடும்பம் நசரேத் திரும்புகிறது. எகிப்தில் எதிர்காலத்தில் விளங்க இருக்கும் முனிவர்களைப் பற்றியும், வழியில் தெரியும் மோரீய மலை அபிரகாம் நேர்ந்த பலியை நினைவூட்டத் தாம் சிலுவையில் சிந்த இருக்கும் பலி பற்றியும் திருமகன் முன்னறிவிக்கிறார். திருமகனுக்குப் பன்னிரண்டு வயது ஆனபோது மூவரும் எருசலேம் கோவில் சென்றனர். அங்குப் பையனைக் காணவில்லை. பல இடங்களில் தேடி மூன்றாம் நாள் கோவிலில் அறிஞரிடையே கண்டுபிடித்து வீடு திரும்பினர். இத்தகைய எளிய மனையில் திருமகனார் வாழ நேர்ந்ததைக் கண்டு வளனார் வருந்த, எதிர்காலத்தில் நசரேத்து மனை இத்தாலி நாடு சென்று புகழோடு விளங்க இருப்பதையும், அரசர் மனந்திருப்புவதையும், ஏழு அருட் சாதனங்களால் மக்கள் புனிதப்படும் முறையையும் திருமகன் முன்னறிவிக்கிறார். வளனார் தமது 58ஆம் வயதில் வாதநோய் வாய்ப்பட்டு எட்டாண்டு துன்பப்படுகிறார்.

அவர் இறந்து அடக்கமான பிறகு, அவரது உடல் திருமகன் ஆணைப்படி அழியாது இருந்தது. அவரது ஆன்மாவோ, மூதாதையர் தலத்தை அடைந்து, 26 ஆண்டுகள் தான் திருமகனோடு வாழ்ந்ததையும் அவர் விரைவில் மோட்சம் தர வர இருப்பதையும் அறிவித்தது. திருமகன் தமது போதனை சாதனைக்குப்பின் சிலுவையில் மரித்துப் பிதாபிதாக்கள் தலம் அடைந்து, அங்கு இரண்டு நாள் தங்கி, மக்களுக்காகத் தாம் பாடுபட்ட உடலை அவர்களுக்குக் காட்டியபின், அவ் ஆன்மாக்களோடும் தம்மைப்போல் உடலோடும் உயிரோடும் எழுந்த வளனோடும், செத்த மூன்றாம் நாள் உயிர்த்து, மாதாவுக்குக் காட்சி அளித்தார். திருமகன் விருப்பப்படி வளனுக்கு ஏழு வரங்களைச் சுட்டும் ஏழு மணி பதித்த முடியைப் பிதாவாகிய கடவுள் வானுலகில் சூட்டினார். வளன் உதவியால் நஞ்சில் நின்று தப்பித்த உரோமைப் பேரரசன் 'லியோபோல்டு', தமக்குக் கீழ்ப்பட்ட அரசர் அனைவரையும் அழைத்து, தன் தலைநகர் வியன்னாவில் நன்றியறிதலாக நவநாள் கொண்டாடி, சூசையின் திருவுருவத்துக்குப் பூவுலகிலும் முடி சூட்டித் தேர்மீது ஏற்றி ஊர்வலம் வந்து கோவில் பீடத்தில் வீற்றிருக்கச் செய்து, அவரது பாதுகாப்பில் தம் பேரரசை ஒப்படைக்கிறான்.

இந்நூலில் வரும் நஞ்சு பற்றிய செய்தியை வரலாற்று அறிஞர் பலர் கேள்விப்படாததால், வீரமாமுனிவர் எங்கிருந்து அதை அறிந்தார் என்ற விபரம் கிடைக்கவில்லை. எனினும் விழாவை, நேரில் பங்கு கொண்டவர்போல் வருணிக்கிறார். பேரரசன் லியோபோல்டு 1658 முதல் 1705 வரை வியன்னா நகரில் ஆண்ட காலத்தில், வீரமாமுனிவர் வெனிசு

மாநிலத்தில் 1680இல் பிறந்து வாழ்ந்தபின் 1710இல்தான் தமிழ்நாடு வந்தார். அதற்கு முன்னர் அருகே உள்ள வியன்னா சென்று வளனார் முடிசூட்டு விழாவை நேரில் கண்டிருக்கலாம் அல்லது தம் சொந்தக் கற்பனையாற்றலைக் கொண்டு இவ்வாறு வருணித்திருக்கலாம்.

சூசை முனிவரது பண்பையும் செயலையும் சுட்டிக்காட்டுவனவும், அவர்தம் கோலில் மலர்ந்தனவுமாகிய 3615 மலர்களை வானவர் கொய்து, 36 மாலைகளாகப் புனைந்து, அவரது அடியில் வைத்தனர். வைத்ததும் வானவர் கூறியது: 'வளனார் கொடியில் பூத்த இம்மலர்களைப் போல் அவர்தம் மனைவியாகிய கன்னி மரியாள் வாயில் மலர்ந்த சொல்லால் ஆகிய மாலைதான் இத் தேம்பாவணி வரலாறு. இஃதை ஓதுவோர், ஓதக் கேட்போர் வீடு பேறு அடைய, சூசை மரியும், மலர்மாலை போன்ற மகனாரும் அருள் கூர்வர்' என்க. 'சூசை சரிதையை வணக்கத்தோடு கையில் ஏந்தி, வளமிக்க இத்தமிழ்நாடு வாழ்வடைய இங்குக் கொண்டு வந்தேன். (அதாவது அச்சரிதையை 3615 பாடலும் 36 படலமும் கொண்ட தேம்பாவணி என்ற பெயரில் தமிழில் இயற்றினேன்). இந்நூலைச் சேசு மரி சூசை மூவர்தம் அடிமீது படைக்க விரும்பியபோது, என் நூலின் எளிமை என்னைத் தயங்கச் செய்தது. எனினும் சூசைமீது கொண்ட ஆர்வம் மேற்கொள்ள, அவர்களடியில் அதைப் படைத்தேன்' என்ற அவையடக்கத்தோடு தேம்பாவணி முடிகிறது. வீரமாமுனிவர் தேம்பாவணியை 36 படலங்களில் பாடினார். எனினும் அதை மூன்று காண்டமாகப் பிரிக்கவில்லை. நூலை முதல் முதல் பதிப்பித்த துப்புயி அடிகள் 1851, 1852, 1853 என்ற மூன்று ஆண்டுகளில் ஒவ்வொரு பகுதியாக வெளியிட்டார். இதனால், முதல் பகுதி முதல் காண்டமாகவும், இரண்டாம் மூன்றாம் பகுதிகள் முறையே இரண்டாம் மூன்றாம் காண்டங்களாகவும் வெளிவந்தன. பின் வந்த பதிப்புகளும் இதை உணர்ந்தோ உணராமலோ மூன்று காண்டங்களாக வெளிப்பட்டன.

### கித்தேரியம்மாள் அம்மானை-கித்தேரி வரலாறு

வீரமாமுனிவர் இயற்றிய கித்தேரியம்மாள் அம்மானையில் கண்டுள்ளபடி, புனித கித்தேரி லூசித்தானியா நாட்டில் பிராகம் நகரில் காயன் என்ற மன்னனுக்கு மகளாக எட்டுத் தங்கைமாரோடு ஒரே சுரத்தில் கி.பி.120இல் பிறந்தாள். மன்னவனாலும், பிறராலும் என்ன பழி வருமோ என்று ஒன்பது பெண்களைப் பெற்ற தாய் அஞ்சி, சீலதி என்ற பாங்கியை மறைவாக அழைத்துக் குழந்தைகள் அனைத்தையும் எவரும் அறியாதபடி ஓடும்நீரில் எறியும்படி கட்டளையிட்டாள். கீழ்ப்படிவது போலக் காட்டிய சீலதி, அக்குழந்தைகளை ஏற்று, அவ்வூர் மேற்றிராணியாரிடம் ஒப்படைத்துக் கத்தோலிக்கத் திருமறையில் வளர்க்கும்படி வேண்டினாள். குழந்தைகளும் அவ்வாறே வளர்ந்து வந்தன. அக்குழந்தைகளின்

பெயர்கள் வருமாறு: கித்தேரி, பாசீலி, செனேவுரி, வித்தோரி, எப்பேமி, வீரவி, பிறாத்தை, செருமானி, மாரீனை, மார்சியாள் என்பனவாம். இறைபத்தியில் வளர்ந்த அக்குழந்தைகள், தம் பிறப்பின் வரலாற்றை முனிவர் ஒருவரால் அறிந்தபின், அம்முனிவர் அறிவுரைப்படி துறவு வாழ்க்கை மேற்கொண்டனர்.

இவர்களது பெருமையும் சிறப்பும், அஞ்ஞான மதம் மேற்கொண்டவனும் கிறிஸ்துவ மத எதிரியுமான காயன் காதில் விழ, தன் ஆணைக்கு மாறாகக் கிறிஸ்துவ மதம் தழுவிய அக்கன்னியரைக் கொணர்ந்து, அந்த வேதத்தைக் கைவிடுமாறு பணித்தான். சிறுமியர் மறுத்தது மட்டுமன்று; கிறிஸ்து மதத்தின் பெருமையைப் பல சான்றுகளால் நிலைநாட்டினர். அச்செயலில் கித்தேரி சிறந்து விளங்கினாள். அவர்களது அறிவையும் அஞ்சாமையையும் கண்டு வியந்த மன்னன், அவர்கள் யார் என்று வினவியபோது, தன் மக்கள் என்று வியப்போடு கண்டு மகிழ்ந்து, தன் அரண்மனையில் வாழும்படி செய்தான். சில நாள்களுக்குப் பிறகு அவர்கள் அனைவரும் தன்மதம் ஏற்கவேண்டுமென அரசன் வற்புறுத்தினான். உடன்படாத நிலையில், அனைவரும் சிறையில் அடைக்கப் பட்டனர். சிறைவாழ்க்கையைக் கண்டு அஞ்சாது கடவுளை வாழ்த்தி வரும்போது, வானதூதர் சிலர் வந்து அவர்களை விடுவித்தபின், அவர்களைத் தனித்தனியாய்ப் பிரித்துப் பல் வேறு இடங்களுக்கு அழைத்துச் சென்றனர். மறுநாள் அவர்களைக் காணவில்லை. மன்னன் பல இடங்களுக்கு ஆளனுப்பித் தேடுகையில் கித்தேரி மட்டும் அகப்பட்டாள். ஒருத்தியாவது கிடைத்தாள் என்ற நிலையில் கித்தேரிமீது தனியன்பு காட்டினான். கித்தேரியும் அரண்மனையில் வாழ்ந்து வந்தாள். எனினும் அவளுக்குத் தெரியாமல் திருமணம் பேசி, அதற்கு இசைய முப்பது பாங்கியரை அவளிடம் அனுப்ப, அனைவரும் தோல்வியுற்றனர். இதனால் கோபமுற்ற மன்னன் கித்தேரியை மீண்டும் சிறையில் அடைத்தான்.

அங்கே மரியன்னையைப் பார்த்து நெஞ்சுருகத் தன்னையும் தன் கற்பையும் கண்காணிக்குமாறு வேண்ட, மரியாளும் அவள்முன் தோன்றிப் பல தேவ அணிகலன்களால் அவளை அலங்கரித்துப் பொம்பேர் மலை செல்லுமாறும், அங்கு அவள் வெற்றி வாகை சூடி வீடுபேறு அடைவாள் என்றும் உறுதிமொழி கூறியபோது, வானவர்கள் அவளையும் முப்பது தோழிமாரையும் பொம்பேர் மலையில் கொண்டு சேர்த்தனர். அங்கிருந்த கோயிலில் ஆண்டவனை வழிபட்டு அருந்தவ வாழ்க்கை மேற்கொண்டனர். காயனுக்குத் தெரியாவிட்டாலும், கித்தேரியின் துறவறச் சிறப்பு எங்கும் பரவ, பலர் அவளைக் காண வந்தனர். அவர்கள் வழியாய்ப் பக்கத்திலுள்ள புரோசன் என்ற சிற்றரசன், காயனுக்கஞ்சிக் கிறிஸ்தவ மதத்தை விட்டுவிட்டு அஞ்ஞானியானதைக் கேள்விப்பட்டு

மனம் வருந்தினாள். இறைவனை மன்றாடியபின் அவன் அவைக்களம் சென்று, கிறிஸ்தவ மதப் பெருமையை நன்கு எடுத்தோதியபோது, மறுப்புக் கூறமுடியாத புரோசன் கித்தேரியைச் சிறையில் அடைத்தான். இவ்வாறு கித்தேரி மூன்றாம் முறை சிறையுண்டாள். எனினும் வானவன் ஒருவன் அவளை விடுவித்துப் பொம்பேர் மலை சேர்ப்பித்தான். மறுநாள் அவளைச் சிறையில் காணாது கோபமுற்ற புரோசன், படைகள் சூழ அம்மலை ஏறி வருகையில், கை கால் விளங்காமல் பார்வையின்றித் தரையில் விழுந்தான். அவனை ஏவலர் மலையுச்சிக்குச் சுமந்து செல்ல, அவனும் அழுது மனந்திரும்பி, இழந்த கை கால் கண்களைப் பெற்றுத் திருமறையை மீண்டும் தழுவி, கித்தேரி விருப்பப்படி நாட்டை நல்லமுறையில் ஆண்டு வந்தான். மேலும் கித்தேரி சாகும் நாளில் தானும் செத்து வீடுபேறு அடைவான் என்ற முன்னுறுதியும் பெற்றான்.

நிற்க. புரோசனின் மதம் மாறுதலும் அதன் காரணமும் காயன் செவியில் பட்டன. கோபமுற்ற மன்னன் புரோசனைக் கொல்ல உடனே போர்வீரரை அனுப்பினான். மேலும் கித்தேரி தன் மகளானாலும், அவள் இருக்கும்வரை அமைதி இராது என்று எண்ணி அவளுக்கு மாப்பிள்ளையாய்த் தேர்ந்தெடுத்த பரிபாலனையே அனுப்பி, அவளையும் வெட்டுமாறு கட்டளையிட்டான். அவனும் மனமகிழ்ந்து திரளான சேனையோடு பொம்பேர் மலையை வளைத்தான். இஃதறிந்த கித்தேரி மலையிலிருந்து இறங்கித் தன் தோழியரோடு அவனை நோக்கிச் சென்றாள். பரிபாலன் கல்நெஞ்சோடு கித்தேரியைப் பிடித்து அவளது தலையை வெட்டினான். அதேபோல் தோழியரும் வெட்டுண்டனர். வெட்டுண்டாலும் கித்தேரி தன் தலையைக் கையிலேந்திக் கொண்டு மலையுச்சி சென்று, கோயிலின் முன் காணிக்கையாக வைத்த பின்னரே உயிர் நீத்தாள். அன்று கி.பி.130 வைகாசி (மே) 21-ஆம் நாள். இதைக் கண்ட கொலைஞன் பரிபாலன் மனந்திரும்பி மதம் மாறினான். கித்தேரி செத்தபோது, வானம் இருண்டு இடியோடு பெருமழை கொட்டப் படைவீரர் யாவரும் ஓடினாலும் பயனின்றி அவ்விடத்திலேயே அவலமாய்ச் செத்து மாண்டனர். வானவன் ஒருவன் தந்த ஆணைப்படி, துறவி ஒருவர் கித்தேரியின் உடலை எடுத்து மலைமீது அடக்கம் செய்தார்.

விண்ணுலகம் சென்ற கித்தேரி தன் தங்கையரை மறக்காது அவர்களுக்காக இறைவனை வேண்ட, அவர்களும் பல நாடுகளில் திருமறைக்காகத் தொண்டு புரிந்து வானுலகம் சென்றனர். மேலும் அவளது வேண்டுதலால் அவள்தன் பெற்றோரும், பிறந்த போர்த்துக்கல் நாடும் மனந்திரும்புவர் என்றும், போர்த்துக்கல் நாட்டினர் பல நாடு சென்று திருமறையைப் பரப்புவர் என்றும், அவளது நாட்டை ஐந்தாம் ஜான் ஆளும்போது மக்கள் எல்லாம் அவளைப் புகழப் பல அற்புதங்களால்

பொம்பேர் மலையில் ஆள்வாள் என்றும் இறைவன் அவளுக்கு உறுதியளித்தார்.

கி.பி.130 மே 21இல் கித்தேரி உயிர்நீத்தாலும், கடவுள் விருப்பப்படி, கி.பி.1717இல்தான் அவளது பேரும் புகழும் பரவத் தொடங்கிற்று. அவளது வேண்டுதலால் பலர் உடல் நலமும் எண்ணற்ற வரங்களும் பெற, மக்கள் பெருந்திரளாய்ப் பொம்பேர் மலை சென்று அவளை வணங்கியதோடு அம்மலைமீது கித்தேரியின் சுரூபத்தையும் நிறுவினர். பிறந்த நாட்டில் பொம்பேர் மலையில் போற்றப்படுவதுபோலத் தமிழ்நாட்டில் திருக்காவலூரிலும் கொண்டாடப்பெற்று, எண்ணற்ற புதுமைகளையும் வரங்களையும் சரமாரியாய்ப் பொழிந்து வருகிறாள். இத்தகைய கித்தேரி, நம்மையும் தாம் கண்காணித்து வரும் மக்களையும் கண்ணும் கருத்தாய்க் காத்தருளும்படி வீரமாமுனிவர் உருக்கத்தோடு வேண்டிக்கொண்டு அம்மானையை முடிக்கிறார்.

கித்தேரியம்மாளின் வணக்கம் திருக்காவலூரில் தொடங்கியதாகவும், எண்ணற்ற பேர் அவளது வேண்டுதலால் பெரு வரங்கள் அடைந்ததாகவும் முனிவர் 1731ஆம் ஆண்டறிக்கையில் கூறுவதால் 1731இல் இந்நூலைத் திருக்காவலூரில் முனிவர் இயற்றியிருப்பார் எனத் தெரிகிறது. மேலும் அவர் காலத்தில் போர்த்துக்கல் நாட்டை ஆண்ட ஐந்தாம் ஜான் என்ற மன்னனை ‘அருள்ஏந்தும் நாமமுடை ஐந்தாம் கோன்’ என்று கூறி அவன் பெருமையை 9-30-33 பாடல்களில் முனிவர் பாராட்டுகிறார். அருள் அல்லது ஜான் என்ற பேருடைய அம்மன்னன் 1706 முதல் 1749வரை அரசாண்டான். வீரமாமுனிவர் 1710இல் தமிழகம் வந்து 1747இல் கேரளநாட்டில் அம்பலக் காட்டில் மரித்தார். ஆகவே இங்குப் பணிபுரிந்த காலம் முழுவதும் அம்மன்னனே ஆண்டதாலும், அவனே இந்தியாவில் பணிபுரிந்த குருக்களுக்கு உதவி செய்து வந்ததாலும், தனிப்பட்ட முறையில் அவன் பாராட்டுப் பெறுகிறான்.

இந்நூல் 1849, 1876, 1947 ஆண்டுகளில் பதிப்பாகியுள்ளது. இதைத் தூத்துக்குடி புல்வர் சுந்தரம், கித்தேரி வரலாற்றோடும், அரும்பத உரையோடும் 1947இல் பதிப்பித்திருக்கிறார். சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகமும் இந்நூலை 1977இல் வெளியிட்டிருக்கிறது. எனினும் தற்கால முறைப்படி நல்ல பதிப்பும் ஆராய்ச்சியும் தேவைப்படுகின்றன.

## பர்த்தலோமியோ சீகன்பால்கு
## (Dr.Bartholomaeus Ziegenbalg) 1682-1719

ஜெர்மன் நாட்டில் பல்சினிட்சில் பர்த்தலோமியோ கேத்தரினா தம்பதியருக்குத் திருமகனாய்ப் பர்த்தலோமியோ சீகன்பால்கு 1682ஆம்

ஆண்டு ஜூன் 10ஆம் நாள் பிறந்தார். சீகன் பால்குவுடன் பிறந்தவர்கள் ஓர் அண்ணனும் நான்கு சகோதரிகளுமாவர். அவருடைய தாய் நீண்டநாள் நோய்வாய்ப்பட்டு இளம் வயதிலேயே காலமாகிவிட்டார். அன்னையின் மறைவு சீகன்பால்குவின் உள்ளத்தில் ஆழ்ந்து பதிந்து பெரும் தாக்கத்தை ஏற்படுத்தியது. அவர் தொடக்கத்திலிருந்தே உடல் நலக்குறைவுடையவராய் இருந்தார். பின்னர் இவரது தந்தையும் மரணமானார். எனவே சீகன்பால்கு தம்முடைய மூத்த சகோதரியின் பாதுகாப்பில் ஞானத்திலும் அறிவிலும் நல்ல முறையில் வளர்க்கப்பட்டார்.

1694இல் சீகன்பால்கு, காமென்ஸ் பள்ளியில் சேர்ந்து படித்தார். நண்பனின் மூலம் பெற்ற இசையின் மேன்மையும், தியான முறையும் இவ்விளைஞனின் மனதில் ஆழப் பதிந்தன. இவருக்கு என்றும் இணைபிரியா நண்பனாக இருந்தது விவிலிய நூல்தான். இவர் பல்கலைக்கழகப் படிப்பை உதவிப்பணம் பெற்று முடித்தார். டென்மார்க் அரசு சமயப்பணியாளர்களை அமர்த்துவது பற்றிய லூட் கென்னின் கடிதத்தைப் பெர்லினில் பெற்று, தமது உடல் நலமின்மையைப் பொருட்படுத்தாமல் அவ்வழைப்பை ஏற்று, அவருடைய சிறந்த நண்பர் ஹெய்ன்ரிட்ஸ் புளுட்சோவுடன் செல்ல இசைந்தார். நான்காம் பிரடெரிக் டென்மார்க் லூத்தரன் திருச்சபைக்குத் தலைவராய் இருந்த பொழுது 1705ஆம் ஆண்டு நவம்பர்த் திங்கள் 29இல் ''பிரின்செஸ் சோபியா ஹெட்லிகா'' என்ற கப்பலில் சீகன்பால்கு தம்முடைய நெருங்கிய நண்பர் புளுச்சோவுடன் இந்திய நாட்டை நோக்கிக் கப்பல் பயணம் மேற்கொண்டார். 1706ஆம் ஆண்டு ஜூலை 9இல் ஏழு மாதக் கப்பல் பயணத்திற்குப் பின் சமயப் பணியின் மையமான தரங்கம்பாடியை வந்தடைந்தனர். நகரின் மிக ஏழ்மையான பகுதியில் இவ்விரு சமயப்பணியாளர்களும் வாழ்ந்து வந்தனர். தமிழர்களுக்கும், ஐரோப்பியர்களுக்குமிடையே தொடர்பு மொழியாக இருந்தது போர்த்துக்கீசிய மொழியாகும். இம்மொழியறிந்த பால்சன் என்பவர் இவர்கள் போர்த்துக்கீசிய மொழியைக் கற்றுக்கொள்ளும்படி உதவ முன்வந்தார்.

இம் மறைப்போதகர்களுடைய சமயப்பணி விரிந்து பெருக வேண்டுமானால் இவர்கள் தமிழைக் கற்க வேண்டிய கட்டாயச் சூழ்நிலை உள்ளதை உணர்ந்தனர். எனவே அவர்கள் எழுபது வயதான இந்து சமயத் தமிழ்ப்பள்ளி ஆசிரியரைக் கண்டு அவருடைய பள்ளிக் குழந்தைகளுடன் அமர்ந்து தமிழைக் கற்றனர். தமிழ்ச் சிறுவர்களைப் பார்த்து வியந்தனர். சிறுவர்களைப் போலவே மணலில் அமர்ந்து விரைவில் கலைநயமிக்க சிக்கலான அழகிய வடிவுடைய தமிழ் எழுத்துக்களை எழுதினர். அவர்கள் தமிழை விரைவில் கற்று, படிக்கவும்

எழுதவும் பேசவும் தெரிந்து கொண்டனர். பல ஐரோப்பிய மொழிகள் அறிந்தவரும், மொழிபெயர்ப்பாளருமாகிய ஆலப்பன் என்பவரை அழைத்து அதிகச் செலவு செய்தபின் சீகன்பால்கு,

> "குறுகிய எட்டு மாதத்தில் இந்தச் சிறந்த மொழியில் புலமை நிரம்பியவனானேன். பேச்சிலும் எழுத்திலும் பின்பற்ற வேண்டிய புத்தகங்களைத் தேர்ந்தெடுத்தேன். அவற்றைப் பலமுறை எனக்குப் படித்துக் காட்டினர். அதனால் நான் அறியாத சொல்லோ, உச்சரிக்க முடியாத சொல்லோ கிடையாது. தமிழர்களுடன் நான் சரளமாகப் பேச முடிந்தது. என்னுடைய பணிக்கு அவர்களுடைய மொழியையே முழுதும் பயன்படுத்தினேன். தற்பொழுது (1709) என் தாய்மொழியைப் போலவே தமிழும் எனக்கு எளிதாக உள்ளது. கடந்த இரண்டு ஆண்டுகளாக நான் பல நூல்களைத் தமிழில் எழுத முடிந்தது".

என்று கூறுகின்றார்.

1707ஆம் ஆண்டு ஆகஸ்ட் 4ஆம் தேதி சீகன்பால்கு 'புதிய எருசலேம்' என்ற ஆலயத்தைக் கட்டினார். சமயம் கிடைத்த போதெல்லாம் சீகன்பால்கு அருகாமையில் உள்ள நகரங்களுக்கும், கிராமங்களுக்கும் சென்று மறை பரப்பும் பணியில் ஈடுபட்டார். அவரைச் சுற்றிப் பெரும் கூட்டம் கூடியது. அவர் தமிழ் கற்றிருந்ததால் அவரை எல்லோரும் அன்போடு வரவேற்றனர். ஒரு பள்ளிக்கூடமும் திறக்கப்பட்டு அப்பகுதியில் வாழ்ந்த மக்களின் அறிவுக் கண்களைத் திறந்தார். கிறிஸ்தவ சமயத்தைச் சேர்ந்த உள்நாட்டு ஆசிரியர் ஒருவர் அப்பள்ளியைக் கவனித்துக் கொண்டார்.

1714 அக்டோபர் 26இல் சீகன்பால்கு தரங்கம்பாடியிலிருந்து ஐரோப்பாவிற்குச் சென்றார். அவருடன் இரண்டு தமிழ் இளைஞர்கள் சென்றனர். அவர் ஒருவருடன் நாள்தோறும் தமிழில் உரையாடி அம்மொழியை மறவாமல் இருப்பதற்காக ஏற்பாடு செய்து கொண்டார். அவர் சேக்கனிக்குச் சென்று மெர்ஸ்பர்க்கைச் சந்தித்துவிட்டு ஹாலேவுக்குச் சென்றார். அங்கே அவர் ஒரு காலத்தில் தனக்கு மாணவியாக இருந்த மரியா டோரத்தியாவைச் சந்தித்தார். 1715இல் அப்பெண்ணைத் திருமணம் செய்து கொண்டார். அதே வருடம் சீகன்பால்கு தம் துணைவியாருடன் இந்தியா திரும்பினார். அவர் தாம் விட்டுப்போன பழைய ஏற்பாட்டின் மொழிபெயர்ப்பை மீண்டும் தொடர்ந்தார். மறைப்பணியும், இலக்கியப் பணியும் சிறந்த முறையில் ஆற்றிக் கொண்டிருந்தபோது தனது 36வது வயதில் சீகன்பால்கு 1719இல் அகால மரணமடைந்தார்.

## இலக்கியப் படைப்பு

1706இல் சீகன்பால்கு தரங்கம்பாடிக்கு வந்து சேர்ந்த இரண்டு ஆண்டுகளுக்குள் தாம் படைத்த நூல்களை லூட்கெனுக்கு அனுப்பினார். இந்நூல்கள் கையேட்டுப் பிரதிகளாக இன்றும் ஹாலே நகரில் உள்ளன. அவர் இந்நூல்களை நான்கு வகைப்படுத்தியுள்ளார். *முதல் பகுதி:* அவரே எழுதிய 14 நூல்கள் அடங்கியது. *இரண்டாம் பகுதி:* உரோமன் கத்தோலிக்க மறைப்பணியாளர்களால் படைக்கப்பட்ட 21 நூல்கள் அடங்கியது. *மூன்றாம் பகுதி:* இந்துக்கள் தங்களுடைய சமயத்தைப் பற்றி எழுதிய 119 நூல்கள் அடங்கியது. நான்காம் பகுதி: இஸ்லாம் மக்கள் தங்கள் சமயத்தைப் பற்றி எழுதிய 11 நூல்கள் அடங்கியது. சீகன்பால்கு அனுப்பிய இந்து, இஸ்லாம், கிறிஸ்தவ நூல்கள் அன்னாரின் மத நல்லிணக்கத்தை நமக்குக் காட்டுகின்றன.

1708 ஆம் ஆண்டு டாக்டர் சீகன்பால்கு விவிலியத்தின் புதிய ஏற்பாட்டைத் தமிழாக்கம் செய்யத் தொடங்கினார். அவர் அலுவலரான ஹாசியஸ் என்பவரால் பொய்க்குற்றம் சாட்டப் பட்டுச் சிறையில் அடைக்கப்பட்டார். சிறையில் இருந்தபொழுது 23 அத்தியாயங்கள் வரை மொழிபெயர்த்திருந்தார். அவர் எழுதுவதற்கான எழுதுகோலும் காகிதமும் ஜெர்மன் படைவீரர்களால் கொடுக்கப்பட்டன. சிறையிலிருந்து அவர் விடுதலையடைந்த பின்னர் அவர் புதிய ஏற்பாட்டினைத் தமிழாக்கம் செய்யும் பணியை மீண்டும் தொடர்ந்து செய்தார். மொழிபெயர்ப்பு வேலை 1711 மார்ச் மாதம் முடிந்தது. புதிய ஏற்பாடு கிரேக்க மொழியிலிருந்து மொழியாக்கம் செய்யப்பட்டதாகும். ஆனால் அன்னார் தமக்குத் துணையாக இலத்தீன், ஜெர்மன், போர்த்துக்கீசு, டச்சு மொழிகளில் உள்ள விவிலிய நூல்களையும் பல்வேறு விளக்க உரைகளையும் வைத்துக்கொண்டு மொழிபெயர்ப்புச் செய்தார் என்பதை நாம் அறிகின்றோம்.

சீகன்பால்கு 1714ஆம் ஆண்டு அக்டோபர் மாதம் 26ஆம் நாள் தரங்கம்பாடியிலிருந்து ஐரோப்பாவிற்குப் பயணமானார். அதனால் பழைய ஏற்பாட்டின் மொழிபெயர்ப்பு வேலை தடைப்பட்டது. 1715இல் திரும்பவும் தரங்கம்பாடி வந்து சேர்ந்தபின் அவர் நிறுத்தி வைத்திருந்த தமது பழைய ஏற்பாட்டின் மொழிபெயர்ப்பை மீண்டும் தொடர்ந்தார். 1719இல் சீகன்பால்கு அகால மரணமடைந்ததால் அவரது பழைய ஏற்பாட்டின் மொழியாக்கம் தடைப்பட்டுவிட்டது. 1740இல் கடலூர் சமயப் பணியாளர்களுக்கும் தரங்கம்பாடி சமயப் பணியாளர்களுக்கு மிடையே மொழித்தகராறு ஏற்பட்டது. எனவே நீண்ட நாள் போராட்டத்திற்குப் பின்பு திருத்தப்பட்ட சீகன்பால்குவின் மொழிபெயர்ப்பு கைவிடப்பட்டது.

## தமிழ் அகராதி

சீகன்பால்கு தமிழ் அகராதி எழுதத் திட்டமிட்டார். உள்நாட்டு எழுத்தாளர் சொற்களைக் குறித்துக்கொண்டே உச்சரிக்க, இரண்டாண்டுக் காலத்தில் 20,000 சொற்களும் அவற்றின் உச்சரிப்புக்களும் சேகரிக்கப்பட்டன. இவ்வகராதியின் பக்கங்களை மூன்று பத்திகளாகப் பிரித்து ஒரு பத்தியில் தமிழில் எழுதி அடுத்த பத்தியில் உரோமன் எழுத்தில் உச்சரிப்புகளை எழுதி மூன்றாம் பத்தியில் அவற்றின் பொருளை ஜெர்மன் மொழியில் தந்தார். சமயம் சார்ந்த சொற்களைமட்டுமல்லாது வேறு பல நூல்களான வரலாறு, தத்துவம், தெய்வீகம், மருத்துவம், மொழியியல் போன்றவற்றையும் புடித்தார். நான்கு ஆண்டுகளுக்குப் பிறகு இந்த அகராதி 40,000 சொற்களையும், உச்சரிப்புகளையும் கொண்டதாக விளங்கிற்று. இது தரங்கம்பாடி அகராதி (Tranquebar Dictionary) என அழைக்கப்பட்டது.

அடுத்து, சீகன்பால்கு செய்யுட்சொல் அகராதியை அனுபவம் வாய்ந்த கவிஞர்களுடைய உதவியோடு 17,000 சொற்கள் கொண்டதாகத் தொகுத்தார். இரண்டாவது அகராதி திருமறைப் போதனைக்கு அவ்வளவாகப் பயன்படாது என்பதைக் கண்டார். ஆனால் அது எல்லாச் செய்யுள் நூல்களுக்கும் திறவு கோலாகத் திகழ்ந்தது. அதற்கு ஜெர்மன் மொழியில் அட்டவணை தயாரித்தார். செய்யுள் மொழி அன்றாடப் பேச்சு மொழியிலிருந்து பெரிதும் மாறுபட்டுள்ளது என்று அவர் கூறுகின்றார். இந்நூல் ஓலையில் எழுதப்பட்டது.

சீகன்பால்கு செய்யுள் அகராதி ஒன்றும் தயாரித்தார். இது சுமார் 1200 சொற்களைக் கொண்டு அவற்றின் பொருளுக்கேற்பப் பிரிவுகள் வகுக்கப்பட்டு இருந்தது. ஒரு பகுதி கடவுள், மேலுலகம் ஆகிய சொற்களையும் மற்றது மனிதர் பற்றிய சொற்களையும் தன்பால் கொண்டிருந்தது. கி.பி.1929இல் தரங்கம்பாடி அறிக்கை இது பற்றிக் குறிப்பிடினும் அதற்குப்பின் அது பற்றி எதுவும் கேள்விப்படவில்லை. டபிள்யூ.ஜெர்மன் (W.German) என்பவர் உரைநடை அகராதியில் பல சொற்கள் நுழைந்துள்ளன என நம்புகிறார்.

இந்த அகராதியைத் தரங்கம்பாடிச் சங்கம் அச்சேற்றவில்லை. தரங்கம்பாடிச் சங்கம் பெஸ்கியின் அகராதியுடன் இணைக்க வேண்டும் என விரும்பி அனுமதி தருமாறு அவரிடம் கேட்டு எழுதியது. தனியாகவே வெளியிட வேண்டும் என வற்புறுத்திய மயிலாப்பூரில் இருந்த ஆயர் (Bishop) அவர்களிடம் மேல் முறையீடு செய்தது. அச்சங்கம் கிறித்தவ மத சபை வழியாக முயன்றும் ஆயர் கருத்தில் எடுத்துக்கொள்ளவில்லை. அவ்வேண்டுகோளுக்கு மயிலாப்பூர் ஆயர் பதிலே தரவில்லை. ஆனால் பெஸ்கியின் அகராதி கடவுளின் தனித்த நெறியால், ஆகூழால்

தரங்கம்பாடிக்கு வந்து சேர்ந்தது. கி.பி.1741இல் திருச்சியை மகாராஷ்டிரர்கள் கைப்பற்றினர். பெஸ்கியின் வாழ்வே ஆட்டம் கண்டது. அவர் மாறுவேடம் பூண்டு அவருடைய பணிகளை விட்டுவிட்டு ஓடவேண்டியதாயிற்று. அதன் பிறகு சில காலம் கழித்து ஒரு போர் வீரன் தஞ்சாவூரில் இரண்டு பெரிய பனை ஓலைப் புத்தகக் கட்டுகளை விற்க முயன்றான். அவற்றில் ஒன்றைச் சேர்வைக்காரன் வாங்கினான். அக்காட்சியைத் தரங்கம்பாடிச் சங்கப் பாதிரி அழகப்பன் கண்டு அது பெஸ்கியின் அகராதியே என உணர்ந்தான். உடனே தரங்கம்பாடிச் சங்கத்திற்குத் தெரிவித்தான். எனினும் சேர்வைக்காரன் அதனைத் தன்னிடமிருந்து இழக்க விரும்பவில்லை. ஆனால் தன்னிடமுள்ள சில ஓலைகளைப் பார்த்துப் படி எடுக்க முனையும் போது தருவதாக ஒப்புக்கொண்டான். தரங்கம்பாடிச் சபை தான் முயன்றபோது கிடைக்காத இந்த நூல் இப்போது இந்த அளவாவது கிடைத்தமைக்கு மகிழ்ச்சியுற்றது. ஒப்ச் (Obuch) என்பவர் பெஸ்கியின் அகராதியை எழுதத் திட்டமிட்டுத் தரங்கம்பாடியில் ஏற்கெனவே இருந்த ஓலைச்சுவடியையும் கொண்டு செயல்பட்டார். இதைக் கேள்வியுற்ற பெஸ்கி தரங்கம்பாடிச் சபையினரிடம் அவர்கள் பெற்றுள்ள படி குறைபாடு உடையதாயிருக்கும் எனக் குறிப்பிட்டு அதனால் அது அச்சேற்றத் தகுந்த நிலையில் உள்ளதாக இல்லை எனத் தெரிவித்தார். ஆனால் ஒப்ச் கிடைத்த ஒன்றே திருப்தியான நிலையில் இருப்பதாகச் சொல்லி நிறைவு கொண்டார்.

இருமொழிகள் கொண்ட அகராதி: சீகன்பால்கு பாதிரியார் தமிழறிவு மிக்கவராவார். அவர் 1706இல் தரங்கம்பாடிக்கு வந்து தமிழ் உரைநடையில் அகராதி எழுதும் பணியைத் தொடங்கினார். இரண்டாண்டுப் பணியின் விளைவாக மூன்று வேறுபட்ட தலைப்புக்கூறுகளில் 20,000 சொற்கள் கொண்டதாய் அவ்வகராதி ஆயிற்று. முதலில் தமிழ்ச்சொல்; அதை அடுத்து இலத்தீன் எழுத்தில் அதன் உச்சரிப்பு; மூன்றாம் கூறில் ஜெர்மன் மொழியில் அதன் பொருள் என்பன அம்மூன்று கூறுகளாம். அவர் பல்வேறு நூல்களை நுணுக்கத்துடன் துருவிப்பார்த்துச் சமயம், வரலாறு, மொழியியல், மருத்துவம், பொருளாதாரம் பற்றிய இருநூறு நூல்களிலிருந்து குறிப்புகள் எடுத்துள்ளார். இந்நூல் தமிழ் அகர வரிசைப்படி அமையவில்லையாயினும் ஆசிரியர் ஜெர்மன் சொற்றொகுதியைத் தயாரித்துத் தந்து பயனுடையதாகச் செய்துள்ளார். கி.பி.1712இல் அந்நூலில் அனைத்துச் சொற்களும் அகரவரிசைப் படுத்தித் தரப்பட்டுள்ளன. எல்லா மரபுத் தொடர்புகளும் மூல விரிவுகளும் மூலச் சொல்லுடன் குழுப்படுத்தப்பட்டுக் கொடுக்கப்பட்டுள்ளன. இதனால் அகராதியில் 40,000 சொற்கள் சேர்ந்தன. ஆனால் இரண்டாம் தலைப்புக்கூறும் மூன்றாம் தலைப்புக்கூறும் முறையே இலத்தீன், ஜெர்மனில் அமைந்தவை இதுவரை இணைக்கப்படவில்லை.

முழுப்பணியும் பனைஓலையில் மட்டும்தான் இருந்தது. கி.பி.1719இல் சீகன்பால்கு இறந்தார். கி.பி.1726இல் அகராதி தாளில் படியெடுக்கப் பட்டது. அதன்பின் சென்னையிலிருந்த சர்டோரியுஸ் (Sartorius) பாதிரியாருக்கு அந்தத் தாளில் எழுதப்பெற்ற அகராதித் தொகுப்பு அனுப்பப் பெற்றுப் புதிய தமிழ்ச் சொற்களும் இலத்தீன் சொற்களும் இணைக்கப்படும் பணி அவரால் தொடங்கப் பெற்றது. சர்டோரியுஸ், ஒன்பது ஆண்டுகளுக்குப் பிறகு,

> ''நான் மூன்றில் ஒரு பகுதியை முடித்துள்ளேன். இறைவன் காலமும் ஆற்றலும் நல்கினால் இன்னும் இரண்டு ஆண்டுகளில் முழுவதும் முடிக்கக்கூடும்''.

என எழுதியுள்ளார். கி.பி.1737இல்

> ''பணி முற்றுப்பெறும் தறுவாயில் உள்ளது; இலத்தீன் சொற்கள் சேர்ப்புப் பணியை முடித்தாயிற்று''

என கூறிக்கொள்கிறார். மேலும்,

> ''இப்போது இறுதியாக நிறைவு செய்யும் பணியே நிலுவையில் உள்ளது; வரிசையை மேம்படுத்துவதும் சில திருத்தங்கள் அங்கொன்றும் இங்கொன்றுமாகச் செய்வதும், இலத்தீன் சொற்றொகுதியைத் தருவதுமே எஞ்சியுள்ளன''.

என எழுதியுள்ளார். அவர் அகராதிப்பணி முற்றுப் பெறுமுன்பே கி.பி.1738இல் இறந்தமையால் ஜெஸிடர் (Gesiter) மீது அப்பணி விழுந்தது. ஆனால் அவரும் தம் கண் தொல்லை காரணமாக அப்பணியை நிறைவு செய்ய இயலவில்லை.

சீகன்பால்கு எழுதிய தமிழ்-இலத்தீன்-ஜெர்மன் அகராதி தரங்கம்பாடிச் சபையினரால் சோதிக்கப்பட்டு மேம்படுத்தப்பட்டு பின்னால் வந்த பாதிரிமார்களால் தமிழ்-இலத்தீன் அகராதியாக அது மலர்ந்தது. ஆயினும் அது அச்சடிக்கப்படவில்லை. பெப்ரீசியஸ் என்ற கிறித்தவத் தொண்டரிடம் அகராதியைப் பார்த்து எழுதும் பணி ஒப்படைக்கப்பட்டது. கி.பி. 1779க்குள் தமிழ்-ஆங்கில அகராதி அச்சேற்றப்பட்டு முற்றுப் பெற்றது. உடனே ஆங்கிலம்-தமிழ் அகராதியியை அச்சேற்றும் பணி தொடங்கிற்று.

**சமய நூல்கள்**

1708ஆம் ஆண்டு ஆகஸ்ட்டிலேயே சீகன்பால்கு பாதிரியார் ''தமிழ் நூற்றொகை'' நூலை (Bibliotheca Malabaria) எழுதினார். இப்பட்டியலில் இந்திய சமய, தத்துவ நூல்களுள் மூன்று அடங்கியுள்ளன.

அவை ஒரு நூற்றாண்டுக்குப்பிறகு கண்டுபிடிக்கப் பெற்று அச்சிடப்பட்டன. அவை பின்வருமாறு:

1. தமிழர் கடவுள்களின் வரலாறு (சென்னை 1867)
2. தமிழர் சமயம் (ஆம்ஸ்டர்டாம், 1926)
3. சிறு கட்டுரைகள் (ஆம்ஸ்டர்டாம் 1930)

தமிழர் கடவுள்களின் வரலாறு: (Geneology of Malabarian Gods) என்ற நூலில் சீகன்பால்கு கடவுள்கள் பற்றிய ஆயிரக்கணக்கான, அதற்குத் தொடர்பான பொருள்கள் பற்றியும் ஒரு செய்திச் சுருக்கமே கொடுத்துள்ளார். மானிடவியல் (Anthropology) மாணவர் எவருக்கும் இந்நூல் இன்றியமையாது தேவைப்படும் ஒன்று என்பதை மிகக் குறுகிய எதிர்காலத்தில் உணரக்கூடும்.

**தமிழர் சமயம்**

தமிழர் சமயம் பற்றிய சீகன்பால்கின் இரண்டாவது நூல் மிக விரிவான நிலையில் எழுதப் பெற்றுள்ளது. இந்துக்களின் சமயம், இறைமைத் தத்துவம் ஆகியவை பற்றி அவர் மிக நீளமாய் எழுதுகிறார். அந்நூலின் இரண்டாம்பகுதி சடங்குகள், கலை, விருந்து, போர் முதலியன பற்றிப் பேசுகிறது. தென்னிந்தியா பற்றியும், அப்பகுதி மக்கள் பற்றியும் அறிய ஆர்வம் கொண்டுள்ள மானிடவியல் மாணவனுக்கு முதல் நூலைப் போலவே இந்நூலும் மதிப்பிடமுடியாத பயனுடையதாகும்.

**சிறு கட்டுரைகள்**

சீகன்பால்கின் மூன்றாவது நூல் **நீதிவெண்பா, கொன்றைவேந்தன், உலகநீதி** என்ற தமிழ் நூல்களின் ஜெர்மன் மொழி பெயர்ப்பாகும்.

**சீகன்பால்குவின் தமிழ்-இலத்தீன் இலக்கணம்**

இவருக்கு முன் தோன்றிய தமிழ் இலக்கணங்கள் போர்த்துக்கீசிய மொழியில் அமைய, சீகன்பால்கு அதை இலத்தீன் மொழியில் அமைத்தார். சொந்த முயற்சியால் இதை எழுதியதுபோல இவர் கூறினாலும் நூலைத் துருவி ஆராயும்போது தந்தை அந்தோனி தெ புரோயென்சா எழுதிய தமிழ்-போர்த்துக்கீசிய அகராதியையும் அத்தோடு இணைந்து வரும் அருட்தந்தை பல்தசார் டா கோஸ்டாவின் தமிழ் இலக்கணத்தையும் படித்து அவற்றை ஒட்டித் தமது நூலை அமைத்திருப்பது வெளிப்படையாகத் தெரிகிறது.

**நூல் விவரம்**

14+128 பக்கங்களைக் கொண்டது. டென்மார்க் நாட்டில் இவரை அனுப்பி வைத்த அரசனுக்கும், பிற அதிகாரிகளுக்கும் படையலாய்

இந்நூல் அமைகிறது. அதன் நீண்ட முகவுரையில் தாம் தமிழைக் கற்றது பற்றியும் அதில் இலக்கணம் எழுதியது பற்றியும் விவிலிய மொழிபெயர்ப்புச் செய்தது பற்றியும் கூறுவதோடு தமிழ் மொழியின் அமைப்புப் பற்றிச் சுவையான சில கருத்துக்களைக் கூறுகிறார். இந்நூலில் எட்டு அதிகாரங்கள் வருகின்றன. இந்நூல் 1716இல் வெளிவந்தது.

முதல் அதிகாரத்தில் உயிர், மெய், உயிர்மெய் முதலிய எழுத்துக்களைத் தமிழில் தந்து அவை எவ்வாறு உச்சரிக்கப்படுகின்றன என்று இலத்தீன் மொழியில் விளக்குகிறார். மேலும் தமிழ் எழுத்துக்கள் எவ்வாறு எண்களையும் குறிப்பிடுகின்றன என்றும் காட்டுகிறார்.

இரண்டாம் அதிகாரத்துக்கு வாசகம் என்று தலைப்பிட்டு, பல சொற்கள், சொற்றொடர்கள், வாக்கியங்கள் முதலியவற்றை உச்சரிக்க, இலத்தீனில் உச்சரிப்பும் பொருளும் தருகிறார்.

மூன்றாம் அதிகாரத்தில் பெயர்ச்சொல் பற்றியும், அவை மனுஷன், பாவம், கட்டு, கிறிகை என்ற நான்கு வகைப் படிவங்களில் வேற்றுமை உருபு ஏற்பது பற்றியும் கூறியபின் ஒவ்வொரு படிவத்துள் அமையும் பல சொற்களைத் தருகிறார்.

நான்காம் அதிகாரத்தில் பெயரெச்சம் வருகிறது. அப்பெயரெச்சங்களை நான்கு வகையாகப் பிரிக்கிறார்.

1. மகரத்தில் முடியும் பெயர்கள், மகரம் நீக்கிக் கிறித்துவம், கிறிஸ்துவ என்பது போல எச்சமாகின்றன.
2. பண்புப் பெயரோடு உள்ள ஆன, உடைத்தான, இல்லாத, ஆகாத என்பவற்றுள் ஒன்று சேர்ந்து அன்பு - அன்புள்ள என்பதுபோல் எச்சமாகின்றன.
3. சொல்லுகிற, சொன்ன, சொல்லா என்று எல்லா வினையடியாயும் வரும் எச்சங்கள் மூன்றாம் வகையின.
4. இரு பெயரொட்டுப் பண்புத் தொகையாய்ப் பச்சைக்காய் போன்று வருவனவற்றுள், முந்திய பெயரைப் பெயரெச்சமாகக் கொள்கிறார். பின்பு ஒன்று முதலிய எண்களைக் கொடுத்த பின் முதலாம், இரண்டாவது முதலியன எச்சமாக வருவதும், மூன்றாம் தரம், நாலாம் தரம் என்று வருவதையும் காட்டி எல்லாம் என்பதை எல்லா வேற்றுமையிலும் சுட்டி, அதையும் எச்சம் என்று கொள்கிறார். இலத்தீன் மொழியில் அது எச்சமாய் இருப்பதால் இவ்வாறு கருதுகிறார் போலும்.

ஐந்தாம் அதிகாரத்தில் நான்-நாம்-நாங்கள், நீய்-நீர்-தேவரீர்-நீங்கள், அவன்-அவள்-அவர்-அவர்கள், அது-அதுகள், தான்-தாம்-தாங்கள், ஆர்- எவன்-எவள்-எவர்கள், எது-எதுகள் என்பனவும்,

ஒவ்வொருத்தன்- ஒவ்வொருத்தி என்பனவும் வேற்றுமை உருபு ஏற்றுத் தனிப் படிவங்களாக வருகின்றன. இவை வழங்கும், என்னைப் பெத்த் தாய், விசுவசிக்கிறவன் கரையேறுவான் என்பன போன்ற சொற்றொடர்கள் பல தந்து இவை பயன்படும் மரபு காட்டுகிறார்.

**ஆறாம் அதிகாரத்தில் வினையியல்**

இது பல்த்தசார் டா கோஸ்டா இலக்கணம் போல அமைந்திருக்கிறது. முக்காலங்களிலும் எதிர்மறையிலும் செயப்பாட்டு வினையிலும் இடம், எண், பால், திணை முதலிய நோக்கி வினைகள் மாறி வருவதை விரிவாய்க் காணலாம். கூட்டு வினை, துணைவினை, ஒழுங்கீன அல்லது குறைபாடுடைய வினை முதலியனவும், மேனாட்டுக் கட்டுப்பாட்டு வினை என்ற முறையில் வருவனவும் பல்த்தசார் டா கோஸ்டா காட்டுவது போல் அமைந்துள்ளன. மேலும் இறந்தகாலம், எதிர்காலம், ஏவல், வினையெச்சம், பன்மை விகுதிகள் முதலியவற்றில் வல்லினம் மிகும், மிகா இடங்கள் பற்றிப் பிரயோன்சா அடிகள் தரும் ஒழுங்குகள் அப்படியே வருகின்றன.

**ஏழாம் அதிகாரம்**

இதில் மேனாட்டில் முன்னொட்டுகள் எனப்படும் முன், பின், உள்ளே, இடத்தில், அல்லாமல், பேரில், மேலே, ஓடு, உடன், ஆக முதலியனவும், அங்கே-இங்கே-எங்கே, காலமே, நாளைக்கு, திரும்ப, மறுபடியும், அப்படி, மாத்திரம், நன்றாய் முதலிய இடம் காலம் சுட்டும் வினையுரிச் சொற்களும், ஆக-ஆய் பெற்ற வினையெச்சங்களும் விளக்கம் பெறுகின்றன. மேலும் வியப்புக் குறியீடுகள், கூட்டும் அல்லது பிரிக்கும் உம், என்றும், ஆகிலும், ஆனாலும், ஒன்றில், என்றால், ஆனால், செய்தே, இருந்தால், அதேதென்றால், படி முதலியன சான்றுகளோடு விளக்கம் பெறுகின்றன.

**எட்டாம் அதிகாரம்**

தொடரியல். இது தமிழில் சுருக்கமானது என்றபின், பு(ல்)லிங்கம், இஷ்த்திறிலிங்கம், நபுஞ்சலிங்கம் என்ற மூன்று பால்களைக் கூறி, ஒவ்வொன்றிலும் அமைவன பற்றிய விளக்கம், வாக்கியங்களோடு வருகிறது. மேலும் எந்தெந்த் வேற்றுமை எவ்வெவ்வாறு பயன்படுகின்றது என்று வாக்கியங்களால் சுட்டப் படுகிறது. பிற விளக்கங்களோடும் தனித்தும் அடிக்கடி வரும் ஆறு வினைகள் - இருக்கிறது, போடுகிறது, கொள்ளுகிறது, பண்ணுகிறது, வருகிறது, போகிறது என்பன. தகப்பன் ஆனவர், மரியாள் என்கிறவள் என்பன போல், பல இடங்களில் ஆகிறது, என்கிறது என்ற வினைகளும் அடிக்கடி வருகின்றன. பல வினையெச்சங்கள் ஒரே வாக்கியத்தில்

அமைவதையும் சுட்டுகிறார். எடுத்துக்காட்டுகள் வாக்கியத்தில் அமைவதையும் சுட்டுகிறார். எடுத்துக்காட்டுகள் பெரும்பாலும் கிறிஸ்துவ மதத்தைப் பற்றியனவாய் அமைந்துள்ளன. எல்லா நாக்கும் (மொழிகளும்) கடவுளைப் புகழட்டும் என்ற வேத வாக்கியத்தோடு நூல் முடிவடைகின்றது.

முன்னர்க் குறிப்பிட்டது போல் இந்த இலக்கணம் அந்தோணி பிரயோன்சா, பல்த்தசார் டா கோஸ்டா இலக்கணத்தை ஒட்டி அமைந்திருக்கிறது. அவை போர்த்துக்கீசியத்தில் அமைந்திருக்க, இது இலத்தீனில் வருகின்றது. பிறரைப் பின்பற்றினாலும், ஆசிரியர் தமது திறமையை இதில் காட்டத் தவறவில்லை. இந்நூல் 1716-இல் வெளிவந்தது.

### தமிழ் மொழியின் சிறப்பு

''தரங்கம்பாடிச் சமயக்குழு வரலாறு'' என்னும் தலைப்பில் பெங்கர் ஒரு நூல் எழுதியுள்ளார்.

> ''மலபாரிகள்தான் புறச் சமயத்தவரான இந்துக்கள் சமயப்பணி அறிக்கைகளில் பெரும்பாலும் குறிப்பிடப் பட்டுள்ளனர். அவர்கள் மொழி தமிழ் மொழி. அம்மொழி நீண்ட நாட்களுக்கு முன்பே எழுத்து மொழியாக உருவெடுத்திருந்த ஒன்று. அவர்களுடைய நூல்களையும், கடிதங்களையும் எழுத்தாணி கொண்டு பனையோலையில் எழுதினர். எல்லா அறிவியற் கலைகளிலும் ஆசிரியர்கள் இருந்தனர். பலவகைப் பெருந் தொழில்களிலும், கைத்தொழில்களிலும் கைதேர்ந்தவராய் இருந்தனர்.''

மேலும் ஐரோப்பியர்கள் தமிழ்மொழி பற்றியும் அதைப் பேசும் தமிழர்களைப் பற்றியும் தப்பான எண்ணம் கொண்டிருந்தனர். சீகன்பால்குவும் தொடக்கத்தில் இந்த முடிவுக்குத்தான் வந்தார். ஆனால் பின்னர் அவர்களுடன் கொண்ட தொடர்பால்,

> ''மலபார், ஐரோப்பிய அறிஞர்களைப் போலவே தத்துவப் பொருள்களை விவாதித்தனர். எல்லாச் சமயப் பொருள்களும் விவாதித்து விளக்கப்படுகின்ற ஒழுங்கான விதிமுறைகள் அவர்களிடம் உள்ளன என்பது விளங்கிற்று.''

என்று சீகன்பால்கு எழுதிய கடிதங்கள் கூறியுள்ளன.

சீகன்பால்கு தமிழைக் கற்றுக் கொள்வதில் மூவர் உதவினர். ஒருவர் பல்மொழியறிந்த ஆலப்பன். மற்றவர் ஓர் உள்நாட்டுக் கவிஞர். அடுத்தவர் ஒரு தமிழ் எழுத்தாளர். அவர் சீகன்பால்குக்கு அவருடைய புத்தகங்களில் காணாத சொற்களையெல்லாம், எழுதிப் படிக்க வேண்டியிருந்தது.

1713ஆம் ஆண்டு எழுத்து வடிவமைப்போர் மூவரும், அச்சாளர் ஒருவரும் ஹாலே நகரிலிருந்து தமிழகம் வந்தனர். ஆகஸ்டு ஹெர்மன் பிராங்க் என்பவர் தமிழ் எழுத்துக்களுடன் தமிழ் அச்சகத்தை உருவாக்கினார். அருள் மொழிகளும், சமயக் குருக்களின் செயல்களும் பற்றிய மொழிபெயர்ப்பின் ஒரு பகுதி 1714ஆம் ஆண்டு சமயப்பணிச் சங்க அச்சகத்தில் அச்சிடப்பட்டது.

புதிய ஏற்பாட்டின் மொழிபெயர்ப்பு முழுவதையும் அச்சிட்டு வெளியிட்ட பின்னர்ச் சீகன்பால்கு பழைய ஏற்பாட்டை மொழி பெயர்க்கத் தொடங்கினார். 1711இல் தமது பயணங்களுள் ஒன்றில் பழைய ஏற்பாட்டின் வரலாற்றைத் தமிழில் வினா-விடை முறையில் வெளியிடப்பட்ட பழைய நூல் உரோமன் கத்தோலிக்கச் சமயப்பணியாளர்களிடையே இருந்ததைத் தற்செயலாகக் கண்டார். தமது புதிய ஏற்பாட்டின் படி ஒன்றை அனுப்புவதாக ஒப்புக்கொண்டு அந்நூலினைப் படி எடுத்துக் கொள்ள அனுமதி பெற்றார். இந்தப் பழைய ஏற்பாட்டைப் படித்துப் பார்த்துத் தவறுகளைச் சரி செய்தார். பழைய ஏற்பாட்டின் முழு மொழிபெயர்ப்பும் வெளிவரும் வரையில் பள்ளிகளிலும் சமயக் கூடங்களிலும் இந்நூல் பயன்படுத்தப்பட்டது.

தமிழ் கற்பதில் பெஸ்கி அடிகளுக்கும் சீகன் பால்குவுக்கும் கருத்தொற்றுமையும் நல்லுறவும் இருந்தன. முனிவர் எழுதிய கொடுந்தமிழ் இலக்கணத்தையும் அகராதியையும் அச்சடிக்கத் தரங்கம்பாடியார் முன்வந்தார். பெஸ்கி அடிகளிடம் உழைத்த உபதேசியார் நோயுற்றுத் தரங்கம்பாடி சென்றபோது, அவரைக் கண்காணித்துக் குணமாக்கி, வழிப்பயணச் செலவும் கொடுத்து அனுப்பிய தரங்கம்பாடியாருக்கு முனிவர் மனமார நன்றி கூறுகிறார். ஆகவே வேறுபட்ட கொள்கையால் மறுப்பு ஏற்பட்டாலும் மனிதத் தன்மையை இரு சாராரும் மதித்து உறவோடு பழகினர் என்பதற்கு நிறையச் சான்றுகள் இருக்கின்றன. தரங்கம்பாடியார் தமிழாக்கம் செய்த விவிலியத்தில் கண்ட தவறுகளை முனிவர் சுட்டிக்காட்டிக் கண்டிப்பது, மாறுபட்ட கொள்கையால் மட்டுமன்று; தமிழை அலங்கோலமாகப் பயன்படுத்தியதைக் கண்டு வருந்திய தமிழ்ப் பற்றும் காரணமாகும். இறுதியாக இருவருக்குமுள்ள தொடர்பை நோக்குமிடத்து, தொடக்கத்தில் முரண்பாடு ஏற்பட்டாலும் பிற்காலத்தில் இருசாராரும் அன்போடும் பண்போடும் பழகினர் என்றே பொதுவாகக் கூறலாம்.

**படைப்புகள்**

1. Bibliotheca Malabarica, August, 1708. தமிழ் நூல்கள், ஆகஸ்டு, 1708. ஜெர்மனியிலுள்ள ஹாலேயில் ஜெர்மன் மொழியில் 1958இல் கண்டுபிடிக்கப்பட்டது.
2. நான்கு நற்செய்திகளும் திருத்தூதர்களின் பணிகளும். மூல இலத்தீன் மொழியிலிருந்து தமிழ் மொழிக்கு மொழியாக்கம் செய்யப்பட்டன. தரங்கம்பாடி, 1714. Malabar New Testament,(in Tamil) தரங்கம்பாடி, 1715.
3. தமிழ் புதிய ஏற்பாடு, தரங்கம்பாடி, 1715.
4. தென்னிந்தியக் கடவுள்களின் மரபுவழி ஆய்வு, சென்னை, 1869.
5. தமிழ் செய்யுள்களின் அகராதி, ஆம்ஸ்டார்டாம், 1926.
6. தமிழ் இலக்கணம், Halle, 1716.

## பெஞ்சமின் சுல்ட்ஸ்
## (Schultze, Benjamin) 1689-1760

பெஞ்சமின் சுல்ட்ஸ் 1689 ஆம் ஆண்டு ஜெர்மனியில் பிறந்தார். இவர் ஹாலே (Halle) நகரில் தமது கல்விப்படிப்பை முடித்தார். 1719ஆம் ஆண்டு தமது 30வது வயதில் சென்னை வந்தார். இவர் 1720இல் பாதிரியாராகத் திருநிலைப்படுத்தப்பட்டு மறைப்பணியும் கல்விப்பணியும் 1728 வரை செய்தார். சென்னை மறைத்தளத்தை உருவாக்கி 1743ஆம் ஆண்டு வரை சென்னையில் வாழ்ந்தார். தமிழ் மொழியோடு தெலுங்கு, சமஸ்கிருதம் ஆகியவற்றையும் கற்றார்.

பர்த்தலோமேயுஸ் சீகன்பால்கு 1713இல் பழைய ஏற்பாட்டைத் தமிழில் மொழிபெயர்க்கத் தொடங்கினார். ரூத் (Ruth) ஆகமம் வரை மொழியாக்கம் செய்தார். இவரது மரணத்திற்குப் பின்பு பெஞ்சமின் சுல்ட்ஸ் மீதமுள்ள பகுதிகளைத் தொடர்ந்து மொழியாக்கம் செய்து 1723இல் முடித்தார். பின்பு இவர் தாவீது அரசின் சங்கீதத்தை (Psalms of David) எடுத்து மொழியாக்கம் செய்து அதை 1724ஆம் ஆண்டு வெளியிட்டார். விவிலியம் முழுவதையும் தமிழில் மொழியாக்கம் செய்து 1728ஆம் ஆண்டு தமிழ் அறிஞர்களின் உதவியால் வெளியிட்டார்.

மொழியாக்கம் செய்யப்பட்டவைகளில் ஞானக் கண்ணாடி, ஞான மந்திரம், செல்வப் பூங்காவனம் ஆகியவை மிக முக்கியமானவை. இவர் இவைகளை அச்சடித்து ஹாலில் (Halle) வெளியிட்டார்.

சென்னையில் நடந்த அன்றாட நிகழ்ச்சிகள் அடங்கிய பெஞ்சமின் சுல்ட்ஸின் குறிப்பேடு மிகவும் சிறப்பானது. சென்னை நகர

வளர்ச்சித் திட்டம், குடிமக்களின் சமூக வாழ்க்கை, அவர்களின் பழக்க வழக்கங்கள், திருமணமுறை, விலைவாசி ஆகியவைபற்றிச் சிறந்த முறையில் அவரது அன்றாடக் குறிப்பேட்டில் விவரித்துள்ளார்.

சுல்ட்ஸ் தமது தாயகமான ஜெர்மன் நாட்டுக்குத் திரும்பிச் சென்றார். அங்கே அநேக ஜெர்மன் மக்களுக்குத் தமிழ் கற்றுக் கொடுத்தார். இவர் தமது 72வது வயதில் 1760ஆம் ஆண்டு இன்னுயிர் நீத்தார்.

**பங்களிப்பு**

A Latin account of Tamil Language, Madras, 1747. (இலத்தீன் மொழியில் தமிழ் மொழியைப் பற்றிய ஒரு மதிப்பீடு, சென்னை, 1747.)

## அமியல் இன்னாசி தெ பரீக் தெ போந்தேனியு
## (Amiel Ignace de Barrique de Fontainieu) 1697-1764

அமியல் இன்னாசி தெ பரீக் தெ போந்தேனியு திருவாளர் மார்க் ஒரேல் பரீக்குக்கும் திருமதி கிளேர் தெ ஜம்போனுக்கும் திருமகனாக 1697-ஆம் ஆண்டு சூலை மாதம் 26ஆம் நாள் பிரான்ஸ் நாட்டின் துறைமுக நகரமான மார்செய்யில் பிறந்தார். இக்குடும்பம் பூர்வீக நாடான போர்ச்சுக்கல்லிலிருந்து பிரான்ஸ் நாட்டிலுள்ள மார்செய் நகருக்குக் குடியேறியது. இக்குடும்பம் ஒரு பிரபு குடும்பத்தைச் சேர்ந்தது. இவருக்கு இரு சகோதரிகள். இவ்வறிஞர் திருவள்ளுவர் இயற்றிய திருக்குறளில் காமத்துப்பாலைப் பிரெஞ்சில் மொழியாக்கம் செய்துள்ளார். இவர் 1764ஆம் ஆண்டு ஏப்ரல் மாதம் 8ஆம் நாள் உயிர் நீத்தார்.

## வால்த்தர்
## (Whalther) 1699-1741

வால்த்தர் 1699ஆம் ஆண்டு ஜெர்மனியில் ஸ்கில்ட்பெர்க் என்னும் ஊரில் பிறந்தார். காலேப் பல்கலைக்கழகத்தில் உயர்கல்வி கற்றுப் பட்டம் பெற்றார். அங்கே பாதிரியாராகத் திருநிலைப்படுத்தப் பட்டார். 1729ஆம் ஆண்டு திருமணம் செய்து கொண்டார். பின்னர் இவர் பாஸ், பிரெசியர் என்பவர்களுடன் தமிழகம் வந்து சேர்ந்தார்.

தரங்கம்பாடியில் சூல்ஸ் ஐயர் செய்து வந்த மறைப்போதகப் பணியைப் பிரெசியரும், வால்த்தரும் செய்தனர். இவ்விருவரும் கல்வியில் சிறந்தவர்கள். ஆற்றல் மிக்கவர்கள். வால்த்தர் ஒரு பன்மொழிப் புலவர். எபிரேயம், கிரேக்கம், இலத்தீன் முதலிய மொழிகளில் சிறந்த புலமை பெற்றிருந்தார். மேலும் இவர் அரபு, சமஸ்கிருத மொழிகளிலும் வல்லுநராயிருந்தார். இவர் தமிழிலும் நல்ல தேர்ச்சி பெற்றவர்.

வால்த்தர் தமிழகத்தில் 14 ஆண்டுகள் இறைப் பணியாற்றினார். அவர் தமது மனைவியையும், ஐந்து குழந்தைகளையும் சாகக் கொடுத்த துயரம் தாங்காமல் தாமும் நோய்வாய்ப்பட்டார். எனவே வால்த்தர் 1739ஆம் ஆண்டு தமது தாயகம் திரும்பினார். இரண்டு ஆண்டுகள் கழித்து 1741ஆம் ஆண்டு டிரெஸ்டன் என்னும் ஊரில் இறைவனடி சேர்ந்தார்.

வால்த்தர் ஒரு மொழிபெயர்ப்பாளரும் கூட. சூல்ஸ் பாதிரியார் தமிழ் மொழியாக்கம் செய்த பழைய ஏற்பாட்டை ஆய்ந்து அச்சிடும் பணியில் பிரேசியருடன் ஈடுபட்டிருந்தார். சூல்ஸ் ஐயர் மொழிபெயர்த்த பழைய ஏற்பாட்டை ஆராய்ந்து பல பிழைகளைத் திருந்தி, குறைகளை நீக்கி அச்சேற்றினார். திருப்பாடல்களிலும், பழமொழியாகமத்திலும் பல திருத்தங்கள் செய்தார். வால்த்தர் திருச்சபை சரித்திரத்தை எழுதி வெளியிட்டுள்ளார். வீரமாமுனிவரின் கொடுந்தமிழ் இலக்கணத்திலும் இவர் சில அரிய குறிப்புக்களை இணைத்துள்ளார் என்பது தெரிய வந்துள்ளது. 1733ஆம் ஆண்டு புதிய ஏற்பாட்டை மீண்டும் அச்சிலேற்றும் தேவை ஏற்பட்டது. 1934ஆம் ஆண்டு மத்தேயு நற்செய்தியைத் திருத்தியபின் புதிய ஏற்பாட்டை முற்றிலும் ஆய்ந்து திருத்திப் பகுதி பகுதியாக அச்சிட்டு, 1939ஆம் ஆண்டு புதிய விவிலியத்தின் புதிய பதிப்பு அச்சிடப்பட்டு முடிவடைந்தது. ஆனால் சூல்ஸ் ஐயரின் முறையீட்டின் பேரில் திருத்தப் பெற்ற புதிய பதிப்புக்கள் தேவையற்றன என்றும் பழைய பதிப்பை மாற்றாமல் அச்சிட வேண்டும் என்ற ஆணையையும் கோப்பன்கேகன், ஹல்லே நகரங்களிலிருந்த அதிகாரிகள் பிறப்பித்தனர்.

வால்த்தரும், தாயுமானவரும் சமகாலத்தவர்கள். தாயுமானவரின் பராபரக் கண்ணிகள், பராபரமே என்று நிறைவுறுகின்றன. வால்த்தர் பராபரம் என்ற சொல்லுக்கு 'அன்' விகுதி கொடுத்து அதனைப் பராபரன் என்று ஆக்கியிருக்கின்றார். வால்த்தரும் பிரேசியரும் திருத்தங்களைக் குன்றாத முயற்சியுடனும், சோர்வறியாத ஊக்கத்துடனும் செய்துள்ளனர். சொல் அமைப்பையும், படைத்திறத்தையும் பற்றித் தங்களுடன் பணியாற்றிய நாட்டு ஐயர் ஆரோன், உபதேசியார் தியாகு இவர்களைக் கலந்து ஆலோசித்துள்ளனர். கத்தோலிக்க அறிஞர்களையும், பிற சமய அறிஞர்களையும் நாடி அவர்களுடைய உதவியையும் பெற்றுள்ளனர்.

## தந்தை காஸ்தோன் லோரேன் கோர்து, சே.ச.
## Rev.Fr.Gaston Laurent Coeurdoux S.J.) 1699-1779

தந்தை கோர்து 1732ஆம் ஆண்டு கர்நாட்டிக் மறைத்தளத்திற்குத் தலைமை இடமான புதுச்சேரிக்கு வந்த பொழுது சகபணியாளர்கள்

அவரை மகிழ்ச்சியுடன் வரவேற்றனர். இவர் பழகுவதற்கு இனிமையானவர், ஆர்வமிக்கவர், தனித்திறமை பெற்றவர். இவரோடு பழகியவர்கள் இவரை 'நல்ல தந்தை கோர்து' என்று கூறுவார்கள்.

கோர்து அடிகள் 1744ஆம் ஆண்டிலிருந்து 1751 வரை கர்நாட்டிக் மறைத்தளத்தின் தலைமைப் பொறுப்பிலிருந்தார். அந்த வேளையில் இம்மறைத்தளத்தில் சண்டையும் சச்சரவுமாயிருந்தன. அதுமட்டுமல்லாது உரோமிலிருந்து போப்பாண்டவர் 14ஆம் ஆசிர்வாதப்பரால் மறைப்பணியாற்றுவது தடை செய்யப்பட்டது. அச்சமயம் தந்தை கார்மலைட் கன்னியர் மடம் ஒன்றை நிறுவினார். இக்கன்னியர்கள் மறைப்பணியாளர் மேற்கொள்ளும் சமய சம்பந்தமான செயல்களுக்காகத் தங்கள் செபங்களையும் ஒறுத்தல்களையும் இறைவனுக்கு அர்ப்பணித்தனர்.

தந்தையவர்கள் கணிதவியலிலும், விண்கோள் அறிவியலிலும் திறமை படைத்தவராய் இருந்தார். அவர் எழுதிய கோரமண்டல் விண்கோளைப் பற்றி தமிழில் மொழியாக்கம் செய்தும் அதை வெளியிடவில்லை. அவர் அவற்றில் கவனம் செலுத்தாமல் மறைப்பணியில் அதிக ஈடுபாடு கொண்டார். இவர் ஆறு ஆண்டுகள் (1733-39) தெலுங்கு மக்களிடையே மறைப்பணியாற்றி வந்தார். கோர்து அடிகள் உடல் நலக்குறைவினால் திரும்பவும் காரைக்கால் மறைத்தளத்திற்கு 1739ஆம் ஆண்டு வந்தார். மறு ஆண்டு புதுச்சேரிக்கு வந்து கர்னாட்டிக் மறைத்தளத்தின் அதிபராக இரண்டாம் முறை நியமனமானார். தந்தை கடைசிக்காலத்தில் கண் பார்வை இழந்து 1779ஆம் ஆண்டு தமது மரணம் வரை அங்கு இருந்தார்.

பங்களிப்பு

கோர்து அடிகள் 1733ஆம் ஆண்டு செப்டம்பர் மாதம் 17ஆம் தேதி எழுதிய கடிதத்தில் தாம் மொழியியல் ஒப்புமையில் தொடர்ந்து ஈடுபடப்போவதாகச் சாவகாசமாகக் குறிப்பிட்டுள்ளார். எனவே அவர் சமஸ்கிருதம், தெலுங்கு, தமிழ் மொழிகளின் ஒப்புமை ஆராய்ச்சியில் முழு மூச்சோடு இறங்கினார். இதுவே கோர்து அடிகள் இலக்கியத்திற்கு ஆற்றிய மிகச் சிறந்த பணியாகும்.

தந்தை கோர்து இங்குள்ள விநோதமான பொருள்களைப் பிரான்சு நாட்டுக்கு அனுப்பினார். அனுமானின் மாயவித்தப் பதக்கம், பாம்புக் கடி விஷத்தைப் போக்கும் கற்கள், கணக்கிலடங்காத விதைகள், தானிய வகைகளை அவற்றின் பெயர்களை இலத்தீன், பிரெஞ்சு மொழிகளில் எழுதித் தம் தாய் நாட்டிற்கு அனுப்பினார். ஏனெனில் இவை அவரது நாட்டில் இல்லை. மேலும் செடி, கொடி, மரங்களின் வேர்கள், பட்டைகள்,

பல்வேறு மரக்கட்டைகள் ஆகியவற்றையும் தமது தாயகத்திற்கு அனுப்பினார். இந்தியாவில் வௌவால் உள்ளது என்பதை ஐரோப்பியர்களுக்கு அறிமுகப்படுத்தியவர் தந்தையவர்கள்தாம்.

மேலும் தந்தையவர்களின் ஒரு முக்கியமான பங்களிப்பானது தென்னிந்தியாவில் துணியில் பல வண்ணங்களில் அச்சிடும் முறையைப் பற்றியும், வண்ணம் தயாரிக்கும் முறை, அதற்குப் பயன்படும் பொருட்கள் , தண்ணீரின் தன்மை, அச்சடிக்கப் பயன்படும் துணியின் தரம், அதன் தொழில் முறை முதலியன பற்றியும் விரிவாக ஒரு கட்டுரையைத் தாம் எழுதிய கடிதங்களின் மூலம் ஐரோப்பியர்களுக்குத் தெரியப்படுத்தி அவர்களது கவனத்தை ஈர்த்தார்.

தந்தையின் மரணத்திற்குப் பிறகு சில ஐரோப்பிய அறிஞர்களின் புலமையைப்பற்றித் தந்தையவர்கள் எழுதியவைகளை வெளியிட்டு வெளிச்சத்திற்குக் கொண்டு வந்துள்ளனர். பெர்லின் நகரில் வாழ்ந்த திருவாளர் ஜான் பெர்னூலி (Jean Bernouilli) ஒரு சிறந்த விண்கோள் அறிஞர். தந்தையவர்கள் விண்கோளைப் பற்றி ஆராய்ந்து எழுதியவைகளை அவர் வெளியிட்டார். திருவாளர் அன்குயட்டில் துய்பெரனோன் 1755ஆம் ஆண்டு இந்தியா வந்து தந்தையை நேரில் சந்தித்தார். அவர் கோர்து அடிகளுடன் கொண்டிருந்த கடிதப் போக்குவரத்துகளைச் சேகரித்து 1808இல் வெளியிட்டார்.

இந்த வெளியீட்டுக்குப் பின்புதான் அறிஞர்கள் தந்தையின் ஆராய்ச்சியின் பயனையும், புதிய அறிவியலான மொழியியல் ஒப்புமைக்கு அவரது பங்களிப்பையும் அறிந்து கொண்டனர். தந்தை கோர்து அர்த்தத்திலும் உருவத்திலும் அநேக வார்த்தைகளில் இலத்தீன், கிரேக்கம், சமஸ்கிருதம் போன்ற மொழிகளில் ஒப்புமை இருப்பதைக் கண்டறிந்தார். இம்மூன்று மொழிகளும் ஒன்றோடொன்று தொடர்பு கொண்டுள்ளன என்ற முடிவுக்கு வந்தார். நாம் மேலே குறிப்பிட்டுள்ளது போன்று சமஸ்கிருதம், தெலுங்கு, தமிழ் மொழிகளில் உள்ள வார்த்தைகளின் ஒப்புமையைக் கண்டுபிடித்தார். எனவேதான் இவர் மொழி ஒப்புமையின் தந்தை என்று அழைக்கப்படுகின்றார்.

தந்தையவர்கள் தமிழில் உள்ள பஞ்ச தந்திரத்தையும், பரதத்தையும் பிரெஞ்சு மொழியில் மொழியாக்கம் செய்துள்ளார். இவை தவிர, ஐந்திணையின் சுருக்கமான விரிவுரையுடன் கூடிய தந்தையின் முகவுரையானது தமிழ்க் கலையின் சுருக்கத் தொகுப்பாகும்.

# பதினெட்டாம் நூற்றாண்டு

## தந்தை ஜேம்ஸ் தாமஸ் தெ ரோசி, சே.ச.
## (Fr.James Thomas De Rosi, S.J.) 1701-1774

பண்டைக் காலம் தொட்டே தமிழகத்திற்கும் உரோமாபுரி வெனிஸ் நகரத்திற்கும் இடையே நெருங்கிய தொடர்பு இருந்ததை நாம் வரலாற்றின் மூலம் அறிகின்றோம். இத்தாலிய நாட்டிலிருந்து மூன்று மறைப்போதகர்கள் வெவ்வேறு நூற்றாண்டுகளில் தமிழகம் வந்து மறைப்பணியோடு தமிழுக்கும் அரும்பணி ஆற்றியுள்ளனர். தந்தை இராபர்ட் தெ நொபிலி, தந்தை கான்ஸ்டன்டைன் ஜோசப் பெஸ்கி என்ற வீரமாமுனிவர், சின்ன சவேரியார் என்று அழைக்கப்படும் தந்தை ஜேம்ஸ் தாமஸ் தெ ரோசி ஆகிய மூவரும் மறைப்பணியோடு இலக்கியப் பணியும் ஆற்றியுள்ளனர்.

இத்தாலிய நாட்டில் அப்பூலியா (Apulia) மறை மாவட்டத்திலுள்ள நைய்யா (Naia) என்னும் ஊரில் 1701ஆம் ஆண்டு ஏப்ரல் மாதம் 8ஆம் நாள் பிறந்தார். தெ ரோசி, பள்ளி, கல்லூரிப் படிப்புகளை முடித்துவிட்டுத் தமது 20வது வயதில் இறையழைப்பைத் தன்னுள் உணர்ந்தார். எனவே அவ்வழைப்பை ஏற்று 1721ஆம் ஆண்டு பெப்ருவரித் திங்கள் 24ஆம் நாள் நேப்பிள் நகரிலுள்ள இயேசு சபை இளங்குருமடத்தில் நவசந்நியாசியாக நுழைந்தார். இரண்டாண்டு சபையின் ஒழுங்கைக் கடைப்பிடித்து ஞானப் பயிற்சி முடித்த பின்னர் இளங்குருமாணவர்களுக்கு இலத்தீன், கிரேக்க இலக்கணங்களைக் கற்பித்தார். மூன்று ஆண்டுகள் மெய்யியல் கற்றார். மேலும் தெ ரோசி இலக்கியம், பேச்சுக்கலை முதலியவற்றிலும் பயிற்சி பெற்றார். "அப்போது இவர் அறிவாற்றல் மிக்கவராகக் காணப்பட்டார். மொழியில் திறமையும், கற்பதில் ஆர்வமும், நிர்வாகத்தில் ஆற்றலும், மறைப்பணியில் விருப்பமும் அவரிடம் காணப்பட்டன."

1728ஆம் ஆண்டு மறையியலை நான்கு ஆண்டுகள் கற்றபின்னர்க் குருவானவராகத் திருநிலைப்படுத்தப்பட்டார். மறை பரப்புவது இயேசு சபையின் தலையாய பணியாகும். அவர் இப்பணிக்குத் தம்மையே முற்றிலும் அர்ப்பணித்தார். தெ ரோசி அடிகள் 1732ஆம் ஆண்டு ஸ்பெயின் துறைமுகத்தில் கப்பலில் ஏறி மலபார் (தமிழ்) மறை மாநிலத்தை நோக்கிக் கடற்பயணம் மேற்கொண்டார். ஐந்து திங்கள்

பயணத்திற்குப்பின் தந்தை தெ ரோசி கோவா வந்து சேர்ந்தார். அங்குள்ள புனித சவேரியாரின் அழியா உடலைத் தரிசிக்கும் பாக்கியம் பெற்றார். இவர் புனிதரைப் போன்று ஓயாமல் ஒழியாமல் மறைப்பணியாற்றச் சூளுரை எடுத்துக்கொண்டார். இவர் கோவாவில் இருந்தபொழுது மறைப்பணியோடு, தமிழகத்தில் மேற்கொள்ளவிருக்கும் திருப்பணிக்கான ஏற்பாடாகத் தமிழ் மொழியைக் கற்றிருக்கக்கூடும்.

தந்தை தெ ரோசி 1734ஆம் ஆண்டிற்குப் பிறகு கோவாவிலிருந்து கொச்சிக்குப் பயணம் மேற்கொண்டார். அங்கிருந்து அடிகள் அம்பலக்காடு சென்று அங்கு அமைந்துள்ள இயேசுசபை குருத்துவக் கல்லூரியில் தங்கித் தம்மை மறவ நாட்டு மறைப்பணித் தளத்திற்குச் செல்லத் தயார்படுத்தினார். 1677இல் அக்கல்லூரி விரிவு படுத்தப்பட்டு, துறவறப் பயிற்சிகளுக்காக மதுரை மண்டலத்திலும், கிழக்குக் கடற்கரைப் (Fishery coast) பகுதியிலும் மறைப்பணியாற்ற விருக்கும் தொண்டர்களுக்கு அம்பலக் காட்டிலேயே பயிற்சி அளிக்கப்பட்டது.

இப்பெரிய கல்லூரியில் வேதபோதகர்கள் தமிழ், தெலுங்கு, மலையாளம் போன்ற திராவிட மொழிகளைக் கற்றுக் கொள்ளச் சிறந்த வாய்ப்பு இருந்தது. தந்தை தெ ரோசி அடிகளும் இங்குத் தமிழை நன்கு கற்றுத் தேர்ந்திருக்க வேண்டும். அவர்தம் தாய் நாட்டுக்காரர்களான அருட்திரு இராபர்ட் தெ நொபிலியும், வீரமாமுனிவரும் தமிழில் படைத்த இலக்கணம், உரைநடை ஆகியன தமிழை மேலும் சிறப்பாகக் கற்றுக்கொள்ள உதவியாய் இருந்திருக்கும் என்பதில் ஐயமில்லை.

குளச்சலுக்குச் சென்று அங்கு மறைமாநிலத் தலைவராய் இருந்த தந்தையிடமிருந்து மறவ நாட்டுப் பணித்தளத்திற்குப் போவதற்கான ஆணையை பெற்றுக்கொண்டு தூத்துக்குடியைக் கடந்து மணப்பாடு வந்து சேர்ந்தார். அப்பணித்தளத்திலிருந்து இயேசு சபை மேலாளராக இருந்த ஜான் டா ஆன்றறேட் அடிகளின் முன்னிலையில் திருப்பலியின்போது போப்பாண்டவருக்குக் கீழ்ப்படிதல் என்னும் நான்காம் வாக்குறுதியை 1735ஆம் ஆண்டு ஆகஸ்ட் மாதம் 15ஆம் நாள் கொடுத்தார். அங்கிருந்து அவர் தமக்கு அளிக்கப்பட்ட பணித்தளமான மறவ நாட்டை நோக்கிப் பயணம் மேற்கொண்டார். புனித அருளானந்தரின் செங்குருதியால் ஆழ்ந்த விசுவாசத்தில் தழைத்த கிறித்தவர்கள் குடி கொண்டிருக்கும் மறவ நாட்டில் 1736ஆம் ஆண்டு முதன் முதலில் தெ ரோசி அடிகள் அடி எடுத்து வைத்தார்.

தெ ரோசி அடிகள் 1736 செப்டம்பர் மாதம் இடையர் சருகணியில் தமது பங்குத்தளத்தை அமைத்து அங்குத் தங்கி மறைப்பணி ஆற்ற முனைந்தார். பனை ஓலைகளால் வேயப்பட்ட குடிசைதான் அவருக்குத் தங்கும் வீடாகவும் சிற்றாலயமாகவும் அமைந்தது. அடிகள் 1737

செப்டம்பர் 29ஆம் நாள் இடையர் சருகணியிலிருந்து நேப்பிள் நகரத்தில் வாழ்ந்து வந்த தந்தை மெனுலியசுக்கு எழுதிய கடிதத்தில்,

> ''நான் தங்கி இருக்கும் இடம் என்னுடைய பங்குத்தளத்தின் மையத்தில் உள்ளது. நான் தங்கியிருக்கும் அவ்விடத்திற்கு வந்து சேர வேண்டுமானால் கிறித்துவ மக்கள் அடர்ந்த காடுகளையும் மழைக் காலங்களில் வெள்ளப் பெருக்கெடுத்து ஓடும் காட்டாறுகளையும் கடந்து பல நாள்கள் பயணம் செய்து வரவேண்டும். இத்தனைத் துன்பங்கள் இருந்தும் பங்கு மக்கள் திருவிழா நாள்களில் திரளாய் வருகின்றார்கள். நான் மணிக்கணக்காய்ப் பாவ அறிக்கைத் தொட்டியில் உட்கார்ந்து மன்னிப்பு அளிக்கிறேன். எனினும் நான் பெரும் பாவங்களைக் கேள்விப்பட்டதில்லை.''

தெ ரோசி அடிகள் பணியாற்றிய பங்குத்தளம் மிகப் பெரிய மறைத்தளமாய் இருந்தது. 1737 செப்டம்பர் 29ஆம் தேதி எழுதிய கடிதத்தில் தமக்குக் கீழ் உள்ள பங்குத் தளத்தின் பரப்பைக் கூறுகின்றார்.

> ''40,000 படைப்பலம் கொண்ட இராமநாதபுர நாடு, 30,000 படைப்பலம் கொண்ட சிவகங்கை நாடு என்னும் இரண்டு பேரரசு நாடுகளையும், 10,000 படைப்பலம் கொண்ட பட்டுக்கோட்டை, 6,000 படைப்பலம் கொண்ட அறந்தாங்கி ஆகிய இரண்டு சிற்றரசு நாடுகளையும் அடங்கியதாய் உள்ளது. இவ்வளவு பரந்து விரிந்த மறைப்போதகப் பணித்தளத்தை அவர் ஒருவருக்கு ஒதுக்கியதற்குக் காரணம் போதிய குருக்கள் இல்லாததே.''

என்று கடிதத்தில் குறிப்பிட்டுள்ளார்.

மேலும் தந்தையவர்கள் தூரந்தொலைவிலுள்ள ஊர்களுக்குச் சென்று தம் பங்குக் கிறித்துவர்களைச் சந்தித்து அறிவுரையும் ஆறுதலும் கூறிய செய்தியும், பலருக்குத் திருமுழுக்குக் கொடுத்து அவர்கள் புதிதாகக் கிறித்தவ மறையில் சேர்ந்த செய்தியும் இக்கடிதத்திலிருந்து கிடைக்கின்றன. 1738ஆம் ஆண்டு ஜூலைத் திங்கள் 29ஆம் நாள் தெ ரோசி அடிகளார் இத்தாலியில் இயேசு சபைத் துறவியாக இருந்து தம்முடைய சகோதரர் சால்வாதோர் தெ ரோசிக்கு எழுதிய கடிதத்தில் தாம் மறவ நாட்டு மறைப்பணியின் இரண்டாம் ஆண்டில் நிகழ்ந்த நிகழ்ச்சிகளைப் பற்றி எழுதினார். அவ்வாண்டில் தந்தை தெ ரோசி 632 பெரியவர்களுக்கும் 1435 குழந்தைகளுக்கும் திருமுழுக்குக் கொடுத்தார்.

தந்தை தெ ரோசி தமது மறைப்பணியின்போது பல்வேறு அரசியல் தொல்லைகளைச் சந்திக்க நேர்ந்தது. கட்டத்தேவர் மரணமடைந்தபோது அவருடைய மகன் சிவகுமார் முத்து விஜய ரகுநாதன் ஏழு வயதுச் சிறுவன். எனவே அரசுப் பொறுப்பை இரு அமைச்சர்கள் பாதுகாப்பாளர்களாக இருந்து கவனித்து வந்தனர். அவர்கள் இருவருமே கிறித்தவ மக்களை முழுமையாக வெறுத்தவர்கள். அவர்களுள் ஒருவர் கொடிய கண்நோயால் துன்புற்றார். நலம்பெற வேண்டி அவர் தாம் வணங்கி வந்த தெய்வத்திற்குக் கோவிலொன்று கட்டி வழிபாடும் மேற்கொண்டார். அதன் பிறகும் அவர் கண் நோய் குணமாகாததால் தாம் வணங்கிய தெய்வத்திடம் அந்நோய் நீங்குவதற்குரிய வழி யாது என்று கேட்டபோது அந்நாட்டிலிருந்த கிறித்தவக் குருவையும் அவருடன் கிறித்தவர்களையும் நாட்டைவிட்டு விரட்டாவிடில் நோய் நீங்காது என்று கூறவே தெ ரோசியை நாடு கடத்தினர்.

கிறித்தவர்களுக்கு இழைத்த தீமையால் தங்களுக்கும் தங்கள் நாட்டிற்கும் பெருந்துன்பம் வரும் என்பதை உணர்ந்த அவ்விரு அமைச்சர்களும் அஞ்சி நாடு கடத்திய அடிகளாரை மீண்டும் தங்கள் நாட்டிற்கு அழைத்தனர். இச்செய்தியை அறிந்த கிறித்தவ மக்கள் மகிழ்ச்சியடைந்து தங்கள் பங்குத்தந்தையைத் தாரை தப்பட்டைகளோடு விழாக்கோலங் கொண்டு வரவேற்றனர்.

அமைச்சர்கள் தெ ரோசி அடிகளுக்கும் கிறித்துவ மக்களுக்கும் இழைத்த கொடுமைகள் அரசியாரின் காதுக்கு எட்டியதும் மனங்கலங்கி வருந்தினார். ஏனெனில் தம்முடைய கணவர் கட்டத்தேவர் கிறித்துவ மறைத் தொண்டர்களிடமும், கிறித்தவர்களிடமும் காட்டிய அன்பையும் பரிவையும் நேரில் கண்டு அறிந்தவர். கணவரின் இறப்புக்குப் பின் கிறித்தவர்களைப் பழிவாங்கும் எண்ணத்துடன் அமைச்சர்கள் நடந்து கொண்டது அரசியால் தாங்கிக் கொள்ள முடியாததாக இருந்தது. கிறித்தவ ஆலயங்களிலிருந்து கவரப்பட்ட பொருள்கள் அனைத்தும் ஈடு செய்யப்பட்டன. மேலும் அதிமுக்கியமாக நாடு கடத்தப்பட்டிருந்த தெ ரோசி அடிகளார் அரசியாரின் ஆணையின் பேரிலே இராமநாதபுரம் நாட்டிற்குத் திரும்பினார் என்று 1736-37ஆம் ஆண்டு அறிக்கை தெரிவிக்கின்றது.

சிவகங்கைச் சீமையின் சிற்றரசராகச் சசிவர்ணத்தேவர் என்றழைக்கப்படும் உதயத்தேவர் தெ ரோசி அடிகளின் தூய வாழ்க்கையையும், இறைவன் அருளால் புதுமைகள் புரியும் செய்தியையும் கேள்விப்பட்டு, தந்தை தெ ரோசியுடன் நட்புக் கொண்டு பழகினார். இதே போன்று மருதுபாண்டியர்கள் தந்தை தெ ரோசியோடு நட்புக்

கொண்டனர். அவர்கள் சருகணி கோயில் கட்டும்போதும், தேர்த் திருவிழா கொண்டாடும்போதும், தந்தை தெ ரோசியோடு தொடர்பு கொண்டு மன்னர் சார்பில் வேண்டும் உதவிகள் புரிந்து வந்தனர். தனிப்பட்ட முறையிலும் தந்தையவர்களை அச்சகோதரர்கள் சந்தித்து அறிவுரையும் நல்லாசியும் பெற்றுச் சென்றனர்.

அதே வேளையில் பிராமணச் சமுதாயத்திடமிருந்து எதிர்ப்பும், தரங்கம்பாடி கிறித்தவ சபையின் தொல்லைகளும் தந்தைக்கு எதிராகச் செயல்பட்டன. அடிகள் 1739இல் எழுதிய கடிதத்தின் இறுதியில் ஒரு துயரமான நிகழ்ச்சியை மிகுந்த வருத்தத்தோடு எழுதியுள்ளார்.

> ''எந்தக் கோவிலில் திருப்பலி நிறைவேற்றி இறை மக்களுக்குத் தேவ நற்கருணை வழங்கினேனோ அக்கோயிலையும் நான் குடியிருந்த வீட்டையும் பிராமணர்கள் நெருப்புக்கு இரையாக்கி விட்டார்கள். எனினும் இத்தனைத் தொல்லைகளுக் கிடையிலும் சிறந்ததும் மகிழ்வுக்குரியதுமான நேப்பிள் நகரத்தில் நான் இருப்பதைவிட ஆயிரம் மடங்கு மகிழ்ச்சியாகவே இங்கு இருக்கின்றேன்.''

அடுத்து டேனிஷ் சங்கத்தினர் மறவ நாட்டிலும் தங்கள் கிறித்தவ சபைக் கோட்பாடுகளை மக்களுக்கு அறிவிக்க முயற்சித்தனர். ஆனால் அவர்களுக்கும் கத்தோலிக்க மறைத் தொண்டர்களுக்கும் இடையே பல கருத்து வேறுபாடுகள் இருந்தன. அப்பொழுது தஞ்சையை ஆண்டுவந்த மராட்டிய மன்னர்களின் ஆதரவைப் பெற்று அங்குள்ள கத்தோலிக்கர்களுக்குத் துன்பம் இழைத்தனர். அவர்கள் தந்தை தெ ரோசிக்கும் கத்தோலிக்கக் கிறித்தவர்களுக்கும் விரோதமாகச் செய்த சூழ்ச்சி பலிக்கவில்லை.

1745ஆம் ஆண்டளவில் மறவ நாட்டில் பெருங்குழப்பம் ஏற்பட்டு மறவ நாட்டு அரசர்களிடையே போர் மூண்டது. இதன் பொருட்டுத் தெ ரோசி அடிகள் சருகணியை விட்டு வெளியேறி ஓரியூருக்குத் தெற்கிலுள்ள குருமுலாங்குடிக்குச் சென்று தங்கினார். அங்குள்ள மக்களுக்குத் தந்தையவர்கள் மறைப்பணியாற்றினார். பகைவர்களின் படை அங்கே வரவே அவ்விடத்தைவிட்டு வெளியேறி அவர் வேறோர் இடத்தில் தங்கினார்.

1746, 1747, 1748ஆம் ஆண்டுகளுக்குரிய வருடாந்திரக் கடிதத்தில் (13ஆகஸ்ட் 1750) மறவ நாட்டில் அமைதியில்லை என்றே குறிப்பிடப்பட்டுள்ளது. இவ்வாண்டுகளில் தஞ்சை மராட்டியர் படைக்கும் மறவர் படைக்கும் இடையே மறவ நாட்டில் பல இடங்களில் போர்கள்

நடந்தன. இச்சண்டைகளினால் கிறித்தவர்கள் பெருந் துன்பங்களுக்கு ஆளாகினர். எங்குமே பாதுகாப்பு இல்லாத நிலையில் தந்தை தெ ரோசி கடற்கரைப் பகுதிகளிலோ காடுகளிலோ தங்க வேண்டியிருந்தது. இருப்பினும் இம் மூன்று ஆண்டுகளில் தந்தையவர்கள் 1590 பெரியவர்களுக்கும், 4430 குழந்தைகளுக்கும் திருமுழுக்களித்தார். 1747இல் மட்டும் 670 புதுமைகள் மறவ நாட்டில் நிகழ்ந்தன என்று அவர் குறிப்பிட்டுள்ளார்.

1748ஆம் ஆண்டில் தெ ரோசியார் சூத்திரர்களின் சுவாமியாராகவும் அதே சமயத்தில் ஜோசப் பெர்னார்டு அடிகளார் தாழ்த்தப்பட்ட கிறித்தவர்களுக்குரிய பண்டார சாமியாராகவும் பணிபுரிந்து வந்தனர். அந்நாள்களில் சிவகங்கை மன்னராகிய உதயத் தேவரின் முதலமைச்சர் அம்மன்னரால் தமக்கு இழைக்கப்பட்ட மானக்கேட்டிற்காகப் பழி வாங்கும் நோக்குடன் தஞ்சாவூர் மராட்டிய மன்னரைத் தூண்டிவிட்டு மறவ நாட்டின்மீது படையெடுக்க வேண்டினார். மறவ நாட்டைத் தாக்கத் தக்க தருணம் பார்த்துக் கொண்டிருந்த மராட்டிய மன்னர் தாவீதுக்கான் தலைமையில் ஒரு பெரும்படையை அனுப்பினார். அப்படை சிவகங்கை நாட்டில் புகுந்து பெரும் இழப்பை உண்டாக்கி மாறணியிலும் சருகணியிலும் இருந்த கோவில்களிலிருந்து அனைத்தையும் கொள்ளை அடித்ததுடன், தந்தை ஜோசப் பெர்னார்டையும், தெ ரோசியாரையும் கைது செய்து சிறையில் அடைத்தது. இச்செய்தி திருச்சிராப்பள்ளியிலுள்ள நவாப் காதுக்கு எட்டியது. அவர் உடனே தஞ்சை மன்னருக்கு அவ்விரு கிறித்தவ மறைத் தொண்டர்களையும் விடுவிக்க வேண்டும் என வேண்டுகோள் விடுத்தார். தாவீதுக்கான் மறுப்பின்றி அவர்களின் நாற்பது நாள் சிறையிருப்புக்குப்பின் இருவரையும் விடுதலை செய்தான்.

1751ஆம் ஆண்டு சருகணியில் தந்தை தெ ரோசி ஒரு பெரிய கோவிலைக் கட்டத் தொடங்கி 1753இல் முடித்தார். 1753இல் கொச்சி ஆயர் சருகணிக்கு வந்து தங்கியிருந்து தந்தை கட்டி எழுப்பிய கோவிலை அபிஷேகம் செய்ததாகச் சருகணி ஓலையில் குறிப்பிடப்பட்டுள்ளது. இக்கோவில் போர்த்துக்கீசியக் கட்டடக்கலை அமைப்பில் அமைந்தது. 1801இல் சிவகங்கை மன்னர் ரெகுநாத கௌரிவல்லப பெரிய உடையத் தேவர், மாறணி கிராமம் முழுவதையும் மானியமாக இக்கோவிலுக்கு எழுதிக் கொடுத்த பட்டையம் இன்னும் கோவிலில் பாதுகாப்பாக வைக்கப்பட்டுள்ளது.

தந்தை தெ ரோசி 38 ஆண்டுகள் சருகணியில் மறைப் பணியும், சமூகப் பணியும் ஆற்றி 1774ஆம் ஆண்டு அக்டோபர்த் திங்கள் 12ஆம் நாள் இறையன்பில் துஞ்சினார்.

### தெ ரோசி அடிகளின் கிறித்தவத் தமிழ்த் தொண்டு

தெ ரோசி அடிகளாரின் மறைப்பணித்தளம் விரிந்து பரந்ததாய் இருந்தது. இராமநாதபுரம், சிவகங்கை, பட்டுக்கோட்டை, அறந்தாங்கி

ஆகிய நான்கு இடங்கள் அடங்கிய அம்மறவ நாட்டில் வாழ்ந்த அனைத்து மக்களுக்கும் நற்செய்தி அறிவிக்கும் பெரும்பணி அவர் ஒருவரையே சார்ந்திருந்தது. 1757ஆம் ஆண்டு அப்பணித்தளத்தில் 25,000 கத்தோலிக்கக் கிறித்தவர்கள் இருந்தனர்.

அதனால் கிறித்தவ மக்களோடு தொடர்பு கொள்ள மறைத்தொண்டர்களுக்கு உதவியாக வேதியர்களும் போதிய அளவில் இல்லாதிருந்தனர். மறைப்பணிக்கான வேதியர்களுக்காக அதிக எண்ணிக்கையில் பயிற்சி கொடுத்துத் தயாரிக்க வேண்டிய சூழ்நிலை ஏற்பட்டது. இல்லறத்தாரிலிருந்து வேதியர்கள் தேர்ந்தெடுக்கப் பட்டனர். இவ்வேதியர்களுக்கு மறை உண்மைகளைப் படித்தறிந்து மக்களுக்கு எடுத்துரைப்பதற்கு ஏற்ற மறை நூல்கள் தமிழ் மொழியில் தேவைப்பட்டன. இவர்கள் குருக்களுக்குத் துணையாகப் பணியாற்றினர்.

இரண்டாவது, மறை எதிர்ப்பாளர்களுக்கு மறுப்புத் தெரிவிக்கத் தெ ரோசி அடிகள் நூல் எழுத வேண்டியிருந்தது. மறவ நாட்டுப் பணித்தளத்திற்குத் தரங்கம்பாடி டேனிஷ் சங்கத்தார் சென்று கத்தோலிக்க மறைக்கு எதிராகப் பல பொய்யுரைகளைக் கூறினர். அவர்கள் மரியன்னை, பாவ அறிக்கை, தேவ நற்கருணை, புனிதர்கள், திருச்சபைத் தலைவர் போப்பாண்டவரை ஏற்காதது போன்ற சில மறைக் கொள்கைகளை ஏற்றுக் கொள்வதில்லை.

மூன்றாவது கிறித்தவ மக்களிடையே பக்தியை வளர்க்க வேண்டி உலகெங்கும் நடந்த பல புதுமைகளை எழுதி அவற்றை மக்களிடையே பரப்ப நூல்கள் தேவைப்பட்டன. இறுதியாகக் கத்தோலிக்கக் கிறிஸ்து மறை உண்மைகளை மக்களுக்கு எளிதாய் உணர்த்த வேண்டி அடிகள் நூல்கள் படைக்க முனைந்தார்.

தந்தை தெ ரோசி சண்டை, மதத் தொல்லை ஆகியவைகளுக்கிடையே கிறித்தவ மக்களின் போதனைக்காகவும், நல்லொழுக்கப் போதனைக்காகவும் எழுத நேரத்தைக் கண்டுபிடித்து அதைத் தமிழில் எழுதியுள்ளார். தெ ரோசி அடிகள் படைத்த நூல்கள்:

1. ஞாயிற்றுக் கிழமைப் புதுமை
2. திங்கட்கிழமைப் புதுமை
3. செவ்வாய்க்கிழமைப் புதுமை
4. புதன்கிழமைப் புதுமை
5. வியாழக்கிழமைப் புதுமை
6. வெள்ளிக்கிழமைப் புதுமை
7. சனிக்கிழமைப் புதுமை

8. புனிதர்களின் வரலாறு அல்லது வருஷத்தின் பிரதி தின சுகிர்தப் பிரசங்கங்களாகிய அர்ச்சிஷ்டவர்களின் சரித்திரம்.

மேலும் நாம் எண்ணுவது தெ ரோசியார் மூன்றாவது நூலாக அச்சடிக்கத்தக்க நிலையில் உள்ள வியாகுலமாதாவின் பேரில் எழுதிய கைப்பிரதி ஆகும். இதில் 52 வெள்ளிக்கிழமைகளில் தியானிக்கக்கூடிய தியானக் கட்டுரைகள் அடங்கியுள்ளன.

இப் படைப்புகள் பனை ஓலைகளில் எழுதப்பட்டுள்ளன. மறவர் மறைப்பணித்தளம் துன்ப, துயரமான காலத்தில் மறைப் பணியாளர்கள் இல்லாத போது இந்நூல்கள் மக்கள் விசுவாசத்தில் வியக்கத்தக்க வகையில் ஊன்றி உறுதியாய் நிற்க உதவி செய்தன. ஒவ்வொரு ஞாயிற்றுக்கிழமையும் அல்லது ஒவ்வொரு நாளும் கூடக் கிறித்தவர்கள் ஆலயத்தில் அல்லது சிற்றாலயங்களில் ஒன்று கூடி உபதேசியார் இந்நூல்களை வாசிக்கக் கேட்பார்கள். அவர்களுக்கு ஒவ்வொரு வாசிப்பும் உறுதியான போதனையாக இருந்தது. சிலை வழிபாடானது சாத்தானின் வழிபாட்டைத் தவிர்த்து வேறு ஒன்றுமில்லை என்பதை அவர்களுக்கு நினைவுப் படுத்தியது. இறையரசில் சேரவேண்டுமானால் திருமுழுக்குப் பெறவேண்டும். மேலும் இறைவனின் படிப்பினையின்படி வாழ வேண்டும். 'புதுமைகள்' கிறித்தவ மக்களால் கடைப்பிடிக்கப்பட வேண்டிய தலையாய வழிபாடுகளைப் போதித்தன. அதாவது தமதிருத்துவம், புனித சம்மனசுகள், கழுவாய் நிலையில் உள்ள ஆன்மாக்கள், புனித கன்னிமரியாள் ஆகியவர்களின் பேரில் வழிபாடு செய்தலாகும்.

தெ ரோசி படைத்த நூல்களுக்கும் சிறப்பாக அவருக்கும் நாம் நன்றிக்கடன் பட்டுள்ளோம். தந்தையாரின் மரணத்துக்குப் பின்னும் அவரது 38 ஆண்டுக்கால மறைப்பணியின் வாழ்நாள் சாதனையான இந்த நல்ல வேலைக்கு நாம் அவரைப் பாராட்டக் கடமைப்பட்டுள்ளோம். கிறித்தவக் கொள்கைகளும் நல்லொழுக்கமும் இந்நூல்களில் எடுத்துரைக்கப்பட்டுள்ளன. இவை மனத்தில் ஆழ்ந்து பதியக்கூடிய வகையில் இருப்பதால் கிறித்தவர்களுக்கு இவைகளை வாசிக்கக் கேட்பதில் ஒருபோதும் சலிப்போ, களைப்போ தட்டுவதில்லை.

தெ ரோசி அடிகள் எழுதியவையாகக் கருதப்படும் பிற நூல்கள்: தெ ரோசி அடிகளார் 1743ஆம் ஆண்டிலிருந்து 1750 முடிய உள்ள காலத்தில் கிழமைப் புதுமைகள் ஏழும், புனிதர்கள் வரலாறு மூன்றும், வியாகுலமாதாவின் சரித்திரம் ஒன்றும் ஆகிய 11 நூல்கள் எழுதியிருந்திருக்கக்கூடும். இப்படைப்புகளுக்குப் பின்பு மேலும் சில நூல்கள் எழுதியிருப்பதற்கான சாத்தியக்கூறு இருப்பதாகக் கருதப்படுகிறது.

தெ ரோசியார் எழுதிய நூல்களுள் 'அர்ச். இன்னாசியார் தியானம்' என்னும் நூலும் ஒன்று என்று சோமர்வோக்கல் குறிப்பிடுகிறார். தஞ்சையைச் சேர்ந்த அப்பாவுப்பிள்ளை, ஞானாதிக்கம்பிள்ளை என்னும் இருவரால் 1843இல் வெளியிடப்பட்ட 'வீரமாமுனிவர் சரித்திரம்' முதலியன அடங்கிய நூலின் 'தமிழ்ப்புத்தகப் பெயரட்டவணையில்' சவேரியார் சாமியார் (தெ ரோசி) ஆக்கிய கிழமைப்புதுமைகள் நூல்களோடு 'இன்னாசியார் தியானம்', 'வியாகுல மாதா சரித்திரம்', 'ஞானச் செல்வம்' ஆகிய நூல்கள் காணப்படுகின்றன. 'இன்னாசியார் தியானம்' நூலைத் தெ ரோசி அடிகள் செய்தார் என்னும் செய்தி உளதெனினும் இந்நூல் படியொன்றும் கிடைக்கவில்லை. 'ஞானச்செல்வம்' சென்னையிலுள்ள அரசின் கீழ்த்திசைச் சுவடி நூலகத்தில் 'பிரசங்கப் புத்தகங்கள்' என்னும் தலைப்பிட்டப்பட்ட கையெழுத்துப் படியொன்றும் கல்லச்சுப் படியொன்றும் உள்ளன. இந்நூல்களைத் தெ ரோசியார்தான் எழுதினார் என உறுதியாகக் கூற இவை குறித்த தனி ஆய்வுதான் துணை புரியும்.

## தெ ரோசி அடிகள் உரைநடை வளர்ச்சிக்கு ஆற்றிய தொண்டு

தமிழ் உரைநடைக்கு அடித்தளமிட்டவர் 16ஆம் நூற்றாண்டைச் சேர்ந்த என்றி என்றிக்கஸ் அடிகள். அவரைத் தொடர்ந்து 17ஆம் நூற்றாண்டில் தமிழின் உரைநடைத்தந்தை என்று போற்றப்படும் தத்துவப் போதகரான தந்தை இராபர்ட் தெ நொபிலி அடிகளாவார். இவருக்குப் பின் தமிழகம் வந்த வீரமாமுனிவர் என்றழைக்கப்படும் கான்ஸ்டன்டைன் ஜோசப் பெஸ்கி அடிகள் கிறித்துவப் பெருங்காப்பியமாகிய தேம்பாவணியையும், உரைநடை நூல்களையும் படைத்தார். 18ஆம் நூற்றாண்டில் தமிழகம் வந்து 'சின்ன சவேரியார்' என்று மறவ நாட்டு மக்களால் அழைக்கப்படும் ஜேம்ஸ் தாமஸ் தெ ரோசி அடிகளும் கிழமைப் புதுமை நூல்களையும், புனிதர்கள் வரலாறு நூலையும் எழுதித் தமிழ் உரைநடை வளர்ச்சிக்குப் பெரும் பங்காற்றியுள்ளார். அவரது காலம் வரை தமிழ் மொழியில் தோன்றியிருந்த உரைநடைப் போக்கில் அவர் குறிப்பிடத்தக்க ஒரு திருப்பத்தை ஏற்படுத்தினார். கற்றவர்களுக்கே புரியும் இலக்கிய நடையில் பெரும்பாலும் உரைநடை நூல்கள் தோன்றிக் கொண்டிருந்த சூழலில் கல்வியறிவு இல்லாத நாட்டுப்புற மக்களும் செவியால் கேட்ட அளவில் புரிந்து கொள்ளுமாறு பொதுமக்கள் பேச்சுமொழியிலேயே அவர்தம் நூல்கள் அனைத்தையும் ஆக்கினார்.

16,17ஆம் நூற்றாண்டைச் சேர்ந்த மறைப்போதகர்களான தந்தை என்றி என்றிக்கஸ், தத்துவப் போதகர், வீரமாமுனிவர், உரையாசிரியர்கள் ஆகியோரின் உரைநடைப் பகுதிகளை எடுத்து அவற்றோடு தெ

ரோசியின் நூல்களின் உரைநடையைப் பற்றி ஒப்புமை முறையில் நன்கு ஆராய்ந்து பேராசிரியர் முனைவர் ச.சாமிமுத்து அவர்கள் 'சின்ன சவேரியார் படைத்த தமிழ் உரைநடை நூல்கள் பற்றிய திறனாய்வு' (Rev.Fr.James Thoma de Rossi S.J. 1701-1774) செய்துள்ளார். அவரது முனைவர் பட்டத்திற்காக எழுதிய அந்தத் திறனாய்வில் தெ ரோசி அடிகளின் நூல்கள் பற்றி மிக விளக்கமாகவும், எளிய நடையிலும் ஆய்வு செய்துள்ளதைக் காணலாம்.

சின்ன சவேரியார் என்றழைக்கப்படும் தெ ரோசியாரின் உரைநடையை அவர் கால எல்லையில் ஒன்றியிருந்த உரைநடைகளோடு ஒப்பிட்டு நோக்கும்போது அவருடைய உரைநடை, தமிழ் உரைநடைப் போக்கில் குறிப்பிடத்தக்க ஒரு திருப்பம் கண்ட உரைநடையாக அதாவது தமிழ் மக்களின் பேச்சுத் தமிழ் உரைநடையாகத் திகழ்கின்றது. அவர்தம் உரைநடைத்தமிழ் உரைநடையில் ஏற்பட்ட ஒரு புதிய வளர்ச்சியாகும்.

தெ ரோசி அடிகளின் மறையுரையில் தமிழ் உரைநடை: 'தமிழ் உரைநடையில் சொற்பொழிவு (பிரசங்கம்) முறையைத் தொடங்கியவர்களும் பேணி வளர்த்தவர்களும் கிறித்துவ மறைத் தொண்டர்களாவர். அவர்களுள் குறிப்பிடத்தக்கவர் சின்ன சவேரியாரான தெ ரோசி அடிகளேயாவார். இவர் எழுதிய நூல்கள் அனைத்தும் பல மறையுரைகளைக் கொண்டதாகும். ஆகவே மறையுரையால் தமிழ் உரைநடை வளர்த்த தமிழ்த் தொண்டராம் தெ ரோசி வரலாற்றில் குறிப்பிடத்தக்க இடம் பெறுவதற்குரியவராவார்.

பதினெட்டாம் நூற்றாண்டில் பொதுமக்களுக்கென்று அவர்களுக்குப் பழக்கமான பேச்சு மொழி நடையில் தெ ரோசி தம் நூல்கள் அனைத்தையும் படைத்தார். இவருடைய தமிழ் உரைநடையானது இந்த நூற்றாண்டு வரை வளர்ந்து வந்த உரைநடைப் போக்கில் ஒரு புதிய திருப்பமாக அமைந்தது என்பது வெள்ளிடைமலை. இவர் தமிழ் உரைநடையைப் புதுமை நிகழ்ச்சிகளைக் கொண்டு மறையுரைகளால் வளர்த்துப் பொது மக்களிடையே செல்வாக்குப் பெற்றார். கிறித்தவ மறைக் கருத்துக்களால் உரைநடைக்கு வளம் கூட்டினார். ஐரோப்பிய மொழிச் சொற்கள் பலவற்றைத் தமிழ் உரைநடைக்குத் தந்து தமிழ் உரைநடைச் சொல்வளத்தைப் பெருக்கினார். இப்புதிய வளர்ச்சிக்குக் காரணமாகிய சின்ன சவேரியாரைப் பொதுமக்கள் தமிழ் உரைநடையின் தந்தை என்று ஏற்றிப் போற்றுதல் வேண்டும்.

சின்ன சவேரியாரின் மணிமண்டபம் சருகணியில் உள்ளது. 1901ஆம் ஆண்டு ஜூன் மாதம் அகஸ்தூஸ் ஜான் அடிகளால் (Fr.Jean Augustus S.J.) இவரைப் பற்றிய கல்லறைக் குறிப்பொன்றை இலத்தீன்

மொழியில் அழகிய கற்பலகையில் பொறித்து வைத்தார். அதில் எழுதியுள்ள செய்தியாவது:

"இ.மா.இ.அருட்திரு. யாகப்ப தோமை தெ ரோசி சே.ச. இங்கு அடக்கமாகியுள்ளார். மறவர்களிடையே 30 (38) ஆண்டுகள் உழைத்தார். கிறிஸ்துவர்களாலும் மற்ற மக்களாலும் போற்றப்பெற்றார்.

சருகணி என்னுஞ் சிற்றூர் இங்கு எழுந்து நிற்கும் கோவிலுக்காகவும் இவ்வூர் சிறந்த இடத்தில் அமைக்கப் பட்டிருப்பதற்காகவும் இவருக்குக் கடமைப்பட்டுள்ளது. இவர்தம் வாழ்நாளில் இறைவனின் திராட்சைத் தோட்டத்தில் தளர்ச்சியடையாத ஊழியராக இருந்தார். இவர் இறந்தும் தம் நூல்கள் மூலம் இன்னும் பேசுகிறார். அவை மக்கள் புரிந்து கொள்வதற்கு ஏற்ற வகையில் அமைத்து எழுதப்பட்டுள்ளன. கிறிஸ்துவர்கள் தங்களுக்கு மேய்ப்பர்கள் இல்லாத துன்ப நாள்களில் ஆட்டுத்தோல் போர்த்திய ஓநாய்களால் வழி தவறிப் போகக்கூடிய இடையூறுகளில் இவருடைய நூல்கள் மக்களின் இறைப்பற்றைப் பாதுகாப்பதற்கு ஏற்ற துணையாய் அமைந்தன. இன்னும் கிறிஸ்துவர்கள் கரங்களில் அவைகள் விளங்குகின்றன. இவர்தம் நினைவு மதித்துப் போற்றப் பெறுகின்றது."

இலத்தீன் மொழியில் பொறிக்கப்பட்டுள்ள இச்செய்திகளை ஃபெரோலி அடிகளார் ஆங்கிலத்தில் மொழிபெயர்த்துத் தம் நூலில் வெளியிட்டுள்ளார். பேராசிரியர் முனைவர் சாமிமுத்து அவர்கள் அதைத் தமிழாக்கம் செய்து வெளியிட்டுள்ளார்.

## சர்டோரியுஸ்
## (Sartorius, J.) 1704-1738

சர்டோரியுஸ் ஜெர்மனியிலுள்ள லுப்தென்செல்டன் நகரில் 1704ஆம் ஆண்டு பிறந்தார். இவர் ஹலேயில் (Halle) படித்து இலண்டனில் பாதிரியாராகத் திருநிலைப்படுத்தப்பட்டு, 1730ஆம் ஆண்டு சென்னைக்கு மறைப்பணியாற்ற வந்துசேர்ந்தார்.

சீகன்பால்கு 20000 வார்த்தைகளைத் தொகுத்து மூன்று பத்திகளாக அகராதி படைத்துள்ளார். அதில் முதல் பத்தியில் தமிழ் வார்த்தைகளும், இரண்டாம் பத்தியில் இலத்தீன் மொழியில் எழுத்துப் பெயர்ப்பும், மூன்றாம் பத்தியில் ஜெர்மன் மொழியில் அர்த்தமும் கொடுக்கப்பட்டுள்ளன. இவர் சமயம், மெய்யியல், வரலாறு, மருத்துவம்,

பொருளாதாரம், ஒலியியல் போன்ற 200 நூல்களிலிருந்து வார்த்தைகளைச் சேகரித்துள்ளார். இப்பகுதி தமிழ் அகரவரிசைப்படி வரிசைப்படுத்தப் பட்டுள்ளது. பொருளடக்க அகரவரிசை அட்டவணை ஜெர்மன் மொழியில் புத்தகத்தின் இறுதியில் கொடுக்கப்பட்டுள்ளது. இவர் மேலும் மொழி மரபுத் தொடர்பு வார்த்தைகளையும், சொற்றொடர்களையும், வேர்ச் சொற்களையும் சேர்த்து அகராதியை விரிவு படுத்தியுள்ளார். இவற்றிற்கு அர்த்தமும், எழுத்துப் பெயர்ப்பும் கொடுக்கப்பட்டுள்ளன. இவையனைத்தும் பனை ஓலைகளில் காணப்படுகின்றன. இவை அச்சடிக்கப்படவில்லை.

அறிஞர் சீகன்பால்கின் மரணத்திற்குப்பின் 1719ஆம் ஆண்டில் சர்டோரியுஸ் இந்தத் திட்டத்தை மேற்கொண்டு தொடர்ந்து அநேக வார்த்தைகளைச் சேர்த்துக் காகிதத்தில் எழுதி ஒரு புத்தகம் தயாரித்தார். இந்த வேலையை முடிக்க ஒன்பது ஆண்டுகள் ஆயின. இதை முடித்தபின்பு சர்டோரியுஸ் புத்தகத்தின் இறுதியில் உள்ள பொருளடக்கத்தை இலத்தீன் மொழியில் தயாரிக்கத் தொடங்கினார். இவ்வகராதி வெளியிடுவதற்கு முன்பு 1838ஆம் ஆண்டு இயற்கை எய்தினார். இவரின் மரணத்திற்குப்பின்பு இத்திட்டத்தைப்பற்றி எதுவும் தெரியவில்லை.

படைப்பு

"German -Malabar Lexicon" Nct.C.18th century.

## ஜோகன் பிலிப் பேப்ரீசியஸ்
## (Johan Philip Fabricius) 1711 - 1791

ஜோகன் பிலிப் பேப்ரீசியஸ் பிராங்போர்ட் அருகாமையிலுள்ள கிளீபர்க் என்னுமிடத்தில் 1711ஆம் ஆண்டு ஜனவரித் திங்கள் 22ஆம் தேதி பிறந்தார். கெய்சன், ஹாலே நகரங்களில் கல்வி கற்றார். அவர் 1739ஆம் ஆண்டு கோப்பன்ஹேகனில் பாதிரியாராகத் திருநிலைப் படுத்தப்பட்டார்.

ஜே.பி.பேப்ரீசியஸ் தமிழகத்திலுள்ள தரங்கம்பாடி டேனிஷ் மறைக்குழுவுடன் பணியாற்ற 1742இல் அனுப்பப்பட்டார். சென்னையில் மறைப்பணி புரிந்து கொண்டிருந்த பாதிரியார் சல்ட்சே அடிகளை அப்பொறுப்பிலிருந்து விடுவிப்பதற்காக வந்து 1788 வரையில் அங்கே பணியாற்றினார்.

புத்திக்கூர்மையும், திறமையும் உள்ள பேப்ரீசியஸ் பல ஆண்டுகள் பணியாற்றினார். தமிழ் மொழியை நன்கு கற்றறிந்தார். அவர் அகராதியைப் படைத்ததோடல்லாமல் கிறித்தவப் பாடல்களைத் தமிழில் மொழிபெயர்ப்பதில் திறமையுள்ளவராகவும் இருந்தார்.

அவர் படைத்த தமிழ் அகராதி இன்றுவரையிலும் பயன்படுத்தப்படுகின்றது. நூல்களின் வரலாற்றிலேயே அவர் படைத்த தமிழ் அகராதி சிறப்பான இடத்தைப் பெற்றுள்ளது. பேப்ரீசியஸ் கிறித்தவ ஆங்கிலப் பக்திப் பாடல்களைத் தமிழில் மொழியாக்கம் செய்துள்ளார். இது குறிப்பிடத்தக்க ஒன்றாகக் கருதப்படுகின்றது. கிறித்தவக் குழுக்கள் இப்பக்திப் பாடல்களை இன்றும் பயன்படுத்தி வருகின்றன.

பேப்ரீசியசின் சமயப் பணிக்காலத்தின் பொழுது பல அரசியல் குழப்பங்கள் நடந்தன. ஆங்கிலேயரும் பிரெஞ்சுக்காரர்களும் ஒருவரை ஒருவர் எதிர்த்துச் சண்டையிட்டுக் கொண்டிருந்தனர். அதனால் சமயப் பணிகள் மிகவும் பாதிக்கப்பட்டன. அவர் புலிக்காட்டில் இருந்த டேனிஷ்காரர்களிடம் தஞ்சம் புகுந்தார். 1752இல் ஆங்கிலேயரின் ஆதரவு பெற்று மறை பரப்புப் பணியில் ஈடுபட்டார். மறுபடியும் சிக்கலில் மாட்டிக் கொண்டதின் விளைவாகச் சிறையில் அடைக்கப் பட்டார். அங்குத் தண்டனையை அனுபவிக்கும்போது தமிழ்-ஆங்கில அகராதியை எழுதினார்.

பேப்ரீசியசும் சுவார்ட்சும் சேர்ந்து ஒரு திருப்பாடலை மொழியாக்கம் செய்தனர். தமிழ் ஆங்கில அகராதியும், பழைய ஏற்பாட்டின் மொழிபெயர்ப்பான சத்திய வேத நூலும், கிரேக்க மொழியிலிருந்த புதிய ஏற்பாட்டின் மொழிபெயர்ப்பும் அவரை என்றும் நினைவுகூரச் செய்யும். அவர் தமது 50 ஆண்டுக் கால மறைப்பணிக்குப் பின்னர் 1791ஆம் ஆண்டு ஜனவரி 24ஆம் நாள் சென்னையில் காலமானார்.

**பேப்ரீசியசின் படைப்புக்கள்**

1. A Grammar for Learning the Principles of The Malabar Language, Properly called Tamil or the Tamilian Language, Madras, 1778.
2. சத்ய வேதமாகிய கிறிஸ்து மார்க்க உபதேசங்களைச் சுத்தமும் வரிசையுமாகக் காண்பிக்கும் ஆயத்தப்புஸ்தகம், மறுபதிப்பு, 1780.
3. A Dictionary of The English and Malabar Languages, Madras, 1786.
4. பிரார்த்தனைப் புத்தகம், மறுபதிப்பு 1797.
5. பாப்பு மார்க்கம் இன்னதென்று காட்டும் கண்ணாடி, மறுபதிப்பு, 1798.
6. சின்னக் குறிப்பிடம், மறுபதிப்பு, 1804.
7. ஞானம் பிறப்பதில், மறுபதிப்பு, 1850.
8. சுவிசேஷ வாக்கியப் பிரகாரம், 1867.
9. புதிய ஏற்பாடு, 1883.
10. சத்தியவேதப் புத்தகம் பழைய ஏற்பாடு, 1893.
11. A Dictionary - Tamil and English, Tranquebar, 1910.

## சுவார்ட்ஸ்
## (CH.Schwartz) 1726-1798

சுவார்ட்ஸ் பாதிரியார் 1726ஆம் ஆண்டு அக்டோபர் 26இல் பிராண்டன்பர்க்கிலுள்ள சோனன்பர்க்கில் பிறந்தார். அவர் ஹாலேயில் தமது கல்வியை முடித்துவிட்டு 1749 செப்டம்பர் 17இல் கோப்பன்ஹேகனில் பாதிரியாராகத் திருநிலைப்படுத்தப்பட்டார். 1750 ஜூலை 30இல் கடல் பிரயாணம் செய்து கடலூரில் வந்திறங்கினார். அங்கிருந்து அவர் தரங்கம்பாடிக்குச் சென்றார். சில ஆண்டுகளுக்குள் அவர் சென்னை செல்ல வேண்டியிருந்தது.

சுவார்ட்ஸ் ஏறக்குறைய பதினொரு ஆண்டுகள் பணிக்குப் பிறகு 1762ஆம் ஆண்டு திருச்சிராப்பள்ளிக்குச் சென்று அங்கு மறைப்பணிக் குழுவைத் தொடங்கினார். அங்கிருந்து தஞ்சைக்குச் சென்று மறைப்பணிக் குழுவை ஆரம்பித்தார். அப்பொழுது தஞ்சையை ஆண்டு வந்த மன்னர் சரபோஜியுடன் நல்லுறவு வைத்திருந்தார். தஞ்சை மன்னரிடம் தமக்கு உள்ள செல்வாக்கால் கிறித்தவ சிறுவர்களுக்கு இலவச உணவு தர ஏற்பாடு செய்தார். ஞாயிற்றுக்கிழமை விரும்பியவர்களுக்கு அரைநாள் விடுமுறை அளிக்கச் செய்தார். தமிழ்-ஆங்கில அகராதியை 1779இல் உருவாக்கியவர். 1788இல் வேப்பேரி சபையிலிருந்து விலகிய இவர் பைபிளைத் தமிழில் மொழிபெயர்த்தார். **சின்னக் குறிப்பிடம், சுவிசேஷ வாக்கியப் பிரசங்கம், பாப்பு மார்க்கம், பிரார்த்தனைப் புத்தகம், ஞானாபரணப்பெட்டி, ஆங்கிலம்-தமிழ் இலக்கணம்** போன்ற நூல்களை எழுதியுள்ளார். பேப்ரீசியசின் உதவியுடன் இவர் ஒரு பக்திப் பாடல் எழுதியதாகக் கருதப்படுகின்றது. இவர் பல்மொழி அறிந்திருந்தார். இலத்தீன், ஹீப்ரு, கிரேக்கம், ஆங்கிலம், தமிழ், மராத்தி போன்ற மொழிகளிலும், வேறு பல மொழிகளிலும் சுவார்ட்ஸ் புலமை பெற்றிருந்தார்.

இவர் 1776இல் தஞ்சையிலேயே நிரந்தரமாகத் தங்கினார். இவர் ஒரு திருத்தமுறைக் கிறித்தவர். தம்முடைய உயிலில் தம் பணத்தையெல்லாம் மறைக் குழுவுக்கும், ஏழைகளுக்கும் எழுதி வைத்தார். 1798 பிப்ருவரி 13-ஆம் நாள் இவர் திருமணமாகாதவராகவே மரணமடைந்தார். தஞ்சைக் கோட்டையில் சுவார்ட்சுக்கு ஒரு சிலை நிறுவப் பட்டுள்ளதை நாம் காணலாம். அதன் கீழே அவருடைய வரலாற்றுச் சுருக்கம் தரப்பட்டுள்ளது.

## மகி பியர்
## (Maguy Perre) 1748-1822

பிரான்சு நாட்டில் ரோசோய்-ஓர்-செர் என்னுமிடத்தில் மகி பியர் 1748-ஆண்டு பிப்ருவரித் திங்கள் 29ஆம் நாள் பிறந்தார். இவர் தொடக்க, உயர்நிலைப் படிப்புகளை முடித்தபின்னர் 1773ஆம் ஆண்டில் பாரிசு உயர்குரு மடத்தில் சேர்ந்தார். மெய்யியல், இறையியல் படிப்பை முடித்து 1774 மே மாதம் 28ஆம் நாள் குருவாகத் திருநிலைப்படுத்தப்பட்டார். மறு ஆண்டு 1775 பிப்ருவரி மாதம் 2ஆம் தேதி இந்தியாவை நோக்கிப் புறப்பட்டார். மகி பியர் அடிகள் புதுவைக்கு வந்து சேர்ந்தவுடன் கல்லூரியில் பேராசிரியராக நியமிக்கப்பட்டார். மூன்று ஆண்டுகள் ஆசிரியப் பணி ஆற்றிய பின்பு அந்தக் கல்லூரியின் தலைவராகப் பணிபுரிந்தார்.

1784ஆம் ஆண்டு செப்டம்பர் மாதம் 28ஆம் நாள் துணை ஆயராக நியமனமானார். 1811ஆம் ஆண்டு முதல் 1820 வரை அரியாங்குப்பம் பங்கின் பொறுப்பை ஏற்றுச் சிறந்த முறையில் மிகத் திறமையாகப் பணியாற்றி வந்தார். 1822ஆம் ஆண்டு மே திங்கள் முதல் நாளன்று தந்தை மகி பியரின் ஆன்மா மண்ணுலகைவிட்டு விண்ணுலகை அடைந்தது.

**தந்தையின் பங்களிப்பு**

இலத்தீன்-தமிழ் அகராதி (Dictionarium Latino-Tamulicum) என்ற 500 பக்கங்கள் கொண்ட நூலை எழுதியுள்ளார். இது இரண்டு பகுதிகளாகப் பிரிக்கப்பட்டுள்ளது. தந்தையவர்கள் எழுதிய கையெழுத்துப் பிரதி தற்பொழுது பாரீசில் விணிறி ஆவணக் காப்பகத்தில் உள்ளது.

## ஜே.பி.ராட்லர்
## (J.P.Rottler) 1749-1836

ஜே.பி.ராட்லர் பிரான்ஸ் நாட்டில் லோரெயின் மாவட்டத்திலுள்ள ஸ்ட்ராஸ்பர்க்கில் 1749ஆம் ஆண்டு ஜூன் மாதம் பிறந்தார். அவர் ஸ்ட்ராஸ்பர்க்கில் தமது பள்ளி, கல்லூரிப் படிப்புகளை முடித்து விட்டு முதுகலைப் பட்டமும் (வி.கி.) பெற்றார். மறைப்பணியாற்றுவதற்கான பயிற்சி பெற்றுப் பாதிரியாரானார். அவர் ஜெ.டபிள்யூ. ஜெர்லாக் என்பவருடன் இந்தியாவை நோக்கிப் பயணம் மேற்கொண்டு தமிழகம் வந்தடைந்தார். இருவரும் திருநெல்வேலிக்குப் பணியாற்றச் சென்றனர். ஜே.பி.ராட்லர் சில ஆண்டுகள் பணியாற்றியபின் தரங்கம்பாடி வந்து சேர்ந்தார். அங்கு 1803 வரையில் மறைப்பணி ஆற்றுவதில்

ஈடுபட்டிருந்தார். பின்பு அங்கிருந்து சென்னைக்குச் சென்றார். சென்னையில் அவருக்குச் சென்னைச் சமயச் சங்கத்தின் பொறுப்பு தரப்பட்டது. டாக்டர் ராட்லர் தமது ஓய்வு நேரத்தில் பெரிய அளவில் தாவர வகைகளைச் சேகரித்தார். அதனால் அவர் பல்வேறு வகைப்பட்ட எட்டுச் சங்கங்களில் உறுப்பினரானார். ஏறக்குறைய அறுபதாண்டுக் காலம் தமிழகத்தில் சிறப்பாக வாழ்ந்த பின்னர் 1836ஆம் ஆண்டு சனவரித் திங்கள் 24ஆம் நாள் காலமானார்.

**டாக்டர் ராட்லரின் பங்களிப்பு**

பேப்ரீசியஸ் பாதிரியாரால் தொடங்கப்பட்ட தமிழ்-ஆங்கில அகராதி வேலையை தொடர்ந்து எழுதினார் ராட்லர். ராட்லர் எழுதிய இந்த அகராதிதான் பின்பு சென்னைப் பல்கலைக் கழகத்தில் தொடரப்பட்டுப் பெரிய அளவில் பேரகராதியாக வெளிவந்துள்ளது. இவர் ஆங்கில வழிபாட்டு நூலையும் தமிழாக்கம் செய்தார்.

1830ஆம் ஆண்டு டாக்டர் ஜே.பி.ராட்லர் நான்கு பிரிவுகள் கொண்ட தமிழ்-ஆங்கில அகராதியைத் தயாரித்தார். நான்கு ஆண்டுகளுக்குப் பிறகு 1834இல் இவ்வகராதியின் முதல் பிரிவு வேப்பேரியில் அச்சடிக்கப்பட்டது. சென்னை அரசால் மாற்றம் செய்யப்பட்டுப் பின்னர் இப்பணியை மேற்கொண்ட ஹார்க்னெஸ் (Harkness) இவ்வகராதியை மறு ஆய்வு செய்து திருத்தம் செய்தார். இப்பணிக்கு உதவியாக அவருக்கு இரண்டு ஆசிரியர்களும் நியமனம் செய்யப்பட்டனர். பிறகு அப்பணி மீண்டும் ஏ.ராபட்சன் (Robertson) என்பவரால் திருத்தம் பெற்றது. இந்த அகராதியின் முதலாம் பிரிவு அச்சு வடிவில் வரும்போது லார்டு வில்லியம் பெண்டிங்க் (Lord William Bentick) என்னும் ஆளுநர் தலைவராய் (Governor General) இருந்தார். ஆகவே அவர் பெயரில் படையல் செய்யப்பட்டு வெளிவந்தது.

இந்த அகராதியின் இரண்டாம் பிரிவு அச்சாகிக் கொண்டிருக்கும்போது டாக்டர் ஜே.பி.ராட்லர் இறந்து விட்டார். ராட்லரின் வேலைகளடங்கிய தாள்களுக்குள் மதுரை மறைமாநிலத்தின் தந்தை தெ.பூர்ஜெஸ் அடிகள் தயாரித்த பிரெஞ்சு-தமிழ் அகராதி, சுவடி வடிவில் கிடைத்தது. ராட்லரின் மறைவு பாதிரியார் டபிள்யூ.டெய்லரைப் (W.Taylor) பதிப்பாசிரியராக ஆக்கிற்று. சென்னை மாநிலக் கல்லூரியில் ஆசிரியராய்ப் பணியாற்றிக் கொண்டிருந்த டி.வெங்கடாசல முதலியார் உதவியுடன் டெய்லர் அகராதியை மறுபடியும் திருத்தம் செய்தார். இந்த இரண்டாம் பிரிவு 1836-37இல் தான் வெளியிடப்பட்டது. மூன்றாம் பிரிவு 1839 ஆம் வருடமும் நான்காம் பிரிவு 1841ஆம் வருடமும் வெளியாயின. முழு அகராதியும் 1425 பக்கங்கள் கொண்டிருந்தது. இது டாக்டர் ராட்லர், பெஸ்கியின் சதுரகராதியிலிருந்து பெரும் பகுதியை வாங்கி

எழுதியுள்ளது போலத் தோற்றமளித்தது. தெ.பூர்ஜெஸ் அடிகள் (De Bourges) தமிழ்-பிரெஞ்சு அகராதியைத் தொகுத்திருந்தாலும் அது அச்சேறவில்லை. ஆனால் ராட்லர் அவருடைய அகராதியைப் பயன்படுத்தியுள்ளதாகத் தெரிகிறது. மேலும் பெஸ்கியின் பொதுக்கிளை மொழிச் சுவடி அகராதியையும், பெப்ரீசியசின் 'மலபார்-ஆங்கில' அகராதியையும் ராட்லர் பயன்படுத்தியுள்ளார் எனவும் தோன்றுகிறது.

சொற்கள் எவ்வாறு பயன்படுத்தப்படுகின்றன, எவ்வாறு இலக்கியங்களில் அமைந்துள்ளன என்பதனை அச் சொற்களின் பட்டியலைத் தந்து அவற்றின் பொருள்களைத் தந்த பிறகு விளக்கியுள்ளார். ராட்லர் தமது அகராதியில் சொற்களின் பொருள்களை மிகத் தெளிவாகப் புரிந்து கொள்வதற்காக அவற்றை வாக்கியங்களில் அடிக்கடி பயன்படுத்தித் தந்துள்ளார். தமிழில் வழங்கப்படும் வடமொழிச் சொற்களின் அமைப்பையும் குறிப்பிட்டுள்ளார். குறிப்பாக இலக்கணக் குறிப்புகள் சிறப்பாக எடுத்துக் காட்டப்பட்டுள்ளன.

சில சொற்கள் பிறமொழிகளிலிருந்து கடன் வாங்கப் பெற்றிருப்பதை அவர் கண்டுள்ளார். எடுத்துக்காட்டாக இந்தி. அவருடைய பெயர்ப்பட்டியலில் அவர் காலத்தில் மிகப் பெரும்பான்மையாக வழங்கிய சொற்கள் சேர்க்கப்பட்டுள்ளன. இது சொற்களின் வரலாற்றை உருவாக்கும் மாணவனுக்கு மிக உதவியாக உள்ளது.

**பங்களிப்பு**

1. A Dictionary of the Tamil and English Languages. 4 parts. Parts III & IV were revised by W.Taylor and T.Venkatachala Mudali, Mission Press of the Society for Promoting Christian Knowledge, Vepery, Madras, 1836, Part I: pp 288; Part II: pp 410; Part III: pp 455; Part IV: pp vi+248.

## காலின் மெக்கன்சி
## (Collin Machenzie) 1753

காலின் மெக்கன்சி ஸ்காத்லாந்து நாட்டை அடுத்த லெவிஸ் தீவில் 1753ஆம் ஆண்டு பிறந்தார். மெக்கன்சி 1782ஆம் ஆண்டு இந்தியாவிற்கு வந்தார். இந்தியா வருமுன்னரே இந்தியாவின் கணிதம் பற்றிய செய்திகளைச் சேகரிப்பதில் ஈடுபட்டிருந்தார். இந்தியாவுக்கு வந்து ஆங்கிலேயக் கிழக்கிந்தியக் கம்பெனியில் பொறியியல் துறையில் பணியாற்றினார். இவர் இங்கே வாழ்ந்த முதல் 13 ஆண்டுகளில் பட்டாளத்திற்குரிய கடமைகள், தம் அலுவலுக்குரிய கடமைகள் ஆகிய

பல கடமைகளை ஆற்றுவதிலேயே கருத்தைச் செலுத்தினார். இவர் பணியாற்றிய இடங்கள் சென்னை, கோயம்புத்தூர், திண்டுக்கல், நெல்லூர், குண்டூர், மைசூர், கல்கத்தா(கொல்கத்தா), சாவகம் என்பனவாகும்.

மெக்கன்சி சென்னையில் பணியாற்றியபோது வடக்கே கிருஷ்ணா நதியிலிருந்து தெற்கே கன்னியாகுமரி வரையிலுள்ள பகுதிகளில் அடிக்கடி சுற்றுப் பயணம் மேற்கொண்டார். தம் அலுவல் தொடர்பாகச் செய்த சுற்றுப் பயண வாய்ப்பைப் பயன்படுத்தித் தாம் செல்லும் இடங்களில் ஏட்டுப்படிகளையும், ஏனைய தொல்பொருட்களையும் விலை கொடுத்து வாங்கித் தொகுத்தார். 1818ஆம் ஆண்டு மெக்கன்சி, சர்வேயர் ஜெனரல் பதவி பெற்றுக் கல்கத்தாவுக்குச் சென்றார். அங்கே அவர் போனபோது தாம் சேகரித்து வைத்திருந்த சுவடிகளையும் தம்முடன் கொண்டு சென்றார். அவர் பட்டியல் எழுதி முடிப்பதற்குள் காலமாகவே அந்தப் பணியைத் தக்கவர்களைக் கொண்டு நிறைவேற்றுவது அரசின் பொறுப்பாயிற்று. அவர் சேகரித்த தொகுப்பு 15,000 பவுன் பெறுமதியுள்ளது. அதனை 10,000 பவுன் விலை கொடுத்துத் திருமதி மெக்கன்சி அவர்களிடமிருந்து அரசினர் வாங்கிக் கொண்டனர். இவருடைய வாழ்க்கை வரலாற்றை இலண்டன் ராயல் ஏசியாட்டிக் சொசைட்டி ஜர்னல் முதல் தொகுப்பும் "Man whom India has known" என்ற நூலும் விரிவாகவும், சுவைபடவும் தருகின்றன என்று அறிகின்றோம்.

### பங்களிப்பு

சென்னைப் பல்கலைக் கழகத்தில் அமைந்துள்ள அரசின் "கீழ்த்திசைச் சுவடிகள் நூலகம்" தென்னிந்தியக் கலைச் சுரங்கங்களுள் மேலான களஞ்சியம் என மதிப்பிடத் தக்கது. இங்குள்ள பல்வேறு தொகுப்புகளுள் ஒரு பொருள் தொகுப்பு கர்னல் காலின் மெக்கன்சி என்பாரின் அயரா உழைப்பின் அற்புதக் கனியாகும்.

மெக்கன்சி தொகுப்பில் நூல்கள் மட்டுமல்ல. துண்டு வெளியீடுகள், அறிக்கைகள், வரைபடங்கள் ஆகியவையும் அடங்கியுள்ளன. மேலும் கல்வெட்டுப்படிகள், நாணயங்கள், சிற்பங்கள் பற்றிய குறிப்புக்களையும் தொகுக்க முனைந்தார் மெக்கன்சி. அப்பணியை நிறைவேற்றும் முன்னரே அவர் மறைந்தார். எனினும் அப்பணியைப் பேராசிரியர் வில்சன் நிறைவு செய்துள்ளார். அவர் வெளியிட்டுள்ள "மெக்கன்சி தொகுப்பு" என்னும் விவர நூல் இரண்டு பதிப்புகளைக் கொண்டுள்ளது. முதல் பதிப்பு இரண்டு காண்டங்களில் வெளிவந்தது. இரண்டாம் பதிப்பு ஒரே காண்டமாக 1882ஆம் ஆண்டு வெளியாயிற்று. இப்பகுதியில் பொருளடக்க அகரவரிசைத் திருத்தமும் விரிவும் பெற்றுள்ளது.

மெக்கன்சி தொகுப்புப் பற்றிய திறமான அறிக்கை மறைத்திரு வில்லியம் டெய்லரால் வெளியிடப் பெற்றுள்ளது. இத்தொகுப்பில் தமிழ், தெலுங்கு, கன்னடம், மலையாளம், மராத்தி, அரபி, பாரசீகம், சமஸ்கிருதம் முதலிய பல மொழிகளிலும் படிகள் உள்ளன. தமிழில் உள்ள கையெழுத்துப் படிகள் 192. அவை புராணம் தொடங்கிக் கலைகள் ஈறாகக் கீழ்க்கண்டவாறு பகுக்கப் பெற்றுள்ளன.

| | |
|---|---|
| புராணம், கட்டுரை | 44 |
| உள்ளூர் வரலாறு, வாழ்க்கை வரலாறு | 39 |
| நாடகங்கள், கதைகள், கவிதைகள் | 72 |
| மொழி நூல், இலக்கணம் | 10 |
| வானநூல், சோதிடம் | 14 |
| மருத்துவம் | 10 |
| கலைகள் | 3 |

ஒவ்வொரு துறையிலும் குறிப்பிடத்தக்க நூல்கள் சில வருமாறு:

**புராணம், கட்டுக்கதை**

இராமாயணம், மகாபாரதம், ஸ்கந்த புராணம், பெரிய புராணம், பாகவத புராணம், காஞ்சி தல புராணம் போன்ற தல புராணங்கள், அருணாசல மகாத்மியம் போன்ற மகாத்மியங்கள்.

**உள்ளூர் வரலாறு, வாழ்க்கை வரலாறு**

சோழ மகாத்மியம், சோழ பூர்வ பட்டயம், சோழ தேச பூர்வீக சரித்திரம், சோழ மண்டல, தொண்டை மண்டல, பாண்டிய மண்டல ராஜாக்கள், கொங்குதேச ராஜாக்கள், பாண்டிய ராஜாக்கள், சங்கத்தார் சரித்திரம், இடங்கை வலங்கை சரித்திரம், ஜாதிபேத நூல்.

**நாடகங்கள், கதைகள், கவிதைகள்**

தேரூர்ந்த நாடகம், பழனி நொண்டி நாடகம், குசலவ நாடகம், வள்ளியம்மை நாடகம், மீனாட்சி அம்மன் பிள்ளைத் தமிழ், நளராஜா கதை, பஞ்ச தந்திரம், உதயகுமார கதை, வேதாளக் கதை, பரமார்த்த குரு கதை, தேவாரம், திருவாசகம், வேங்கட வெண்பா, அபிராமி அந்தாதி, அகஸ்திய ஞானம், பகவத் கீதை, நீதிசாரம், நீதிவெண்பா, திருவள்ளுவர் குறள், அரங்கேச வெண்பா.

**மொழிநூல், இலக்கணம்**

தொல்காப்பியம், நன்னூல், தொன்னூல் விளக்கம், அகஸ்திய வியாகரணம், தண்டியலங்காரம், திவாகரம், சிதம்பர அகராதி, வீரமாமுனிவர் இயற்றிய தமிழ்-பிரெஞ்சு அகராதி.

**வானநூல், சோதிடம்**

சர்வார்த்த சிந்தாமணி, ஜாதகர் இலக்கணம், பூகோள பிரமாணம், புவன கோசம், தேச நிர்ணயம்.

**மருத்துவம்**

அகஸ்திய வைத்தியம், வைத்திய சூத்திரம் நூறு, திருமூலர் வைத்தியம்.

**கலைகள்**

**சிற்ப சாஸ்திரம், நாவாய் சாஸ்திரம்**

நூல்களன்றித் துண்டு வெளியீடுகள் நூற்றுக் கணக்கில் இருக்கின்றன. அவை, கோவில்கள், தலங்கள், அரசர் இனங்கள், தீர்ப்புக்கள் எனப் பல்வேறு தலைப்புக்களில் அமைந்தவை.

**வலங்கைச் சரித்திரம்**

வலங்கைச் சரித்திரம் என்ற நூலின் தொடக்கத்திலே மெக்கன்சியைப் பற்றிய ஒரு குறிப்பு வருகிறது. அது வருமாறு: "கனம் பொருந்திய (கர்னல் காலின் மெக்கன்ஸி) துரையவர்கள் கொடுத்த கட்டளைதானே வேதநாயக வேதாகம சிரோமணியாரை வலங்கை இடங்கைச் சாதியாருடைய சரித்திரத்தைக் கூடின மட்டும் இந்தப் புத்தகத்திலே விவரமும் திட்டமுமாக எழுத ஏவிவிட்டது."

**விசுவ புராண வசனம்**

விசுவ புராண வசனம் என்ற நூலின் தொடக்கமும் இவரைப் பற்றிய குறிப்பைத் தருகிறது. "கனம் பொருந்திய கலநெல் காலன மைக்கிஞ்சி (கர்னல் காலின் மெக்கன்சி) துரையவர்கள் வேதாக சிரோமணியாருக்குக் கொடுத்த கட்டளைப்படியே பல பல சாதிகளுடைய வித்தியாசங்களையும் அவர்களுண்டான பூருவோத்திரங்களையும் காட்ட வேண்டியதாச்சுது."

## நத்தானியேல் எட்வர்டு கின்டர்ஸ்லி (Kindersely, Nathaniel Edward)

நத்தானியேல் எட்வர்டு கின்டர்ஸ்லி படைத்துறையைச் சாராத அரசு அலுவலராகக் கிழக்கிந்தியக் கம்பெனி மூலம் சென்னை வந்தார். இவர் "இந்து இலக்கிய எடுத்துக்காட்டு மாதிரிகள்" (Specimens of Hindoo Literature) என்ற தலைப்பில் ஒரு நூல் எழுதி 1794இல் வெளியிட்டார். இந்நூலில் நன்னெறி, இந்து சமயப் புராணச் செய்திகள், அதன் இலக்கியம் சார்ந்தவைகளைப் பற்றிக் கையாளப்பட்டுள்ளது. இந்நூலின்

மற்றொரு பகுதியில் திருவள்ளுவர் கடல் அல்லது ஞான சமுத்திரம் (Teroovalluver Kaddal or The Ocean of Wisdom) என்னும் தலைப்பில் திருக்குறளை ஆங்கிலத்தில் மொழியாக்கம் செய்துள்ளார். இது திருக்குறளின் முதல் ஆங்கில மொழியாக்கம் என்று கருதப்படுகிறது. இவர் முதல் 12 அதிகாரங்களில் உள்ள ஈரடிச் செய்யுளை ஆங்கிலத்தில் செய்யுள் வடிவில் மொழியாக்கம் செய்தார். ஆங்கிலத்தில் உரைநடையிலும் எழுதியுள்ளார். இதில் மொழியாக்கத்தின் சிக்கலை விளக்கியுள்ளார்.

**படைப்புகள்**

1. Specimens of Hindu Literature (consisting of Translation from the Tamil Language), London, 1794.
2. Teroovalluvar Kaddal or The Ocean of Wisdom (Selection from Thirukural), London, 1794.

## பெரேன் ஜான் சார்லஸ் (Perrin Jean Charles) 1754-1841

இவர் பிறந்த இடம் அர்புவா (Arbois) என்னும் ஊர். 1754ஆம் ஆண்டு ஜூலை மாதம் 20ஆம் தேதி பிறந்தார். 1775ஆம் ஆண்டு டிசம்பர் மாதம் 6ஆம் தேதி வி.ணி.றி. செமினேரியில் சேர்ந்து 1777ஆம் ஆண்டு ஜனவரி மாதம் 13ஆம் தேதி மலபார் மிஷனுக்குப் புறப்பட்டுச் சென்றார்.

1778இல் தெலுங்கு நாட்டுக்கு அனுப்பப்பட்டார். பின்னர்ப் பிரிக்கோ ஆண்டகை பரந்து கிடந்த தமிழ்ப்பகுதியில் பணியாற்ற அவரை அனுப்பினார். பல ஆண்டுகள் மிஷனில் உழைத்த இவர் 1784இல் மிஷனிலிருந்தும் சபையிலிருந்தும் விலகிப் பிரான்ஸ் நாட்டுக்குத் திரும்பிவிட்டார்.

**படைப்புகள்**

இந்தியப் பயணம். பெரேன் ஜான் சார்லஸ் Voyage dans l'Industan,par M.Perrin, ancien Missionarie des Indes; Chanoine Honoraire du Metropolis de Bourges-Paris. Published by him in 1807, XI-326 (1) pp; 347 (1).

இந்தியாவிலுள்ள புதிய சேசசபைத் துறவிகள். பெரேன் ஜான் சார்லஸ் a) Les nouveaux Jésuites francais dans l'Inde;ou vie du Pre Perrin, Paris, Laroche (1865) pp. 381 ( cfr.035.p 117 of Bibliography of the French in India, cited in Sarva Vyabi earlier)

## அ.பிளேன்
## (A.Blin)

இவர் பிரெஞ்சு நாட்டுப் போர்வீரர். போர்ப்படை அதிகாரியாய்ப் பணிபுரிந்தவர். பிரான்சு நாட்டிலிருந்து பாண்டிச்சேரிக்கு அனுப்பப் பட்டவர். இங்கு வந்தபோது இந்நாட்டு மொழியில் இவருக்கு வேட்கை உண்டாயிற்று. இவர் தமிழை ஓரளவு கற்றார். தமிழ்ச் சொற்களை அகரவரிசையில் அடுக்கி அவற்றிற்குப் பிரெஞ்சு நேர்பதங்களைத் தந்து ஒரு நூல் இயற்றினார். இந்நூல் இவருக்கும், இவர் போன்ற இராணுவத் துறை அதிகாரிகளுக்கும் பயன்படுவதாயிற்று. இவர் படைத்த இந்நூலுக்கு அகராதித் தமிழ் என்ற பொருளில் பிரெஞ்சு மொழியில் பெயர் தந்தார். இந்நூல் பாரீசு நகரத்தில் அச்சடிக்கப்பட்டது.

## அபே துபுவா ஜான் அந்துவான்
## (Abbé Dubois Jean Antoine) 1766-1848

அபே துபுவா ஜான் அந்துவான் பிரான்ஸ் நாட்டில் சேன் ரெமேர் (Sai Rèmere) என்னுமிடத்தில் 1766ஆம் ஆண்டு சனவரி மாதம் முதல் தேதி பக்தி மிக்க தம்பதியர்களுக்குத் திருமகனாகப் பிறந்தார். பாரிசு அந்நிய மறைப்போதகர் சபையில் சேர்ந்து குருவானவருக்கான படிப்பை முடித்தபின் 1791இல் குருப்பட்டம் பெற்றார். இவர் மறு ஆண்டு 1792இல் இந்தியாவிலுள்ள மறைத் தளமான மலபார் மறைமாநிலத்தை நோக்கிப் புறப்பட்டார்.

சேலத்தில் சிறிது காலம் தங்கிப் பணியாற்றிவிட்டு 1799இல் மைசூருக்குச் சென்றார். தந்தை துபுவா மீது ஆங்கிலேயர்கள் மிகுந்த மதிப்பு வைத்திருந்தனர். அவர்கள் தந்தை ஓசூரில் ஆலயம் கட்டுவதற்குச் சிறிது நிலமளித்தனர். மேலும் சீரங்கப்பட்டணம், தர்மபுரி ஆகிய இடங்களிலும் கோவில் கட்டப் பண உதவியும் அளித்தனர். துபுவா அடிகள் சபையின் தலைமை மடம் அமைந்துள்ள பாரீசுக்கு 1819இல் திரும்பி அழைக்கப்பட்டார். அங்கு அவர் குருமடத்திற்கு இயக்குநராக 1823ஆம் ஆண்டு ஆகஸ்ட் மாதம் 5ஆம் தேதி நியமிக்கப்பட்டார். பின்னர் 1836,1839,1942-1845ஆம் ஆண்டுகளில் குருமடத்தின் அதிபருக்கு உதவியாளராகப் பணியாற்றினார். அபே துபுவா ஜான் அந்துவான் அடிகள் பாரீசு நகரில் 1848ஆம் ஆண்டு பிப்ருவரி மாதம் 17ஆம் நாள் இயற்கை எய்தினார்.

### தந்தையவர்கள் தமிழுக்காற்றிய இலக்கியப் பணிகள்

1. இந்தியாவின் நிறுவனங்களும், சமயச் சடங்குகளும், செயல் வழக்காறுகளும் (Moeurs, institutions...) என்னும் நூலைத் துபுவா அடிகள் பிரெஞ்சு மொழியில் எழுதினார். ஆங்கிலம், ஜெர்மன்,

ஜப்பான், இஸ்பானியம், தமிழ் ஆகிய மொழிகளில் இந்நூல் மொழியாக்கம் செய்யப்பட்டு வெளிவந்துள்ளது. இது ஆங்கிலேயர் ஆட்சிக்காலத்தில் இந்தியன் சிவில் சர்வீஸ் (ICS) பயிற்சிக்குப் பாட நூலாகவும் இருந்தது.

2. துபுவா அடிகள் பஞ்சதந்திரம், பரமார்த்த குரு கதைகள், மற்றும் வேறு பல கதைகளைத் தமிழ் மொழியிலிருந்து பிரெஞ்சாக்கம் செய்திருக்கின்றார். இவர் பிரெஞ்சு மொழியாக்கம் செய்த பஞ்சதந்திரம் பிரான்ஸ் நாட்டில் பெரிதும் வரவேற்கப்பட்டது. பஞ்சதந்திரக் கதைகளில் தமிழ் நடையிலுள்ள சுவை குறையாத நிலையைப் பிரெஞ்சு ஆக்கத்தில் கையாண்டமையால் இவரது பிரெஞ்சு மொழிபெயர்ப்பு பெரிதும் பாராட்டப்பட்டது. புதுச்சேரியில் மொழிபெயர்ப்பாளர்களின் தேர்வுகளுக்கு இம் மொழிபெயர்ப்பு நூலின் ஒரு பகுதி பாடமாகப் பிரெஞ்சிந்திய அரசாங்கத்தார் முற்காலத்தில் வைத்திருந்தனர்.

3. துபுவா அடிகள் ஏனைய மத போதகர்கள் தமிழில் மொழிபெயர்த்த சமயநூல்களைப் பதிப்பித்து உள்ளார். அவையாவன: கிறிஸ்துநாதர் அனுசாரம், மத சம்பந்த சல்லாபம். உன் மதமென்ன?, (இரண்டாம் பதிப்பு 1915) பாவசங்கீர்த்தனப் பிரசங்கம், (நான்காம் பதிப்பு 1919) உனக்கு எது பைபிள்? அல்லது பைபிள் பாரம்பரியத்தின் மேல் கட்டப்பட்டிருக்கிறதென்று புரோட்டஸ்டாண்டாரைக் கொண்டே காண்பித்தல், (பதிப்பு 1927) திருச்சபையோ வேதாகமோ? எது சத்திய வேதத்தைப் போதிக்க அதிகாரமுள்ளது?, (பதிப்பு 1928) தாழ்ச்சி கண்ணாடி (முதல் பதிப்பு 1875, மூன்றாம் பதிப்பு 1928).

4. மேலும் துபுவா அடிகள் நான்கு ஆய்வுக் கட்டுரைகளை எழுதி வெளியிட்டுள்ளார்.

   i) அஷ்வமேத யாகத்தைப் பற்றிய வருணனை
   ii) கங்கை நதியின் பிறப்பும் அதன் மகத்துவமும்
   iii) புகழ்பெற்ற கயா கோயில்
   iv) விஷ்ணுவின் சில முக்கியமான அவதாரங்கள்

## பிரடு கேம்மரா
## (Fred Cammera) 1767-1837

பிரடு கேம்மரா ஜெர்மன் நாட்டவர். 1767ஆம் ஆண்டு பிறந்தார். இவர் தமது 22வது வயதில் அதாவது 1789இல் பாதிரியாராக நியமிக்கப்பட்டு இலங்கை வழியாக 1791இல் தரங்கம்பாடிக்கு வந்தார். பிரடு 1803இல் திருக்குறள் முழுவதையும் ஜெர்மன் மொழியில் மொழியாக்கம் செய்தார். நிக்கோலாஸ் ஆங்கிலத்தில் எழுதிய

பழமொழிகளைத் தமிழ் மொழியாக்கம் செய்தார். இந்த நூலை அவர் தெளிவாக்கங்களுடன் வெளியிட்டுள்ளார்.

**படைப்பு**

Das Thiruvalluvar, Leipzig, 1803.

## லா ப்புலோத்
## (La Flotte)-1769

பிரான்ஸ் நாட்டிலிருந்து பயணியாகத் தமிழகம் வந்து நம் நாட்டின் அமைப்பு, மக்களின் பழக்க வழக்கங்கள் முதலியவற்றை யெல்லாம் ஆராய்ந்தறிந்தவர் இவர். தம் பயணத்தின் பொழுது தாம் சென்ற இடங்களைப் பற்றியும், மக்களின் வாழ்க்கை முறை பற்றியும் தம்முடைய நூலில் குறிப்பிட்டுள்ளார். தமது பயணத்தின்போது கண்டவற்றையும், கேட்டவற்றையும் தினமும் குறிப்பெடுத்து வந்தது காரணமாகத் தம் நூலை இவர் வகைப்படுத்தி இயற்றவில்லை. ஒரு நாட்குறிப்புப் போலத் தமது நூலை அமைத்துள்ளார். பயணத் தினசரி என்று தம் நூலுக்கு இவர் பெயர் புனைந்தார். தமிழ் நாட்டில் சோழ மண்டலக் கரையின் வருணனை இந்தத் தினசரியில் பெரிதும் காணப்படுகின்றது. நாட்டு நிலைமை பற்றிச் செய்திகளின் குறிப்பு மாத்திரமல்லாமல் நாட்டின் மொழியைப் பற்றியும் குறிப்புகள் இவர் நூலில் காணப்படுகின்றன. தமிழ் இலக்கியம் குறித்துப் பல இனிய பகுதிகளை இவருடைய நூல் கொண்டு விளங்குகின்றது. மக்களின் வாழ்க்கை முறையையும், உறவையும் குறிப்பது இவருடைய பயணத் தினசரியெனினும் தமிழ் மொழியின் சிறப்பையும் அது வெளியிடுகிறது. பயணத் தினசரி என்னும் இவரது நூல் 1769ஆம் ஆண்டில் வெளிவந்துள்ளது.

## புஷே தொப்சோன்வில்
## (Foucher d' Obsonville) 1783

புஷே தொ ப்சோன்வில் என்ற இந்தத் திருவாளரும் பிரான்ஸ் நாட்டிலிருந்து தமிழகம் வந்த பயணியாவார். இவர் தமது ஆய்வில் நாட்டைப் பற்றியும் மக்களைப் பற்றியும் சொல்லவில்லை. இவரின் தொண்டு ஒரு தனிப்பட்ட துறையில் விளங்கியது எனலாம். இயற்கை நிலைகளைப் பெரிதும் விரும்புவர் என்பது இவர் மேற்கொண்ட பணியிலிருந்து விளங்குகிறது. தமிழ் நாட்டில் பல இடங்களுக்குச் சென்று இவர் ஆராய்ந்தது, விலங்குகளையும், பறவைகளையும் பற்றியதாகும். இவர் 1783ஆம் ஆண்டில் இந்த ஆராய்ச்சியின் பயனாக ஒரு நூல் இயற்றினார். அந்நூல் 'தமிழ் நாட்டு விலங்குகளும் பறவைகளும்' என்னும் பெயரில் வெளிவந்தது.

## டெய்லர் வில்லியம்
## (Taylor William)

டெய்லர் வில்லியம் திருத்து முறைக் கிறித்தவ மறை போதிக்கும் பாதிரியாராக 1815ஆம் ஆண்டு இந்தியா வந்து சேர்ந்தார். 1819இல் இவர் இங்கிலாந்து நாட்டிற்குச் சென்று கிறித்தவ மறையியலைக் கற்றார். அவர் ஒரு செல்வச் சீமாட்டியைத் திருமணம் செய்து கொண்டார். அவள் பெரும்பொருளை வரதட்சணையாகக் கொண்டு வந்தாள். அவர் திரும்பி வந்த பின்னர்த் தமிழைக் கற்கத் தொடங்கினார். அதைக் கற்பதில் மிகுந்த ஆர்வம் காட்டினார். ''வேதத்தாட்சி'' என்று நூலைத் தமிழில் வெளியிட்டார். அந்நூல் சென்னையில் 1834இல் அச்சிடப்பட்டது. ஐரோப்பியர் தமிழ் கற்க வசதியாக இருக்க, அவர் ஆங்கிலத்திலும் தமிழிலும் நூல்களை வெளியிட்டார். ''வெற்றி வேற்கை'' யை அவர் ஆங்கிலத்தில் மொழிபெயர்த்தார்.

கீழை நாட்டு வரலாற்றுச் சார்பான கையெழுத்துப் படிகளை மொழிபெயர்ப்பதற்கு முயன்று அதில் வெற்றியும் பெற்றார். முற்றுப் பெறாமலிருந்த ராட்லர் அகராதியின் மூன்று, நான்கு பாகங்களை நிறைவு செய்தார். கிடைக்கக்கூடிய தமிழ்க் கையேடுகளின் அட்டவணையை அவர் தயார் செய்தார்.

Oriental Historical Manuscripts in the Tamil Language, 2 Vol. Madras, 1835. "Marava-Jathivarnam," (From unpublished Mackenzie Manuscripts in possession of the Asiatic Department of the Madras Library Society), The Madras Journal of Literature and Science, 4(1936) 350-61.

A Dictionary of the Tamil and English Languages, Madras, 1856. "Translation of the Kongu- Desa -Rajakkal," The Madras Journal of Literature and Science, 14, 1(1847). A Tamil Primer for the Use of Beginners: Madras, 1856.

Catalogue Raisonné of Oriental Manuscripts in the Library of the College Fort Saint George, 3 Vol. Madras, (1857-62).

## ரெவரெண்ட் மிரோன் வின்சுலோ
## (Rev. Miron Winslow) 1789-1864

1789ஆம் ஆண்டு டிசம்பர் 11ஆம் நாள் அமெரிக்க ஐக்கிய நாட்டில் வின்சுலோ பிறந்தார். அவர் கல்விப்படிப்பு முடித்துவிட்டு நார்விச்சில் தமது இருபத்தொன்றாவது வயதில் வணிகத் தொழிலில் ஈடுபட்டார். அந்நிய நாடுகளில் மறைப்பணியாற்ற வேண்டியதன் முக்கியத்துவத்தை உணர்ந்தார். அவர் மறைப்பணி புரியத் தம்மையே அர்ப்பணித்துக்கொண்டு மிடில்பரி கல்லூரியில் கல்வி கற்றார். யேல்

பல்கலைக்கழகத்தில் மொழியியல் துறையில் சேர்ந்து பல மொழிகளைக் கற்றார். ஏண்டவர் மறைக்கல்விக் குழுவில் பட்டம் பெற்றார். அவர் மிகுந்த புத்திக்கூர்மையும், மறை உணர்வும், வணிகத் திறமையும் கொண்டிருந்தார். அவர் மறையியலையும், மறைப் பணியாற்றத் தேவைப்படும் மொழிகளையும் கற்று 1818ஆம் ஆண்டு பாதிரியார் நிலைக்கு உயர்த்தப்பட்டார்.

1819இல் வின்சுலோ தமது துணைவியாருடன் இந்தியாவை நோக்கிப் பயணம் மேற்கொண்டார். அன்னார் 1833 வரையில் உடுவில்லில் தங்கி ஓர் உள்ளிருப்பு விடுதியையும், ஒரு பள்ளிக் கூடத்தையும் நிர்வகித்து வந்தார். மூன்று சிறிய பெண்குழந்தைகளை விட்டுவிட்டு அவருடைய துணைவியார் 1833இல் மரணமடைந்தார். அதே ஆண்டு அக்டோபர்த் திங்களில் தம் குழந்தைகளுடன் அமெரிக்காவுக்குத் திரும்பிச் சென்றார். மூன்று ஆண்டுகள் கழித்து அவர் 1836இல் மறுமணம் செய்து கொண்ட இரண்டாவது துணைவியாருடன் இலங்கைக்குத் திரும்பினார். அந்நாட்டில் சில காலம் தங்கிவிட்டுப் பின்னர் அவர் சென்னைக்கு வந்து சேர்ந்தார். இராயபுரத்தில் தங்கி மறைப்பணியாற்றினார். 1864ஆம் ஆண்டு அக்டோபர் 22ஆம் நாள் வின்சுலோ பாதிரியார் மீளாத் துயில் கொண்டார்.

சென்னையில் வின்சுலோ தமிழறிஞரை அமர்த்தித் தமிழ் கற்றார். அவர் மறைச் சங்கப் பள்ளியையும் அச்சகத்தையும் நிறுவி அவற்றை மேற்பார்வை செய்து கொண்டிருந்தார். பாதிரியார் அவர்கள் மறை சம்பந்தமான துண்டுப் பிரசுரங்களைத் தமிழில் எழுதி வெளியிட்டார். அவர் 1862ஆம் ஆண்டு தொகுத்து வெளியிட்ட ஆங்கிலம்-தமிழ் அகராதி மிகவும் புகழ் வாய்ந்த ஒன்றாகும்.

**படைப்புக்கள்**

1. குருட்டு வழி (Blind way) சென்னை, 1861.
2. புரிந்து கொள்ளும் திறனுள்ள தமிழ்-ஆங்கிலம் அகராதி உயர்தர சாதாரணத் தமிழில், சென்னை, 1862.
3. ஆங்கிலம்-தமிழ் அகராதி (மூன்றாம் பதிப்பு விரிவாகவும் உரோமன் கத்தோலிக்க மதம் சார்ந்தது) சென்னை, 1888.
4. ஆங்கிலம்-தமிழ் அகராதி, (முதல் பதிப்பு, ஸ்பால்டிங், இரண்டாம் பதிப்பு, (1852) மூன்றாம் பதிப்பு (1888).
5. புரிந்து கொள்ளும் திறனுள்ள தமிழ்-ஆங்கில அகராதி (உயர், கொச்சைத் தமிழில்) D.D.வெளியீடு, அச்சடிப்பு குண்ட் (Hunt) சென்னை அமெரிக்கன் மறைக்குழு அச்சகம், 1862.
6. புரிந்து கொள்ளும் திறனுள்ள தமிழ்-ஆங்கில உயர் கொச்சை அகராதிகள். சென்னை, 1882.

## ரெவரென்ட் சார்லஸ் தியோபிலஸ் எவால்டு இரேனியஸ் (Rev.Charles Theophilus Ewald Rhenius) 1789-1838

ரேனியஸ் 1789ஆம் ஆண்டு ஜெர்மனியில் பிறந்தார். அவர் பள்ளி, கல்லூரிப் படிப்புகளை முடித்துவிட்டு 1802 வரையில் அரசாங்க அலுவல் பார்த்து வந்தார். 1810ஆம் ஆண்டு பெர்லினிலிருந்த லூதரன் சமயக் குழுவில் சேர்ந்தார். இரண்டு ஆண்டுகளுக்குப் பிறகு அவர் பாதிரியார் நிலைக்கு உயர்த்தப்பட்டார். பிறகு அவர் இங்கிலாந்து சென்றார். ஒன்றரை ஆண்டுகள் அங்கே சமயப்பணிச் சங்கத்தில் பணியாற்றினார். 1814இல் அவர் சென்னைக்கு வந்தார். அங்கிருந்து அவர் 1820இல் பாளையங்கோட்டைக்குப் புறப்பட்டுச் சென்றார்.

விரைவில் அவர் இந்த மண்ணின் மொழியாகிய தமிழில் புலமை பெற்றார். இரேனியஸ் தமது தொடக்ககாலத் தமிழ்க் கல்வியை முகவை இராமானுஜ கவிராயரிடம் கற்றார். அவர் எளிதில் தமிழைக் கற்று விரைவாக அதில் பிறர் போற்றும் அளவிற்குப் புலமை பெற்றார். அவருடைய தமிழ்நடை டாக்டர் ஜி.யு.போப்பின் கவனத்தை ஈர்த்தது. அவரது தமிழ்நடையானது தெளிவானது, சுருக்கமானது; அவருடைய உரைநடை நூல்கள் மட்டுமே கிடைத்துள்ளன. இரேனியஸ் பாதிரியார் தமிழை நல்ல முறையில் எளிதாகப் பேசினார்.

ரெவரென்ட் ஜேம்ஸ் ஹாப் திருநெல்வேலி சமயக் குழுவின் பொறுப்பாளராகப் பணியாற்றினார். இவருக்குப்பின் இரேனியஸ் பாதிரியார் இச்சமயக் குழுவின் பொறுப்பை ஏற்றுத் திறன்படச் சிறந்த முறையில் நடத்தினார். திருநெல்வேலி சமயப்பணிக் குழுவின் முன்னேற்றமான கருத்துக்களுக்குக் காரணம் அவருடைய மனப்பூர்வமான உழைப்பே எனலாம். அவர் காட்டிய பணிமுறை முன்னால் பின்பற்றப் பட்டவைகளைவிடச் சிறப்பானதாகும். இவர் புதிதாகக் கிறித்தவ சமயத்தில் மனமாறிய கிறித்தவர்களின் முன்னேற்றத்திற்காக அரும்பாடு பட்டார். சமுதாயச் சீர்திருத்தத்தைக் கிறித்தவ மக்களிடையே கொண்டுவந்தார்.

> "சாதி எந்த வகையிலும் அனுமதிக்கப்படாமை, பெண்கல்வியை முறைப்படி வளரச் செய்தமை, சமய, அறக் காரியங்களுக்காக உள்நாட்டுக் கிறித்தவர்களுக்குள்ளே குழுக்களை நியமித்தமை ஆகிய செயல்களைச் செய்த முதல் சமயப் பணியாளர் இரேனியஸ் பாதிரியாராவார்."

என்று கால்டுவெல் நம்புகிறார்.

ஜெர்மன் வணிகர் மூலம் சமயக் குழுவிற்காகப் பெருந் தொகையை அன்பளிப்பாக டோனா என்ற அம்மையார் வழங்கினார்.

அன்னார் பெயரில் 'டோனாவூர்' என்ற ஓர் ஊரை உருவாக்கினார். கிறித்தவக் குடும்பங்களை அங்கே குடியமர்த்தினார். அங்கே ஒரு சங்கத்தைத் தொடங்கினார். அதன் மூலமாகப் பள்ளிக் கூடங்களுக்கும், கோவில்களுக்கும், வேறு கட்டடங்கள் கட்டுவதற்கும் தேவையான நிலத்தை அவர் வாங்க ஏற்பாடு செய்தார். இச்சங்கம் இடையறாது பணியாற்றி 12 ஊர்களை உருவாக்கியது. பல்வேறு பணிகளுக் கிடையே பிறவியிலேயே எழுத்தாற்றல் உடைய இரேனியஸ் தம் இலக்கியப் பணியைத் தொடர்ந்தார். பின்பு அவர் எழுத்தாளர் சங்கம் ஒன்றைத் தொடங்கினார். அதன் மூலமாக எழுதுவதையும் அச்சிடுவதையும் ஊக்குவித்தார். இரேனியஸ் விதவைகளுக்கு உதவி புரியப் பெரும் முயற்சி செய்தார். அவர் விதவைகளுக்கு நிரந்தர ஓய்வூதியம் கிடைக்க ஏற்பாடு செய்தார். பத்தொன்பதாம் நூற்றாண்டில் இந்திய விதவைகளின் விடுதலைக்காக நடந்த போராட்டத்தின் வரலாற்றில் அறிஞர் இரேனியசின் பங்களிப்பானது ஒரு முக்கிய இடம்பெற்றது.

திருப்பாற்கடல் கவிராயர் இரேனியஸ் மறைவு குறித்து ஓர் இரங்கல்பா பாடியுள்ளார். இரேனியஸ் தம் நாற்பத்தொன்பதாவது வயதில் 1838 ஜூன் மாதம் 5ஆம் நாள் உயிர் நீத்தார். திருநெல்வேலி மாவட்டத்தில் உள்ள முருகன் குறிச்சியில் அவரது உடல் அடக்கம் செய்யப்பட்டது.

**படைப்புகள்**

1. ஞான உபதேச விளக்கம், சென்னை, 1825. (An Essay on the principles of translating the Holy Scriptures with Critical Remarks on Various Passages Particularly in Reference to the Tamil Language), Nagercoil: Mission Press, 1827.
2. பூமி சாஸ்திரம், சென்னை, 1832.
3. வேத சாஸ்திரச் சுருக்கம், சென்னை, 1832.
4. மோட்ச மார்க்கம் (Harmony of the Gospels), Madras, 1834.
5. Grammar of the Tamil Language with an Appendix, (rpt.) Madras, 1853.

## திரு. சொன்னரா
## (Sonnerat)

திரு. சொன்னரா பிரெஞ்சு நாட்டவர். இவர் தமிழ் மொழியின் சீர்மையை அறிந்து வியப்படைந்தவர். தமிழின் நெடுங்கணக்கு இவர் மனதைப் பெரிதும் கவர்ந்தது. தமிழ் நூல்கள் பல கற்று அவற்றின் பொருளையும் சிறப்பையும் அறிந்து தம் நாட்டவருக்கு உணர்த்துவதைக்

காட்டிலும் தமிழின் நெடுங்கணக்கின் சீரிய முறையை மாத்திரம் உணர்த்துதலே சாலும் என்று எண்ணியவர். இதனால் 1806ஆம் ஆண்டில் பிரெஞ்சு மொழியில் இவர் 'தமிழ் எழுத்தின் அமைப்பு முறை' என்னும் தலைப்பில் ஒரு நூல் எழுதினார்.

## ரெவரெண்ட் லெவி ஸ்பால்டிங்
## (Rev.Levi Spaulding) 1791-1874

1791ஆம் ஆண்டு ஆகஸ்டு 22 ஆம் தேதி அமெரிக்க ஐக்கிய நாட்டில் லெவி ஸ்பால்டிங் பிறந்தார். இவர்1818-இல் டார்ட்ஸ் மவுத் கல்லூரியில் படித்துப் பட்டம் பெற்றார். அதே ஆண்டில் ஏண்டோவர் மறைச் சபையில் படித்துப் பட்டம் பெற்றார். இவர் இலண்டன் மறைக் குழுவைச் சார்ந்தவர் (London Mission Society). 1819இல் இவர் இலங்கைக்குக் கப்பல் பயணம் மேற்கொண்டார். மறு ஆண்டு 1820இல் அந்நாட்டை அடைந்தார். இவர் மனேப்பியில் பல வருடங்கள் வாழ்ந்தார். 1833இல் உணவு உறைவிடம் ஆகியவற்றுடன் கூடிய பெண்களுக்கான பள்ளியின் பொறுப்பை ஏற்றுத் தம் துணைவியாருடன் உடுவில்லுக்குச் சென்றார். சுமார் 40 ஆண்டுகள் அப்பள்ளியானது இவர்களுடைய பொறுப்பில் இருந்தது. இப் பாதிரியார் இலண்டன் மறைக்குழுவைச் சேர்ந்தவர்.

1844ஆம் ஆண்டு அமெரிக்க ஐக்கிய நாட்டிற்குச் சென்று அங்கு இரண்டு ஆண்டுகள் தங்கியிருந்து விட்டு 1846இல் இலங்கைக்குத் திரும்பி வந்தார். ஸ்பால்டிங் பாதிரியார் கிறித்தவத்தைப் பற்றித் தமிழில் ஏறக்குறைய இருபது நூல்கள் படைத்துள்ளார் என்று கருதப்படுகிறது. மேலும் தமிழில் பல பக்திப்பாடல்களையும் அவர் புனைந்துள்ளார். இரட்சண்ய யாத்திரீகம் (Pilgrims Progress) என்ற ஆங்கில நூலை 'மோட்சப் பிரயாணம்' என்ற தலைப்பில் தமிழாக்கம் செய்துள்ளார்.

1874ஆம் ஆண்டு ஜூன் திங்கள் 8 ஆம் நாள் உடுவில்லில் லெவி ஸ்பால்டிங் இயற்கை எய்தினார். இவரது தாராளத் தன்மை கிறித்தவர்களையும் இந்துக்களையும் வெகுவாக ஈர்த்தது. அநேக இந்துக்கள் ஸ்பால்டிங்கின் மரணத்திற்காகத் துக்கம் கொண்டாடினர்.

**படைப்புக்கள்**

1. An English and Tamil Dictionary, Madras, 832.
2. Spaulding's English-Tamil Dictionary, 1844.
3. The Pilgrim's Progress (from English to Tamil), 1853.

## ரெவரெண்ட் ஜே.சிஎச்.பிரெய்தாப்டு
## (Rev.J.CH.Breithaupt)

ரெவரெண்ட் ஜே.சிஎச்.பிரெய்தாப்டு, ஹேனோவரில் உள்ள டிரான்ஸ்பீல்டு என்னும் ஊரில் பிறந்தார். 1745ஆம் ஆண்டு வெர்னிஜெரோடு என்னுமிடத்தில் அவர் பாதிரியாராக அமர்த்தப் பட்டார். 1846இல் அவர் தரங்கம்பாடிக்கு வந்து சேர்ந்தார். அங்கே சமயப் பணிக்குத் தம்மைத்தாமே தயார்படுத்தித் தமிழ் மொழியைக் கற்றார். 1847இல் அவர் கடலூருக்குச் சென்று அங்கு இரண்டாண்டுகள் சமயப் பணியாற்றிவிட்டுப் பேப்ரீசியஸ் என்பவருடன் சேர்ந்து சென்னை வந்து அவருக்கு முக்கியமான உதவியாளராக இருந்தார். இங்கிலாந்துக்கும் பிரான்சுக்கும் இடையே இந்தியாவில் 1757இல் சண்டை மூண்டபோது பேப்ரீசியசுடன் புலிக்காட்டில் தஞ்சமடைந்தார். கோவிலும் அதைச் சார்ந்த பாதிரியார் இல்லமும் கொள்ளையடிக்கப் பட்டன. சண்டையைத் தொடர்ந்து பஞ்சமும் தொற்று நோய்களும் பரவலாயின. பிரெய்தாப்டு தம் சக பணியாளர்களுடன் சொல்லொண்ணாத் துயரம் அடைந்தார். சுமார் 36 ஆண்டுகள் இந்தியாவில் தங்கி மறைப்பணி ஆற்றிவிட்டு 1782ஆம் ஆண்டு நவம்பர்த் திங்கள் 17ஆம் நாள் உயிர் நீத்தார். தமிழ்-ஆங்கில அகராதியைத் தயாரிப்பதில் அவர் பேப்ரீசியசுடன் பணியாற்றினார். அந்த அகராதியின் தொகுப்புப் பணியில் அவருடைய பங்கே மிகுதியானதாகும்.

## பெஞ்சமின் கை பேபிங்டன்
## (Babington, Benjamin Guy) 1794-1866

மொழியியல் வல்லுநரும் மருத்துவருமான பேபிங்டன் கைஸ் (Guy's) மருத்துவ மனையில் பிறந்தார். அவரது தந்தையின் பெயர் மருத்துவர் வில்லியம் பேபிங்டன் (Dr.William Babington). அவர் அந்த மருத்துவமனையில் மருந்து தயாரிப்பவராகப் பணியாற்றினார். பெஞ்சமின் பேபிங்டன் கப்பற்படையில் சேர்ந்து வால்செரன்னிலும் கோப்பர்கெனிலும் பணியாற்றினார். ஆனால் அப்பணியைவிட்டு விலகி இந்திய மக்கள் சமுதாயப் பணியில் (Indian Civil Service) சேர்ந்து கெயிலஸ்பரிக் கல்லூரியில் (Hailesbury College) சேர்ந்து படித்தபின்பு சென்னை மாநிலத்தின் உயர் அலுவலராக நியமனம் பெற்றார்.

அவர் மொழிகளைக் கற்கும் சிறந்த திறமை படைத்தவர். அதிசீக்கிரம் அவர் கீழ்த்திசை மொழிகளில் புகழ்பெற்ற அறிஞரானார். தந்தை பெஸ்கி இயேசு சபை படைத்த தமிழ்-இலத்தீன் இலக்கணத்தை ஆங்கில மொழியாக்கம் செய்து ஏனைய மொழியாக்கங்களுடன் வெளியிட்டார்.

இவர் ஒரு திடகாத்திரமானவராக இருந்த போதிலும் இந்தியாவின் சீதோஷ்ண நிலை இவரது உடல்நலத்தைப் பாதித்தது. எனவே இவர் தமது தாயகம் திரும்பிச்சென்று அவருடைய தந்தை செய்த அதே வேலையில் பணியாற்ற கேம்ரிட்ஜில் படித்தார்.

அறிஞர் பேபிங்டன் குறிப்பிட்டுச் சொல்லும்படியாக ஆர்வமும் அறிவுமுள்ள சக்தி படைத்த மனிதராயிருந்தார். அறிஞரின் ஏனைய படைப்புகளாவன:

1. தொன்னூல் விளக்கம் மொழிபெயர்ப்பு, 1814.
2. பரமார்த்த குருவின் கதைகள் மொழிபெயர்ப்பு. இலண்டன், 1882.

## பிரான்சிஸ் வொயிட் எல்லிஸ்
## (Francis Whyte Ellis) 1796-1819

பிரான்சிஸ் வொயிட் எல்லிஸ் 1796இல் சென்னை அரசு அலுவலராக இந்தியாவிற்கு வந்தார். இவர் இந்தியாவில் பணிபுரியும் ஒரு நிர்வாகியாக இருந்தார். இவ்வறிஞர் தமிழகத்தில் இருபத்து மூன்று ஆண்டுகள் பணியாற்றினார். இவர் தொடக்கத்தில் மொழிகளைக் கற்பதிலும், தாம் பணிபுரிய வந்த நாட்டின் வரலாற்றையும் பழமையையும் அறியவும் தம் காலத்தைக் கழித்தார் என்று கூறப்படுகிறது. அவருக்குப் பின்பு அவருடைய உடைமைகள் ஏலத்தில் விடப்பட்டன. அவர் எழுதிய எல்லாக் கட்டுரைகளும் அவைகளின் பயன் தெரியாமல் அழிக்கப்பட்டும், கைவிடப்பட்டும் போயின. இவர் 1819ஆம் ஆண்டு வருந்தத்தக்க சூழ்நிலையில் மரணமடைந்தார்.

திருவாளர் எல்லிஸ் நான்கு திராவிட மொழிகளிலும் மிகுந்த புலமை பெற்றிருந்தார். இம்மொழிகளை நன்குக் கற்று நுணுக்கமாக ஆராய்ச்சி செய்ததின் பயனாக இம்மொழிகள் ஒரு தனிக் குடும்பத்தைச் சேர்ந்தவை என ஐயப்பாடின்றித் தெரிந்து கொண்டார். இம் மொழிகள் சமஸ்கிருத மொழிக் குடும்பத்தைச் சார்ந்தவை அல்ல எனவும் அறிந்தார். அவர் சேகரித்த செய்திகள் அனைத்திலிருந்தும் மக்களின் தத்துவம், இலக்கியம் ஆகியவை பற்றி அறியப் பயனுள்ளவையாக உள்ளன.

தெலுங்கு, சமஸ்கிருத மொழிகளின் நூல்களிலிருந்தும், திருமுருகாற்றுப்படை, புறநானூறு போன்ற சங்க இலக்கியங்களில் இருந்தும், திருவாசகம், திருவருட்பா, இராமாயணம், பாரதம், பெரிய புராணம் போன்ற தமிழில் உள்ள இடைக்கால நூல்களிலிருந்தும், அவருடைய சமகால ஆசிரியர்களின் நூல்களிலிருந்தும் எல்லிசின் நூல் நிறையக் குறிப்புகளையும், எடுத்துக்காட்டுகளையும் கொண்டுள்ளதாகக் கூறப்படுகின்றது. சிசரோ, அரிஸ்டாட்டில், ஷேக்ஸ்பியர் நூல்களில் இருந்தும் எடுத்துக்காட்டுகள் தரப்பட்டுள்ளன. இவ்வாறாக அயல்நாட்டு

அறிஞர்களுக்கு ஏறக்குறைய பல நூல்களையும் அறிமுகப்படுத்திப் பெரும்பணி புரிந்துள்ளார்.

மூரின் கீதங்கள் (Moor's Sacred Melodies) என்பதை எல்லிஸ் பொழிப்புரைப்படுத்தித் தமிழில் எழுதியுள்ளார். எல்லிஸ் பெஸ்கியின் தமிழ் நூல்கள் அனைத்தையும் நன்கு கற்றுள்ளார். தேவைப்படும் பொழுது அந்நூல்களிலிருந்து அடிக்கடி எடுத்தாளத் தயக்கம் கொள்ளவில்லை. மேலும் இராபர்ட் தெ நொபிலி நூல்களிலிருந்தும் எடுத்தாண்டுள்ளார். எல்லிசின் சிறப்புமிக்க படைப்பாக நமக்குக் கிடைத்திருப்பது அவர் திருக்குறளுக்கு எழுதியிருக்கும் விரிவுரையாகும். இந்நூல் குறள் முழுவதையும் மொழிபெயர்த்து விளக்கவுரை கூறவில்லை. அவர் தமது விருப்பத்திற்கு ஏற்றவாறு வரன் முறையின்றிக் குறள்களையும் அதிகாரங்களையும் தேர்ந்தெடுத்துள்ளார். அவர் அறத்துப்பாலோடு நிறுத்திக் கொண்டார். அதையும் முழுவதுமாகச் செய்யவில்லை. எல்லிசின் நோக்கம் மொழிபெயர்ப்பு அல்ல. வள்ளுவரின் எண்ணங்களை விளக்குவதிலும் அவருடைய எண்ணங்களோடு ஒத்த இணையான கருத்துக்கள் கொண்ட திறமை மிக்க கவிஞர்களின் பகுதிகளை ஒப்பிட்டுக் காட்டுவதும், இலக்கணப் பகுப்பாய்வு செய்வதும் அவருடைய முக்கியக் குறிக்கோளாகும். இவ்விரிவுரை அறிஞரின் பரந்த தமிழ் இலக்கியப் புலமையையும், தமிழகத்தையும் தமிழ் மக்களையும் அவர்களின் மரபுகளையும் சரியாகப் புரிந்து கொண்ட திறமையையும் நமக்குப் புலப்படுத்துகின்றது. குறிப்பாகக் கூறுமிடத்து அவர் திருக்குறளுக்கு எழுதிய விரிவுரை பொது மக்களுக்கும், ஆராய்ச்சி ஆர்வம் கொண்டவர்களுக்கும் பெரிதும் பயன்படுமாறு உள்ளது.

# பத்தொன்பதாம் நூற்றாண்டு

## கிளேட்டன்
## (Clayton, A.C.)

கிளேட்டன் ஒரு வெஸ்லியன் மறைப்போதகர். இவர் 150 பழமொழிகளைச் சேகரித்து அவற்றை வெளியிட்டார். தமிழ் விவிலிய அகராதி இவரது மற்றுமொரு பங்களிப்பாகும். விவிலியச் செய்திகளை அகர வரிசையில் தொகுத்து முக்கியமான குறிப்புகளுடன் எழுதியுள்ளார். இந்நூல் 1916ஆம் ஆண்டு வெளியிடப்பட்டது.

கிளேட்டன் பள்ளி மாணவர்களின் பயன்பாட்டுக்காக இரண்டு தொகைகள் அடங்கிய ஒரு தமிழ்ப் புத்தகத்தை (Graded Tamil Reader) எழுதினார். இவை தமிழகத்திலும் ஆந்திராவிலும் ஒரு பாடப் புத்தகமாகக் கிறித்துவக் குழுக்கள் மாணவர்களுக்குப் பரிந்துரைக்கப்பட்டன.

1902ஆம் ஆண்டு கிறித்தவ இலக்கியங்களைத் தொகுப்பதற்கு ஓர் அறிஞரைத் தேர்ந்தெடுக்க ரெவரெண்ட் சாண்டலரும், மற்றவர்களும் அடங்கிய ஒரு குழு அமைக்கப்பட்டது. தமிழ்க் கிறித்தவ இலக்கிய மறைத்தளத்தின் தலைவராகக் கிளேட்டன் நியமிக்கப்பட்டார். 1907இல் தமிழ்க் கிறித்தவ இலக்கியத்திற்காக ஒரு வாரியம் உருவாக்கப் பட்டது. இந்த வாரியத்தால் அநேக நூல்கள் வெளியிடப்பட்டன. 1938இல் கிளேட்டன் தமது தலைமைப் பொறுப்பிலிருந்து விலகிக் கொண்டார்.

1917ஆம் ஆண்டு கிளேட்டன் தாம் எழுதிய திருத்தமுறைத் தமிழ்க் கிறித்துவ இலக்கியம் பற்றிய விவரம் அளித்ததில் S.P.C.K. சபையினால் அன்பளிப்பாகக் கொடுக்கப்பட்ட இலத்தீன் அச்சுப் பொறியைப்பற்றி விரிவாக எழுதியுள்ளார். இவ்வச்சுப்பொறி 1912இல் சென்னை வந்திறங்கியது. சீகன்பால்கின் சகமறைப் போதகரான கிரண்லரினால் பெற்றுக் கொள்ளப்பட்டது.

பங்களிப்பு

1. The Tamil Bible Dictionary, Madras, 1911-16.
2. An Introduction to Spoken Tamil, Madras, 1926.
3. Graded Tamil Reader, 2 Vol. Madras, 1834.
4. "The Parayan" - Madras Government Museum Bulletin, 5.2 (1906).
5. A key to Review, Pope's Tamil Language, New Delhi, 1985.

## வில்சன்
## (Wilson, H.H.)

கர்னல் கோலி மெக்கன்சியுனுடைய சேகரிப்புகள் கர்னல் வில்க்ஸியினால் பாதுகாக்கப்பட்டன. இக் கையெழுத்துப் பிரதிகள் அட்டவணையிடப்பட்டுள்ளன. இவற்றில் சில கைப்பிரதிகள் வில்க்ஸினால் பல்வேறு மொழிகளில் வெளியிடப்பட்டன. ஆனால் இந்தப்பணி முற்றுப் பெறவில்லை.

மேற்கூறிய கர்னல் கோலின், கர்னல் வில்க்ஸின் மரணத்திற்குப் பிறகு பேராசிரியர் வில்சன் தன்னிச்சையாக இத்திட்டத்தை எடுத்துப் பதிப்பித்து 1828ஆம் ஆண்டு வெளியிட்டார். அநேக சேகரிப்புகள் தமிழ் மொழியில் உள்ளன.

வில்சன் பாண்டிய அரசைப்பற்றி ஒரு நூல் 1838இல் எழுதி வெளியிட்டார். இவர் திருவிளையாடல் புராணத்தின் காலத்தை 1051 கி.பி. எனக் குறித்துள்ளார். இந்தப் புராணம் சம்ஸ்கிருதத்திலுள்ள புராணத்திற்கு மூலமாகக் கருதப்படுகின்றது என்பது வில்சனின் கருத்து.

பங்களிப்பு

1. The Mackenzie Collection, Madras, 1882.
2. Epitome of Tamil Grammar, Madras, 1868.
3. Historical Sketches of the Kingdom of Pandya, Southern Peninsula of India (பாண்டிய தேசத்தின் கதைக்குறிப்பு), Madras, 1838.
4. A Glossary of Judicial and Revenue Terms and of Useful words Occurring in Official Documents Relating to the Administration of the Government of British India from the Arabic, Persian, Hindustani, Sanskrit, Hindi, Bengali, Oria, Marathi, Gujarathi, Telungu, Kannada, Tamil, Malayalam and other Languages, London, 1855.

## ரெவரெண்ட் எச்.ஆர். ஆய்சிங்டன்
## (Rev.H.R.Hoisington) 1801-1858

எச்.ஆர்.ஆய்சிங்டன் 1801ஆம் ஆண்டு ஆகஸ்டு 23ஆம் தேதி அமெரிக்க ஐக்கிய நாட்டில் பிறந்தார். அவர் தமது பதினைந்து வயதிலேயே அச்சுத் தொழிலைப் பவ்வலோ என்னுமிடத்தில் கற்று நியூயார்க் நகரில் அத்தொழிலைச் செய்து வந்தார். அவர் புளூம்ஃபீல்டு கழகத்தில் டாக்டர் ஆம்ஸ்ட்ராங் என்பவரிடம் கற்றார். ஆய்சிங்டன், வில்லியம்ஸ் கல்லூரியில் 1828ஆம் ஆண்டு இளங்கலைப் பட்டம் பெற்றார். 1831இல் மறைக்குழுவில் இறையியல் கற்றுப் பட்டம் பெற்றார். அதன்பின் பாதிரியார் நிலைக்கு அமர்த்தப்பட்டார். இரண்டு ஆண்டுகள்

கழித்து 1833இல் ஒரு மறைப் பணியாளராக இலங்கைக்குக் கப்பல் பயணம் மேற்கொண்டார். ஆய்சிங்டன் அங்குச் சுமார் பத்து ஆண்டுகள் பட்டிக்கோட்டா மறைக்குழுவில் பணியாற்றினார்.

1834ஆம் ஆண்டு ஆய்சிங்டன் பாதிரியார் மதுரைக்கு ஒரு புதிய சமயக் குழுவை நிறுவச் சென்றார். இரண்டு ஆண்டுகளுக்குப் பின்பு அவர் மறுபடியும் யாழ்ப்பாணம் சென்றார். அங்குச் சமயக் குழுவின் தலைமைப் பதவியை ஏற்றார். பாதிரியாரின் உடல் நலக் குறைவு காரணமாக 1842ஆம் ஆண்டு அமெரிக்கா சென்று மருத்துவம் பார்த்துவிட்டு மறு ஆண்டே (1843) யாழ்ப்பாணத்திற்கு வந்து சேர்ந்தார்.

ஆய்சிங்டன் தமிழ் மொழியை நன்குக் கற்று அதில் சிறந்த புலமையும் பெற்றார். அவர் சைவ சமயத்தில் மிகவும் ஆர்வம் கொண்டிருந்ததனால் அதனை ஆராய முற்பட்டார். கந்த புராணத்தைப் பள்ளிப்பாடப் புத்தகமாக வைக்க அவர் கடும் முயற்சி செய்தார். கிறித்தவப் பள்ளிகளில் அந்நூல் கற்பிக்கப்படுவது பற்றிக் கடும் எதிர்ப்பு உண்டாகியது. கிறித்தவப் பள்ளிகளில் பயிலும் இந்து மாணவர்கள் தம் சொந்த சமயத்தைப் பற்றிப் படிக்க வாய்ப்புப் பெற்றனர். கிறித்தவ மாணவர்கள் சைவ சமயத்தைப்பற்றித் தெரிந்து கொள்ள முடிந்தது. சைவ சமயத்தில் மிகுந்த முனைப்பும், ஆர்வமும் கொண்டு ஆய்சிங்டன் அதில் ஆராய்ச்சி செய்து 1854ஆம் ஆண்டு மூன்று நூல்களைக் குறிப்புகளுடன் ஆங்கிலத்தில் மொழி பெயர்த்துள்ளார்.

ஆய்சிங்டன் தம் அறிவாற்றலை நல்ல விதமாகப் பயன்படுத்தி இந்து சமய அறிவியல், சமய தத்துவங்கள் பற்றி அறிந்து கொண்டார். மேலும் இவர் பல்மொழி வித்தகருமாவார். மேலை நாட்டு மொழிகளான இலத்தீன், ஹீப்ரு, கிரேக்கம் ஆகிய மொழிகளில் நல்ல புலமை பெற்றிருந்தார். சைவ சித்தாந்த நூல்களை மொழிபெயர்க்கும் அளவிற்குச் சமஸ்கிருதம், தமிழ் ஆகிய மொழிகளைக் கற்றிருந்தார்.

அவர் உடல் நலக்குறைவால் பாதிக்கப்பட்டிருந்த போதிலும் சமயக் குழுவுக்காக மிகுந்த ஆர்வத்தோடு பெரும்பணியாற்றி வந்தார். உடல் நலம் மோசமடைந்தவுடன் அவர் சமயப் பணியைக் கைவிட்டு 1849ஆம் ஆண்டு தம் தாய்நாடு செல்ல நேரிட்டது. உடல்நலம் ஓரளவு தேறியபின்பு பாதிரியார் இங்கிலாந்து நாட்டின் தென்பகுதிக்குச் சென்று அங்குள்ள கோவில்களுக்கு இரண்டு ஆண்டுகள் போய்க் கொண்டிருந்தார். அங்கு மூன்று ஆண்டுகள் (1854-56) இந்து சமயம் பற்றிக் கல்லூரி மாணவர்களுக்குச் சொற்பொழிவாற்றி வந்தார். 1857ஆம் ஆண்டு ஏப்ரல் மாதம் புரூக் பகுதியில் உள்ள கோவிலில் பாதிரியாராக அவர் அமர்த்தப்பட்டார். ஓராண்டு சமயப் பணிக்குப் பின்னர் 1858ஆம் ஆண்டு மே மாதம் 16 ஆம் தேதி திடீரென்று மரணமடைந்தார்.

## எச்.ஸ்டோக்ஸ்
## (H.Stokes)

1826ஆம் ஆண்டு எச்.ஸ்டோக்ஸ் சென்னை அரசு ஆட்சி அலுவலராகச் சேர்ந்தார். ஆனால் அவர் 1827ஆம் ஆண்டு சனவரி 9 ஆம் நாள்தான் இந்தியா வந்தடைந்தார். திரு.ஸ்டோக்ஸ் 1842ஆம் ஆண்டு ஜூலைத் திங்கள் முதல் தேதியன்று மாவட்ட ஆட்சியர் ஆனார். இவர் மாயவரத்தில் நிலமும் வீடுகளும் வாங்கி அவற்றை Leipzig என்னும் மதக்குழுவுக்குத் தானமாகக் கொடுத்தார். அவர் குமரகுருபரரின் நீதி நெறி விளக்கத்தை ஆங்கிலத்தில் "The Light of the path of the Virtue" என்னும் தலைப்பில் மொழியாக்கம் செய்துள்ளார். இந்நூல் 1830ஆம் ஆண்டு வெளியிடப்பட்டது. போப் ஐயர் இம் மொழிபெயர்ப்பைப் பாராட்டியுள்ளார். இந்நூலின் முகவுரையில் குமரகுருபரரின் வாழ்க்கைச் சுருக்கமும் அவரின் படைப்புகளின் சுருக்கமும் சில அரிய செய்திகளும் அடங்கியுள்ளன. ஸ்டோக்ஸ் தமிழ் அறிஞர்களையும் அதிலும் குறிப்பாகத் தாண்டவராயரையும் அவர்களின் ஒத்துழைப்பிற்காக நன்றி தெரிவித்துள்ளார். The Light of the path of the Virtue, 1830.

## எட்வர்டு சார்ஜென்ட்
## (Sargent, Edward)

எட்வர்டு சார்ஜென்ட் ஒரு பிரெஞ்சுப் பாதிரியார். தமிழகத்திலுள்ள திருநெல்வேலி மாவட்டத்தில் சுவிசேஷபுரத்தில் மறைப்பணியாற்றுவதற்காக வந்தவர்.

இவர் தமிழ் மொழியை நன்கறிந்தவர். எனவே தமிழில் பேச, எழுத, வாசிக்கத் தெரிந்தவர். தமிழ் மொழியை வியந்து பாராட்டியவர். தமிழிலுள்ள அழகை மகிழ்ச்சியோடு அனுபவித்தவர். பிழையில்லா மொழியில் சொற்பொழிவாற்றும் ஆற்றல் கொண்டவர். மேலும் இவ்வறிஞர் கிராமப்புற மொழியையும், பேச்சு வழக்கு மொழியையும் மிக நன்றாகவே அறிந்திருந்தார். முனைவர் கால்டுவெல் சார்ஜென்டின் அறிவுத் திறமையைக் கண்டு தமது ஆராய்ச்சிக்கு அவரது உதவியை நாடினார்.

ஹென்றி பவரின் (Henry Bower) தலைமையின் கீழ் விவிலியத்தைத் தமிழில் மொழியாக்கம் செய்யும் குழுவில் ஆலோசனை வழங்கும் நபராக இருந்தார்.

இவர் பள்ளி மாணவர்கள் தமிழை வாசிப்பதற்கென்று ஒரு நூலை 1848ஆம் ஆண்டில் எழுதி வெளியிட்டார். இதைத் தொடர்ந்து கிறித்தவத் தமிழ் இசைப்பாக்கள் அடங்கிய .புத்தகத்தை 1853, 1860, 1864 ஆண்டுகளில் ரெவரென்ட் வெப் (Webb) வெளியிட்டார். சார்ஜென்ட்

இப்பாடல்களிலிருந்து 107 பாடல்களைத் தேர்ந்தெடுத்து மலிவுப் பதிப்பில் அச்சடித்து 1865இல் பாளையங்கோட்டையில் வெளியிட்டார். இவர் ஆங்கிலம், தமிழ் ஆகிய இரண்டு மொழிகளிலும் அநேக நூல்கள் எழுதியுள்ளார்.

படைப்புகள்

1. Tamil-Vachaka-Puttagam (Tamil reading book), 2nd ed. Madras, 1848.
2. Poorvika Charithram, Palayamkottai, 1850.

## ஜோசப் பெர்ட்ராண்ட், சே.ச.
## (Joseph Bertrand, S.J. (1801-1884)

ஜோசப் பெர்ட்ராண்ட் 1801ஆம் ஆண்டு நவம்பர்த் திங்கள் 9 ஆம் நாள் பிரான்ஸ் நாட்டில் பக்தியுள்ள கத்தோலிக்கத் தம்பதியருக்குத் திருமகனாகப் பிறந்தார். பள்ளிக் கல்விப் படிப்பை முடித்து விட்டுப் புனித இன்னாசியார் இலோயோலா நிறுவிய துறவறச் சபையான இயேசு சபையில் நவ சந்நியாசியாக 1823ஆம் ஆண்டு அக்டோபர்த் திங்கள் 9 ஆம் நாள் சேர்ந்தார். இவர் இரண்டு ஆண்டுகள் பக்தி முயற்சியில் பயிற்சி பெற்றார். அதன்பின் இலத்தீன், கிரேக்கம் போன்ற மொழிகளையும், அணியிலக்கணம் (Rhetoric) போன்றவைகளையும் கற்றார். பின்னர் மூன்று ஆண்டுகள் மெய்யியல் படித்தார். இறையியல் படிப்பை நான்கு ஆண்டுகள் கற்றபின் குருவாகத் திருநிலைப் படுத்தப்பட்டார்.

ஜோசப் பெர்ட்ராண்ட் தம்முடன் மூன்று சகத் தோழர்களுடன் மறை பரப்பும் பணிக்காக 1837ஆம் ஆண்டு அக்டோபர் 24ஆம் தேதி கப்பல் பயணமாக இந்தியா வந்து பாண்டிச்சேரிக்கு வந்து சேர்ந்தார். அவர்கள் அங்குத் தங்கி இருந்து அன்றாடத் தேவைக்கான அடிப்படைத் தமிழைக் கற்றுத் தேர்ந்தனர். தந்தை பெர்ட்ராண்ட் மதுரையை நோக்கிப் பயணமானார். இவரது தலைமையில் மூன்று மறைப் போதகர்கள் 1838ஆம் ஆண்டு திருச்சிராப்பள்ளியை வந்தடைந்தனர். இவர் தமது சக மறைப்போதகரான தந்தை லூயிஸ் கர்னியருடன் மதுரைக்குச் சென்று அங்கு மறைப்பணியாற்ற எண்ணினார். ஏறத்தாழ முப்பந்தைந்து ஆண்டுகள் தமிழகத்தில் இயேசு சபை, போப்பாண்டவரால் தடை செய்யப்பட்டு அதன்பின் அவர்கள் மறைப்பணியாற்ற உத்தரவு பிறப்பிக்கப்பட்டது. ஜோசப் பெர்ட்ராண்டின் தலைமையில் புதிய மதுரை மறைமாநிலம் நிறுவப்பட்டது. அப்போது மதுரையிலுள்ள புனித ஜெபமாலை மாதா ஆலயத்திற்குள் நுழையக் கோவன் பாதிரிமார்கள் இவர்களைத் தடுத்தனர். எனவே இவ்விருவரும் இராமநாதபுரம் மாவட்டத்திலுள்ள கல்எரிதிடலுக்குச் சென்றனர். அங்கு 10,000 கத்தோலிக்கக் கிறித்தவர்கள் இவ்விருவரையும் மகிழ்ச்சியாக

வரவேற்றனர். இவ்வடியாருடன் வந்த மூன்று சக மறைப்போதகர்கள் 1843இல் ஒருவர்பின் ஒருவராக அகால மரணமடைந்தனர். எனவே தந்தையின் தலைவர் இவரை மறுபடியும் 1844இல் பிரான்ஸ் நாட்டிற்கு அழைத்தார். எட்டு ஆண்டுகள் பணி செய்தபின் 1844இல் தாயகம் திரும்பிச் சென்றார். இவர் பிரான்ஸ் நாட்டிலுள்ள சபையின் தலைமை இடத்தில் தங்கிப் பல பொறுப்புகளை ஏற்றுப் பணியாற்றினார். இவர் புதிதாக நிறுவப்பட்ட மதுரை மறை மாநிலத்திற்குப் பலவகைகளில் உதவி செய்தார். முக்கியமாக இவர் புதிய மறைப்போதகர்களை இந்தியாவிற்கு அனுப்பிக் கொண்டிருந்தார். மேலும் தமிழகத்தைப்பற்றிப் பிரெஞ்சு மொழியில் பல நூல்கள் எழுதி வெளியிட்டார். இவருக்கு முன்னும் இவர் காலத்திலும் பல மறைப்போதகர்கள் எழுதிய கடிதங்களை ஒன்று சேர்த்து நூல்களாகப் பதிப்பித்துள்ளார். நாம் இந்நூல்களிலிருந்து தமிழகத்தின் சமய, சமூக, பொருளாதார, அரசியல் நிலைகளைப் பற்றி அறிந்து கொள்ளலாம். இறுதியாக 1884ஆம் ஆண்டு சனவரி 13ஆம் நாள் லியஸ் (Liesse) என்னும் நகரில் மரணமடைந்தார்.

### அருட்திரு ஜோசப் பெர்ட்ராண்ட் படைத்த நூல்கள்

1. ஆவலைத் தூண்டும் சமய நல்லொழுக்கப் போதனைகள் அடங்கிய புதிய மதுரை மறை மாநிலத்தின் கடிதங்களின் தொகுப்பு. 2 பிரிவுகள் 1,2 20801/3-4.

   (Lettres édifiantes et curieuses de la Nouvelle Mission du Maduré 2vol. 20801/3-4.

2. ஆவலைத் தூண்டும் சமய நல்லொழுக்கப் போதனைகள் அடங்கிய புதிய மதுரை மறை மாநிலத்தின் கடிதங்களின் தொகுப்பு. 2 பிரிவுகள் 3,4 216/4-5 (Lettres édifiantes et curieuses de la Nouvelle Mission du Maduré 2vol. 216/4-5.

3. துறவறச் சபையினரின் மறைபரப்புக் குழுக்களின் வரலாற்றுக் குறிப்புகள். 208-1/5.

   Memoires Historiques sur les Missions des ordres Religieuses-208-1/5.

4. பதிப்பிக்கப்படாத ஆதார மூலங்களின்படி மதுரை மறை மாநிலம் 4 பிரிவுத் தொகுதிகள். 208.1/6-9.

   (La Mission du Maduré d'apres des Documents inédits (4vol.) 208.1/6-9.)

5. அருட்தந்தை பெர்ட்ராண்ட், ஆயர் கனோஸ் ஆகிய இருவரின் புதிய மதுரை மறை மாநிலத்தைப் பற்றிய ஞாபகக் குறிப்புகள்.

   (Nouvelle Mission du Maduré, Memoires de P.J.Bertrand et de Mgr.Canoz, 28 lettres de Mgr.Canoz à P.St.cyr ete).

இந்நூல்கள் அனைத்தும் கொடைக்கானல் செண்பகனூரில் உள்ள மதுரை மறை மாநில இயேசு சபையின் அருஞ்சுவடிக் காப்பகத்தில் உள்ளன.

## வலே தெ விர்வில்
## (Vallet De Virville)

வலே தெ விர்வில் பத்தொன்பதாம் நூற்றாண்டைச் சேர்ந்தவர். கிறித்தவ சமயம் சார்ந்த பணிகளில் ஈடுபடுவதற்காகத் தமிழைக் கற்றுத் தொண்டாற்றினார். இவர் பிரெஞ்சு நூலொன்றை நாடக உருவில் தமிழில் இயற்றி வெளியிட்டார். 'எஸ்தாக்கியர் வாசகப்பா' (Sainte Eustache) என்பது இந்நூலின் பெயர். இந்நூல் 1837இல் வெளியானது. ஆனால் 1845இல் இந்நாடகம் புதுச்சேரியில் நடிக்கப்பட்டது. வசனமும் பாட்டும் கலந்ததே வாசகப்பா என்னும் நாடக இயல் என்பதை நாம் அறிவோம். புதுச்சேரியில் வாழ்ந்த தமிழ்ப்புலவர்கள் இத்துறையில் சில நூல்களை இயற்றியுள்ளார்கள்.

## கேரி ஜேம்ஸ், சே.ச.
## (P.J.Gury, S.J.) 1806-1853

இயேசு சபை மறைப்போதகரான தந்தை கேரி ஜேம்ஸ், புனித வளனார் கல்லூரியை நாகபட்டினத்தில் நிறுவியவர். சில ஆண்டுகளுக்குப் பின் இக்கல்லூரி திருச்சிராப்பள்ளிக்கு மாற்றப்பட்டது. இவர் ஒரு தனிப்பட்ட மறைப்போதகர். லியோன் மறைமாநிலத்தினரால் 1838ஆம் ஆண்டு நிறுவப்பட்ட புதிய மதுரை மறை மாநிலத்தில் மறைப்போதகராகச் சேர்ந்தார். பின்பு இம்மதுரை மறை மாநிலம் தூலூஸ் மறை மாநிலத்தோடு இணைக்கப்பட்டது.

தந்தை கேரி தமிழ்-இலத்தீன் அகராதியை (Dictionarium Tamulicum-Latinum) எழுதியுள்ளார். அது மூன்று முறை பதிப்பாகி உள்ளது. இப் படைப்பின் இரண்டாவது பதிப்பு மட்டும்தான் உள்ளது. இந்தப் பதிப்பு திருத்தப்பட்டும், சேர்க்கப்பட்டும் 1867ஆம் ஆண்டு வெளியானது. 1852இல் வெளியிடப்பட்ட இதன் முதல் பதிப்பு எங்குமே கிடைக்கவில்லை. 1867இல் தந்தை கேரியின் அகராதியை மறு பதிப்புச் செய்தது யார் என்பதைப் பற்றிப் பொருட்படுத்தத் தேவையில்லை. துப்புயிவும், முசேவும் எழுதிய தமிழ்-பிரெஞ்சு அகராதியின் முன்னுரையில் தந்தை கேரிக்கு நன்றி கூறியுள்ளனர். ஏனென்றால் இவர்கள் அவருடைய அகராதியைத் தாங்கள் எழுதிய அகராதிக்கு வேண்டிய மூலப் பொருளாக எடுத்துக்கொண்டனர்.

## இராபர்ட் ஆன்டர்சன்
## (Robert Anderson) 1806

இராபர்ட் ஆன்டர்சன் 1806ஆம் ஆண்டு சென்னை அரசாங்க அலுவலராக அமர்த்தப்பட்டார். "மாண்புமிகு கிழக்கிந்தியக் கம்பெனிக் கல்லூரி" என்ற பெயரில் இங்கிலாந்தில் உள்ள ஹார்ட்போர்டில் ஒரு கல்லூரி இருந்தது. அதில் அவர் கல்வி கற்றார். அக்கல்லூரியில் படிக்கும் மாணவர்கள் ஏதாவது ஓர் இந்திய மொழியைக் கற்க வேண்டும். இவர் தமிழ் மொழியைத் தேர்ந்தெடுத்ததன் பயனாக இவருக்குத் தென்னிந்தியாவில் அரசு உயர்அதிகாரி வேலை கிடைத்தது.

1817ஆம் ஆண்டில் அரசாங்கத்தின் பார்சிய மொழிபெயர்ப்பாளரானார். 1818ஆம் ஆண்டு முதல் 1820ஆம் ஆண்டு வரையில் அவர் கல்லூரியின் ஆட்சிக்குழுவின் உறுப்பினராக இருந்தார். அவருக்கு உடல்நலம் குன்றிய காரணத்தால் 1819ஆம் ஆண்டு ஆகஸ்டு முடிவில் இந்திய அரசாங்க அலுவலை விட்டுவிட வேண்டியதாயிற்று. அடுத்த ஆண்டு கோடை காலத்தில் தம் தாய்நாட்டிற்குச் சென்றார். ஹார்ட்போர்டில் தாம் படித்த முன்னாள் பழைய பள்ளிக்கூடத்தில் கீழைநாட்டு மொழித் துணைப்பேராசிரியரானார். அவர் ஆங்கிலத்தில் தமிழ் இலக்கண நூல் ஒன்று எழுதினார். அதன் பெயர் "கொடுந்தமிழ் அல்லது பேச்சுத்தமிழ் விதிகளோடு கூடிய தமிழ் இலக்கண அடிப்படைகளும், செந்தமிழ் அல்லது மொழியின் அழகிய நடை பற்றிய அறிமுகமும்" என்பதாகும்.

**பங்களிப்பு**

1. அடிப்படைத் தமிழ் இலக்கணம்-கொடுந்தமிழ் ஒழுங்கு முறைகளுடன் சாதாரணப் பேச்சுத்தமிழ் அல்லது ஒரு தொடக்க உரையுடன் கூடிய செந்தமிழ் அல்லது நேர்த்தியான மொழியின் பேச்சு வழக்கு, இலண்டன், 1821.
2. The Transformation of the Gift in colonial Madras, U.S.A. 1990-91.

## ஆன்ட்ரு இராபர்ட்சன்
## (Robertson, Andrew)

ஆன்ட்ரு இராபர்ட்சன் ஒரு பிரிட்டிஷ் குடிமகன். இவர் பாதுகாப்புப் படையைச் சாராத சமூகப் பணியில் சென்னையில் உயர் அலுவலராகப் பணியாற்றினார். இவர் நீதி மன்றங்கள் சம்பந்தமான ஆங்கில-தமிழ் வார்த்தைகளைத் தொகுத்துத் தமிழ் மொழியில் ஒரு தொகுதியை நூலாக 1839ஆம் ஆண்டு வெளியிட்டார்.

இவரது அடுத்த வெளியீடு: பொது வியாபாரம் சம்மந்தமான வார்த்தைகளைத் தமிழில் தொகுத்து 1890இல் வெளியிட்டதாகும்.

இவ்விரு நூல்களும் ஐரோப்பிய உயர் அதிகாரிகளின் பயன்பாட்டுக்காக இந்தியாவிலும் இலங்கையிலும் வெளியிடப்பட்டன.

**பங்களிப்பு**

1. A Compilation of Papers in Tamil Language, Madras, 1839.
2. Papers in the Tamil Language in Matters of Public Business, with a Glossary of Technical Terms in Tamil and English. London: Allen Company at Calcutta, 1890.

## எல்.எஸ்.துப்புயி
## (Rev.Fr.Louis Savinien Dupuis) 1806-1874

எல்.எஸ்.துப்புயி 1896ஆம் ஆண்டு ஆகஸ்ட் 18ஆம் நாள் பிரான்ஸ் நாட்டிலுள்ள இயோனி மாவட்டத்தில் செயின்ட் எத்தியன் தெ சான்ஸ் என்னும் ஊரில் பிறந்தார். இளம் வயதிலேயே தாயை இழந்தார். தந்தை மறுமணம் செய்து கொண்டார். இவருடன் பிறந்தது ஒரு சகோதரன். சித்தி வழியாகச் சில சகோதரிகள் பிறந்தனர். 1874 ஜூன் முதல் தேதி நோய்வாய்ப்பட்டு 1874 ஜூன் 4ஆம் தேதி மாலை 5 மணிக்கு அவரது ஆன்மா இம்மண்ணுலகை விட்டு விண்ணுலகம் அடைந்தது.

இவர் குருவானவர் ஆவதற்கான படிப்பை முடித்தவுடன் 1829ஆம் ஆண்டு மே மாதம் 24ஆம் தேதி குருவானவராகத் திருநிலைப்படுத்தப்பட்டார். தந்தை துப்புயி மிகவும் திறமை மிக்கவர் என்பதால், இருபத்து ஒன்பதாவது வயதிலேயே பெரிய குருமடத்திற்குப் பொருளாளராக நியமிக்கப்பட்டார். மறை மாவட்டக் குருவானவரான துப்புயி பாரீசு அந்நிய நாட்டு மறைப்போதகர் குருமடத்தில் சில நாள்கள் தங்கி இருந்தார். இம் மறைப் பணியாளர்களின் வாழ்க்கையும் அவர்களது வெற்றியும் துப்புயி அடிகளை மிகவும் கவர்ந்தன. அதனால் இவர் இத்துறவறச் சபையில் சேரத் தீர்மானித்தார். ஆனால் அவரது தலைவரான ஆயர் பல காரணங்களைக் கூறி அவருக்கு அனுமதி அளிக்கவில்லை. எனினும் துப்புயி அடிகள் தமது திறமையினால் பேசி ஆயரை இணங்க வைத்தார். எனவே அவர் 1831ஆம் ஆண்டு மே மாதம் 25ஆம் நாள் பாரீசு அந்நிய மறைப் போதகர்கள் சபையில் சேர்ந்தார்.

1831ஆம் ஆண்டு ஜூலை மாதம் 4ஆம் தேதி துப்புயி அடிகள் பாரீசிலிருந்து பாண்டிச்சேரியை நோக்கிப் புறப்பட்டார். இதற்கு முன்பாக அவர் துலோனுக்குச் (Toulon) சென்று அங்கு இந்தியா செல்ல உகந்த காலத்திற்காக வெகுநாள்கள் காத்திருக்க வேண்டியதாயிற்று. எனவே அவர் பிரெஞ்சுத் தீவுக்குப் புறப்பட்டுச் சென்றார். அங்கு டிசம்பர் மாதம் 19ஆம் தேதி இந்தியா நோக்கிச் செல்லும் கப்பலிலும் அவருக்கு இடம்

கிடைக்கவில்லை. எனவே துப்புயி அடிகள் மொரிசியசிலிருந்து 500 பிராங்குகள் கொடுத்து ஆங்கிலக் கப்பல் மூலம் பாண்டிச்சேரிக்கு 1832ஆம் ஆண்டு பிப்ருவரி 9ஆம் நாள் வந்து சேர்ந்தார்.

அருட்திரு துப்புயி 80 நாள்கள் பாண்டிச்சேரியில் தங்கித் தம்மால் முடிந்தவரை தமிழ் மொழியை வித்துவான்களின் மூலம் கற்றுத் தேர்ந்தார். மேலும் இவர் மறைப்பணியாற்றப் பெங்களூருக்கு அனுப்பப்பட்டார். அவர் இப்பணியின்போது தமிழை நன்கு பேசவும் மறையுரை ஆற்றவும் சரளமாக மக்களிடையே உரையாடவும் செய்தார். எட்டு ஆண்டுகள் மறைப்பணிக்குப் பின் துப்புயி 1840ஆம் ஆண்டு ஜூன் மாதம் 28ஆம் நாள் பாண்டிச்சேரிக்கு வந்து சேர்ந்தார்.

1837ஆம் ஆண்டிலிருந்து துப்புயி பெங்களூரில் இருந்தபோது அநேக நூல்கள் எழுதியுள்ளார் என்று தந்தை எ.லானே (A.Launay) கூறியுள்ளார். 1840இல் துப்புயினுடைய நூல்களைப் பாண்டிச்சேரி அரசாங்கம் இலவசமாகப் பிரசுரிக்கின்றது என்று பொன்னாந்து ஆயர் அவர்கள் ஏப்ரல் 8ஆம் தேதி தெரிவித்தார். 1841ஆம் ஆண்டு ஆகஸ்ட் 18ஆம் தேதி துப்புயி அடிகள் மறைப்போதகர், எழுத்தாளர், அச்சிடுபவர், புத்தகசாலைப் பொறுப்பாளர், அச்சுக் கோர்ப்பவர் ஆகிய பலதரப்பட்ட பணிகளைச் செய்ததோடு அச்சுக் கூடத்தில் பணிபுரிபவர்களைக் கண்காணிக்கும் பொறுப்பையும் ஏற்றார்.

இந்த வேளையில்தான் துப்புயி தமிழில் நல்ல அகராதி இல்லாததை வெகுவாக உணர்ந்தார். எனவே நான்கு மொழிகளடங்கிய (இலத்தீன், பிரெஞ்சு, ஆங்கிலம், தமிழ்) அகராதி ஒன்றை எழுத எண்ணினார். பின்பு ஆங்கிலத்தைக் கைவிட்டார். இவ்வகராதி பெரியதாகவும், கைக்கடங்காததுமாக இருக்கக்கூடும் என்று நினைத்து இந்த அகராதி வேலையை ஒதுக்கி வைத்தார். 1844இல் ஆயர் கிளமெண்ட் பொன்னாந்து பொதுக்குழுவைக் கூட்ட எண்ணி அதற்கான ஏற்பாடுகளைச் செய்யத் துப்புயி அடிகளைத் தந்தை முஸ்சேயுடன் (Mousset) இணைந்து பணியாற்றும்படி பணித்தார்.

தவத்திரு துப்புயி அடிகள் இலத்தீன்-பிரெஞ்சு-தமிழ் அகராதியைப் பகுதி பகுதியாக 1846லிருந்து தொடங்கி 1850இல் முடித்தார். உடனே துப்புயியும், அவருடைய நண்பரான முஸ்சேயும், பிரெஞ்சு-தமிழ் சொல்லகராதியைப்பற்றி எண்ணினர். இவர்கள் 1853-இல் தமிழ்-பிரெஞ்சு அகராதி எழுதத் தொடங்கினர். பிரெஞ்சு-தமிழ் அகராதி 1866இல் வெளியானது. பாரீஸ் வெளிநாட்டு மறைப்போதகர்கள் சபையைச் சேர்ந்த முஸ்சேயும் துப்புயிவும் இணைந்து தொகுத்த தமிழ்-பிரெஞ்சு அகராதியில் தமிழிலுள்ள சாதாரணச் சொற்களும், இலக்கியச் சொற்களும் இடம்பெற்றன. இவர்கள் தங்கள் முகவுரையில் ஆசிரியர்கள்

"(நாங்கள்) இதற்கு மூலமாய் இருந்த சொற்களை எடுத்துக்கொள்ள உதவியாயிருந்த ராட்லர், பெஸ்கி, பிரெஞ்சு போர்ஜஸ், கேரி (Fr.Gury) போன்ற அகராதியாளர்கள் எல்லோருக்கும் புகழுரை சொல்லி நன்றியுணர்வைக் கூறிக்கொள்கிறோம்."

எனக் கூறியுள்ளது குறிப்பிடத்தக்கது. 1865இல் பேசுவதற்குப் பயன்படும் சொற்களும், வாக்கியங்களும் அடங்கிய நூல் வெளியானது.

அகராதிகளைத் தவிர்த்து, சமயம், வேறு பல செய்திகள் சம்மந்தமாக எழுதும், அச்சிடும், வெளியிடும் வேலைகளைத் தமது கடைசிக் காலம்வரை செய்து வந்தார் துப்புயி. அடிகள் தாம் ஆற்றிய மறை உரைகள் அனைத்தையும் ஒன்று திரட்டி அச்சிட்டு வெளியிட விரும்பி 1860இல் முதல் பகுதியும், 1870இல் இரண்டாம் பகுதியும் வெளிவந்தன.

தந்தை துப்புயி பேராயருக்கு அடுத்த பதவியில் இருந்து மறைமாநிலத்தைக் கண்ணும் கருத்துமாய்க் கண்காணித்து வந்தார். மேலும் பெண்களுக்குக் கல்வி புகட்டும் எண்ணம் கொண்டு மரியாள் இருதய சபையைத் தோற்றுவித்து அதைக் கண்காணித்து வந்தார். கன்னியர்களுக்கான போன் செக்கர் என்னும் மற்றுமொரு மடத்தை நிறுவி அதைக் கண்காணிப்பதிலும் பல ஆண்டுகள் செலவிட்டார். இளம் ஆண்பிள்ளைகளுக்காகக் கடலூரில் தூய வளனார் கல்லூரியைத் தொடங்க அரும்பாடுபட்டார்.

தந்தையவர்கள் 1841ஆம் ஆண்டு ஆகஸ்ட் 18ஆம் தேதி எழுதிய கடிதத்தில் கடந்த ஆண்டு (1840) அகராதிகளை அச்சிட்டு வெளியிட ஓர் அச்சகத்தை (புதுவை மாதா அச்சகம். தற்போது மிஷன் அச்சகம் Mission Press) விலைக்கு வாங்கினோம் என எழுதியுள்ளார். வேதப்புரட்டலை மறுத்தல் (1840) என்னும் நூல், காகிதம் நன்கொடையாகக் கொடுக்கப்பட்டு அச்சிடப்பட்டு வெளியானது. அடிகள் இந்நூலைக் குறைந்த விலைக்கு விற்றார். மேலும் அநுசாரம், இல்லற உத்தியானம், வேதப் புரட்டலை நீக்கும் சஞ்சீவி முதலிய நூல்களையும் தந்தை படைத்துள்ளார். தமிழ் தொடக்க நூல், இலத்தீன் இலக்கணம், பிரெஞ்சு-தமிழ் அகராதி, அட்லஸ், கணிதக் கையேடுகள், வரலாறு, சிறுவர்களுக்கான கையேடுகள், பல மொழிகளின் அகராதிகள் ஆகியவை பல்லாயிரக்கணக்கான மாணவர்களுக்குப் பயன்பட்டன. மேலும் தந்தை துப்புயி ஞான உபதேசக் குறிப்பிடத்தைத் தொகுத்து எழுதி வெளியிடுவதில் ஈடுபட்டிருந்தார். துப்புயி அடிகள் ஓலைச் சுவடிகளைப் பற்றியும் வீரமாமுனிவரைப் பற்றியும் ஆய்வு செய்வதில் தலைசிறந்து விளங்கினார். இவர் தம் மரணம் மட்டும் அச்சிடும் வேலையில் ஈடுபட்டிருந்தார்.

தமிழ்க்கவிதை, வீரமாமுனிவர், தேம்பாவணி என்னும் தலைப்புகள் பற்றி துப்புயி அடிகள் பிரெஞ்சு மொழியில் ஒரு நூல் எழுதி (Notice Sur la poésie tamoule, Rev.P.Beschi et le Thembavani) அந்நூலை 1851ஆம் ஆண்டு வெளியிட்டார். இந்நூல் தமிழ்ச் செய்யுள் பற்றியும், வீரமாமுனிவரின் கவிதை ஆற்றல் பற்றியும் கூறியபின் படல வாரியாக 36 படலங்களின் பொருளைச் சுருக்கமாகத் தருகின்றது.

அடிகள் தேம்பாவணியை நன்கு படித்த பின்னரே, இயேசு சபையைச் சார்ந்த தந்தை ஜேம்ஸ் தாமஸ் தெ ரோசி என்பவர் படைத்த கிழமைப் புதுமைகளையும், அனுதினப் பிரசங்கத்தையும் புனிதர்களின் வாழ்க்கை வரலாறு என்ற தலைப்பில் அச்சிட்டு வெளியிட்டார். ஒவ்வொரு ஆண்டும் வரும் 52 வெள்ளிக் கிழமைகளில் புனித வியாகுல மாதாவைப் பற்றித் தெ ரோசி எழுதிய தியானக் கட்டுரைகளையும் அச்சிட்டு வெளியிட்டார். (இப்பிரதி கிடைக்கப் பெறவில்லை என்று ஒருசில ஆய்வாளர்கள் கூறியுள்ள போதிலும் அப்பிரதி கொடைக்கானல் செண்பகனூரில் உள்ள இயேசுசபையின் அருஞ்சுவடிக் காப்பகத்தில் இருப்பதாகக் கூறப்படுகிறது.)

தந்தை துப்புயி வீரமாமுனிவரின் நூல்கள் பெரும்பாலானவற்றை அச்சடித்துள்ளார். ஏடு எழுதுவோர் பிழைகளைத் திருத்திச் செம்மைப் படுத்திச் சிறந்த முகவுரையோடு ஒவ்வொரு நூலையும் வெளியிட்டுள்ளார். அத்தோடல்லாது தாமே வீரமாமுனிவரின் நூல்கள் பல கிடைப்பதற்கு அரிய முயற்சிகள் மேற்கொண்டார். துப்புயி அடிகள் பதிப்பித்த நூல்களுள் சிறந்தது தேம்பாவணி. அவ்வளவு பெரிய நூலை வசதிக்குறைவான அக்காலத்தில் அச்சிட மிகப் பெரிய முயற்சி எடுத்திருக்க வேண்டும். தேம்பாவணி காண்டங்களாகப் பிரிக்கப்படாது 36 படலங்களாக அமைந்திருந்தாலும், வசதியை முன்னிட்டு அதை மூன்று காண்டங்கள் அல்லது புத்தகங்களாகப் பிரித்து அச்சிட்டார். மூன்றும் முறையே 1851, 1852, 1853ஆம் ஆண்டுகளில் வெளியாயின. இதற்குமுன் தோன்றிய சிந்தாமணி, சிலப்பதிகாரம், கம்பராமாயணம், பாரதம் முதலிய பெருங்காப்பியங்கள் அச்சாகுமுன்னரே தமிழில் அச்சான முதல் காப்பியம் என்ற பெருமையோடு தேம்பாவணி வெளிவந்தது.

பிரெஞ்சு-தமிழ் அகராதியின் தேவை, பயன் ஆகியவைபற்றித் துப்புயி பிரெஞ்சு மொழியில் எழுதியுள்ள முன்னுரையின் தமிழாக்கம் பின்வருமாறு:

(DICTIONNAIRE FRANCAIS-TAMOUL, PAR MM.MOUSSET ET DUPUIS DE LA SOCIETE DES MISSIONS- ETRANGERES DE PARIS. SECOND EDITION PONDICHERRY IMPRIMERIE DE LA MISSION 1911.)

வெகு காலமாக இந்த நாட்டில் ஆன்மாக்களின் ஈடேற்றத்திற்காக உழைக்கும் மறைப் பணியாளர்கள் ஒரு பிரெஞ்சு-தமிழ் அகராதி பெறுவதற்கு ஆசித்ததோடு இப்படிப்பட்ட ஒரு படைப்பின் தேவையை உணரவைத்துள்ளது. மேலும் பிரெஞ்சு மொழி படிக்கும் காலனி மாணவர்களுக்கும், பொதுவாக யார் பிரெஞ்சு அல்லது தமிழ் கற்க விரும்புகின்றார்களோ அவர்களுக்கும் அவசியம் தேவைப்படும். ஏற்கெனவே சில பிரெஞ்சு-தமிழ் அகராதிகள் இருந்தன என்பது உண்மை. அவ் அகராதிகள் முற்றுப் பெறாமலும், அதை நகல் எடுத்தவர்களால் அவைகள் மிகுதியாக உருக் குலைக்கப்பட்டும் இருந்தன. அவைகளை மறுபடியும் திருத்தி அச்சடித்துத் தேவைப் படுவோருக்குக் கொடுக்க முடியாது. கையெழுத்துப் பிரதிகள் மிக்க விலையுள்ளதாக இருந்தன.

**துப்புமி அச்சிட்ட நூல்கள்**

1840 வேத விளக்கம் 1858,1868, (1898)
1842 லுத்தேரினத்தியல்பு 1851,1858,1868, (1898)
1843 வேதியர் ஒழுக்கம் 1858, (1888,1898)
1843 கொடுந்தமிழ் இலக்கணம் (இலத்தீனில்)
1844 செந்தமிழ் இலக்கணம் (இலத்தீனில்)
1845 பரமார்த்த குரு தமிழிலும் இலத்தீனிலும் 1851,1865
1851 தேம்பாவணி-காண்டம் 1 (1891,1927,1956)
1851 தமிழ்க்கவிதை, வீரமாமுனிவர், தேம்பாவணி பற்றி-81 பக்கங்களில் பிரெஞ்சு மொழியில் (Notice Sur la poésie tamoule, Rev. P. Beschi et le Thembavani)
1851 முதல் 4 படலங்களுக்குப் பதவுரை (ஆரோக்கியம் பிள்ளை) தனிப்பதிப்பு
1852 தேம்பாவணி காண்டம்-2 (1891,1927,1956)
1853 தேம்பாவணி காண்டம்-3 (1891,1928,1956)
1853 காண்டம் 3 முதல் 4 படலங்களுக்குப் பதவுரை
1856 திருப்பாவணி 1865

1. அடைக்கல மாலை 186
2. வெண்கலிப்பா 1865
3. தேவாரம் 1865
4. வண்ணம் 1865
5. திருக்காவலூர்க் கலம்பகம் 1865
6. அன்னை அழுங்கல் அந்தாதி 1865

1840 பேதக மறுத்தல் (1868,1898)
1853 தேம்பாமாலை (1929 மூன்றாம் பதிப்பு)
1872 சதுரகராதி

**குறிப்பு:** பிறைக் கோட்டில் உள்ள ஆண்டுகள் தந்தை துப்புயி அடிகள் இறந்தபின் பதிப்பிக்கப்பட்ட ஆண்டுகள்.

## சீமோன்
## (Simon, Caise Chitty) 1807

சீமோன் 1807ஆம் ஆண்டு மார்ச் மாதம் 27ஆம் தேதி இலங்கையில் ஆங்கிலேயர் ஆட்சியின் தொடக்கக் காலத்தில் பிறந்தார். இவரது வாழ்க்கை இலக்கியப் புலமை வாய்ந்ததும், அறிவு சார்ந்த செயல்பாடுகள் அடங்கியதுமாக இருந்தது. இவர் தமது இளமைக்காலம் தொட்டே ஆர்வமுடையவராகவும், அறிவுக்கூர்மை மிக்கவராகவும், பேரறிவாளராகவும் இருந்தார். இவரது செயல்பாடுகள் ஆர்வமிக்க தாகவும், அறிவுக் கூர்மையுடையதாகவும் இருந்தன. கீழ்த்திசை மொழிகளைக் கற்பதிலும் வரலாற்று ஆராய்ச்சிகளிலும் ஈடுபட்டிருந்தார். இலங்கையில் இவர் பண்டைய பொருள்களைச் சேகரிப்பதிலும், தாவரங்கள், விலங்குகள் ஆகியவற்றின் பட்டியலைச் சேகரிப்பதிலும் ஆர்வமிக்கவராயிருந்தார். அரசாங்க அலுவலராகப் பணியாற்றிப் பதவி உயர்வும் பெற்றார். இலங்கையில் அரசினர் அச்சிதழுக்கான (Gazeteer) செய்திகளைத் தொகுக்க எண்ணி அப்போது இலங்கையில் ஆளுநராக இருந்த சர் இராபர்ட் வில்மோர்ட் கோர்டனிடம் கூறியபோது அவரிடமிருந்து ஊக்கமளிக்கக்கூடிய கடிதமும் உதவியும் சிமியோனுக்குக் கிடைத்தன. இத்திட்டத்திற்குப் பண உதவி செய்யும் அதிகாரம் ஆளுநருக்கு இருந்தது.

''சாதிகளும், பழக்கவழக்கங்களும் தமிழ் மக்களின் இலக்கியமும்'' 1834ஆம் ஆண்டு வெளியிடப்பட்டது. இப்பொழுதும் கூட இந்நூல் வருங்கால வெளியீட்டாளர்கள் அனைவர்க்கு முன்உதாரணமாக விளங்குகின்றது.

இவர் பல்வேறு துறைகளான அதாவது, இலக்கியம், வரலாறு, பண்டைய பொருள்கள், சமயங்கள், ஒலியியல் ஆகியவற்றில் அறிவியல் சார்ந்த ஆராய்ச்சி செய்து ஏறக்குறைய 50 கட்டுரைகள் எழுதி வெளியிட்டுள்ளார்.

இவரது படைப்புகளில் மிகவும் குறிப்பிடத் தகுந்தது தமிழ் ப்ளூடார்ச் புத்தக விவரத் தொகுப்பு (Tamil Plutarch-Bibliography) என்னும் நூலாகும். இதில் தமிழ் இலக்கியம் படைத்த அனைத்து ஆசிரியர்களின் வாழ்க்கை வரலாறு, அவர்களது படைப்புகள் அடங்கும். அகத்தியரில்

தொடங்கி இவரது காலத்திய எழுத்தாளர்கள் வரையில் உள்ளோரின் பட்டியல் இந்நூலில் அடங்கும். இந்நூல் வருங்காலச் சந்ததியாருக்காகப் பாதுகாக்கப்படவேண்டும்.

**பங்களிப்பு**

1. The Castes, Customs, Manners and Literature of the Tamils, Madras, Asian Educational Services, (rpt.1988)
2. தமிழ் மக்களின் சாதிகள், செயல் வழக்காறுகள், வழக்க மரபுகள், இலக்கியங்கள்.

## பெரென்
## (Perrin) 1807

இவர் பிரான்ஸ் நாட்டின் குடிமகன். ஒரு பயணியாக இந்தியாவுக்கு வந்தவர். 1807ஆம் ஆண்டில் தமிழ் நாட்டிற்கு வந்து இந்நாட்டில் சிலகாலம் தங்கினார். தமிழ்நாட்டைப் பற்றியும், தமிழ் மக்களைப் பற்றியும் இவர் ஆராய்ச்சி செய்தார். இவரது ஆராய்ச்சி நாட்டு அமைப்பு, மக்கள் வாழ்க்கை முறை பற்றிய விவரங்களைக் கொண்டு விளங்கியது. இந்த ஆராய்ச்சியில் தமிழ் மொழியும் அடங்கியுள்ளது என்பதைக் கூறத் தேவையில்லை. மக்கள் வாழ்க்கையை, பழக்க வழக்கங்களைக் குறிக்குங்கால் அவர்கள் மொழி பற்றிய விளக்கமும் அக்குறிப்பில் அவசியம் வந்தமைகிறது. இதனால் பெரென் எழுதிய நூல்களில் தமிழ் மொழியும் ஓரளவு இடம் பெற்றிருக்கின்றது.

## லூயிஸ்-மரி முஸ்ஸே விணிறி
## (Mousset Louis-Marie) 1808-1888

லூயிஸ்- மரி முஸ்ஸே துசெவ்ரு (Deux- Sevres) என்னும் வட்டாரத்தில் அமைந்துள்ள சான்சேய் (Sanzay) என்னும் கிராமத்தில் 1808ஆம் ஆண்டு பிப்ருவரித் திங்கள் 7ஆம் நாள் பக்தியுள்ள தம்பதியருக்குத் திருமகனாய்ப் பிறந்தார். இவருடைய பெற்றோர் இவரை ஒழுக்கத்தில் சிறந்தவனாகவும், ஞானக் காரியங்களில் ஈடுபாடு கொண்டவனாகவும் வளர்த்தனர். இவர் தமது தொடக்கக் கல்வியை அவரது கிராமத்தில் உள்ள பங்குக் குருவானவர் கண்காணிப்பில் படித்து முடித்தார். தந்தை முஸ்ஸே அவர்கள் வான சாஸ்திரத்தில் தேர்ச்சி பெற்றவர். இவர் ஓர் பல்மொழி வித்தகர். சமஸ்கிருதம், மலையாளம், ஹீப்ரு, கிரேக்கம், ஆங்கிலம், போர்ச்சுக்கீஸ் ஆகிய மொழிகளை வாசிக்கத் தெரிந்தவர் என்று தந்தை லானே (Lavnay) கூறுகின்றார்.

மறைமாவட்டக் குருவாகப் பணியாற்றுவதென்த் தீர்மானித்து, குருத்துவப் படிப்புகளான தத்துவம், இறையியல் ஆகியவற்றைக் கற்று,

1831 மே மாதம் 28ஆம் நாள் புவாத்தியரசிலுள்ள (Poitiers) பிரத்தரிசில் (Prétrice) குருவானவராகத் திருநிலைப் படுத்தப் பட்டார். தமது மறை மாவட்டமான புவாத்தியரில் மூன்று ஆண்டுகள் பங்குக் குருவாகப் பணியாற்றினார். இவர் துறவற வாழ்வில் பணியாற்ற விரும்பி 1834ஆம் ஆண்டு பாரீசின் அந்நிய மறைப்போதகர்கள் சபையில் சேர்ந்தார். ஓராண்டு சபையின் ஒழுங்கு முறைகளிலும், பழக்க வழக்கங்களிலும் பயிற்சி பெற்று 1835ஆம் ஆண்டு ஏப்ரல் மாதம் 22ஆம் தேதி பாண்டிச்சேரிக்குக் கப்பல் மூலம் இந்தியா நோக்கிப் பயணமானார். இவர் கப்பல் பிரயாணத்தின் போது சமஸ்கிருதம் கற்றார். அதில் சிறந்த முறையில் தேர்ச்சியும் பெற்றார். தந்தை முஸ்ஸே நண்பர் தென்சோனுக்கு 1835 செப்டம்பர் மாதம் 16ஆம் தேதி எழுதிய கடிதத்தில் ''நான் பாண்டிச்சேரிக்கு 1835ஆம் ஆண்டு ஆகஸ்ட் மாதம் 31ஆம் தேதி துப்புயி அடிகளுக்குப் பின் வந்து சேர்ந்தேன்'' என்று கூறியுள்ளார்.

கெபொர்ட் (Hebert) பாண்டிச்சேரி மறைமாவட்டத்தின் தலைவராய் இருந்தார். இவருக்கடியில் முஸ்ஸே பணியாற்றினார். அச்சமயம் இயேசுசபை தடை செய்யப்பட்டிருந்த காலம். கட்டனார்கள் (கோவன் குருக்கள்) போப்பாண்டவரின் சுற்று மடலுக்குக் கட்டுப்படாமல் அங்குள்ள மக்களைப் பிரெஞ்சு இயேசு சபைக் குருக்களுக்கு எதிராகத் தூண்டி விட்டனர். இவ்வடிகளின் தொடக்கக் கால வாழ்க்கை கடினமாக இருந்தது என்று தமது கடிதத்தில் 1826ஆம் ஆண்டு நவம்பர் மாதம் 29ஆம் நாள் சருகணியிலிருந்து எழுதினார். அடுத்த ஆண்டு திருநெல்வேலி மாவட்டத்திலுள்ள காமநாயக்கன்பட்டிக்குப் பணியாற்றச் சென்றார். அப்போதைய பாண்டிச்சேரி மறை ஆயர் கிளமென்ட் பொன்னாந்து இயேசு சபையினரை வரவழைத்துப் பேசியதில் மறுபடியும் இச்சபையானது 1814இல் அங்கீகாரம் பெற்றது. நான்கு பிரெஞ்சு இயேசு சபையைச் சார்ந்த மறைப்போதகர்கள் தூலூஸ் மறைமாநிலத்திலிருந்து பாண்டிச்சேரிக்கு 1836இல் வந்து சேர்ந்தனர். ஆயர், முஸ்ஸே அடிகளைத் தேர்ந்தெடுத்து மதுரை மறை மாநிலத்தில் தங்கிப் புதிதாக வந்த இயேசு சபைக் குருக்களை அங்குள்ள பழக்கவழக்கங்களோடு ஒன்றரக் கலப்பதற்கு உதவி செய்யும்படி அனுப்பினார். 1839ஆம் ஆண்டு திண்டுக்கல்லுக்கு அடுத்துள்ள பஞ்சம்பட்டியில் பங்குக்குருவாகப் பணியாற்றினார். 1842இல் கோயம்புத்தூருக்கும், மைசூருக்கும் பார்வையாளராகச் சென்றார் முஸ்சே அடிகள். பின்பு 1843இல் இயேசு சபையினருக்கு உதவி செய்யத் திருச்சிராப்பள்ளிக்குச் சென்றார்.

1844ஆம் ஆண்டு மறையாயரான கிளமென்ட் பொன்னாந்து முதல் பொதுக் குழுக் கூட்டம் கூட்ட எண்ணினார். எனவே ஆயர் குழுக் கூட்டத்திற்குத் தயார் செய்யும் பொருட்டு முஸ்ஸே அடிகளைப் பாண்டிச்சேரிக்கு வரவழைத்தார். முஸ்ஸே தந்தை துப்புயியோடு இணைந்து பொதுக் குழுக் கூட்டத்திற்கான ஏற்பாடுகளைச் செய்தார்.

அருட்திரு முஸ்ஸே பாண்டிச்சேரியில் உள்ள சிறிய குருமடத்தில் (Petit Seminaire) ஆசிரியர் பணி ஆற்றினார். அடிகள் பிரெஞ்சு, இலத்தீன், அல்ஜீப்ரா, ஜியாமெட்ரி, பூகோளம் ஆகிய பாடங்களை மாணவர்களுக்குப் பயிற்றுவித்தார். 1853இல் தமிழில் கணித நூல் எழுதினார். அதே போன்று அடிப்படைப் பூகோளப் பாடத்தைத் தமிழிலும், பிரெஞ்சு மொழியிலும் எழுதினார்.

1844ஆம் ஆண்டு இலத்தீன் இலக்கணமும், தமிழில் பிரெஞ்சு இலக்கணமும் எழுதினார். இவை அனைத்துப் பணிகளையும் தமது கண்பார்வையை இழக்கும் வரையில் செய்து வந்தார். தந்தை துப்புயி அச்சுக்கூடத்தின் தலைவராகவும், முஸ்ஸே அடிகள் உதவித் தலைவராகவும் இருந்து அதைச் சிறந்த முறையில் செம்மையாக நடத்தி வந்தனர். முஸ்ஸே அடிகள் அச்சுக்கூடத்தில் பிழைதிருத்தம் செய்பவராகவும், புத்தகக்கடைப் பொறுப்பாளராகவும் இருந்தார். இவர் வீராப்போலி, மங்களூர் போன்ற நகரங்களுக்குப் புத்தகங்கள் அனுப்பி விநியோகம் செய்துள்ளார். தமிழ் பேசும் அனைத்து நாடுகளுக்கும், இலங்கையையும் சேர்த்துப் புத்தகங்கள் விநியோகம் செய்துள்ளார். இதிலிருந்து முஸ்ஸேயும், துப்புயியும் எவ்வளவு பெரிய மகத்தான வேலையில் ஈடுபட்டிருந்தனர் என்பதை நம்மால் ஊகித்துக் கொள்ள முடியும். முஸ்ஸே அடிகள் இரவு ஒன்பது மணி வரையில் அச்சுக்கூடத்தில் இருந்து பணியாற்றுவார். 1846 பிப்ருவரி மாதம் 10ஆம் தேதி தென்சோனுக்கு எழுதிய கடிதத்தில் ''அகராதி எழுதுவதும், அச்சுப் பிரதிகளைத் திருத்துவதும்தான் எனது அன்றாட உணவு'' என்று எழுதியுள்ளார். 1860ஆம் ஆண்டு செப்டம்பர் 3ஆம் தேதி தமது கடிதத்தில் ''கடைசியாகப் பிரெஞ்சு-தமிழ் அகராதி எழுத வேண்டும். அதன் பின்புதான் கல்லறையில் ஓய்வு பெற வேண்டும்'' என்று தெரிவித்துள்ளார்.

முஸ்ஸே அடிகள் இனிமையான குணம் உடையவர். தமது பாதையிலிருந்து வழுவாதவர். மனத்தளர்ச்சி அடையாதவர். பிறர் கருத்துக்களைக் கேட்பார். தந்தை முஸ்ஸே நுணுக்கமும் துல்லியமும் நிறைந்த அச்சடித்த நூல்களின் பட்டியலைத் தயாரிப்பதிலும், அகராதிகளை மேம்படுத்துவதிலும் மிகுந்த அக்கறை கொண்டவராக இருந்தார். நல்ல உள்ளமும், பண்பும், கடின உழைப்பும் உள்ளவரான அடிகள் லூயிஸ் மரி முஸ்ஸே இதயத்தில் ப்ராங்காய்டிஸ் (Bronchitis) நோயால் தாக்கப்பட்டு 1888 பிப்ருவரி மாதம் 8ஆம் நாள் பாண்டிச்சேரியில் தமது 81ஆவது வயதில் இறைவனடி சேர்ந்தார்.

முஸ்ஸே அடிகள் மூன்று பல்மொழி அகராதிகளின் தலையங்கங்களுக்கும், ஓர் உரையாடலின் கையேட்டுக்கும், பாரீசு அந்நிய மறை பரப்பும் சபையிலிருந்த இவர்தான் ஆசிரியர். கீழ்க்கண்ட

புத்தகங்கள் அனைத்தும் அந்நிய மறை பரப்பும் சபையினருக்குச் சொந்தமான மிஷன் அச்சகத்தில்தான் பதிப்பிக்கப்பட்டு வெளியாயின.

படைப்புக்கள்

1. இலத்தீன்-பிரெஞ்சு-தமிழ் அகராதி (1846).
2. பிரெஞ்சு-தமிழ் வார்த்தைகள் அடங்கிய அகராதி (1850).
3. தமிழ்-பிரெஞ்சு அகராதி (1855-1862).
4. உரையாடலின் கையேடு (Manual-தமிழையும் பிரெஞ்சையும் படிக்க உதவும் தொகுப்பு) 1865.
5. பிரெஞ்சு-தமிழ் அகராதி (1866).

## ஹென்றி பவர்
## (Henry Bower) 1813-1885

பிரான்சுவா பாவியர் என்னும் போர்வீரர்க்கும், இந்தியப் பெண்மணிக்கும் சென்னை சிந்தாதிரிப்பேட்டையில் திருமகனாய் ஹென்றி பவர் 1813 ஆம் ஆண்டு ஜனவரி மாதம் 13ஆம் நாள் பிறந்தார். இவர் இராணுவ ஆண்கள் அநாதையர் இல்லத்தில் (Military Male Orphan Asylum) தங்கி, அவ்வில்லம் சார்ந்த பள்ளியிலேயே கல்வி கற்றார்.

சென்னை ஆளுநர் கார்பீரேயின் உதவியால் ஹென்றி பவர் 1832ஆம் ஆண்டு இங்கிலாந்து சென்றார். அங்கு இவர் இலண்டன் வேதபோதகச் சபையில் (London Missionary Society) கிறித்தவ மதத் தொண்டராகப் பயிற்சி பெற்று 1838இல் இந்தியாவிற்குத் திரும்பி வந்தார். திருவள்ளூருக்கருகிலுள்ள திருப்பாச்சூரில் தமது மறைத் தொண்டைத் தொடங்கினார்.

அதன்பின் இவர் 1842இல் புரசைவாக்கத்திற்கு வந்து சென்னை நற்செய்தி பரப்புச் சபையில் (Society of Propagating Gospel) சேர்ந்து 1845இல் பாதிரியாராகத் திருநிலைப்படுத்தப் பட்டார். திருநெல்வேலி வேதியர்புரத்தில் குருமாணவர்களைப் பயிற்றுவிக்கும் ஆசிரியராகப் பணியாற்றினார். 1864ஆம் ஆண்டு அப்பணியை விட்டுப் பிரிந்து வேப்பேரியில் பவுல் ஆலயப் பாதிரியாரானார்.

இவரது தலைமையில் தமிழ்-விவிலிய மொழிபெயர்ப்பு திருத்தக் குழு 1858இல் அமைக்கப்பட்டது. இம்மொழியாக்கம் முடிந்தபின்னர் இங்கிலாந்து நாட்டுத் திருச்சபையின் (Church of England) செபப் புத்தகத்தைத் திருத்துவதற்காக நியமிக்கப்பட்ட குழுவில் ஓர் உறுப்பினராகத் தேர்ந்தெடுக்கப்பட்டார். 1877இல் கான்டர்பரி திருச்சபைப் பேராயர் இவருக்கு இறையியல் முனைவர் (Doctor of Divinity) என்ற பட்டத்தைக் கொடுத்துச் சிறப்பித்தார். 1871ஆம் ஆண்டு சென்னைப்

பல்கலைக் கழகத்தின் ஆளவை உறுப்பினரானார். 1872இல் இவர் திருச்சிக்குச் சென்றார். இதன் பின்னர்ச் சென்னை, வேப்பேரி, சாந்தோம் ஆகிய இடங்களில் ஆலயக் குருவாகப் பணியாற்றினார்.

பவரின் இறைவழிபாடுகள், சடங்காசாரங்களின்றி எளிமையாக இருக்கும் எனக் கூறப்படுகிறது. இவரோ ஆங்கிலத்தைவிடத் தமிழிலேயே பணிபுரிய ஆசித்தார். இவருடைய தமிழ்ப் புலமையினை அவரது பிள்ளைகளும் பெற்றிருந்தனர். அவர்களுள் ஒருவர் ஆக்ஸ்போர்டு பல்கலைக் கழகத்தில் சட்டம் பயின்று இந்திய நாட்டு மக்கள் சபைப் பிரதிநிதியாகச் சென்றார். மேலும் அவருடைய மகள் ஒருவர் சென்னையில் கல்வி இயக்குநராகப் (Director of Education, Madras) பணியாற்றினார் என்றும் கூறப்படுகிறது.

பவர் ஒரு பன்மொழி அறிஞர். ஆங்கிலம் மட்டுமின்றிக் கிரேக்கம், இலத்தீன், பிரெஞ்சு, சமஸ்கிருதம், தமிழ், கன்னடம், இந்துஸ்தானி ஆகிய மொழிகளையும் நன்கு அறிந்தவர். சமணப் புலவரான சாத்திரம் ஐயர் என்பவரிடம் தமிழ் பயின்றார்.

இவர் தமிழுக்குப் பெரும்பணியாற்றியுள்ளார். 'திருக்குறள்', 'சீவகசிந்தாமணி' போன்ற இலக்கியங்களிலும், 'நன்னூல்' என்ற இலக்கண நூலிலும் இவர் ஈடுபாடு கொண்டிருந்தார். இவர் பல நூல்கள் யாத்துள்ளார். அவற்றுள் 'அகராதி', கிறித்தவ சமயம் சார்ந்த நூல்கள், சமூகச் சிந்தனை சார்ந்த நூல்கள், மற்றும் மொழிபெயர்ப்பு நூல்களும் அடங்குகின்றன.

1841இல் பவர் குறிப்பிடத்தக்க பழைய அச்சு நூல்களைத் தொகுத்து 'வேத அகராதி' என்ற தலைப்பில் எழுதியுள்ளார். ஐம்பெருங்காப்பியங்களில் ஒன்றான சீவக சிந்தாமணியில் 'நாமகள் இலம்பகத்திற்கு இவர் தமிழுடன் ஆங்கில உரை எழுதியதுடன் சமணக் கருத்துக்களையும் விளக்கி எழுதியுள்ளார்.

**பவர் தமிழுக்காற்றிய தொண்டு**

1. வேத அகராதி (1841)- இது விவிலிய இறையியல் அகராதியாகும். விவிலிய மற்றும் தத்துவச் சொற்கள் இதில் அடங்கியுள்ளன.
2. நியாயப் பிரமாண விளக்கம் (1847).
3. விசுவாசப் பிரமாண விளக்கம் (1851).
4. இந்து மதத்திற்கும் பாப்பு மதத்திற்கும் இருக்கிற சம்பந்த விளக்கம் (1851).
5. பதமஞ்சரி (1852).
6. நன்னூல், பகவத்கீதை- ஆங்கில மொழிபெயர்ப்புகள் (1855).

7. சாதி வித்தியாச விளக்கம்- இந்து மதச் சாதிகளைப் பற்றிய விளக்க நூல், இது ஆங்கிலத்தில் எழுதப்பட்டது (1857).
8. தர்ம சாத்திர சாரம் (1857).
9. சீவக சிந்தாமணி-நாமகள் இலம்பக உரை (1868).
10. பிரசங்க ரத்தினாவளி (1875).
11. கிறித்தவ மார்க்கம்-இந்து தேசத்தில் விருத்தியான சரித்திரம் (1879).

மேலும் சமயங்களின் ஒப்பீடு (Comparative Religion), தர்க்க சாஸ்திரம், மொழியியல் முதலிய துறைகளில் இவர் கட்டுரைகள் எழுதியுள்ளார்.

## அருட்திரு லூயிஸ் செய்ன்ட்சீர் சே.ச.
## (Rev.Fr. Louis Saint-Cyr S.J.) 1813-1887

புதிய மதுரை மறை மாநிலத்தின் மறைப்போதகர்களில் பிரெஞ்சு நாட்டு இயேசு சபைக் குருக்களில் ஒருவராகிய மறைத்திரு லூயிஸ் செயின்ட்சீர் 1841ஆம் ஆண்டிலிருந்து 1887ஆம் ஆண்டுவரை ஏறத்தாழ 46 ஆண்டுகள் தமிழக மண்ணில் பெரும் பணியாற்றியவர். இவர் மறைப்பணி மட்டுமல்லாது சமூகப்பணியும், தமிழ் இலக்கியப் பணியும் ஆற்றியுள்ளார்.

1212ஆம் ஆண்டு நான்காவது கும்பர்ட் என்ற மன்னரால் வில்பிராஞ்சு என்னும் நகரம் தோற்றுவிக்கப்பட்டது. இவ்வழகிய நகரம் சாவோன் என்னும் ஆற்றின் கரையில் அமைந்துள்ளது. மத்திய வர்க்கத்தினர் அதிகமாக வாழும் நகரம் இது. மேலும் வியாபார மையங்களும் தொழிற்சாலைகளும் நிரம்பியுள்ள நகர் இதுவாகும். இவ்வழகிய நகரில் 1813ஆம் ஆண்டு டிசம்பர்த் திங்கள் 14ஆம் நாள் செலஸ்டின் ஜான் துய்கிரே அம்மையாருக்கு ஓர் ஆண் மகவு பிறந்தது. பெற்றோர்கள் இக்குழந்தைக்கு லூயிஸ் செயின்ட்சீர் என்ற பெயரைச் சூட்டித் திருமுழுக்காற்றினர். பக்தி நிறைந்த தாய் தொடக்கக் கல்வி காலத்தில் சிறந்த முறையில் குழந்தை மீது அன்பும், பரிவும் பொழிந்தாள். இளம்மாணவன், ப்ரிபூர்க்கில் இயேசு சபையினரால் நடத்தப்பட்ட பள்ளியில் சேர்ந்து கல்வி கற்றான்.

1834ஆம் ஆண்டு டிசம்பர் 5 ஆம் நாள் இந்த இளைஞன் எட்டு நாள் தியானத்தில் தனது எதிர்கால வாழ்க்கையைப்பற்றிச் சிந்தித்துத் தெளிவு பெற்றான். நீண்ட சிந்தனைக்குப்பின் துறவறத்தைத் தேர்ந்தெடுத்து இயேசு சபையில் துறவியாகப் புகத் தீர்மானம் செய்தான். அதன்படி 1836ஆம் ஆண்டு அக்டோபர்த் திங்கள் 18ஆம் நாளன்று செயின்ட்சீர் இயேசு சபையில் சேர்ந்தான். அவிஞ்யோன் (Avignon)

என்னும் நகரில் துறவறப் பயிற்சி பெற்று 1840 ஆம் ஆண்டு ஜூன் மாதம் 13ஆம் தேதி குருவாகத் திருநிலைப்படுத்தப்பட்டான்.

புதிய மதுரை மறைமாநிலத்தில் பணியாற்றியவர்கள் தங்கள் பெற்றோர், உற்றார், உறவினர், நண்பர்கள், தலைமை அதிகாரிகள் ஆகியோருக்குத் தங்கள் பணியைப் பற்றிய அனுபவங்களைக் கடிதங்கள் வாயிலாகத் தெரிவித்தனர். பணியின் தொடக்கத்திலேயே சில இளம் மறைப் பணியாளர்கள் தட்ப வெட்பத்தைத் தாங்க முடியாமலும், இயற்கைச் சீற்றங்களாலும், கொடிய காலரா நோயாலும் தாக்கப்பட்டு இறந்தனர். இச்செய்திகளைக் கேட்டறிந்தும், வாசித்தும் வந்த லூயிஸ் செயின்ட் சீர் அடிகள் தாம் அந்த இளம் மறைப்பணியாளர்களின் இறப்பால் ஏற்பட்ட வெற்றிடத்தை நிரப்ப முன்வந்து புதிய மதுரை மறை மாநிலத்தில் பணிபுரியத் தம்மையே அர்ப்பணித்தார். 1841ஆம் ஆண்டு பிப்ருவரித் திங்கள் முதல் நாள் செயின்ட்சீர் தமது மறை மாநிலத் தலைவரான மிலார்டு அடிகளிடமிருந்து புதிய மதுரை மறை மாநிலத்திற்குப் பணியாளராகப் போகும்படி அனுப்பிய ஆணைக் குறிப்பு அடங்கிய ஓர் கடிதத்தைப் பெற்றார். இவரோடு மேலும் மூன்று பணியாளர்கள் இந்தியாவை நோக்கிப் பிப்ருவரி மாதம் 21ஆம் நாள் போர்தோ துறைமுகத்திலிருந்து பயணத்தைத் தொடங்கினர். அதே ஆண்டு அதாவது 1841இல் ஏப்ரல் மாதம் திருச்சிராப்பள்ளியை வந்தடைந்தனர். அறிவும், ஆற்றலும் நிறைந்த மறைப்பணியாளரான லூயிஸ் செயின்ட்சீர் அடிகள் தமிழ் மண்ணில் 46 ஆண்டுகள் அயராது பெரும் பணியாற்றி 1887ஆம் ஆண்டு ஜனவரி மாதம் 11ஆம் தேதி கொடைக்கானலில் இறைவனடி சேர்ந்தார். புனித சலேத் மாதாவின் பெயரில் அவர் கட்டி எழுப்பிய ஆலயத்தில் அவரது பூத உடல் நல்லடக்கம் செய்யப்பட்டுள்ளது.

அருட்திரு செயின்ட்சீர் திருச்சிராப்பள்ளியில் ஆங்கிலேயர் படைக்கு ஆன்ம குருவாகப் பணியாற்றிய போது தமிழ் மொழி கற்றுக் கொள்ளும் ஆர்வங் கொண்டு ஒரு சில மாதங்களில் தமிழ் மொழியை நன்குக் கற்றுத் தேர்ந்தார். அடிகள் இலத்தீன், கிரேக்கம், பிரெஞ்சு, ஆங்கிலம், தமிழ் போன்ற பன்மொழி அறிந்த வித்தகராக விளங்கினார். தமிழ் கற்கத் தொடங்கிய சில மாதங்களில் அடிகள் தமிழைச் சரளமாகப் பேசும் அளவுக்குப் பாண்டித்யம் பெற்றார். சீயரின் தமிழ்ப் புலமை பற்றிக் கனோஸ் ஆண்டகை தாம் எழுதிய கடிதத்தில்

> "லூயிஸ் செயின்ட்சீர் அடிகள் இந்தியா வந்தடைந்த சில மாதங்களில் நான் திண்டுக்கல் வழியாகச் சென்றேன். ஞாயிற்றுக்கிழமையன்று புதிதாக வந்து மறையுரை போதித்துக் கொண்டிருந்த மறைப் போதகர் செயின்ட்சீர்

மிகத் திருத்தமாகத் தமிழ் மொழியில் மறையுரையாற்றிக் கொண்டிருப்பதைக் கேட்டு நான் மிக்க ஆச்சரியப் பட்டேன்.''

என்று எழுதியுள்ளார். கல்லூரியின் அதிபராகப் பணியாற்றியபோது செயின்ட்சீர் அடிகள் இலத்தீன், ஆங்கிலம், தமிழ் மொழிகளைக் கற்றுக்கொடுக்கும் பேராசிரியராகப் பணியாற்றினார்.

ஐரோப்பிய மொழிகளுக்கும் திராவிட மொழிகளுக்கும் எவ்விதத்திலும் ஒப்புமை கிடையாது. அவ்வாறு இருந்தும் இலக்கணம் நிறைந்த ஓர் மொழியாம் தமிழைச் செயின்ட்சீர் கற்றுத் தேர்ந்து தமிழ் கற்பிக்கும் ஆசிரியராகக் கல்லூரியில் சில ஆண்டுகள் பணி புரிந்ததோடு மட்டுமல்லாமல் மக்களிடையே சரளமாகத் தமிழில் பேசினார். சிறந்த முறையில் மறையுரை ஆற்றினார். மேலும் சில கிறித்தவ நூல்களையும் தமிழில் எழுதியுள்ளார்.

பிரான்ஸ் நாட்டிலுள்ள தம் நண்பருக்கு எழுதிய கடிதத்தில் செயின்ட்சீர்,

> ''நான் தமிழில் இயேசுவின் திரு இருதய பக்தியைப்பற்றி எழுதி அச்சிட்டுள்ளேன். அதில் எல்லா வகையான இறை வேண்டல்களும் அடங்கியுள்ளன. இந்நூல் 700 பக்கங்களைக் கொண்டது. 'இரக்கத்தின் பெருங்கடல்' எனப்படும் இயேசுவின் திரு இருதயத்தின் பேரிலும், மாசற்ற கன்னிமரியாளின் பேரிலும் அமைந்தவை.''

எனக் கூறியுள்ளார். ''இயேசுவின் திரு இருதயத்தின் பேரில்'' என்னும் நூல் 1884இல் அச்சிடப்பட்டதாகத் தெரிகிறது. இந்நூல் காப்பியம்போல் மூன்று காண்டப் பகுப்புடைய சிறுவடிவ நூல். தமிழ் எழுத்துப் பக்கக் குறிப்புகளாக அச்சடிக்கப்பட்டுள்ளது. 101 பக்க அளவுடையது. நூல் முடிவில் 'பிரார்த்தனை' இடம்பெறுகிறது. பொருள் அட்டவணை பிரெஞ்சு அச்சுப் பதிப்பு மாதிரிப்படி நூலிறுதியில் காணப்படுகிறது. இணைப்புகள் 'அநுபந்தம்' என்னும் தலைப்பாகத் தொடர்கின்றன. கட்டுரைகள் 18 'பாடங்களாகப்' பகுக்கப்பட்டுள்ளன. 'கிறிஸ்தவர்களே!' எனச் சில இடங்களில் விளித்துப் பேசும் முறையில் நடை அமைகிறது. ''நமது'' என உளப்பாட்டுத் தன்மைப் பன்மையில் கருத்து, வாசகரை ஈடுபடுத்துகிற முறையில் சொல்லப்படுகிறது. இயேசுவின் துயரத்தை 'அம்பு பட்ட மானினது உடலுக்குள் தைத்து நின்று விட்ட நிலையில் துன்புறுவது போன்றது' என்கிற உவமை காட்டி எழுதும் முறையும் காணப்படுகிறது. வடசொற்கள் கலப்பு மிகுதியாக இடம்பெறுகிறது.

செயின்ட்சீரின் இரண்டாவது நூல் அவரின் முதன்மைப் பாதுகாவலரான புனித சூசையப்பரைப் பற்றியது. இந்நூல் புனித

சூசையப்பரின் ஏழ்மை, தாழ்ச்சி நிலை போன்ற நற்பண்புகளை இந்திய மக்களுக்கு எடுத்துரைக்கவும், தான் செய்யும் தொழிலை விரும்பிச் செய்யவும், அதனால் வரும் துன்ப, துயரங்களை ஏற்றுக் கொள்ளவும், மனிதனுக்குத் தனி வாழ்விலும் சரி, குடும்ப வாழ்விலும் சரி, நன் மரணத்திற்கு முன்மாதிரியாக விளங்கிய புனித சூசையப்பரைப் பின்பற்றுமாறு அவருடைய வாழ்க்கை வரலாற்றை எழுதியுள்ளார்.

"புண்ணியாத்மாக்களின் மாதம்" என்னும் தலைப்பில் அருட்திரு செயின்ட்சீர் தமது மூன்றாவது பக்தி நூலை எழுதியுள்ளார். மனிதன், முக்கியமாக இந்தியக் குடிமகன், தன் பிறப்பில் இருந்து இறப்பு வரையிலும் ஓர் சாபக்கேடு அவனது இதயத்தை இறுகச் செய்கிறது. தன் மறுவாழ்வைப் பற்றிக் கவலை கொள்வதில்லை. இவ்வுலக வாழ்க்கையில் அவன் தன் எதிர்கால வாழ்க்கையை அமைக்க அதற்கான வழிவகைகளையும் கழுவாய்களையும் செய்ய வேண்டும். நல்ல மரணம் அடைவதற்கான வழிவகைகளைப் பின்பற்ற வேண்டும் என்று இந்நூலில் கூறியுள்ளார்.

"அர்ச்.ஞானப்பிரகாரியாருடைய சரித்திரமும், அர்ச். தனிஸ்லாசுடைய சரித்திரப் பிரசங்கமுமாவன" என்னும் நூல் 1862இல் எழுதப்பட்டது. நூலுக்குப் பாயிரம் உள்ளது. இதுவும் 10 பாகங்களாகப் பகுக்கப்பட்ட, திட்டமிட்ட கட்டுரைகளின் தொகுப்பு. நூலின் முடிவில் செபம், பிரார்த்தனை, மன்றாட்டு என்னும் பெயர்களில் வேறுபட்ட இறைவேண்டல்கள் இடம்பெறுகின்றன. நூலின் பின்பாதி 'நவநாட்பிரசங்கம்' 10 நாள்களுக்குரியன திட்டமிட்டு எழுதப் பட்டுள்ளன. பாடங்களது முடிவில் "ஆறாம்பாடமுற்றும்" என்பது போன்று கட்டுரை முடிவைச் சுட்டிக்காட்டும் சொற்றொடர்க் குறிப்பு இடம்பெறுவது இந்நூலின் தனித்தன்மை எனலாம். இதைக் கேட்பவர்களே! என முன்னால் இருப்பவரை அழைத்துப் பேசும் பாணியும் காணப்படுகிறது.

'வேதசாட்சியான முத்திப்பேறு பெற்ற அருளானந்தர் சரித்திரம்' 1858இல் எழுதப்பட்டது. 'ர' என்னும் எழுத்துக்குக் கீழ்க்கோடில்லாமை, 'ம்' மெய்யெழுத்துக்குப் புள்ளியில்லாமை போன்றவை அச்சுப் பதிப்பில் காணமுடிகிறது. 308 பக்கங்களுடைய சிறுநூல் இது. மற்ற நூல்களைப் போலவே பிரிவு-பொருள்-பக்கம் என அமைந்த பொருளட்டவணை நூலின் இறுதியில் இடம் பெறுகிறது. கட்டுரைகள் 'பிரிவு' என்ற தலைப்பில் கட்டுச்செட்டான 11 பிரிவுகள் கொண்டுள்ளன. பத்து மன்றாட்டுக்கள் திட்டமிட்டு எழுதப்பட்டுள்ளன. 'நவநாட்செபம், மந்திரம்' ஆகியனவும் நூலின் இறுதியில் உள்ளன. கல்வெட்டுப்பாணி நடை போன்றே வாக்கிய அமைப்புகள் சிறுநூல் பக்க அளவிற்கேற்பக் கண்டபடி பிரித்து அச்சிடப்பட்டுள்ளன. சொற்கள் புணர்த்து எழுதப்பட்டு

அடுத்தடுத்த வரித் தொடர்ச்சிக்கேற்பச் சிதைக்கப்பட்டு பதிப்பிக்கப்பட்டுள்ளன. "கண்ணிலே பாய்ந்த எரிவேல் போல" போன்ற உவமைகள் ஆங்காங்கு நூலில் மிளிர்கின்றன.

"வேதசாட்சியான தேவசகாயம் பிள்ளை சரித்திரம்" 1858ஆம் ஆண்டு எழுதப்பட்டது. தமிழ் எழுத்து வடிவில் ஆண்டு குறிக்கப்பட்டுள்ளது. அதன் முகவுரை உள்ளிட்டு 72 பக்க அளவு (வங்கிச் சேமிப்புக் கணக்கு அளவுள்ள சிறு நூல் வடிவில்) அமைந்துள்ளது. 10 அதிகாரங்களாகப் பகுக்கப்பெற்றுள்ளது. ஒவ்வொரு அதிகாரத்திற்கும் ஓர் தலைப்பு கொடுக்கப்பட்டுள்ளது. சான்றாக, "தேவசகாயம் பிள்ளை யநுபவித்த அவமானங்களு முபாதையளுமாவன". தொடர்கள் எல்லாம் சந்தி பிரிக்காமல் எழுதப்படும் பாணி காணப்படுகிறது. (எ.கா.)

> இவ்வுலகத்திலுங்களுக்கு நேரிடுகிற கஸ்தி துன்பங்களைப் பொறுமையாய்ச் சகித்து மரண பரியந்தம் புண்ணிய நெறியிலே நிலை கொண்டு சுமுத்திரையாய் நடப்பீர்களானால் ஈடேறப் படுவீர்களல்லாமல் மற்றப்படியல்ல.

தந்தை லூயிஸ் செயின்ட்சீர் எழுதிய "சலேத் மலை மாதா கோவில்" என்னும் கையேட்டை 1873ஆம் ஆண்டு இராயபுரத்தில் அச்சடித்து வெளியிட்டார். மறுபடியும் இச்சிறு நூல் 1888ஆம் ஆண்டு இந்தியா டைம்ஸ் அச்சகத்தில் அச்சிடப்பட்டு வெளிவந்தது. மேலும் மாதாவின் பேரில் மற்றுமொரு சிறு நூல் வெளிவந்தது.

"தேவமாதாவின் வணக்க மாதம்" மட்டுமே 1957இல் 10 ஆவது பதிப்பு வெளியாகியுள்ளது. இந்த நூலில் சேசு சபை செயின்ட் சீர் சுவாமிகள் (Saint-Cyr S.J.) இயற்றியது என்கிற ஆசிரியர் பெயர் இடம் பெறுகிறது. 'டெம்மி' வடிவில் சற்றுப் பெரிதாக அச்சிடப்பட்டுள்ள இந்நூல் 188 பக்கங்கள் கொண்டது. 31 நாள்களுக்கான பொருளடக்கத் தலைப்புகள் நூலில் இடம்பெற்றுள்ளன. நூலின் வாக்கிய அமைப்புகள் எளிதில் வாசிக்க ஏதுவாகப் பிரித்து எழுதிய சொற்களாக உள்ளன. பதிப்பாளர் நூலின் மொழிநடை இயல்பு கெடாதவாறு கடினப் புணர்ச்சிகளை மட்டும் பிரித்துப் பதிப்பித்திருக்கிறார் என்பதைப் புரிந்து கொள்ள முடிகிறது. நூல் இறுதியில் செபங்கள், பிரார்த்தனைகள் உள்ளன. தேதி, புதுமை, செபம் என்ற மூன்று தலைப்புகளாகக் கட்டுரைப்பாணி செல்கிறது. நீ, நீங்கள் என வாசிக்கக் கேட்போர் கவனத்தை ஈர்க்கும் முறையில் எழுதப்பட்டுள்ளது.

தந்தை பெடானின் வாழ்க்கை வரலாறு, 1886, (Vie du P. Bedin,S.J. 1886) தந்தையர்கள் பெரான்-துய் ராங்கவே, கர்னியர், மார்ட்டின் ஆகியோரின் வாழ்க்கை வரலாறு, 1865, (Vies des PP Perrin, du Ranquet,

Garnier, Martin, 1865) போன்ற மேற்கூறிய நூல்களைத் தவிர்த்துச் சின்னக் குறிப்பிடங்கள் (வேதச் சுருக்கம் கேள்வி-பதிலில் அடங்கியது) லூயிஸ் செயின்ட் சீயரால் தமிழில் எழுதப் பெற்றன. புனித வளனார் பேரில் ஒரு பேராலயத்தைத் திண்டுக்கல்லில் 1872ஆம் ஆண்டு அக்டோபர்த் திங்கள் 20ஆம் நாள் கட்டி முடித்தார்.

செயின்ட்சீர் அடிகளார் மறை பரப்பும் வேதபோதகராய் மட்டமல்லாது முற்போக்குச் சிந்தனையுள்ள கல்வியாளராகவும், சிறந்த எழுத்தாளராகவும் திகழ்ந்தார். இவர் தமிழில் மட்டுமின்றிப் பிரெஞ்சு மொழியிலும் பல நூல்களைப் படைத்ததோடன்றி, பல கடிதங்களைத் தம் நண்பர்களுக்கும், சபைத் தலைவர்களுக்கும், உற்றார் உறவினர்களுக்கும் எழுதியுள்ளார். நம் தமிழ்நாட்டின் வரலாற்றுக் குறிப்புகள், கலாச்சாரம், பழக்க வழக்கங்கள் ஆகியவை பற்றிய செய்திகள் இவற்றில் அடங்கியுள்ளன. அடிகள் பலமுறை அதிபராக இருந்தார். பல ஊர்களுக்கும் பயணம் செய்தவர். இந்நிலையில் தமிழிலும் சரி, பிரெஞ்சு மொழியிலும் சரி, பல நூல்கள் எழுதியுள்ளார் என்றால் அது நமக்கு வியப்பைத்தான் தருகிறது. பிரெஞ்சு மூல மொழியில் இச்செய்திகள் அனைத்தும் காணக்கிடக்கின்றன. செண்பகனூரில் ஓலைச்சுவடிக் காப்பகத்திலிருந்து மேற்குறிப்பிட்டவை திரட்டப்பட்டு மொழிபெயர்க்கப் பட்டுள்ளன.

## ஹெர்மன் குண்டர்ட்
## (Gundert, Hermann) 1814-1893

ஹெர்மன் குண்டர்ட் 1814ஆம் ஆண்டு டிசம்பர் மாதம் 4ஆம் நாள் ஸ்டுட்கார்ட்டில் பிறந்தார். அவர் தமது பள்ளிப்படிப்பை இலக்கணப் பள்ளியில் முடித்தப்பின் மோல்புரோனிலுள்ள குருமடத்தில் சேர்ந்து இறையியல் படிக்கச் சென்றார். பிறகு அவர் துய்பிங்கன் (Tueibingen) பல்கலைக்கழகத்தில் சேர்ந்து இறையியலும், மெய்யியலும் கற்றார். இவர் 1935இல் தேர்வில் தனிச் சிறப்புடன் வெற்றி பெற்றார். ஒரு மறைப்போதகராக வேண்டுமென்று தீர்மானித்தார். ஹெர்மன் இலண்டனில் இருக்கும்போதே இந்துஸ்தானி, பெங்காலி மொழிகளைக் கற்றார். 1836ஆம் ஆண்டு மார்ச்சு மாதம் இந்தியாவுக்குப் புறப்பட்டு வந்தார். முதலில் அவர் திருநெல்வேலியில் பணியாற்றினார். அவர் விரைவில் தமிழில் சில ஆய்வுக்கட்டுரைகளை வெளியிட்டார். புதிய ஏற்பாட்டிலுள்ள கலைச் சொற்களுக்குக் கிரேக்க-தமிழ் அகராதி ஒன்றை வெளியிட்டார். குண்டர்ட்டும் அவரது மனைவியும் மக்களோடு மக்களாக ஒரு குடிசையில் வாழ்ந்தனர். அரிசி மற்றும் ஏனைய தானியங்களைச் சமைத்து உண்டனர். உடல் நலத்தின் காரணமாக இந்த முயற்சியைக் கைவிட்டனர்.

1857லிருந்து 1859வரை அவர் அரசாங்கப் பள்ளிக்குக் கணக்காளராக இருந்தார். குண்டர்ட் 1893 ஏப்ரல் 25ஆம் நாள் நீண்ட நாள் உடல்நலக்குறைவில் இருந்து பின்பு மரணமடைந்தார்.

குண்டர்ட் திராவிட அடிப்படைக் கூறுகள் சமஸ்கிருதத்தில் உள்ளன என்ற ஓர் ஆய்வுக் கட்டுரையை ஜெர்மன் கீழ்த்திசை மொழிகளின் பத்திரிக்கையில் வெளியிட்டார். மேலும் அவர் சமஸ்கிருதத்தில் அநேக தாவரங்களின் பெயர்களும் தொழிற்சாலையில் உற்பத்தியாகும் பொருள்களின் பெயர்களும் தமிழ் வார்த்தைகளிலிருந்து வந்தன என்பதைக் காட்டியுள்ளார். இவ்வார்த்தை மாற்றமானதிற்கான நெறிமுறைகளைக் கொடுத்துள்ளார். இவ்வறிஞர் அநேக இந்திய மொழிகளான பெங்காலி, தமிழ், தெலுங்கு, கன்னடம், மலையாளம், துளு ஆகியவைகளை அறிந்தவர்.

### படைப்புக்கள்

1. A Classified collection of Tamil Proverbs rpt. New Delhi, 1989.
2. புதிய ஏற்பாட்டிலுள்ள கலைச் சொற்களுக்குக் கிரேக்க-தமிழ் அகராதியை எழுதியுள்ளார்.
3. நடைமுறைச் சமயம் பற்றிய சிறு ஆய்வுக் கட்டுரைகள் பலவற்றை எழுதியுள்ளார்.

## பாதிரியார் டாக்டர் இராபர்ட் கால்டுவெல் (Rev.Dr.Robert Caldwell) 1814-1891

கால்டுவெல் குடும்பம் ஸ்காட்லாந்திலிருந்து வட அயர்லாந்துக்குக் குடிபெயர்ந்து வந்தபின் இந்நாட்டில் உள்ள கிளாடி (Clady) என்னும் ஊரில் 1814ஆம் ஆண்டு மே திங்கள் 17ஆம் நாள் கால்டுவெல் தம்பதியருக்கு இராபர்ட் மகனாகப் பிறந்தார். இராபர்ட் கால்டுவெல் கிளாஸ்கோவில் பள்ளி, கல்லூரிப் படிப்புகளை முடித்தார். இவர் கல்லூரியில் இளங்கலை பயின்று வகுப்பில் முதல் மாணவனாக வெற்றி பெற்றார். ஐரோப்பியச் செம்மொழிகளான இலத்தீன், கிரேக்கம், ஹீப்ரூ மொழிகளையும், வேறு ஐரோப்பிய மொழிகளையும் கல்லூரியில் கற்றிருக்க வேண்டும். அவர் விருப்பப் பாடமாக ஒப்பியல் மொழியைப் பயின்றுள்ளார். கால்டுவெல் பாதிரியார் டப்ளினில் கலை, ஓவியம் போன்ற நுண்கலைகளையும் கற்றிருந்தார்.

இராபர்ட் கால்டுவெல் சமயப் பணியாளராக நியமிக்கப்பட்டுத் தமிழகம் வந்து சேர்ந்தார். இவர் கப்பல் பயணத்தின் போது சென்னை அரசு அலுவலரான சி.பி.பிரௌனுடன் நட்புக் கொண்டார். கப்பல் பயணம் தாமதமாகும் என்ற செய்தி கேட்டு அவர் பயணத்தின்போது இந்திய

மொழிகளான சமஸ்கிருதம், தெலுங்கு இவ்விரண்டையும் கற்கத் தொடங்கினார். கால்டுவெல் பாதிரியார் சென்னை வந்தடைந்ததும் டாக்டர் ஜான் ஆன்டர்சன், வின்ஸ்லோ, டாக்டர் போப் ஐயர், ஹென்றி பவர் போன்ற அறிஞர்களுடன் நண்பரானார்.

1841ஆம் ஆண்டு கால்டுவெல் பாதிரியார் சென்னையிலிருந்து கால்நடையாகவே கிழக்குக் கடற்கரை வழியாகத் திருநெல்வேலி போய்ச் சேர்ந்தார். இவர் போகும் வழியில் சிதம்பரம், தஞ்சை, மேலும் இதர மாவட்டங்களிலுள்ள கோவில்களைக் கண்டு வியந்து அவற்றைப் பற்றிய ஆராய்ச்சிகளையும் மேற்கொண்டார். டாக்டர் கால்டுவெல்டுக்குத் துணையாக வந்த எட்வர்ட் சார்ஜன்ட் என்பவர் தமிழில் நல்ல புலமை பெற்றிருந்தார். அவர் தமிழரைப் போலவே தமிழ் மொழியை எளிதாகவும், சரளமாகவும் பேசினார். மேலும் அவர் தமிழ்க் கருத்துக்களை நன்கு அறிந்தவராகவும் இருந்தார். அவ்வறிவு கால்டுவெல்லுக்குப் பயனுள்ளதாக இருந்தது. ஏனென்றால் கால்டுவெல் அவருடன் அடிக்கடி கலந்து பேச முடிந்தது.

இராபர்ட் கால்டுவெல் திருநெல்வேலி மாவட்டத்திலுள்ள இடையன்குடியைத் தேர்வு செய்து அதைத் தமது மறைப்பரப்பு பணித்தளத்தின் மையமாகக் கொண்டார். அவ்வூர் வறண்ட சூழலுடையதாகக் காணப்பட்டது. பாலைவனமாக இருந்த ஊரைச் சோலைவனமாக மாற்றி மக்கள் வாழ்வதற்கேற்ற இடமாக மாற்றினார். சமயப்பணியாளரான கால்டுவெல் தமக்காக ஒரு வீட்டையும் இறை வழிபாட்டுக்காக ஓர் ஆலயத்தையும் கட்டி எழுப்பினார். தேவாலயம் கலை நுணுக்கம் நிறைந்ததாக இருந்தது. மக்களின் அறிவுக் கண்களைத் திறக்க டாக்டர் கால்டுவெல் பள்ளிக்கூடங்கள் பல தொடங்கி நடத்தினார். பெண்களுக்கென்று தனியாக ஒரு பள்ளி தொடங்கப் பட்டது.

டாக்டர் இராபர்ட் கால்டுவெல் 1844ஆம் ஆண்டு தமது 29 வது வயதில் இலண்டன் சமயக் குழுவைச் சார்ந்த ரெவரெண்ட் சார்லஸ் மால்ட் என்பவரின் மகளான எலிசாவைத் திருமணம் செய்து கொண்டார். இவரது மனைவியார் இடையன்குடி பெண்கள் பள்ளியில் ஆசிரியையாகப் பணியாற்றினார். மேலும் நோயாளிகளையும் கவனித்து வந்தார். இவர் பேச்சுத் தமிழைச் சரளமாகப் பேசினார். பிற்காலத்தில் அவருடைய கணவர் செய்த ஆராய்ச்சிக்குப் பேச்சுத் தமிழ் பற்றி அறியப் பெரிதும் துணைபுரிந்தார். இத்தம்பதியருக்கு இரண்டு மகன்களும் இரண்டு மகள்களுமாக நான்கு குழந்தைகள் பிறந்தனர். மகன்களின் பெயர்கள் இராபர்ட் அடிங்டன், இராபர்ட் சார்லஸ் ஆகும். மகள்களின் பெயர்கள் லூயிசா, வியாட் என்பதாகும். லூயிசா இளமையிலேயே காலமாகி விட்டாள்.

1877இல் கொடிய பஞ்சம் ஏற்பட்டது. அது திருநெல்வேலியை மிகவும் பாதித்தது. அப்போது கால்டுவெல் ஏழை எளியவர்களுக்குப் பெரிதும் உதவினார்.

கால்டுவெல் தமது இறுதிக்காலம் நெருங்கிக் கொண்டிருந்தபோது கொடைக்கானலில் தம் மகளுடன் வாழ்ந்து வந்தார். அங்கேயே 1891ஆம் ஆண்டு இறையடி எய்தினார். அவருடைய பூதவுடலை இடையன்குடிக்குக் கொண்டு சென்று நல்லடக்கம் செய்தனர்.

முதல் முதலில் தமிழ் மொழியில் ஒப்பியலாய்வு முறையை அறிமுகப்படுத்தியவர் அறிஞர் இராபர்ட் கால்டுவெல் என்பதை நாம் அறிவோம். ஆராய்ச்சி செய்து 'திராவிட மொழிகளின் ஒப்பிலக்கணம்' என்ற நூலைக் கால்டுவெல் பாதிரியார் எழுதினார். டாக்டர் கால்டுவெல் தமிழ் இலக்கண ஆய்வில் முதன்மையானவராகத் திகழ்ந்தார். அவர் தமது உயர் கல்விப் படிப்பில் ஒப்பியல் மொழி நூலைக் கற்றதன் பயன்தான் 'திராவிட மொழிகளின் ஒப்பிலக்கணம்' என்ற நூலை எழுத உறுதுணையாய் இருந்துள்ளது.

தொல்காப்பியம், நன்னூல் போன்ற இலக்கணங்களைக் கற்கவும் அவைகளைப் பயன்படுத்தவும் தமிழர்களாகிய நமக்குப் புதிய வழி காட்டி ஒளியேற்றிய மேலைநாட்டு அறிஞர்களுள் டாக்டர் இராபர்ட் கால்டுவெல்லும் ஒருவராவார். இவ்வறிஞர் படைத்த 'திராவிட மொழிகளின் ஒப்பிலக்கணம்' தமிழர்களாகிய நம்மில் இலக்கணத்தை அணுகும் முறையில் ஒரு புதுத் திருப்பத்தை உண்டுபண்ணியது எனக் கூறலாம்.

அடுத்து, கால்டுவெல் அறிஞர் வரலாற்றுத் துறையில் மிகுந்த ஆர்வமுடையவராக இருந்தார். மார்க்கோபோலோ காயல் பற்றிக் குறிப்பிடுவதைக் கண்டு தமிழகம் முற்காலத்திலிருந்து மேலை நாட்டுடன் தொடர்பு கொண்டிருந்தது என்று அவர் கருதுகிறார். சான்றாக ஹீப்ரு மொழியிலும், கிரேக்க மொழியிலும் தமிழ்ச் சொற்கள் இருப்பதை அவர் காட்டுகின்றார். எடுத்துக்காட்டாக: மயில் இறகைக் குறிக்கும் தமிழ்ச் சொல்லான தோகை என்பது 'துகி' என்று ஹீப்ரு மொழியில் வழங்குகின்றது. 'அரிசி' என்ற சொல் கிரேக்க மொழியில் 'அருசா' என்று வழங்குகின்றது.

அகழ்வாராய்ச்சியிலும் டாக்டர் கால்டுவெல் முனைப்புடன் ஈடுபட்டிருந்தார். வரலாற்றுச் சிறப்புடைய 'புன்னைக்காயல்' 'கொற்கை' என்ற இடங்களில் அகழாய்வு செய்தார். 'புன்னைக்காயல்' என்னும் ஊரில் பழைய பல கட்டடங்களும், ஆலயங்களும் சிதைந்த நிலையில் காணப்படுகின்றன. பழைய காயல் என்ற இடத்தில் அவர் வரலாற்றுச் சான்றுகளை வெளிப்படுத்த நிலத்தைத் தோண்டினார்.

வரலாற்று ஆராய்ச்சியில் ஆர்வமிக்கவர் இராபர்ட் கால்டுவெல். டாக்டர் கால்டுவெல் திருநெல்வேலியின் பொது வரலாறும் அரசியலும் என்னும் தலைப்பில் ஆங்கிலத்தில் ஒரு நூல் எழுதினார். (A Political and general History of Tinnelvelly 1881 Caldwell.R) இந்த நூல் வரலாற்று நூல்களின் தரத்திற்கு எடுத்துக்காட்டாக உள்ளது என்று முனைவர் பேராசிரியர் மீனாட்சி சுந்தரம் கருதுகின்றார். வரலாற்று உண்மைகளைத் திரட்டுவதற்குரிய வழிவகைகளையும் சான்றுகளின் உண்மைகளைத் தக்கவாறு அறியும் முறையும் இந்நூல் மூலம் அவர் தெளிவாக்கியுள்ளார். பெயர்கள், சொற்கள் ஆகியவற்றின் மூலத் தோற்றம், கல்வெட்டுகள், நாணயங்கள், வெளிநாட்டார் கூற்றுகள் ஆகியவை வரலாற்றின் அடிப்படை மூலங்கள் ஆகும். இடங்களின் பெயர்களைப் பகுத்தும் அவற்றின் வேர்களை ஆராய்ந்தும் கால்டுவெல் சில முடிவுகளுக்கு வருகின்றார்.

கால்டுவெல் ஏறத்தாழ நான்கு அத்தியாயங்களில் பாளையக்காரர் வரலாற்றை ஆராய்ந்துள்ளார். இந்தப் பகுதியில் இவர் கட்டப்பொம்மன் என்பது குடிப்பெயர் என்பதை எடுத்துக்காட்டி நான்கு கட்டப்பொம்மன்களைப் பற்றிச் சுட்டிக் காட்டுகின்றார்.

நெல்லை மாவட்ட மக்கள் கொடும் பஞ்சத்தில் சிக்கி, பட்ட துன்பங்களையும், கடுந்துயர்களையும் கால்டுவெல் விரிவாகச் சித்திரித்துள்ளார். அக்காலத்தில் அப்பகுதியில் நிலவிய சமுதாய நிலைகளையெல்லாம் தெரிந்து கொள்ள இவரது தெளிந்த உரைநடை, தத்ரூபமான வருணனைகள் உதவுகின்றன. இலக்கிய வரலாற்றுக்கு உதவும் வகையில் திருநெல்வேலியில் வாழ்ந்த புலவர்கள், கவிஞர்கள் ஆகியோரது பெயர்ப் பட்டியலையும் கால்டுவெல் இணைத்துளளார்.

ஏறத்தாழ இதே காலக்கட்டத்தில் டாக்டர் கால்டுவெல் "மறுநெறிக் கிறித்தவர்களின் இரு பிரிவினர் திருநெல்வேலியில் ஆற்றிய பணியின் வரலாறு" (History of the Tinnevelly Mission of the S.P.C.K and S.P.G) என்ற வரலாற்று நூலை எழுதியுள்ளார். இந்நூல் 1881இல் அச்சடிக்கப்பட்டது.

கால்டுவெல் சமய நூல்கள் சில எழுதியுள்ளார். அவர் நற்கருணைத் தியான மாலை 1853, பரத கண்ட புராதனம், தாமரைத் தடாகம், ஞானக் கோயில் ஆகிய உரைநடை நூல்களைப் படைத்துள்ளார். அன்னார் பாடிய கிறித்தவப் பாடல்கள் இன்றும் மறுநெறிக் கிறித்தவக் கோவில்களில் பாடப்பட்டு வருகின்றன. மேலும் அவர் விவிலியத்தைத் தமிழில் மொழியாக்கம் செய்யும் குழுவில் உறுப்பினராக இருந்தார்.

அறிஞர் கால்டுவெல் எழுதியுள்ள 'இலக்கணமும் மொழியியலும்' பற்றி டாக்டர் மீனாட்சி சுந்தரம் கீழ்க்கண்டவாறு

பகுப்பாய்வு செய்துள்ளார். **இலக்கணமும் மொழியியலும்:** இலக்கணத்தைக் கற்பதிலும், இலக்கணத்தைப் பயன்படுத்துவதிலும் நமக்குப் புதிய ஒளி காட்டிய அறிஞர் பெருமக்களுள் டாக்டர் கால்டுவெல்லும் அடங்குவார். அவரின் திராவிட மொழிகளின் ஒப்பிலக்கணம் நாம் இலக்கணத்தை அணுகும் முறையில் புரட்சிகரமான ஒரு புதுத் திருப்பத்தையே உண்டாக்கிவிட்டது எனலாம். கால்டுவெல் அவர்களின் நூலைக் கற்ற பிறகு நம் தமிழ் நாட்டு அறிஞர்களும் நம் இலக்கண நூல்கள் அறிவியல் அடிப்படையில் அமைந்துள்ள பாங்கினைத் தெள்ளிதின் உணர்ந்து கொள்ளத் தலைப்பட்டுள்ளனர்.

வரிவடிவ இயல் (Orthography): திராவிட மொழிகளின் எழுத்துக்கள் வட இந்திய மொழிகளினின்று பெறப்பட்டவையா என்ற சிக்கல் தீர்க்கப்பட வேண்டிய ஒன்று என்று கால்டுவெல் கருதினார். இதுபற்றி அவர் தமது கருத்தைக் குறிப்பிடும் போது கால்டுவெல் திராவிட மொழிகளின் பழமைச் சிறப்பைப் புகழ்ந்துரைக்கிறார்.

> ''இக்கால வட இந்திய மொழிகளைக் காட்டிலும் தென்னிந்திய மொழிகள் இலக்கியப் பழமையுடையனவாய், சிறப்புடையவனவாய் இருப்பதால்தான் அவ்வம் மொழிகளின் எழுத்துக்களின் பழமை பற்றிய தெளிவு சிறப்பு மிக்க ஒன்றாகக் கருதப்படுகிறது.''

ஒலியியல் (Phonology): கால்டுவெல் தம்முடைய திராவிட ஒப்பிலக்கண நூலில் தமிழ் எழுத்துக்களின் தனித்தன்மைகளைப் பற்றி ஆய்வு செய்து தமது கருத்துக்களை வெளியிட்டுள்ளார்.

1. தமிழ் நெடுங்கணக்கில் எகர ஒகாரங்களுக்கும், ஏகார ஓகாரங்களுக்கும் தனித்தனி வரிவடிவங்கள் உள்ளன.
2. வடமொழி நெடுங்கணக்கில் காணப்படும் அரை உயிரெழுத்துக்களான 'ri' 'iri' ஆகியவை தமிழ் நெடுங்கணக்கில் காணப்பெறவில்லை. ....மூக்கொலிகள் தமிழில் நன்கு பயன்படுத்தப்படுகின்றன. ஆனால் அவை தெளிவான திருத்தமான மூக்கொலிகளாக (மெல்லினமாக) உள்ளன. ...
3. தெலுங்கு மொழி நெடுங்கணக்கில் காணப்பெறும் 'அரை அனுஸ்வத்ரா' தமிழில் இல்லை. வல்லின ஒலிகள் மெல்லின ஒலிகளோடு சேர்ந்து வரும்போது தம் வன்மை குறைந்து காணப்படுவது தமிழில் எல்லா இடங்களிலும் இயல்பாக உள்ளது.
4. தமிழில் வெடிப்பொலிகள் (aspirates) இல்லை. வடமொழியிலிருந்து எந்த வெடிப்பொலி மெய்களையும் தமிழ் கடன் பெறவில்லை....

5. வடமொழியிலுள்ள க்ஷ, ஸ, ஷ ஆகிய ஒலிகள் தமிழ் நெடுங்கணக்கில் இல்லை.

**இலக்கிய வரலாறு**

காலட்டுவெல் தொடக்கத்தில் இத்துறையில் தம் பணியைத் தொடர்ந்தார். அவர் தமக்குக் கிடைத்த செய்திகளைக் கொண்டு ஓர் இலக்கிய வரலாற்றை எழுதினார். அதில் பல்வேறு இலக்கிய நூல்களுக்கு அவை வெளியான காலங்களைக் குறிக்க முயன்றார். இவர் குறித்த இந்தக் காலங்கள் பின்னர்த் தவறானவை எனக்கண்டு அறியப் பட்டன. அவருடைய திராவிட மொழிகளின் ஒப்பிலக்கணம் எனும் நூலின் மூன்றாவது பதிப்பிலும் அதற்குப் பின்பு வந்த பதிப்புகளிலும் இப்பகுதிகள் கொண்ட அதிகாரம் நீக்கப்பட்டு விட்டது. ஏனென்றால் காலவரையறை தவறு என்று நிரூபிக்கப்பட்டதால்தான்.

**சொல்லமைப்பு**

எவ்வாறு திராவிட மொழிச் சொற்களின் வேர்ச் சொற்கள் ஒழுங்குபடுத்தப்பட்டுள்ளன, அவை எந்த நிலையில் தொடக்கத்தில் ஓரசைச் சொற்களாய் இருந்துள்ளன, எவ்வாறு சொல்லாக்கச் சாரியை, சந்தி, இடைநிலைகள், விகுதிகள் உருவாக்கத்தில் இடம் பெற்றன என்பன போன்ற நெறியில் சிறந்த தலைமை நிலையில் நின்று ஆய்ந்துள்ளார். தவிரவும் பதின்மூன்று சிறப்படை விகுதிகளை எடுத்துக் காட்டியுள்ளார்.

**பால் பாகுபாடு**

தமிழில் பெயர்ச் சொற்கள் முதலில் உயர்திணை, அஃறிணை எனப் பகுக்கப்படுகின்றன. பிறகு அவை பல்வேறு பால்களாகப் பகுக்கப்படுகின்றன. "பெயர்ச்சொற்களின் இத்தகைய பாகுபாடு இந்தோ-ஐரோப்பிய, செமெட்டிக் மொழிகளில் உள்ளது போல அவ்வளவு கற்பனையாக இல்லை. எனினும் இப்பாகுபாடு தத்வார்த்தமாக உள்ளது." பால்பாகுபாடு பற்றிய தனித்தன்மையுடைய விதியானது "வளர்ந்து வரும் அறிவின் பயனாகவும், பண்பட்ட இலக்கண வளர்ச்சியின் தன்மையாகவும்" இருப்பதைத் தன்னாட்டு மக்களுக்கும் ஏனைய அறிஞர்களுக்கும் முதன்முதலாக வெளிப்படுத்தியவர் கால்டுவெல் ஆவார்.

**வேற்றுமை**

தமிழில் எண்ணற்ற 'வேற்றுமைகள்' உள்ளன. எட்டு வேற்றுமைகளைக் கொண்ட சமஸ்கிருதத்தைப் போன்று கூறுவது சரி இல்லை என்கிறார் கால்டுவெல். இவ்வெட்டு வேற்றுமைகளைத் தவிர

கால்டுவெல் கருத்துப்படி ''எழுவாய், விளி வேற்றுமைகள் சாராத ஒரு வேற்றுமை'' இருக்கிறது. மூன்றாம் வேற்றுமையை இரண்டாகப் பிரிக்கலாம் என்று அவர் கருதுகிறார். ஐந்தாவது வேற்றுமை இன்றியமையாதது அன்று என்று கருதுகிறார். மூன்றாவது, ஏழாவது வேற்றுமைகள் இந்த ஐந்தாம் வேற்றுமையின் வேலையைச் செய்கின்றன. வேற்றுமைகள் பற்றிக் கால்டுவெல் ஆழ்ந்த ஆய்வு செய்துள்ளார் என்பதை இது மெய்ப்பிக்கிறது. வேற்றுமை அமையும் முறையில் புதிய விதிகளும், வகைப்பாடுகளும் செய்தல் இன்றியமையாதது.

### பெயரடைகள்

கால்டுவெல் பெயரடைகளை நன்கு ஆராய்ந்தார். தொடர்புடைய மொழிகளுடன் பெயரடைகளை அமைப்பது பற்றிய முறையைப் பகுத்தாய்ந்தார். தமிழில் பெயரடை அமைப்பது பற்றி ஒரு உறுதியான முடிவுக்கு வந்தார். தொடக்ககாலத் தமிழ் இலக்கண ஆசிரியர்கள் பெயரடைகளைச் சொல் வகையாகக் குறிக்கவில்லை. வெளிநாட்டு அறிஞர்கள் அவர்களுடைய மொழிகளில் பெயரடைகள் இருப்பதைக் கண்டு அந்த அடிப்படைகளில் தமிழில் பெயரடையாக வழங்கும் சொற்களையெல்லாம் பெயரடைகள் என்று தனியே ஒரு சொல் வகையை உருவாக்கினார். சொல்லை உருவாக்கும் உருப்புகள் தெளிவாகத் தரப்பட்டன. பெயரடைகளை எவ்வாறு உருவாக்குவது என்ற வழிமுறைகள் வெளிநாட்டு மாணவனுக்கு உதவியாகத் தரப்பட்டன. இத்தகைய வழிமுறை தமிழ் இலக்கண ஆசிரியர்களால் தெளிவாகத் தரப்படவில்லை. எனவே வெளிநாட்டு அறிஞரின் நூல் தமிழ் நாட்டு இலக்கண ஆசிரியர்களுக்குக் கூட உதவியாக அமைந்தது. இது தமிழுக்கு ஒரு கொடையாகக் கருதத் தக்கது. சிறப்பாக இலக்கணத்திற்குப் பெருங்கொடையாகும்.

### எண்ணுப் பெயர்கள்

தமிழிலுள்ள எண்ணுப் பெயர்களைக் கால்டுவெல் ஆய்வுக்கு எடுத்துக்கொண்டு அவற்றின் வேர்ச் சொற்களை அறிய முயன்றார். இவ்வாய்வு செய்கிற வகையில் தமிழ் எண்ணுப் பெயர்களைத் தமிழோடு தொடர்புடைய பிற மொழிகளிலுள்ள எண்ணுப் பெயர்களுடன் ஒப்பிட்டும், வேறுபாடு கண்டும் இம்மொழிகளில் எவ்வாறு பல பழைய வடிவங்கள் காப்பாற்றப்பட்டு வருகின்றன என்றும் காட்டுகிறார். மேலும் ''அத்தகைய கூட்டுச் சொற்களில் எண்ணுப் பெயரடைகள் எவ்வாறு எண்ணுப் பெயர்களை மிகச் சுருக்கமாகவும், தூய பழைய வடிவத்திலும் வெளிப்படுத்துகின்றன'' என்பதைக் காண்கின்றோம். குறுகிய, எளிய பெயரடைகளுடன் ஒன்றன்பால் விகுதி உருப்புக்களையும் இன்னோசைக் கூறுகளை அல்லது வேர்ச் சொல்லில் உள்ள உயிரெழுத்தை

நீட்டுவதாலும் பல்வேறு பெயர்ச் சொற்கள் எவ்வாறு உருவாக்கப்படுகின்றன என்று அவர் காட்டியுள்ளார்.

மறுபெயர்கள் அல்லது மூவிடப் பெயர்கள்: மறுபெயர்களை ஆய்வுக்கு எடுத்துக் கொண்ட பொழுது கால்டுவெல் பல்வேறு வகைப்பட்ட இடப்பெயர்களை ஆய்ந்தார். ஒவ்வொரு வகையையும் தனித்தனியே ஆராய்ந்துள்ளார். அவற்றின் மூல வடிவத்தைக் கண்டறிய அவற்றைத் தொடர்புடைய மொழிகளில் உள்ள இடப்பெயர்களுடன் ஒப்பாய்வு செய்தார். ஒவ்வொரு மூலக்கூறை (வேர்ச்சொல்லை) உலகத்திலுள்ள முக்கியமான மொழிகளுடன் எல்லாம் ஒப்பாய்வு செய்கிறார். மூவிடப் பெயர்களின் வரலாற்றை முதன் முதலாகக் கண்டறிந்ததன் மூலம் தமிழுக்குச் சிறப்பாகவும் மொழிக்குப் பொதுவாகவும் அவர் நற்பணி செய்துள்ளார். தன்மை இடப்பெயர், முன்னிலை இடப்பெயர், சுட்டு வினாப் பெயர்கள், இணைக்கும் மாற்றுப் பெயர்கள் என வகைப்படுத்தப்பட்டுள்ளன.

**வினைச் சொற்கள்**

வினைச் சொற்கள் உருவாகும் கட்டமைப்பை அலசும்போது தமிழ் வினைகளின் தனி இயல்புகளை டாக்டர் கால்டுவெல் எடுத்து மொழிகின்றார். தமிழ் வினைகளின் கட்டமைப்பு, வளர்ச்சி எழுதும் நிலை கண்டுபிடிக்கப்பட்ட தொடக்கக் காலத்திலேயே கவனத்தை ஈர்த்துள்ளது. அவ்வினைகள் மிக எளிமையாகவும், தெளிவாகவும் அமைந்துள்ளபாங்கு அவரைத் தமிழ் இலக்கிய மொழிப் பண்பாட்டை மிக்க தொன்மை வாய்ந்தது என எடுத்துக் கூறச் செய்துள்ளது.

1. தன்வினை, பிறவினை 2. ஏவல் வகைகள் 3. செயப்பாட்டு வினை 4. எதிர்மறை வினை 5. குறிப்பு வினை 6. காலங்கள் 7. நிகழ்காலம் 8. இறந்த காலம் 9. எதிர்காலம் 10. தழுவியற் சொல் (பெயரெச்சம்) 11. கட்டுப்பாட்டு நிலைப்பாங்கு 12. வினைச் சொல்லின் பாங்குகள் 13. ஏவல் வினைப்பாங்கு 14. செய என் எச்சப்பாங்கு 15. வேரில் அல்லது வினையடியில் முளைத்தப் பெயர்கள் 16. வினையடிப் பெயர்கள் 17. செயற்படு வினைப் பெயர்கள்.

**அருஞ்சொல் விளக்கம் காட்டும் மொழி இன உறவுகள்**

திராவிட மொழிகளைத் தனிக் குழுவாக்கி ஆய்வு செய்த முதன்மையானவருள் ஒருவரான கால்டுவெல் அந்தக் குழுவில் தமிழ் மொழிதான் தமக்கை என வெளிப்பட எடுத்து மொழிகிறார். இந்தத் திராவிட இனமொழிகளைப் பண்பட்டவை என்றும் பண்படாதவை என்றும் இரண்டாகப் பிரித்துப் பேசுகிறார். அவற்றுள் தமிழ் மொழி மிகத் தொன்மையானது மட்டுமின்றி மிகவும் பண்படுத்தப்பட்ட மொழியாகவும்

விளங்கி வந்துள்ளது என்பது அவரது கணிப்பாம். அடிக்கடி பலமுறை மலையாள மொழி, தமிழ் மொழியின் மகளாகக் கருதத்தக்கது எனப் பேசுகிறார். தமிழ் மொழி வடமொழியிலிருந்து வேறுபட்டது என்பதைக் கொஞ்சம் கொஞ்சமாக ஆய்ந்து அலசிய முதன்மையானவர்களுள் ஒருவராய் நின்றார் கால்டுவெல்.

டாக்டர் கால்டுவெல் பாதிரியார் ஆழ்ந்த, விசாலமான அறிவுடையவர். இவர் எழுதிய திராவிட மொழிகளின் ஒப்பிலக்கணம் என்ற பெரிய நூல் இன்றளவும் விலைமதிப்புள்ளதாக உள்ளது. இவர் ஒரு பன்மொழி அறிஞர். அவருக்கு விருப்பமான சமயப்பணியை ஆற்றியதோடல்லாமல் இலக்கிய ஆர்வமிக்க இவர் பல நூல்களை எழுதியுள்ளார். தமிழ் மொழி வரலாற்றில் அன்னாரது பெயர் என்றென்றும் நிலைத்து நிற்கும் என்பதில் எள்ளளவும் ஐயமில்லை.

## அருட்திரு திரிங்கால் அருளப்பர், சே.ச.
## (Jean Baptiste Trincal S.J.) 1815-1892

1815ஆம் ஆண்டு செப்டம்பர்த் திங்கள் 8 ஆம் நாள் பிரான்ஸ் நாட்டிலுள்ள கோத்துவார் மாநிலத்திலுள்ள சிறிய நகரான சோவ்கலில் இறைப்பற்று மிக்க திரிங்கால் தம்பதியருக்கு ஒரு திருமகன் பிறந்தான். அக்குழந்தைக்கு திருமுழுக்கு அருளப்பர் திரிங்கால் (Jean Baptiste Trincal) என்ற திருப்பெயர் சூட்டி ஆலயத்தில் திருமுழுக்காட்டினர். திரிங்கால் அடிகளுடன் இரண்டு சகோதரர்களும், ஒரு சகோதரியும் பிறந்தனர். மூத்த சகோதரர் மறைமாவட்டக் குருவாகிப் பல பெரிய பதவிகளில் பணிபுரிந்து ஓய்வு பெற்றவர். அடிகளின் இளைய சகோதரர் அவரைப் பின்பற்றி இயேசு சபையில் துணைச் சகோதரராகச் சேர்ந்து பணியாற்றினார். இவருடைய சகோதரி கன்னியர் மடத்தில் சேர்ந்து பணியாற்றினார்.

இறைப்பற்று மிக்க திரிங்கால் 'புய்' (Le Puys) என்னும் நகரத்திற்கு அருகில் அமைந்த ஜாத்திரஸ் என்னும் ஊரில் குருத்துவப்பள்ளியில் சேர்ந்து அடிப்படைக் கல்வியைச் சிறந்த முறையில் கற்றுத் தேர்ந்தார். அறிவும் ஆற்றலும் மிக்க முதல் மாணவராகப் பள்ளியில் திகழ்ந்தார். இலக்கண, இலக்கியங்களை ஆர்வத்தோடு கற்றார். இலத்தீன், கிரேக்கம், எபிரேயம், இத்தாலி, பிரெஞ்சு ஆகிய பன்மொழிகளையும் இளமையிலேயே கற்றறிந்தார். இப்பயிற்சி முடிந்ததும் பெரிய குருத்துவப் பயிற்சிக் கல்லூரியில் சேர்ந்து மறை மாவட்டக் குருவாவதற்குத் தத்துவயியல் முடித்துவிட்டு இறையியல் கற்றுக் கொண்டிருந்தபோது துறவறம் பூண்டு மறைப் பணியாளராக விரும்பினார்.

1840ஆம் ஆண்டு செப்டம்பர் மாதம் 17ஆம் தேதி இயேசு சபையில் சேர்ந்தார். இவர் இரண்டாண்டுகள் நவசந்நியாசிப் பயிற்சியை

முடித்தார். இப்பயிற்சியின்போது புனிதர்களின் வரலாறுகளைப் பயின்றார். இந்திய மண்ணின் மறைப்போதகரான புனித பிரான்சிஸ் சேவியர், வேதசாட்சியான புனிதர் அருளானந்தர், தமிழ் மொழியில் புலமை பெற்றுத் தமிழ் இலக்கிய உலகிற்கு உரைநடையைப் புகுத்தி திருமறைக்கு அருந்தொண்டாற்றிய தந்தை இராபர்ட் தெ நொபிலி, அவரையடுத்துத் தமிழுக்கு என்றும் வாடாத புகழ் மாலையாம் தேம்பாவணியைப் படைத்து மறைத் தொண்டாற்றிய வீரமாமுனிவர் ஆகியோரின் வாழ்க்கை வரலாற்றை மிகுந்த ஆர்வத்தோடு படித்தார். அடிகள் தம் மூத்த சகோதர மறைப்போதகர்களைப்போல் இந்தியா சென்று திருமறைப் பணியாற்ற தமது விருப்பத்தைச் சபைத் தலைவரிடம் தெரிவித்தார். அவரது விருப்பத்திற்கிணங்கச் சபையின் அதிபர் திரிங்கார் அடிகளை இந்தியாவுக்கு மறைப்பணியாற்ற அனுப்ப எண்ணி ஆங்கில மொழி கற்க இங்கிலாந்துக்கு அனுப்பினார். ஆங்கில மொழியையும், இறையியலையும் இரண்டாண்டுகள் கற்றுத் தேர்ந்தார். ஆங்கில மொழியைச் சிறந்த முறையில் பேசவும் எழுதவும் கற்றார். இரண்டாம் ஆண்டின் இறுதியில் திரிங்கார் அடிகள் குருத்துவ நிலைக்கு உயர்த்தப்பட்டார்.

1844ஆம் ஆண்டு மார்ச் திங்கள் 1ஆம் நாள் நான்கு குருக்களோடும், இரண்டு துணைச் சகோதரர்களோடும் திருவருள் திரிங்கால் அருளப்பர் தமிழகத்திலுள்ள மதுரை மறைப் போதக மாநிலத்தை நோக்கிப் புறப்பட வேண்டுமென்று உறுதியாயிற்று. அப்போதைய இயேசுசபைத் தலைவரான உருத்தான் அடிகள் ஏழு பேர் கொண்ட இக்குழுவுக்கு ஆசியருளி வழியனுப்பி வைத்தார். மார்ச் மாதம் முதல் தேதி மார்சேய்ஸ் துறைமுகத்தைவிட்டுக் ‘கான்கிரேடு’ என்னும் கப்பல் இந்தியாவை நோக்கிப் புறப்பட்டது.

ஏறக்குறைய ஒன்றரை மாத நெடுந்தூரக் கப்பல் பயணத்திற்குப்பின் ஏப்ரல் மாதம் 14ஆம் தேதி ஞாயிறு அன்று இம்மறைப்போதகர்கள் சென்னைத் துறைமுகத்தில் காலடி எடுத்து வைத்தனர். சென்னை மயிலாப்பூர் பேராயர் இல்லத்தில் ஓரிரு நாள்கள் தங்கி ஓய்வு எடுத்து விட்டு, ஆயரவர்களின் ஆசி பெற்றுச் சென்னையிலிருந்து பாண்டிச்சேரிக்கு மாட்டு வண்டி மூலம் வழியனுப்பி வைக்கப்பட்டனர். இரண்டு நாட்களில் அவர்கள் பாண்டிச்சேரிக்கு வந்து சேர்ந்தனர். மறைமாநிலத் தலைவரான மறைத்திரு ஜோசப் பெர்ராண்ட், அவர்களை அன்புடன் வரவேற்றார். மேதகு ஆயர் பொன்னாடு இல்லத்தில் பத்து நாள்கள் தங்கிவிட்டு அவர்கள் காரைக்காலை நோக்கித் தங்கள் பயணத்தைத் தொடங்கினர்.

இயேசு சபையினர் ஓர் உயர்நிலைப் பள்ளியோ, கல்லூரியோ தொடங்க ஆயர் பொன்னாடுவிடமிருந்து உத்தரவு பெற்றனர்.

நாகபட்டினம் வந்து சேர்ந்த இம்மறைப்போதகர்கள் தமிழும், ஆங்கிலமும் கற்கத் தொடங்கினர். தமிழ் வித்துவான் ஒருவர் அமர்த்தப்பட்டு இக்குழுவினர் தமிழ் கற்றனர். திரிங்கால் அடிகளும் தமிழை நன்கு கற்றுத் தேர்ந்தார். அச்சமயம் வீரமாமுனிவரின் படைப்புகள் அடிகளை மிகவும் கவர்ந்தன. தேம்பாவணி, வேதியர் ஒழுக்கம், ஞான உணர்த்துதல் போன்றவை அடிகளின் ஆழ்மனத்தில் பதிந்த அறநூல்களாகும். தேம்பாவணியிலிருந்து சில அடிகளை மாணவர்களைப் பாடச் சொல்வதும், அதற்கான விரிவுரைகளை வித்துவான் மூலம் கேட்டறிவதும் அவரது தினசரி வாழ்க்கையின் பகுதியாகிவிட்டன. உணவு உண்ணும் வேளைகளில் தமிழில் புனிதர்கள் வரலாறு போன்ற நூல்களை வாசிக்கச் சொல்லி அதைக் கேட்கத் தவறியதில்லை.

சிறுவர் சிறுமியருக்கு ஞான உபதேசம் கற்றுக் கொடுப்பதில் திரிங்கால் அடிகளார் அளவில்லா ஆனந்தம் கொண்டார். அவர் குழந்தைகளைக் கூடத் தன் பக்கம் ஈர்த்து, மறை போதிக்கும் அளவிற்குப் பாண்டித்தியம் பெற்றிருந்தார். அவர் மக்களுக்கு உணர்ச்சிப் பெருக்கோடு நெடுநேரம் மறை உண்மைகளைப் போதிக்கும் வேளைகளில் அவரது வாயிலிருந்து சில வேளைகளில் இரத்தம் வருவதுண்டு என்று ஓர் கடிதத்தில் குறிப்பிட்டுள்ளார். மேலும் எவ்வளவு தூரம் தமிழில் ஆர்வம் கொண்டவராயிருந்தார் என்றால் அவர் தம் மூத்த சகோதரருக்கு எழுதிய கடிதத்தில், ''என் தாய் மொழியான பிரெஞ்சு மொழியை எவ்வளவு சரளமாகப் பேசுவேனோ அதே சரளத்தோடு தமிழில் எனக்குப் பேச முடியும்'' என்று பெருமிதத்தோடு கூறுகின்றார்.

அடிகளார் தொடங்கிய பள்ளிகளில் தமிழைக் கட்டாயப் பாடமாகக் கற்பிக்க வழி செய்து, அதற்கெனத் தமிழ் வித்துவான்களை வேலைக்கு அமர்த்தினார். தாம் மொழிபெயர்ப்புச் செய்யும்போது ஏற்படும் ஐயங்களை அவ்வித்துவான்களின் மூலம் தீர்த்துக் கொண்டார். அவருக்குத் திருமறையைப் போதித்து மக்களைக் கிறித்தவ மதத்திற்கு மனமாற்றம் செய்வதற்கே போதிய நேரம் கிடைக்கப் பெறாத நிலையிலும் அடிகள் இரவு நேரங்களிலும், ஓய்வு எடுக்கக் கிடைக்கும் அந்தக் குறுகிய இடைவேளைகளிலும் தமிழில் பல நூல்கள் எழுதியும் மொழிபெயர்ப்புச் செய்தும் தமிழ் இலக்கியத்திற்குப் பெரும் சேவை புரிந்துள்ளார்.

திரிங்கால் அடிகள் தமிழுக்கு ஆற்றிய அருந்தொண்டு தமிழ் மக்களிடையே அறிமுகம் இல்லாதிருந்தது. அவர் நான்கு முக்கிய நூல்களைத் தமிழில் எழுதியும் மொழிபெயர்த்தும் உள்ளார். அவை:

1. ''சத்திய வேத சரித்திர சங்க்ஷேபம்.'' இந்நூல் உலகப் படைப்பிலிருந்து இன்றைய நாள் வரைக்குமான உண்மையான வரலாற்றுச் சுருக்கம், 1877.

2. "இயேசு கிறிஸ்துநாதருடைய பரிசுத்த சுவிஷேசப் பொருத்தம்." இது நான்கு நற்செய்திகளின் ஒருங்கமைவாகும், 1879.

3. "இயேசுக் கிறிஸ்துநாதருடைய பரிசுத்த புதிய ஏற்பாடு." இப்புத்தகம் புதிய ஏற்பாட்டின் முழுத் தமிழாக்கமாகும், 1891.

4. "ஞான உரைக்கல்." இது இந்தியாவில் உள்ள மறுநெறிக் கிறித்துவப் பிரிவுகளின் மறைநூல்களைக் கொண்டு அவர்களது தப்பான போதனைகளைச் சுட்டிக்காட்ட எழுதப்பட்டதாகும், 1894.

இவைகளைத் தவிரப் பன்மொழி வித்தகராம் திரிங்கால் அடிகள் தமிழிலிருந்து இலத்தீனுக்கும், பிரெஞ்சு மொழியிலிருந்து தமிழுக்கும் மொழிபெயர்ப்புச் செய்து அருந்தொண்டாற்றி யுள்ளார். அவரது படைப்புகளில் ஒன்றிரண்டு அச்சில் ஏறவில்லை.

தவத்திரு திரிங்கால் அருளப்பர் ஏதோ பொழுது போக்கிற்காகத் தமிழ், குறிப்பாகக் கிறித்தவத் தமிழ் இலக்கியத்திற்குச் சில படைப்புகளை அளிப்போம் என எழுதவில்லை. அவர் தமக்கு முன்பு தமது சபையைச் சார்ந்த மறைப்போதகர்கள் தமிழ் மாநிலத்தில் மறை போதித்துத் தொண்டாற்றிய வேளையில் எழுதிய மறைநூல்கள் இதுநாள் வரையிலும் கிறித்தவ மக்களின் பற்றுறுதியையும், இறை வேண்டல் செய்யும் பழக்கத்தையும் வளர்க்கப் பெரிதும் உதவி புரிந்தன என்பதையும் இயேசு சபை முற்றிலும் தடை செய்யப்பட்ட நாள்களில் அவர்கள் எழுதி வைத்துச் சென்ற மறைநூல்கள் மிகவும் பயனுள்ளதாக இருந்தன என்பதையும் முற்றிலும் நன்கு உணர்ந்திருந்தார்.

பத்தொன்பதாம் நூற்றாண்டில் ஏற்பட்டப் புதிய சூழ்நிலைகள் புதிய தலைமுறைகளின் பற்றுறுதியைப் பாதுகாக்கக் கூடியயனவாக அமையவில்லை. அடிகளின் நூல்களிலுள்ள தலையங்கமே அவை எந்த நோக்கத்திற்காகப் படைக்கப் பெற்றன என்பதை நமக்குத் தெள்ளத் தெளிவாக உணர்த்துகின்றன. தமது காலத்துக் கிறித்துவர்கள் ஒவ்வொருவர் கையிலும் அவரது நூல் தவழ வேண்டும், அவர்களது பற்றுறுதிக்குப் பங்கம் விளைவிக்கும் வகையில் அதிவேகமாகப் பரவி வரும் எதிர்ப்புச் சக்திகளிலிருந்தும், தப்பான போதனைகளிலிருந்தும் தங்களைக் காத்துக்கொள்ளும் ஓர் பாதுகாப்புக் கருவியாகத் தம் நூல்கள் திகழ வேண்டும் என்பதே அடிகளாரின் முக்கிய நோக்கமும் அவாவும் ஆகும். ஆகவே மறையைப் போதிப்பதோடல்லாது மறையின் கொள்கைகளைத் தெளிவுற விளக்கும் நூல்களை எழுதும் பணியில் அவர் தம்மைத்தாமே முழு மனத்தோடு அர்ப்பணித்து அயரா உழைப்புடன் செயலாற்றினார்.

"சத்திய வேத சரித்திர சங்க்ஷேபம்." (The summary of the history of the true Religion) புது மதுரை மறை மாநிலத்தில் மறை போதிக்க வந்த

குருக்கள் முதன் முதலில் மூன்று முக்கியமான தடைகளை எதிர்த்துப் போராட வேண்டியிருந்தது. மறுநெறிக் கிறித்தவரும், ஆங்கிலேய அரசாங்கமும் அதற்கடியில் செயல்புரிந்த உள்ளாட்சியாளர்களும் பெரும் இடையூராக இருந்தனர். மறைப்போதகர்கள் தமிழகத்திற்கு வந்தபோது கோவன் குருக்களிடையே மறை போதிக்கும் ஆர்வமும், ஆன்மீகத்தாகமும் மிகவும் குன்றியிருந்ததால் எங்கும் ஒரே குழப்பமும், ஒழுங்கற்ற நிலையும் நிலவிருந்தன. கத்தோலிக்கத் திருச்சபையில் கண்கூடாகக் காணப்படும் கிறிஸ்துவின் பிரதிநிதியான போப்பாண்டவருக்கு எதிராகவும், போர்ச்சுக்கல் அரசருக்கு மிக விசுவாசமாகவும் செயல் புரிந்த 'கட்டனார்' (Goan Priests) எனப் பெயர் பெற்ற கோவன் குருக்களை முழு மூச்சோடு எதிர்த்துப் போராட வேண்டிய கட்டாயச் சூழ்நிலை ஏற்பட்டது. மேலும் இக்குருக்கள் இறையியல் ஞானமற்றவர்களாயிருந்தனர். இப்படிப்பட்ட இக்கட்டான சூழ்நிலைகளே திரிங்கால் அடிகளைச் "சத்திய வேத சரித்திர சங்க்ஷேபம்" என்ற நூலை எழுதத் தூண்டியிருக்கும் என்று நம்புவதற்கு இடம் இருக்கிறது. இந்நூல் அக்காலத்தில் மறைப்போதகர்களுக்கு மிகவும் உதவியாக இருந்தது. ஒவ்வொரு கத்தோலிக்கக் கிறிஸ்தவர் கையிலும் இந்நூல் இருக்க வேண்டும் என்று தந்தை திரிங்கால் விரும்பினார்.

இந்தச் "சத்திய வேத சரித்திர சங்க்ஷேபம்" என்ற நூல் இறைவன் மனுக்குலத்தோருக்கு அருளிய உண்மையான மறையின் சுருக்கமாகும். இறைவன் மனித மீட்பிற்காக, உலகம் உண்டான நாள் முதல் இன்றைய நாள் வரைக்கும் சத்திய வேதத்தை நடப்பித்துக் கொண்டு வருகிற அற்புத வல்லப மகிமையைப் பற்றியும், திருவேதத்தைக் கடைப்பிடித்து வந்த எண்ணிக்கையற்ற புண்ணியவான்கள் செய்த மகத்தான வேலைகளைப் பற்றியும் இந்நூல் கூறுகின்றது. இந்தச் 'சங்க்ஷேபம்' பழைய ஏற்பாட்டில் உலகம் உண்டான நாள் முதல் கர்த்தர் உலகில் பிறந்த நாள் வரைக்கும் இடையிலான நாலாயிரத்து நான்கு வருடங்களின் சரித்திரம் உள்ளது. அதில் உலகப் படைப்பு, ஆதிமனிதன் உண்டாக்கப்பட்ட விதம், அவனோடு அவன் சந்ததியார் நடந்து கொண்ட விதம், பிதாப்பிதாக்களோடு இறைவன் செய்த உடன்படிக்கை, தீர்க்கதரிசிகளின் வல்லமை, மனுக்குலத்தை மீட்க வந்த இயேசுவின் பிறப்பைக் குறித்த செய்திகள் ஆகியவை உள்ளன.

இரண்டாம் காண்டமான புதிய ஏற்பாடு மனுக்குலத்தை மீட்க மானிடராய்ப் பிறந்து, இறந்து உயிர்தெழுந்தருளிய இயேசு பிரானின் வாழ்க்கை வரலாறு, மாதிரிகை, மறைபோதனைகளையும், அவருடைய சீடர்கள் வேதத்தைப் போதித்துச் சத்திய திருச்சபையை எல்லா தேசங்களிலும் உருவாக்கித் தழைக்கச் செய்த மேன்மையைப்

பற்றியதாகும். இது கர்த்தர் பிறப்பு முதல் இராயப்பர் இறப்பு வரை உள்ள அறுபத்தேழு ஆண்டு சரித்திரமாகும்.

திருச்சபைச் சரித்திரமாகிய மூன்றாம் காண்டத்தில், திருச்சபை மென்மேலும் பெருகி இந்நாள் வரைக்கும் இத்திருச்சபையில் நடந்து வருகின்ற வியக்கத்தக்க செயல்களைப் பற்றியும், அத்தோடு கூடிய புனிதத்தன்மையைப் பற்றியும் விவரித்துள்ளார். இராயப்பர் மரணம் முதல் இந்நாள் வரை ஆயிரத்துத் தொள்ளாயிரத்துப் பத்து ஆண்டுகளின் வரலாற்றுச் சுருக்கமே மூன்றாம் காண்டம்.

இந்நூலில் பக்க எண்கள் தமிழ் எழுத்துக்களில் எழுதப்பட்டுள்ளன. பொருள் அட்டவணை, பாடம், கர்த்தர் அவதாரத்திற்கு முன், உலகமுண்டான பின், பொருள், பக்கம் என்று மிகவும் விரிவான முறையில் ஐந்து பகுதிகளாகப் பிரிக்கப் பெற்றுள்ளது. மேலும் 'சத்திய வேத சங்க்ஷேபம்' நூலில் கூறப்படும் மனிதர்களையும், அவர்கள் காலத்தில் நடந்த முக்கிய நிகழ்ச்சிகளையும் காட்டுகின்ற கால அட்டவணை முதல் காண்டத்தில் பிதா பிதாக்களின் தலைமுறைகள், உலகம் உண்டாகிய பின், கர்த்தர் அவதாரத்திற்கு முன், பிரதான வர்த்தமானங்கள் என்று நான்கு பிரிவுகளாகவும், இரண்டாவது காண்டத்தில் கர்த்தர் அவதாரத்திற்குப்பின் பிரதான வர்த்தமானங்கள் என இரண்டு பகுதிகளாகவும், மூன்றாம் காண்டத்தில் புனித பாப்புமார்கள் பெயர்கள் கர்த்தர் அவதாரத்திற்குப் பின் திருச்சபை சரித்திரத்திற்கு அடுத்த பிரதான வர்த்தமானங்கள் என மூன்று பகுதிகளாகவும் பிரிக்கப்பட்டுள்ளன. இந்நூல் மொத்தம் 429 பக்கங்களைக் கொண்டது. இது 1877இல் சென்னையில் அச்சடிக்கப் பெற்றது.

"இயேசுக் கிறிஸ்துநாதருடைய பரிசுத்த சுவிசேஷப் பொருத்தம்" மறைத்திரு திரிங்கால் அருளப்பரின் இரண்டாவது படைப்பு "இயேசுக் கிறிஸ்துநாதருடைய பரிசுத்த சுவிசேஷப் பொருத்தம்" (Concordance of four Gospels) என்னும் இந்நூலின் பொதுப் பாயிரத்தில் திரிங்கால் அடிகள் நற்செய்திகள், எதைப்பற்றி, யாரால் எழுதப்பட்டன என்றும், அது கிறிஸ்துவின் முக்கியச் சரித்திரச் சுருக்கங்களைக் கொண்டுள்ளது என்றும் உரைக்கின்றார். மேலும் அடிகள் கூறுகின்றார் "சரித்திரச் சுருக்கங்களை எழுதுகிற யாவரும் சில பிரதான காரியங்களை மட்டும் எடுத்துக்கொண்டு மற்றவைகளை எழுதாமல் விட்டு விடுவதுபோல இந்தச் சுவிசேஷங்களின் சுருக்கங்களை எழுதினவர்களும் அவ்வாறே செய்துள்ளார்கள். ஆதலால் ஒரு சுவிசேஷத்தில் எழுதப்பட்ட சம்பவங்கள் மற்ற சுவிசேஷங்களில் எழுதப்படாமலும், ஒன்றில் எழுதியிராத சில சம்பவங்கள் மற்றவைகளில் எழுதப்பட்டிருப்பதையும் நாம் காண்கின்றோம். ஆகையால் இந்நான்கு சுவிசேஷங்களிலும்

எழுதப்பட்ட வர்த்தமானங்களையெல்லாம் ஒரே சரித்திர வர்த்தமானதாகவும், ஒரே தொடர்புள்ள பொருத்தமான வர்த்தமானதாகவும் இருக்கும்படிக்கு அநேக மறை வல்லுநர்கள் முயற்சி செய்திருக்கின்றார்கள். அவர்களில் ஏறக்குறைய நூறு ஆண்டுகளுக்கு முன் வாழ்ந்த 'திளினி' (Dilini) என்ற இயேசு சபைக் குரு இலத்தீன் மொழியிலும், பிரெஞ்சு மொழியிலும் எழுதிய சுவிசேஷப் பொருத்தம் முதன்மையானதாகப் புகழப்படுகிற படியால் அதையே நாம் மூலமாக எடுத்துக் கொண்டு இந்நூலைத் தமிழ் மொழியில் மொழியாக்கம் செய்தது தவிர, அதை வாசிக்கின்றவர்களுக்கு அர்த்தம் நன்றாக விளங்கும்படிக்கு உள் வியாக்கியானக் குறிப்புகளையும் கூட்டி வைத்திருக்கின்றோம்'' (ப.2)

திரிங்கால் அடிகள் மொழியாக்கம் செய்த இந்நூல் மறை போதிக்கும் குருக்களுக்கும், அவர்களுக்குத் துணை புரிய வந்த வேதியர்களுக்கும் (Catechists) மிகவும் உதவியாய் இருந்தது. மேலும் நம் நாட்டுக் கிறிஸ்துவர்களால் விருப்பத்தோடு வாசிக்கப்பட்டு அவர்களுடைய ஞானக் காரியங்களுக்கு மிகவும் பயனுள்ளதாக இருந்தது இந்நூல். இந்நூலை வாசிப்பவர்கள் தாங்கள் விரும்பும் பொருளைப் பற்றிய பகுதியை எளிதில் தெரிந்தெடுக்கும் வகையில் இந்நூலில் அதிகார வரிசையும், அட்சர வரிசையும், அந்தந்த சுவிசேஷங்களின் தனித்தனியான அதிகார வசனங்களின் வரிசை முறையில் அமைந்துள்ளது. அத்தோடு திருச்சபையில் ஆண்டுதோறும் கொண்டாடப்படும் முக்கியமான திருவிழா நாள்களில் திருப்பலியில் வாசித்துவரும் நற்செய்திக் குறிப்பும் காணப்படுகிறது.

இந்த ஒருங்கமைவு நூல் புதிய ஏற்பாட்டை ஆழ்ந்த முறையில் ஒப்பிட்டுப் படிக்க விரும்புபவர்களுக்கு ஓர் சிறந்த கருவியாய்ப் பயன்படுகிறது. ஒவ்வொரு நற்செய்தியாளரின் சிறப்பு அம்சங்களை மேலோட்டமாகக் காண இந்த ஒருங்கமைவு உதவி செய்கிறது. இன்னும் இந்நூல் நான்கு நற்செய்திகளிலும் சிறந்த புலமை பெற வழி செய்கிறது.

இந்த ஒருங்கமைவு நூல் 1877ஆம் ஆண்டு ஜூன் மாதம் மறைநூல் வல்லுநர்களால் பரிசோதிக்கப்பட்டு 1879இல் 359 பக்கங்களைக் கொண்ட நூலாக இந்திய அச்சகத்தில் பதிப்பிக்கப் பெற்றது.

நான்கு நற்செய்திகளின் ஒருங்கமைவு விவிலியத்தில் மிகத் தேர்ச்சி பெற்ற பல்வேறு நிபுணர்களால் ஆங்கிலத்தில் எழுதப் பட்டிருந்த போதிலும் நற்செய்திகளின் ஒருங்கமைவை முதன்முதலில் தமிழ் மொழியில் எழுதிய பெருமை திரிங்கால் அருளப்பர் அடிகளைச் சாரும். அதன்பின் ஏறத்தாழ ஒரு நூற்றாண்டுக்குப்பின் திருச்சிராப்பள்ளி நகரில்

உள்ள தூய சின்னப்பர் குருத்துவக் கல்லூரியில் பணிபுரிந்த தவத்திரு எரோணிமுஸ் அடிகளால் நான்கு நற்செய்திகளின் ஒருங்கமைவு எழுதப்பட்டு 1984ஆம் ஆண்டு அருள்வாக்கு மன்றத்தாரால் அச்சிடப்பட்டு வெளிவந்துள்ளது குறிப்பிடத்தக்கதாகும்.

**''ஞான உரைகல்''**

''ஞான உரைகல்'' (Touch Stone) என்னும் தலைப்புக் கொண்ட இந்நூல் திரிங்கால் அடிகளின் மூன்றாவது படைப்பாகும். இந்நூல் மறுநெறிக் கிறித்தவ சமயத்தைச் சார்ந்த பல்வேறு பிரிவினர் பயன்படுத்திய புதிய ஏற்பாடுகளில் உள்ள தவறான கொள்கைகளைச் சுட்டிக்காட்டி உண்மையான கொள்கைகள் எவை என்று கத்தோலிக்க நோக்கில் எடுத்து இயம்புகின்றது. திருவருள் திரிங்கால் அடிகள் இந்நூலை எழுத முக்கியமான காரணம் என்னவென்பதை 1880ஆம் ஆண்டு நவம்பர்த் திங்கள் 28ஆம் நாள் புதுப்பட்டி என்னும் கிராமத்திலிருந்து மதுரையில் தமக்கு அதிபராக இருந்த மறைத்திரு பிளாங் (Fr.Blanc) அடிகளுக்கு எழுதிய கடிதத்திலிருந்து தெரிந்து கொள்ளலாம். அக்கடிதத்தில் திரிங்கால் அடிகள் பின்வருமாறு எழுதியுள்ளார்.

''சில ஆண்டுகளுக்கு முன் சென்னை மாநிலத்தில் உள்ள மறுநெறிக் கிறித்துவ சமயப் பாதிரிமார்கள் அனைவருக்கும் ஓர் மாநாடு கூட்டப்பட்டது. அம்மாநாட்டில் உரோமன் கத்தோலிக்க மதத்திற்கு எதிராகத் துண்டுப் பிரசுரம் ஒன்று எழுதுபவர்களுக்கு ரூபாய் நூறு வழங்கப்போவதாக அறிவிக்கப்பட்டது. அநேக போதகர்கள் இம்முயற்சியில் ஈடுபட்டனர். முடிவில் மதுரையைச் சேர்ந்த போதகர் ஒருவருக்கு அந்தப் பரிசுப்பணம் ரூபாய் நூறு கிடைத்தது. அந்தத் துண்டுப் பிரசுரம் மிகக் குறைந்த விலைக்கு விற்கப்பட்டது. அதன் பிரதி ஒன்று எனக்குக் கிட்டியது. நான் அதை அரை மணி நேரத்தில் வாசித்து முடித்தேன். அதன் தலைப்பு ''ரோமன் கத்தோலிக்க மதத்தை எடைபோடும் தராசு'' என்பதாகும். இதை எழுதிய போதகர் தமக்குத் தமிழிலும், ஆங்கிலத்திலும் கிடைத்த மறுநெறிக் கிறித்தவ சமய நூல்களிலிருந்து அபத்தமானதும் விநோதமானதுமான செய்திகளை அந்தப் பிரசுரத்தில் எழுதியுள்ளார். இந்தத் துண்டுப் பிரசுரத்துக்கு வெகுமதி அளித்ததோடல்லாமல் மாநிலத்திலுள்ள 32 பாதிரியார்களும் இதைப் பிரசுரிக்க அனுமதி கொடுத்து ஆயிரக்கணக்கில் அநேக பிரதிகளை அவர்களது சொந்தச் செலவில் அச்சிட்டு எல்லா இரயில் நிலையங்களிலும் குறைந்த விலைக்கு விற்றனர்.

அவ்வறிக்கையில் ஞானஸ்நானத்தைப் பற்றி (திருமுழுக்கு) அப்போதகர் 'ரோமன் கத்தோலிக்கர்கள் ஞானஸ்நானத்தின் மூலம்

ஜென்மப்பாவமும் (Original sin committed by the first parents) கர்மப் பாவமும் (Individual sins) போக்கப்படுகின்றன என்று நம்புகின்றார்கள். இந்த நம்பிக்கையானது எவ்வளவு மூடத்தடமானது என்றால் இந்துக்கள் தங்கள் பாவங்களைக் கங்கை நீரில் குளித்துப் போக்குவதற்கு ஒப்பாகும்' என்று கூறியுள்ளார்.''

இந்தச் சூழ்நிலையில் கத்தோலிக்க மதக் கொள்கைகளின் உண்மைகளை எடுத்துரைக்கவே மறைத்திரு திரிங்கால் 'ஞான உரைகல்' என்னும் நூலை எழுதினார் எனக் கூறலாம். இந்நுலின் முதல் பதிப்பு சென்னையிலும் (வருடம் குறிப்பிடப்படவில்லை) இரண்டாம் பதிப்பு 1894ஆம் ஆண்டில் திருச்சி புனித வளனார் கல்லூரியிலும் வெளியாயிற்று. இந்நூல் 330 பக்கங்களைக் கொண்டது. இந்நூலின் பொருள் அட்டவணை நூலின் கடைசிப் பகுதியில் 16 பக்கங்களில் கொடுக்கப்பட்டுள்ளது.

அடிகள் தமது 'ஞான உரைகல்' நூலை 'உரைநடைப் பிரபந்தம்' என்றே குறிப்பிடுகின்றார். 'பரீட்சை' என்ற பெயரில் தாம் பரிசோதிப்பதற்கும், தர்க்க முறையில் காரணங்களை விவாதிப்பதற்கும் 15 அத்தியாயங்களாகப் பகுத்துக் கொண்டுள்ளார். மூன்று உட்பிரிவுகளில் முடிவுரை எழுதியுள்ளார். திட்டமிட்ட உரைநடைக் கட்டுரை நூலாக்கத்திற்குச் சான்றாக இவரது ஞான உரைகல் நூல் அமைந்துள்ளது. குறியீடுகள் (Symbols), சிலுவை, வணங்கப்படும் மரியன்னை ஆகியோர் பற்றிய கோட்பாடுகள் (concepts), திருச்சபையின் தலைவர் பற்றிய ஆதாரங்கள், சடங்குகள் (Liturgy), நற்கருணை (Sacrements), திருப்பலி (Holy Mass), பாவ அறிக்கை வெளியிடுதல் (Confession), விண்ணுலக வாசிகள் (Heavenly bodies), சுரூபங்கள் வணக்கம், உத்தரிக்கிற ஆன்மாக்கள், உண்ணா நோன்பு ஆகியன பற்றியும் புலால் உண்ணாத நாள்கள் பற்றியும், புதுமைகள் போன்று பலவற்றை எடுத்துக்காட்டி விமோசனம் பெற விசுவாசம் ஒன்றே போதும் என்றும் நிலை நிறுத்துகிறார்.

### இயேசு கிறிஸ்துநாதருடைய பரிசுத்த புதிய ஏற்பாடு

தமிழ் இலக்கியத்திற்குத் தவத்திரு திரிங்கால் அடிகள் படைத்தளித்தவற்றில் மிக முக்கியமானதும், புகழ் பெற்றதும், நான்காவதுமாகத் திகழ்வது புதிய ஏற்பாட்டின் தமிழாக்கமாகும். இந்த நற்செய்தியின் தமிழாக்கத்தை 1860ஆம் ஆண்டு மதுரையில் மறை பரப்பும் பணியில் இருந்தபொழுது தொடங்கி ஏறத்தாழ 29 ஆண்டுகளாக இப்பணியில் ஈடுபட்டு 1889ஆம் ஆண்டு முடித்தார். இத்தமிழாக்கமானது மறைநூல் வல்லுநர்களால் மிகக் கவனமாகத் திருத்தப்பட்டு இதன் முதல் வெயியீடு 1891இல் வெளிவந்தது. இந்தத் தமிழாக்கத்தின் கைப்பிரதியில்

முதல் பக்கத்தில் அருட்தந்தை திரிங்கால் அடிகள் குறிப்பு எழுதியுள்ளார். இப்பிரதி கொடைக்கானலில் செண்பகனூரில் அமைந்துள்ள திரு. இருதயக் கல்லூரியின் பழஞ்சுவடிக் காப்பகத்தில் (Madurai Jesuit Province Archives) உள்ளது. மேலும் அதில் அவர் ஏனைய மூன்று படைப்புகளுக்கும் தாமே ஆசிரியர் என்று தன் கைப்பட பிரெஞ்சு மொழியில் எழுதியுள்ளதை நாம் வாசிக்கலாம்.

அண்மைக் காலத்தில் அதாவது 1970ஆம் ஆண்டு வரையிலும் திரிங்கால் அடிகள் இலத்தீன் மொழியிலுள்ள "உல்கேட்" (Vulgate) பதிப்பிலிருந்து தமிழாக்கம் செய்த புதிய ஏற்பாடுதான் மக்களின் கைகளில் தவழ்ந்தது. "இயேசு கிறிஸ்துநாதருடைய பரிசுத்த புதிய ஏற்பாடு" கத்தோலிக்க உரோமன் திருச்சபையில் வழங்கிவரும் 'வுல்க்கத்தா' என்னும் இலத்தீன் பிரதியிலிருந்து இயேசு சபையைச் சார்ந்த வேறு சில குருக்களால் ஆராயப்பட்டுப் பார்வையிடப்பட்டது. இதன் நான்காம் பதிப்பு திருச்சிராப்பள்ளி புனித சூசையப்பர் தொழிற்கல்வி அச்சுக்கூடத்தில் 1922ஆம் ஆண்டு பிரசுரிக்கப்பட்டது.

1922ஆம் ஆண்டிற்குப்பின் வெளிவந்த பிரதிகள் பாண்டிச்சேரியில் உள்ள மிஷன் அச்சகத்திலிருந்து வெளிவந்தவைகளாகும். இந்நூலில் திரிங்கால் அடிகளின் சிறு சிறு விரிவுரைகள் அடியில் காணக் கிடக்கின்றன. விரிவுரைகளைத் தவிர்த்து மற்றுமொரு சிறப்பு கிறிஸ்துவின் வாழ்க்கைச் சம்பவங்கள் படங்கள் மூலம் தத்ரூபமாக அச்சடிக்கப்பட்டுள்ளதாகும்.

இன்னும் பல மொழிபெயர்ப்புகளைத் திரிங்கால் அடிகள் செய்து உள்ளார் என்பதை அவர் மிக்கேல் சந்நியாசியைப்பற்றி எழுதிய கடிதத்தின் மூலம் தெரிந்து கொள்கிறோம். ஞாயிற்றுக் கிழமை பூசை செபங்கள் அடங்கிய (Missal) புத்தகத்தைத் தமிழாக்கம் செய்துள்ளார். மிக்கேல் சந்நியாசி வேதியராகவும், குருக்களுக்கு உதவியாளராகவும் பணிபுரிந்தார். தந்தை திரிங்கால் 1884ஆம் ஆண்டு தமக்கு அதிபராக இருந்த மறைத்திரு பிளாங் என்பவருக்கு மேற்கூறிய மிக்கேல் சந்நியாசியின் வாழ்க்கையைப் பற்றியும் அவர் ஆற்றிய தொண்டுகளைப் பற்றியும் விரிவாக எழுதியுள்ளார். "இந்த மிக்கேல் சந்நியாசி கடந்த 12 ஆண்டுக் காலமாக அயராது உழைத்து ஆற்றிய பணிகள் ஓர் நல் எழுத்தாளரின் சக்தியனைத்தையும் போக்கியிருக்கக்கூடும். எனக்கு எழுத்தாளராக, உதவியாளராக, திருத்தும் பணியைச் செய்பவராக இருந்தார் என்றால் அது மிகையாகாது. புதிய ஏற்பாட்டிலுள்ள நான்கு நற்செய்திகளின் ஒருங்கமைவு, ஞான உரைகல், விரிவுரையோடு கூடிய புதிய ஏற்பாட்டின் தமிழாக்கம் ஆக இம்மூன்று நூல்களையும் முடிக்க இச்சந்நியாசி எனக்குப் பெரிதும் உறுதுணையாக இருந்தார். இவற்றைத்

தவிர இறை வேண்டல்கள் அடங்கிய ஒரு புத்தகத்தை என் உதவி கொண்டு எழுதினார். திருவழிபாடு வேண்டுதல்கள் கொண்ட புத்தகத்தை மக்களுக்குப் பயன்தரும் வகையில் என்னைப் பயன்படுத்தி மொழி பெயர்ப்புச் செய்துள்ளார் இச்சந்நியாசி'' என்று கூறியுள்ளார்.

அருட்திரு திரிங்கால் அடிகள் வீரமாமுனிவரின் படைப்புகளில் எவ்வளவு ஆர்வம் கொண்டிருந்தாரென்றால் தமிழில் அவர் எழுதிய 'வேதியர் ஒழுக்கம்' 'ஞான உணர்த்துதல்' ஆகிய இரண்டு நூல்களையும் இலத்தீன் மொழியில் மொழிபெயர்ப்புச் செய்தார். அவை 1861-62ஆம் ஆண்டுகளில் நாகபட்டினத்தில் இயேசு சபையார் நிருவகித்து வந்த லித்தோ அச்சகத்தில் அச்சடிக்கப்பட்டு வெளியாயின.

எனவே திரிங்கால் அடிகள் ஓர் மறை பரப்பும் வேதப்போதகராக மட்டுமின்றி ஓர் சிறந்த எழுத்தாளராகவும் விளங்கினார் என்பதில் ஐயமில்லை. குறிப்பாகத் தமிழ் மொழியில் பல நூல்களை எழுதியும், பிற மொழிகளிலுள்ள நூல்களிலிருந்து தமிழ் மொழியாக்கமும் செய்துள்ளார். இவரது படைப்புகளில் தர்க்க முறையும், விவாத ரீதியும் காணப்படுகின்றன. அன்றாட வாழ்க்கையில் ஒரு சாதாரண மனிதன் பயன்படுத்தக்கூடிய பழமொழிகள், உவமான உவமேயங்கள், உருவகங்கள் ஆகியவற்றைக் கையாண்டுள்ளார். ஏனைய மதுரை மாநிலக் குருக்களைக் காட்டிலும் இவர் தமிழுக்குச் சிறந்த தொண்டாற்றியுள்ளார். மற்றவர்கள் ஆங்கிலம், பிரெஞ்சு ஆகிய மொழிகளில் தமிழ்ப் பண்பாடு, கலை, தமிழர் வாழ்க்கை முறை, கட்டடக்கலை, விவசாயம், சமூக அமைப்பு, பழக்க வழக்கங்கள், புதைபொருள் ஆராய்ச்சி, தாவர வகைகள் ஆகியவற்றைப் பற்றிப் பல நூல்கள் எழுதியுள்ளனர்.

திருமறையைப் பரப்ப, போதிக்க நேரம் கிட்டுவதே கடினம் என்கிற சூழ்நிலையிலும், அடிகள் ஆர்வத்தோடும், ஆவலோடும் தமிழ் மொழியைக் கற்று அம்மொழியில் நூல்கள் படைக்குமளவிற்கும், மொழியாக்கங்கள் செய்யுமளவுக்கும் பாண்டித்யம் பெற்றிருந்தாரென்றால் அது மிகவும் வியத்தற்குரிய சாதனை எனலாம். அன்னார் ஆற்றிய அரும் பெரும் தொண்டிற்காகவும் சமூகச் சேவைக்காகவும் சிறப்பாகப் புதிய ஏற்பாட்டின் அவரது தமிழாக்கத்திற்காகவும் அவர் மக்கள் மனதில் என்றென்றும் நிலைத்து நிற்கின்றார்.

மறைத்திரு திரிங்கால் அருளப்பர் 48 ஆண்டுக் காலமாகத் தமிழ் மக்களிடையே சமயப் பணியாற்றியதோடு அவர்களிடையே சமூகப் பணியும் செய்து, இவ்விரு பணிகளுக்கும் போதிய நேரம் கிடைக்காத நிலையில் இலக்கியத் தொண்டும் செய்துள்ளது மிகவும் வியக்கத்தக்கது. அருட்திரு திரிங்கால் 1892ஆம் ஆண்டு மே மாதம் முதல் தேதியன்று தமது

இறுதி மூச்சை இறைவனிடம் ஒப்புக்கொடுத்து இம்மண்ணுலகத்தை விட்டு உயிர் நீத்தார்.

## லமெரேஸ்
## (Lamairesse,E.) 1817-1898

பொறியாளரான திருவாளர் லமெரேஸ் 1817ஆம் ஆண்டு பாரீஸ் நகர்க்கருகில் உள்ள சலோன்-ஆன்-மார்னி (Salon-an-marne) என்னுமிடத்தில் பிறந்தார். இவர் பல்வேறு மொழிகளைக் கற்பிக்கும் நிறுவனத்தில் படித்தார். இவர் கல்வி பயின்றபின் பொதுப் பணித்துறையில் தீவிரப் பயிற்சி பெற்று அந்தத்துறையிலேயே பொறியாளராகப் பணியாற்றினார். ஜெர்மன், ரஷ்யன், ஆங்கில மொழிகளைக் கற்றார். சில ஆண்டுகள் பணியாற்றிய பின் இவர் பிரெஞ்சு அரசின் மேல் அதிகாரியாக 1860இல் பாண்டிச்சேரிக்கு வந்து சேர்ந்தார்.

பொறியாளர் பணியில் இருக்கும்போதே தமிழ் மொழிமேல் மிகுந்த பற்றுக் கொண்டு அதைக் கற்றுக்கொள்வதில் ஆர்வம் கொண்டார். தமிழைத் தவிர, சமஸ்கிருதத்தையும், பாலியையும் கற்றார். இவர் தமது வாழ்நாளில் அநேக நூல்களைச் சேகரித்தார். சமூக வரலாற்றுக் கண்ணோட்டத்தோடு அவைகளை வாசித்தார். இவரது செயல்பாட்டை அங்கீகரிக்கும் வண்ணம் இவருக்கு "Legion d' Honneur" என்னும் பட்டப்பெயர் வழங்கப்பட்டது.

தமிழில் செய்யுள் நூல்களைப் பெரிதும் விரும்பிக் கற்றவர். இதனால் பலதரப்பட்ட செய்யுள் நூல்களை ஆராய்ந்து அவற்றின் அருமை பெருமையைக் கண்டவர். தமிழ் நூல்களைப் பிரெஞ்சு மொழியில் மொழிபெயர்த்து வெளியிடுவது பிரெஞ்சு மக்களுக்கு மிகுந்த பயனளிக்குமென்று இவர் கருதியதால் அந்தத் துறையில் அவர் ஈடுபாடு கொண்டார். முதன்முதலில் தென்னிந்திய நாட்டுப்புறப் பாடல்களைப் பிரெஞ்சு மொழியாக்கம் செய்து தென்னாட்டுப் பாக்கள் (Poésies Populaires) என்ற தலைப்பில் பல வகைப் பாடல்களைத் தொகுத்துப் பிரான்ஸ் நாட்டில் அதை வெளியிட்டார். அதன்பின் திருக்குறளின் ஒரு பகுதியைப் பிரெஞ்சு மொழியில் வெளியிட்டார். இந்நூலின் முதல் பாகம் 364 பக்கங்களைக் கொண்ட திருக்குறளின் பிரெஞ்சு மொழியாக்கத்தைக் கொண்டுள்ளது. இரண்டாம் பாகம் அநேகக் கட்டுரைகள் அடங்கிய தொகுப்பாகும். பிள்ளைப் பெருமாள் ஐயங்கார் இயற்றிய தமிழ்ப் பிரபந்தங்களில் இவருக்கு மிகுந்த ஈடுபாடு உண்டாயிற்று. திருவரங்கக் கலம்பகம் இவர் மனத்தைக் கவர்ந்தது. இக்கலம்பக நூல் முழுவதையும் இவர் பிரெஞ்சில் மொழியாக்கம் செய்துள்ளார். இவைகளைத் தவிர தேவதாசிப்பாட்டு, தெருப்பாட்டு முதலியவையும் இவருக்கு இன்பமூட்டின. இப்பாடல்களின் அமைப்பையும் பொருளையும் கண்டு

இவர் மகிழ்ச்சியுற்று இவற்றைப் பிரெஞ்சாக்கம் செய்தார். இவ்வாறு தமிழ் மொழியில் குறிப்பிட்ட சில துறைகளில் எழுந்த தமிழ் நூல்களைப் படித்துணர்ந்து அவற்றைப் பிரெஞ்சு மக்களுக்கு அறிவித்த பெருமை இவருக்குத் தனிச் சிறப்பைத் தருகிறது.

ஆறு ஆண்டுகள் லமெரேஸ் பாண்டிச்சேரியில் பணியாற்றினார். இவர் பாழடைந்த கோயில்களிலிருந்தும், குளங்களிலிருந்தும் சிலைகளைச் சேகரித்துத் தாம் பிறந்த ஊரான சலோன்-ஆன்-மார்னிக்குத் தன்னுடன் எடுத்துச் சென்றார். இவர் ஓர் அருங்காட்சியகத்தை நிறுவி அதில் அச் சிற்பங்களை வைத்தார். இச் சிற்பங்கள் 15, 16, 17 நூற்றாண்டுகளைச் சார்ந்தவைகளாக உள்ளன. பொறியாளர் லமெரேஸ் 1898ஆம் ஆண்டு தமது 81வது வயதில் இன்னுயிர் நீத்தார்.

இந்தியாவின் தத்துவயியலும் முறைமையான மதங்களின் பாடல்களும் கொண்ட மற்றுமொரு நூல் 1868ஆம் ஆண்டு வெளியிடப்பட்டது. "Chansons Populaires Sud de l' Inde Systemes Religieux Et Philosophiques de l' Inde" published in 1868. This book has 334 pages in French language. இது மெய்யியல், மறையியல் பற்றிய கட்டுரைகள் அடங்கியது. தமிழகத்தில் நடைமுறையிலுள்ள சமூகத்தில் சாதி, மதம், அரசியல் பற்றி இந்நூலில் விவாதம் செய்யப்பட்டுள்ளது.

**படைப்புகள்**

Tirukkural in French, Pondicherry, 1867 (திருக்குறள் பிரெஞ்சு மொழியில், பாண்டிச்சேரி, 1867. Chansons Populaires du Sud de l' Inde, Paris, 1868. (தென்னிந்திய மக்களின் ஆதரவைப் பெற்ற நாட்டுப்புறப் பாடல்கள், பாரீஸ், 1868.)

## எட்வர்டு ஏரியல்
## (Edouard Ariel) 1818-1854

எட்வர்டு ஏரியல் பிரான்ஸ் நாட்டில் நாந்த் (Nantes) என்னும் நகரத்தில் 1818ஆம் ஆண்டு பிறந்தார். திருவாளர் ஏரியல் கடற்படையில் உதவித் தளகர்த்தராய்ப் பணி செய்து கொண்டிருந்த போது 1844ஆம் ஆண்டு புதுச்சேரிக்கு அனுப்பப்பட்டார். இவர் புதுச்சேரியில் பத்தாண்டுகள் சேவை செய்து இந்த ஊரிலேயே 1854ஆம் ஆண்டு காலமானார். இவர் பணியாற்றிய காலத்தில் இந்நாட்டின் மொழியாகிய தமிழ் மொழியைக் கற்றுக் கொள்ள விரும்பித் தமிழை முறையாகக் கற்றார்.

ஏரியல் தமிழார்வத்தால் ஓலைச் சுவடிகளையும், அச்சிட்ட நூல்களையும் சேகரித்து ஏராளமானவற்றைத் தொகுத்து வைத்தார். அவர் தமிழ் மக்களுக்கும், பிரெஞ்சு மக்களுக்கும் பயன்படும் முறையில் தமிழ்

பற்றியும் பிரெஞ்சு சம்மந்தமாகவும் நூல்கள் எழுத எண்ணியிருந்தாரென்று கருத இடமுண்டு. அன்னாரது விருப்பம் நிறைவேறாது போனது இரு தரப்பாருக்கும் பெரும் இழப்பே என்று கூறலாம். ஏரியல் பத்தாண்டுகள் தொகுத்து வைத்திருந்த ஓலைச்சுவடிகளும், அச்சுப் பதிப்புகளும் அவர் இறந்த பின் பாரீசு தேசிய நூலகத்திற்கு (Bibliothèque Nationale de Paris) அனுப்பப்பட்டு விட்டன. இவரது சேகரிப்புகள் தற்கால ஆய்வாளர்களுக்கு மிகவும் பயனுள்ளவைகளாக உள்ளன.

ஏரியல் திருக்குறளைப் பிரெஞ்சு மொழியில் மொழியாக்கம் செய்துள்ளார். அவர் திருக்குறள் முழுவதையும் மொழியாக்கம் செய்யவில்லை. ஆனால் அவர் குறளின் சில பகுதிகளை மட்டுமே தேர்ந்தெடுத்து பிரெஞ்சு மொழியில் மொழிபெயர்த்துள்ளார். இவர் மொழியாக்கம் செய்ததில் ஏழு பக்கங்கள் கொண்ட திருவள்ளுவர் வரலாற்றையும், ஆறு பக்கங்கள் கொண்ட முகவுரையையும், இவற்றைத் தொடர்ந்து பரிமேலழகர் விளக்கவுரையும் கடைசியில் குறிப்புக்களுடன் கொடுத்துள்ளார். இவ்வாறு ஏரியல் திருக்குறளைப் பிரெஞ்சு மக்களுக்கு அறிமுகப்படுத்தினார். குறளின் பெருமையைப் பற்றி ஏரியல் திருக்குறள் தமிழ் இலக்கியங்களில் தலையான நூல் என்றும் மனிதச் சிந்தனைகளில் உயர்ந்ததும், தூய்மையானதுமான வெளிப்பாடுகளில் ஒன்றுதான் குறள் என்றும் கூறியுள்ளார். அதில் வியக்கத்தக்கது என்னவெனில் ‘சாதி, இனம், சமயம் கடந்து மனித இனம் முழுமைக்குமாக அவர் எழுதி வைத்துள்ளார்’ என்று தனது நண்பர் புமுப்புக்கு எழுதிய கடிதத்தில் கூறியுள்ளார். இவர் குறளைப் பற்றிய இரண்டு மதிப்பு மிக்க கட்டுரைகள் எழுதி 1848லும் 1852லும் ஆசியக் கழகத்தின் செய்திப்பத்திரிக்கையில் வெளியிட்டுள்ளார். குறள் 1767ஆம் ஆண்டு பிரெஞ்சில் மொழியாக்கம் செய்யப்பட்டதைச் சுட்டிக் காட்டுகின்றார். திருக்குறள் பிரான்சு நாட்டின் தலை நகரான பாரீசிலுள்ள பிரெஞ்சு தேசிய நூலகத்தில் உள்ளது.

மேலும் ஏரியல் ஔவையாரின் நூல்களைப் பிரெஞ்சில் மொழிபெயர்த்துள்ளார். அவர் ஔவையின் ஆத்திசூடி, கொன்றை வேந்தன் ஆகிய நூல்களையும் மாணிக்க வாசகரின் திருக்கோவையாரையும் மொழியாக்கம் செய்துள்ளார். டாக்டர் ஜான் ஆங்கிலத்தில் மொழியாக்கம் செய்த குறளை எடுத்துக் கொண்டு அதைப் பிரெஞ்சு மொழியில் மொழியாக்கம் செய்தது குறிப்பிடத் தக்கதாகும். இவர் ஒப்புமை இலக்கணத்தைப்பற்றிச் சில கட்டுரைகள் எழுதி வெளியிட்டுள்ளார். மொழி சார்ந்த ஆய்வுக்காகத் தமது வாழ்நாள்களை அர்ப்பணித்தார். ஏரியல் ஆற்றிய மற்றுமொரு பணி நூல் அட்டவணை தயாரித்ததாகும்.

**பாரீசு தேசிய நூலகத்தில் உள்ள நூல் அட்டவணை**

1. வீரமாமுனிவரின்(57) குறள் உரை, இலத்தீன் மொழியில் உரைமூலம், கைப்படிஎடுப்பு, பெஸ்கி அடிகள் மொழி பெயர்ப்பு, விளக்கவுரை 1847, காகிதம், 374 பக்கங்கள், 350x220 mm.

2. தமிழ் அல்லது மலபார் (191) இலக்கணம். பெஸ்கி அடிகளின் இலத்தீன்- தமிழ் இலக்கணத்தின் மொழியாக்கம். 1750. காகிதம். 263 பக்கங்கள், 260x170mm.

3. ஏரியலின் தமிழ் மொழியின் (194) இலக்கணங்களுக் கெல்லாம் இலக்கணம். 1846-1852. காகிதம், 916 பக்கங்கள், 355x320mm.

4. கீழ்க்கண்ட (207) படைப்புகளின் அத்தியாயங்களும் (இயல்) முதுமொழிகளின் வரிசைப்பட்டியலும்: நன்னூல் பதவுரை, பிரயோகவிவேக மூலமும் உரையும், இலக்கணக் கட்டுரை, இலக்கண விளக்கம், தொல்காப்பியம், தொன்நூல் விளக்கம். 1850. காகிதம், 115 பக்கங்கள், 140x220mm.

5. மலபார்-பிரெஞ்சு (211-212) அகராதி சொற்களஞ்சியம், இரண்டு பிரிவு ஏடுகள்(பகுதிகள்) பாகங்கள், முந்தைய படிவம் அல்லது முந்ததைவிட அதே மூலத்தின் படிவம், XVIII-ஆம் நூற்றாண்டு, காகிதம்.... இரண்டு பகுதிகள்:11 பக்கங்கள் மி-157; II, பக்கங்கள் 153லிருந்து 314, 250x340mm.

6. தந்தை தெபூர்ஜெசின் (213-214) (சில இலக்கணக் குறிப்புகளுடன்) தமிழும் பிரெஞ்சுமுள்ள அகராதிகள், இரண்டு பகுதிகள் (பாகங்கள்) XVIII-ஆம் நூற்றாண்டு. காகிதம் 567, 537 பக்கங்கள், 230x300mm.

7. கான்ஸ்டன்டைன் (215) ஜோசப் பெஸ்கியின் தமிழ்-பிரெஞ்சு அகராதி. 1845. காகிதம். 203 பக்கங்கள், 240x300mm.

8. கான்ஸ்டன்டைன் (216) ஜோசப் பெஸ்கியின் தமிழ்- பிரெஞ்சு அகராதி. 1845. காகிதம். 290 பக்கங்கள், 240x300mm.

9. பிரெஞ்சு (220) தமிழ் அகராதி 1850. காகிதம். 306 பக்கங்கள், 220x295mm.

10. பிரெஞ்சு-தமிழ்- தெலுங்கு அகராதி.(225-226 Tamoule225-226) 2 பாகங்கள் 1780. காகிதம். 211ம் 182 பக்கங்கள், 260x400mm. திருச்சபை சிந்தாமணி (Tiruc'c'avae sindamani) 1850. 85 ஓலைகள் 380x25mm.

11. திருச்சபை சிந்தாமணி 1850. 83 ஓலைகள் 380x25mm.

12. தேவ அருள்வேத (455) புராணமாம் பச்சிமாக்காண்டம் 1810.258. ஓலைகள் 410x25mm.

13. (பெஸ்கியின்) வீரமாமுனிவரின் (474-475 Tamoule) தேம்பாவணி மூலமும் உரையும். முற்றுப் பெறாதது. கடைசியிலுள்ள பன்னிரெண்டு பாட்டுக்கள் காணவில்லை. 312ம் 300 ஓலைகள் 455x35mm.

14. திருக்காவலூர் கலம்பகம் (477 Tamoule) 1845.37 ஓலைகள் 350x25mm.

15. I. சாமிநாதபிள்ளையின் நாசரக் கலம்பகம் (Nasaraekkalambagam) II. ஞானப்பிரகாசத்தின் சருவேசுரன் சடகம்.59ம் 28 ஓலைகள் 440x25mm.

16. செனுவப்பம்மாள்492 (Tamoule 492) சரித்திர நாடகம். 1815-57 ஓலைகள் 410x25mm.

17. அருளப்பர்493 (Tamoule493) நாடகம். 1814-65 ஓலைகள் 350x25mm.

18. அர்ச்சிஸ்ட அந்தோணியார் 494 (Tamoule494) நாடகம். 97 ஓலைகள் 355x25mm.

19. ஏரியலின் தமிழ் அகராதி. 497-498 (Tamoule 497-498). காகிதம் 267ம் 468 பக்கங்கள். 215x310mm.

20. செபங்களின் தொகுப்பு. 501 (Tamoule 501) காகிதம், 120 பக்கங்கள், 225x320mm.

## ஜான் மர்டாக்
## (Rev.Dr.John Murdock) 1819

ஜான் மர்டாக் 1819 ஜூலை 22ஆம் நாள் ஸ்காட்லாந்து நாட்டில் உள்ள கிளாஸ்கோவில் பிறந்தார். 1844இல் இலங்கையில் உள்ள கண்டி அரசுப் பள்ளியின் தலைமையாசிரியராகப் பணியாற்றச் சென்றார். இவர் கிறித்தவ இலக்கியங்களைப் படைப்பதில் ஆர்வமிக்கவரானார். 1847இல் சமய ஆய்வுக் குழு ஒன்றை நிறுவியது அவரது மிகுந்த ஆர்வத்தையும் உந்துதலையும் நமக்குக் காட்டுகின்றது. இக்குழு பப்திஸ்டு சபையிடமிருந்து அச்சகத்தை விலைக்கு வாங்கியது. கிறித்தவ சமயத்தைப் பரப்ப எண்ணி 1847ஆம் ஆண்டு "சமய போதனை சங்கம்" ஆரம்பிக்கப்பட்டது. இவர் வாரத்தின் கடைசி நாள் தோட்டத் தொழிலாளர்களுக்கு கிறித்தவ மறை உண்மைகளைப் போதித்து வந்தார். எட்டு ஆண்டுகள் சமயப் பணிக்குப்பின் 1855இல் இலக்கியப் பணிக்காகத் தமது முழு நேரத்தையும் செலவிட நினைத்து அவர் ஸ்காட்லாந்து ஐக்கிய சமயச் சங்கத்தில் சேர்ந்தார். எனவே அவர் 1858இல் சென்னை வந்தடைந்தார். அங்குக் கிறித்தவத் தாய்மொழிக் கல்விச் சங்கத்தின் பொறுப்பேற்றார்.

இவர் மேற்கூறிய குழுவின் மூலம் ஆங்கிலத்திலும், இந்திய மொழிகளிலும் பள்ளிப் பாட நூல்களை அச்சிட்டு வெளியிட்டுள்ளார். இவ்வறிஞர் இந்தியா, சீனா, இலங்கை போன்ற நாடுகளில் சிறந்த வகையில் அதிக அளவில் பணியாற்றியுள்ளார் எனக் கூறப்படுகின்றது.

ஜான் மர்டாக் அச்சடிக்கப்பட்ட அனைத்துத் தமிழ் நூல்களைத் தேடிச் சேர்ப்பதிலும், வகைப்படுத்திப் பட்டியல் தயாரிப்பதிலும் ஈடுபட்டார். கடுமையான உழைப்பும் ஆற்றலுமுடைய மர்டாக் போதிய தமிழறிவு இல்லாததின் பொருட்டுத் தகுதி வாய்ந்த தமிழ்ப் புலவர்களின் உதவிகொண்டு இப்பணியில் இறங்கினார். மேலும் இவர் ஹென்றி பவர் (Henry Bower) டபிள்யூ.டெய்லர் ஆகியோரின் பணிகளின் வாயிலாகக் கிடைத்த உதவியைப் பெற்றார். அவர் தமிழ் நாட்டில் தமிழ் நூல்களைப் பட்டியல் செய்யும் பணிக்கு முன்னோடியாக இருந்தார். மர்டாக் தமிழ் நூல்களைப் பத்து வகையாகப் பிரித்துள்ளார். இவர் தயாரித்த நூல் தொகுப்பேட்டில் பெரும்பாலும் கிறித்தவ சமய நூல்களே மிகுதியாக உள்ளதை நாம் காணமுடிகிறது. மேலும் ஜான் மர்டாக் தமது பட்டியலில் ஒவ்வொரு நூலின் சுருக்கமும், ஆசிரியரின் பெயரும், அதன் விலையும், அச்சான ஆண்டும், பக்க எண்ணிக்கையும், வெளியிட்டவர் பெயரும் கொடுத்துள்ளது குறிப்பிடத் தக்கதாகும். ஜான் மர்டாக் தாம் எடுத்துக் கொண்ட கடினமான இப்பணியை அனைவரும் பாராட்டும் வண்ணம் செய்து முடித்துள்ளார். ஏனையவர்கள் அவரைப் பின்பற்றும் வகையில் ஒரு முன் உதாரணமாகத் திகழ்கின்றார். இவர் அச்சிட்டு வெளியிட்ட நூல்கள்:

1. A classified catalogue of Tamil Printed books with introductory notes, Madras, 1865.
2. Caste, its supposed origin, its history, its effects. The Duty of Government, Hindu and Christians with reference to caste and its prospects, Madras, 1869.
3. Classified Catalogue of Tamil Christian Literature at the close of the 19th century, Madras, 1901.

## கோபோர் சென்டாடோலானே பலின்ட் (Balint, Sezentatolanai Gobor)

அங்கேரி நாட்டில் திராவிட மொழிகள் அதிலும் குறிப்பாகத் தமிழ் மொழி அறிஞர்களின் கவனத்தை ஈர்த்தது. ஏனென்றால் அங்கேரியின் அறிஞர்கள் தங்கள் பூர்வீகத் தாய்நாட்டை ஏனைய நாடுகளோடு ஒப்பிட்டுப் பார்த்ததோடல்லாது அவர்களின் மொழி ஏனைய மொழிகளுடன் கொண்டிருந்த ஒப்புமையையும் ஆய்வு செய்தனர். 1856ஆம் ஆண்டு முனைவர் கால்டுவெல் திராவிட மொழிகளின் இலக்கணத்தில் உள்ள ஒப்புமையைக் கண்டார். கோபோர் சென்டாடோலானே பலின்ட் ஒரு பன்மொழி வல்லுநர். முப்பது மொழிகளை நன்கு அறிந்தவர். இவற்றில் பன்னிரெண்டு மொழிகளை

இவர் உயர்பள்ளியில் படிக்கும்போதே கற்றவர். அறிஞர் கோபோர்தான் முதன் முதலாக இந்திய மொழிகள் அல்லாதவற்றோடு தமிழ் மொழி கொண்டிருந்த தொடர்பைச் சுட்டிக் காட்டியவர். 1887ஆம் ஆண்டு கோபோர் கவுண்ட் பெல்லா ஸ்செக்செனி (Count Bela Szechenyi) யுடன் இரண்டாவது முறையாக ஆசியா வந்தார். 1878ஆம் ஆண்டு கோபோர் பெங்களூரில் தமிழ் கற்றார். "துரானியன் மொழிகளின் சமஸ்கிருதத்தைப்" போன்று தமிழை எழுதுகின்றார். அறிஞர் மாக்ஸ் முல்லரும் இந்தக் கலைச் சொல்லை உபயோகித்தார். அப்படியிருக்க, கால்டுவெல் மாறாகச் சித்தியன் (Seythian) பெயரை உபயோகித்தார்.

1897இல் பலின்ட் (Balint) தனது படைப்பை வெளியிட்டார். தமிழ்-திராவிடப் படைப்புகள் இரண்டு பகுதிகளாகும்.

**பகுதி ஒன்று:** உரோமானிய எழுத்துப் பெயர்ப்பு முறையில் எழுதிய தமிழ் இலக்கணம்- ஏனைய பதினாறு மொழிகளுடன் தொடர்புள்ள மொழிகளும் அங்கேரி மொழியும்.

**Part I:** Tamil Grammar with Revised translation- with regard to the other eleven related languages and Hungarian.

**பகுதி இரண்டு:** தமிழ் வேர்ச் சொல் கண்டுபிடிக்கும் அகராதி- நடு துரோனியன் பெரும்மொழிகளைப் பற்றியது.

**Part II:** Tamil Root- investigating Dictionary- with regard to major languages of Middle Turanian.

## எட்வர்டு ஜெரூட் ராபின்சன்
## (Edward, Jeurtt Robinson)

எட்வர்டு ஜெரூட் ராபின்சன் ஒரு பிரிட்டிஷ் மறைப்போதகர். சில திறமையுள்ள தமிழ் அறிஞர்களின் கீழ்த் தமிழ் கற்றார்.

பங்களிப்பு

1. Tales and poems of South India, London, 1873.
2. The Unerring Judge, 1873.
3. Cural, London, 1878.
4. The Divine Patraiah, London, 1885.
5. Tirukkural (I&II Parts), London, 1886.
6. Tamil Wisdom, Madras, III ed, 1957.

## வின்பிரட்
## (Winfred, S)

வின்பிரட் ஒரு பாதிரியார். இவர் தமிழைக் கற்றுத் தாவீது அரசன் அம்மானை என்னும் ஒரு நூலைச் செய்யுள் வடிவில் படைத்துள்ளார்.

வின்பிரட் தமிழிலுள்ள சிறிய சிறிய கவிதைகளைத் தொகுத்துள்ளார். இந்நூலை ஆங்கிலத்தில் மொழியாக்கம் செய்து அதை 1872ஆம் ஆண்டு வெளியிட்டுள்ளார். இவரது இரண்டாவது மொழியாக்கம் ''பஞ்ச தந்திரக் கதைகள்''. பஞ்ச தந்திரக் கதைகள் தத்துவராயரால் தமிழில் எழுதப்பட்டதாகும். இவர் ஜான் பனியனின் புனித யுத்தம் (Holy War) என்னும் நூலைத் தமிழாக்கம் செய்து 1844ஆம் ஆண்டு வெளியிட்டார். இவரது மற்றுமொரு பங்களிப்பு சமயச் சார்பான விசாரணையின் முக்கியத்துவத்தைப் பற்றிச் சென்னையிலுள்ள படித்த இளம் வாலிபர்களுக்கு ஆற்றிய சொற்பொழிவு. (Lecture to the Educated Young Men of Madras on the importance of Religious Enquiry)

**படைப்புகள்**

1. தாவீது அரசன் அம்மானை, சென்னை, 1865.
2. நீதி நூல்கள், சென்னை, 1872.

## எட்வர்டு வெப்
## (Webb, Edward)

அமெரிக்க நாட்டவரான எட்வர்டு வெப் தமிழகத்திலுள்ள சிவகங்கைக்கு 1846இல் மதுரை மறைத்தளப் பணியாளராக வந்தார். இவர் ஒரு தமிழறிஞரும் இசை வல்லுநருமாவார். இவர்தான் தேவாலயங்களில் நடத்தப்படும் மதச் சடங்குகளில் தமிழ் இசையைப் பாடுவதற்கு முன்மொழிந்தார்.

இவர் தமிழ்ப் பள்ளிக்கூடங்கள் நடத்தியும், மறைப்பணி ஆற்றியும் வந்தார். 1852இல் இவர் கைவினைத் திறன்களில் பயிற்சி அளிக்க ஒரு தொழிற்பள்ளியைத் தொடங்கினார்.

வெப் 1852ஆம் ஆண்டு எட்டு மாணவர்களுடன் தஞ்சாவூர் சென்று பிரசித்திபெற்றவரும் சமயப் பக்திப் பாடல்கள் இயற்றியவருமான வேதநாயக சாஸ்திரி அவர்களைச் சந்தித்தார். கிறித்தவப் பாடகரான சவரிமுத்து என்பவரிடம் பாடல்கள் கற்றுக்கொள்ள அவர்களுக்குச் சந்தர்ப்பம் கிடைத்தது.

வெப், பெஸ்கியடிகளின் பாடல்களையும், கால்டுவெல்லின் பாடல்களையும் சேகரித்து 'Christian Lyrics for Public and Social Worship'

என்னும் தலைப்பில் வெளியிட்டார். வேதநாயக சாஸ்திரியாரின் பக்திப்பாடல்களும் இந்த நூலோடு சேர்த்துக் கொள்ளப்பட்டன. இவர் சிறிய அளவில்தான் கிறித்தவ உணர்ச்சிமிகு பாடல்களைத் தமிழ் இசையின் பண்ணிசைக்குப் பொருத்தமாக மாற்றினார். அவற்றைத் தேவாலயங்களில் பாடவைத்தார். இந்த நூல் Christian Vernacular Education Society for India வினால் வெளியிடப்பட்டது.

அமெரிக்க மிஷன் பள்ளிகளில் பயனுள்ள வகையில் எந்த மொழியில் கற்றுத்தர வேண்டும் என்பது பற்றி ஜெரியும், சாண்லரும் விவரம் அளிக்கும்படி கேட்டுக்கொண்டனர். வெப் தமிழில் மட்டுமே பாடங்கள் கற்றுத்தரவேண்டுமென்று பரிந்துரைத்தார்.

இவர் ‘Class Book of Theology’ என்னும் ஆங்கில நூலைத் தமிழில் மொழிபெயர்த்தார். வெப் Evidences of the Scythian affinities of the Dravidian Languages என்ற தலைப்பில் ஒரு கட்டுரை எழுதி Journal of American Oriental Societyயில் 1862இல் வெளியிட்டார். இவர் இக்கட்டுரைக்கான செய்திகளை முனைவர் கால்டுவெல் எழுதிய The Comparative Dravidian Grammar என்னும் நூலிலிருந்து சேகரித்தார்.

**படைப்புகள்**

1. Sacred Lyrics of Relegious Odes, Madras, 1853.
2. "Evidences of the Scythian affinities of the Dravidian Languages" JAOS, 7.

## அருட்திரு லூயிஸ் வெர்தியர், சே.ச.
## (Fr.Louis Verdier, S.J) 1820-1854

தந்தை லூயிஸ் வெர்தியர் 1820ஆம் ஆண்டு செப்டம்பர் திங்கள் 28ஆம் நாள் பிரான்ஸ் நாட்டில் பிறந்தார். 1843ஆம் ஆண்டு மறை பரப்பும் பணிக்குத் தன்னைத்தானே தயார்படுத்திக்கொண்டு 1846இல் இந்தியா வந்து மதுரை மறை மாநிலத்தில் சேர்ந்து தமது இறைப்பணியைத் தொடங்கினார். வெர்தியர் அடிகள் 40 ஆண்டுகளாகப் பாளையங்கோட்டை மறைமாவட்டத்தில் உயர்பதவி வகித்தார். இதன்பின் மதுரை மறைத் தளத்தின் மேற்பதவியாளராக எட்டு ஆண்டுகள் பொறுப்பேற்றிருந்தார். 1898ஆம் ஆண்டு அக்டோபர் மாதம் 9ஆம் நாள் உயிர் நீத்தார்.

வெர்தியர் அடிகள் மிகக் கவனமாக இராபர்ட் தெ நொபிலியின் படைப்புகளை வாசித்தார். நொபிலி எழுதிய ஆத்ம நிர்ணயத்தின் ஒரு பகுதியை மொழியாக்கம் செய்தார். ஞான உபதேசக் காண்டங்களின் சுருக்கங்களை இலத்தீன், பிரெஞ்சு ஆகிய மொழிகளில் மொழிபெயர்த்துள்ளார்.

## புத்துலூப் ஜான் பியர்
## (Bouteloup Jean Pierre) 1820-1892

இவரது வாழ்க்கை வரலாறு நமக்குக் கிடைக்கவில்லை.

அவர் எழுதிய நூல்கள்:

1. தமிழ் இலக்கணம் தமிழர்களுக்காக (Grammatica Malabarica Pro Malabaricis)
2. தமிழ் ஆங்கில இலக்கணம் (Gammatica Malabarica- Anglica)
3. குரு மாணவர்களுக்கு ஆங்கிலம் தமிழ் அகராதி (Parbum Dictionarium anglicum- Malabaricum Pro Seminariis)

## ரெவரென்ட் முனைவர் ஜார்ஜ் உக்லோவ் போப்
## (Rev. Dr.George Uglow Pope 1820-1908)

திருவாளர் ஜான் போப், திருமதி கத்தரீன் தம்பதியருக்கு மகனாக 1820ஆம் ஆண்டு ஏப்ரல் மாதம் 24ஆம் நாள் நோவோ ஸ்கோட்டியாவிலுள்ள பிரின்ஸ் எட்வர்டு அயர்லாந்தில் ஜார்ஜ் உக்லோவ் போப் பிறந்தார். இவருடன் பிறந்தவர்கள் ஆறு சகோதரர்களும் நான்கு சகோதரிகளுமாவர். இக்குடும்பம் நோவோ ஸ்காட்டியாவிலுள்ள பிரின்ஸ் எட்வர்டு தீவிலிருந்து போப்புக்கு ஆறு வயது நடக்கும் பொழுது இங்கிலாந்துக்குக் குடிபெயர்ந்தது. இள வயதிலேயே போப் ஹீப்ரு மொழியில் பழைய ஏற்பாட்டையும், கிரேக்க மொழியிலிருந்த புதிய ஏற்பாட்டையும் மிகுந்த ஆர்வத்தோடு கற்றார். பள்ளி, கல்லூரிப் படிப்புகளை முடித்துக்கொண்டு தமது 19வது வயதில் தமிழ் மொழி பேசும் தமிழகத்திற்கு வந்து சமயப்பணி ஆற்றத் தாமாகவே முன்வந்தார்.

1839ஆம் ஆண்டு அவர் கப்பல் பயணமாகத் தென்னிந்தியாவிற்கு எட்டு மாதம் பயணம் செய்து சென்னையை வந்தடைந்தார். இப்பயணத்தின் பொழுது அவருடன் இருந்த நண்பர்கள் வில்லியம் ஆர்த்தர் என்பவரும் ஜோன்ஸ் கேரட் என்பவருமாவர். அப்பயணத்தில் அவர் தனக்குப் புதிய மொழியான தமிழை நன்கு கற்றுக் கொண்டார். அம்மொழியில்தான் அவர் மறைப்பணி ஆற்ற வேண்டியிருந்தது. அவர் வெஸ்லியன் சமயக் குழுவிலிருந்து வெளிநாடுகளில் விவிலியத்தைப் பரப்பும் சங்கத்தில் (Society for the Propagation of the Gospel) சேர்ந்தார். அவர் சென்னையில் வந்திறங்கியபோது சாந்தோமில் தமிழில் மறையுறை ஆற்றினார்.

தென் தமிழகத்தில் தூத்துக்குடிக்கு அருகில் உள்ள சாயர்புரத்தில் போப் தங்கினார். இவ்வூரைத் தலைமை இடமாகக் கொண்டு எட்டாண்டுகள் சமயப் பணியாற்றினார். 1844இல் டாக்டர் போப் இங்கு

ஒரு தேவாலயம் கட்டினார். அப்பகுதியைச் சுற்றி வாழ்ந்த மக்களுக்குக் கிறிஸ்தவ மறைக் கொள்கைகளை எடுத்தியம்பத் தக்கவாறு ஒரு கல்லூரியைத் தொடங்கினார். ஆரம்பக் காலத்தில் இக்கல்லூரியில் இரண்டு ஆசிரியர்கள் இருந்தனர். ஒருவர் டாக்டர் போப். மற்றவர் சேமோர் என்பவர். போப் அவர்கள் இலத்தீன், ஆங்கிலம், ஹீப்ரூ, வரலாறு, கணிதம், தத்துவம் ஆகியவற்றைக் கற்பித்தார். அன்னாரின் கொள்கை 'நல்ல உணவு, நல்ல படிப்பு, நல்ல பிரம்படி' என்பதாகும். போப்பின் இந்த நல்ல பயனுள்ள முயற்சியைப் பாராட்டி 1848இல் ஆக்ஸ்போர்டு பல்கலைக்கழகம் சாயர்புரத்தில் ஒரு நூல் நிலையத்தை அமைப்பதற்கான பண உதவி அளித்தது.

முனைவர் போப் சாயர்புரத்தில் தங்கியிருந்த பொழுது நான்கு நூல்கள் படைத்ததாகக் கூறப்படுகின்றது. ஆனால் அவைகளில் எதுவும் கிடைக்கவில்லை. பாதிரியார் அருள் தங்கையா அந் நான்கு நூல்களின் பெயர்களைக் கொடுக்கின்றார். அவை கீழ்வருமாறு:

1. கிறிஸ்து மனிதர் என்பது பற்றிய ஓர் ஆய்வுக் கட்டுரை. A treatise on the person of Christ.
2. பள்ளிகளுக்கும் கிறித்தவக் குடும்பங்களுக்கும் மறைபோதனையின் ஒரு சாரம். A Compendium of Religious Teaching for schools and Christian Families.
3. தீய ஆவியை வழிபடுவது மடத்தனம். The folly of Demon worship.
4. தென்னிந்தியாவில் தமிழிலும் ஆங்கிலத்திலும் செப நூல்கள். The prayer Books in Tamil and English in South India.

1849ஆம் ஆண்டு போப் அவர்கள் இங்கிலாந்துக்குப் பயணமானார். அவர் அங்கு இருந்தபோது தம் வாழ்க்கைத் துணைவியாரைத் தேர்ந்தெடுத்துத் திருமணம் செய்து கொண்டார். 1850இல் மீண்டும் இந்தியாவிற்குத் திரும்பி வந்தார். போப் தஞ்சைக்குச் சென்று மறைப்பணியாற்ற அனுப்பப்பட்டார். டாக்டர் போப் சமயப் பணியாளராக இருந்த சுவார்ட்ஸ் என்பவருடனும், திருநெல்வேலியிலிருந்து தஞ்சை வந்து அரசுப் பணியாளராக வந்து சேர்ந்த வேதநாயக சாஸ்திரியுடனும் நட்புக் கொண்டார். இவ்விருவரும் நெருங்கிய நண்பராயினர். போப், சாஸ்திரியுடன் கொண்ட தொடர்பு பல தமிழ் நூல்களைப் படிக்க அவருக்குத் துணை செய்தது. அவர் தஞ்சையில் நிறுவிய பள்ளியில் கற்பிக்கும் பணியை மேற்கொண்டார். 1854இல் அவர் அப்பள்ளியின் தலைமை ஆசிரியரானார்.

போப் தஞ்சாவூருக்குச் சென்றார். அங்கே ஏற்கெனவே திருநெல்வேலியிலிருந்து தஞ்சை வந்திருந்த வேதநாயக சாஸ்திரியின்

பெரும் நட்பு கிடைத்தது. போப் தஞ்சையில் இருந்தபொழுது அநேக நூல்கள் எழுதினார். அச்சமயம் அங்குக் கிறித்தவர்களிடையே சாதியின் அடிப்படையில் பல சண்டைகள் மூண்டன. அச்சமயம்தான் டாக்டர் போப் ஷி.றி.நி. சபையைவிட்டு 1858இல் விலகிய பின்பு எழில் கொஞ்சும் மலையரசியான உதகமண்டலத்தில் தம் வாழ்நாள் பணியைத் தொடங்கினார். அவர் தமது பெரும் முயற்சியால் ஒரு தனியார் பள்ளியைத் தொடங்கினார். அது 'ஸ்டேன்' இல்லத்தில் மூன்று மாணவர்களுடன் தொடங்கி நாளடைவில் மாணவர் எண்ணிக்கை அதிகரித்ததின் பொருட்டுப் பள்ளியை வேற்றிடத்திற்கு மாற்றினார். போப் உதகையில் ஒரு பெரிய நூல் நிலையத்தை நிறுவினார். அவர் அங்குச் சிறையில் உள்ள கைதிகளைச் சந்தித்து அவர்களை நல்வழிப் படுத்தினார். மலை வாழ் தோதர் மக்களின் மொழியைக் கற்று அவர்களிடையே பணியாற்றினார். இம்மறைப்போதகர் ஆற்றிய அரும் பணிகளை அங்கீகரித்து அவர் உதகையில் இருந்தபொழுது 1864இல் இங்கிலாந்திலுள்ள கான்டர்பரியிலிருந்து "தெய்வீக டாக்டர்" (Doctor of Divinity) என்ற பட்டம் வழங்கப்பட்டது.

உதகையிலிருந்து டாக்டர் போப் பெங்களூர் சென்றார். அவர் இந்நகரிலுள்ள ஆயர் காட்டன் பள்ளியில் ஆசிரியர் பணியில் சேர்ந்தார். அன்னார் இடைவிடாத முயற்சியால் 1875இல் ஒரு வகுப்பறையும், மாணவர் விடுதியும் கட்டக் காரண கர்த்தாவாக இருந்தார். அவர் பெங்களூரில் 1882 வரையில் பணிபுரிந்தார். 42 ஆண்டுகள் இந்திய மண்ணில் அரும் பெரும் பணியாற்றிவிட்டு டாக்டர் போப் தமது தாயகமான இங்கிலாந்துக்குத் திரும்பிச் சென்றார்.

டாக்டர் போப் இங்கிலாந்து சென்று மூன்று ஆண்டுகளுக்குப் பிறகு 1885ஆம் ஆண்டு ஆக்ஸ்போர்டு பல்கலைக் கழகத்தில் ஆசிரியராகப் பணியில் சேர்ந்தார். அவர் அங்குத் தமிழ்ப் பேராசிரியராகப் பணியில் சேர்ந்து தமிழையும் தெலுங்கையும் கற்றுக் கொடுத்தார். 1886இல் டாக்டர் போப் முதுகலைப் பட்டம் (M.A.) பெற்றார். பின்னர் அகராதி எழுதும் வேலையைத் தொடங்கினார். ஆனால் அதே ஆண்டில் அந்த வேலை முற்றுப் பெறவில்லை.

## டாக்டர் ஜி.யு. போப்பின் இலக்கியப் படைப்புகள்

போப் சாயர்புரத்தில் பணியாற்றியபோது 1845இல் அவர் 'பிரதேச பஜனைக் குழு' ஒன்றை ஏற்படுத்தினார். மேலும் அவர் நான்கு சமய நூல்களை எழுதியுள்ளார். அவற்றில் ஒன்றும் தற்பொழுது கிடைக்கவில்லை. சாயர்புரப் பங்கில் பணியாளராயிருந்த பாதிரியார் அருள் தங்கையா 1. இயேசுநாதர் பற்றிய விளக்க நூல், 2. பள்ளிகளுக்கும் கிறித்துவ இல்லங்களுக்குமான சமயப் பேருரைத் திரட்டு, 3.பேய்

வணக்கத்தின் தவறு, 4. தமிழில் தொழுகை நூலும் தென்னிந்தியாவில் ஆங்கிலத் தேவாலயங்களும் என்பன பற்றி நூல்கள் எழுதியுள்ளதாகக் கூறுகிறார்.

தஞ்சையில் மறைப்பணியாற்றியபோது போப் அய்யர் தமிழ் அறிமுக நூல், தமிழ் இலக்கணம், தமிழ்-ஆங்கிலம், ஆங்கிலம்-தமிழ் அகராதிகள், வரலாற்று நூல்கள், தொகை நூல்கள் எனப் பல்வேறு நூல்களை எழுதியுள்ளார்.

டாக்டர் போப் உதகையில் தலைமையாசிரியராய் இருந்து சமயப் பணி புரியும்போது தோதர் மக்கள் பேசும் மொழியைக் கற்று அம்மொழிக்குச் சிறந்ததொரு இலக்கணமும் எழுதியுள்ளார்.

அறிஞர் போப் தமது தாயகமான இங்கிலாந்து திரும்பி, மூன்று ஆண்டுகளுக்குப்பின் ஆக்ஸ்போர்டு பல்கலைக் கழகத்தில் பேராசிரியராக இருந்தபோது தமிழ், தெலுங்கு மொழிகளைக் கற்றுக் கொடுத்தார். அப்பொழுது அவர் பல்வேறு பத்திரிக்கைகளுக்குத் தமிழ் இலக்கியத்தைப் பற்றிய பல கட்டுரைகள் எழுதி அனுப்பி வெளியிட்டார். 1886ஆம் ஆண்டு டாக்டர் போப் அவருடைய தனிச் சிறப்பு மிக்க குறளின் ஆங்கில மொழியாக்கத்தைப் 'புனித குறள்' என்ற தலைப்புக் கொடுத்து எழுதி முடித்தார்.

1893ஆம் ஆண்டு நாலடியாரின் மொழிபெயர்ப்பை முடிததார். இதைத் தொடர்ந்து திருவாசகத்தின் மொழிபெயர்ப்பையும், 1900இல் மணிமேகலை மொழிபெயர்ப்பையும் செய்தார். ஆனால் மணிமேகலை முற்றுப் பெறவில்லை என்பது அவரது மரணத்திற்குப் பின்பே தெரிய வந்தது. 1906இல் டாக்டர் போப் தமிழ் இலக்கியத்திற்கு ஆற்றிய தொண்டை அங்கீகரிக்கும் வகையில் 'அரசு ஆசியச் சங்கம்' அவருக்குத் தங்கப் பதக்கம் அளித்துக் கௌரவித்தது.

டாக்டர் போப் 1908ஆம் ஆண்டு பிப்ருவரி 11ஆம் நாள் இன்னுயிர் நீத்தார். டாக்டர் போப் அவர்களின் பூத உடல் ஜெரிக்கோ சென்ட்ரல் ஆக்ஸ்போர்ட்டில் அடக்கம் செய்யப்பட்டுள்ளது. அவர் தாம் அடக்கம் செய்யப்படும் கல்லறைக் கல்லில் 'தமிழ் மாணவன்' என எழுதி வைக்க விரும்பிக் கேட்டுக் கொண்டதாகக் கூறப்படுகிறது.

பெரும் தமிழ் அறிஞரும், சிறந்த சமயப் பணியாளருமான இம்மாபெரும் மனிதரைப் பிரெஞ்சு நாட்டுத் தமிழ் ஆர்வலரும் பாரீஸ் பல்கலைக்கழகத்தின் பேராசிரியருமான ஜூலியன் வேன்சான் என்பவர் ஓர் அழகிய தமிழ்ப் பாடலால் மனமாரப் புகழ்ந்துள்ளார்.

டாக்டர் போப் எழுதிய தமிழ் இலக்கியங்களைப் பற்றிய முனைவர் கா.மீனாட்சி சுந்தரம் அவர்களின் கருத்துக்களைக் காண்போம்.

திருக்குறள்: குறள் முழுவதுமாக ஆங்கிலத்தில் மொழி பெயர்த்த முதல் ஐரோப்பியர் டாக்டர் போப் அவர்கள்தான். எதுகைக்கு முக்கியத்துவம் கொடுத்து அவர் ஆங்கிலச் செய்யுள் வடிவில் குறளை மொழியாக்கம் செய்துள்ளார். அவர் அதைப் 'புனிதக் குறள்' (Sacred Kural) என்று பெயரிட்டுள்ளார்.

டாக்டர் போப் குறளைப் பல கோணங்களில் புகழ்ந்துரைத்துள்ளார். ''மலைச் சொற்பொழிவின் எதிரொலி'' என்றும், ''பயனைப் பொருத்த அளவில் தமிழ் இலக்கியம் முழுவதையும் குறள் மிஞ்சி நிற்கிறது'' என்றும், ''குறளின் பரந்த புகழுக்குப் பெரிதும் காரணம் அதன் கவிதை வடிவத்தில் காணப்படும் சிறப்பே'' என்றும் போற்றிப் புகழ்ந்துள்ளார் டாக்டர் போப்.

குறளின் ஆசிரியரான திருவள்ளுவரைத் தமிழ் மொழி அறிஞன் என்றும் ''அவர் தம் நூலை எக்காலத்துக்கும் பொருந்துமாறு'' செய்துள்ளார் என்றும் பல தலைமுறைகளுக்கு அது ஒரு மகிழ்ச்சிப் பொருள் என்றும் போற்றுகிறார் போப் ஐயர். மேலும் வள்ளுவரின் மொழித்தன்மை-இலக்கணம் பற்றி ஆராய்ந்த முதல் நூல் இதுவேயாகும். தமிழ்மொழி வடமொழியிலிருந்து வேறுபட்டு இருப்பதை இலக்கண ஆராய்ச்சியில் சுட்டிக் காட்டியுள்ளார் போப்.

டாக்டர் போப் மேலைநாட்டுக் கவிஞர்களின் படைப்புகளோடு குறள்களை ஒப்பிட்டும், வேறுபடுத்தியும் எடுத்துக் காட்டியுள்ளார். வெர்ஜில், ஹோரஸ், தாந்தே, ஷேக்ஸ்பியர், அரிஸ்டாட்டில் போன்ற பல கவிஞர்களோடும், விவிலியம், உபநிஷத், கீதை போன்ற சமய நூல்களிலிருந்தும் ஒப்புமை காட்டியும் உள்ளார் டாக்டர் போப்.

**நாலடியார்**

டாக்டர் போப் முன்னுரையில் கூறியுள்ளதாவது: ''ஐரோப்பியர் இலக்கியத் தமிழில் புலமை பெறுவதற்காக நாலடியார் மொழிபெயர்க்கப் பட்டுள்ளதின் நோக்கம்'' நாலடியார் குறளுடன் சேர்ந்து ''தமிழ் மக்களின் அற உணர்வையும், சமுதாயக் கொள்கையையும் முழுவதுமாக வெளிப்படுத்தும்'' என்பது போப்பின் கருத்தாகும். போப் நாலடியாரிலும் இலக்கண நடையை ஆய்வு செய்து ஆங்கிலத்தில் உள்ள ''சானட்'' என்ற வகைப் பாடலைப் போல வெண்பாவும் இலக்கணக் கட்டுப்பாடுடைய சிறந்த அமைப்பு உடையது என்று கூறுகின்றார்.

சீவக சிந்தாமணியையும் டாக்டர் போப் மொழிபெயர்த்துள்ளார். அவர் நாட்டுப்புற இலக்கியத்திலிருந்தும் பொது மக்களின் பேச்சுகளிலிருந்தும் எடுத்த மூன்று பழமொழிகளைக் காண்கின்றோம். இவ்வாறு எடுத்துக் கூறுவது புதுமையானதாகும். போப் வேறு தமிழ்

நூல்களையும் கற்றார். எல்லோரும் அறிந்த அறநூல்களை மட்டுமல்லாது பிற அற நூல்களையும் கூட ஆய்வுக்கு எடுத்துக் கொண்டார். மூதுரை, நன்னெறி, நீதிநெறி விளக்கம் முதலியனவற்றைக் கூறலாம். 'உண்மையொளி' (The Light of Truth) என்ற இதழில் இந்நூல்களைப்பற்றிச் சுருக்கமாகக் கூறியுள்ளார். போப் இவற்றை வெளிநாட்டவருக்கு அறிமுகப் படுத்தியும் இவற்றை ஆய்வு செய்யும்போது இந்நூல்களின் காலங்களையும் முடிவு செய்துள்ளதை நாம் காண்கின்றோம்.

தமிழ் இலக்கணமும் மொழியியலும்: டாக்டர் போப் தமிழ் இலக்கணத்தைப் பாமரரும் எளிதில் புரிந்து கொள்ளும் வண்ணம் இலக்கணக் கருத்துக்களை வினா-விடைகள் மூலம் விளங்கச் செய்து இலக்கணத்தை எளிமைப்படுத்தித் தந்தார். கிறித்தவ சமய விவிலியத்தின் கருத்துக்களைப் பொது மக்கள் விளக்கமாக அறிந்து கொள்ள இந்த வினா-விடை முறை பாதிரிமார்களால் பயன்படுத்தப் பட்டு வந்தது. பிறநாட்டினர் தமிழ் இலக்கணத்தை எளிதில் புரிந்து கொள்ளும் நோக்குடன் இந்த வினா-விடை முறையை இலக்கண உலகில் முதன் முதலாகப் புகுத்தியவர் போப் அவர்கள்தான். பழைய முறைப்படி இலக்கணச் சூத்திரங்களையும், உரைகளையும் அப்படியே நெட்டுருச் செய்து வந்த தமிழ் மக்களுக்கு இவ்வினா-விடை முறை புதுமையானதாகவும் எளிதில் பெரும் பயன்பெறும் நன்முறையாகவும் விளங்கியது.

**புறத்திணை**

அயல் நாட்டு அறிஞர்கள் தமிழுக்கே உரியதான அக இலக்கியத்தைத் தொடவில்லை. ஜி.யு.போப் மட்டும் புற இலக்கியத்தைத் தொட்டுப் பிற நாட்டாருக்கு ஆங்கில மொழி வழியாகக் காட்டியுள்ளார். போப், 'பொருளிலும், தோரணையிலும் புறநானூற்றுக்கு மிகத் தொடர்புடையது ஆகும்' எனக் குறிப்பிடுகின்றார். போப் பன்னிரண்டு பிரிவுகளில் ஒவ்வொன்றையும் எடுத்துக் கொண்டு ஆராய்கிறார். முதல் எட்டுப் பிரிவுகள், அப்பிரிவினுடைய தலைப்புகளாய்க் கொண்டிருப்பவை. ஒவ்வொரு பூவின் பெயருக்கும் உரிய, அறிவியலில் தாவரவியல் பிரிவில் வழங்கப்பட்டு வரும் கலைச் சொல்லைச் சுட்டுவதோடு அப்பூவைப் பற்றிய சிறு குறிப்பும் வரைகிறார். இது போன்ற பூவின் விளக்கங்களைத் தமிழ் இலக்கண ஆசிரியர்கள் எவரும் கொடுத்தாரில்லை.

எனவே போப்பின் பணி இந்தப் புறப்பொருளை ஒரு புதிய நோக்கில் தமிழருக்குக் காட்டி நிற்பதாகும். ஆனால் இங்கு ஓர் ஐயம்; போப்பின் மனத்தில் இருக்கக்கூடிய பூக்களும், நம்முடைய இலக்கிய நெறிகளில் கூறப்பட்டுள்ள பூக்களும் ஒன்றுதாமா என்பதைச் சொல்ல முடியவில்லை. வருங்கால ஆராய்ச்சிதான் இதைக் கண்டு உறுதிப்

படுத்திக் கொள்ளவோ, தள்ளவோ முடியும். அயல் நாட்டவருக்கு இப் பூக்களின் மொழி ஒரு புதுமையாகும் என்று போப் கூறியிருப்பது பெருமையாகும்.

**சொற்களஞ்சியக் கலை**

கையடக்கமான தமிழ்-ஆங்கில அகராதி ஒன்றின் தேவை ஏற்பட்டது. கி.பி. 1859-இல் தமிழை எளிமையாகக் கற்கத் தமிழ்க் கையேடு (A Tamil Handbook) டாக்டர் போப் அவர்களால் அச்சேற்றப்பட்டது. அதன் பொருளடக்க அட்டவணையில் ஆங்கிலச் சொற்களுக்கு நேரான தமிழ்ச் சொற்களும் தமிழ்ச் சொற்களுக்கு நேரான ஆங்கிலச் சொற்களும் தரப்பட்டிருந்தன. இவ் அட்டவணைகள் மறுபார்வையிடப்பெற்று இரண்டு பகுதிகளாக வெளியிடப்பெற்றதில் ஒன்று சுருக்கச் செறிவான தமிழ்-ஆங்கில அகராதியாயிற்று. (A Compendious Tamil-English Dictionary) சொற்களின் மூலங்களும் எம்மொழியிலிருந்து வாங்கப்பட்டன என்பதும் அங்குக் கொடுக்கப் பட்டது. வின்சுலோ பின்பற்றியுள்ள முறையில் வினைகளின் வேர்கள் முன் சொற்களில் நிற்பதும் தொடர்ந்து உருவாவதும் இந்தப் பகுதியிலும் குறிக்கப்பட்டிருந்தன.

**உரைநடை**

டாக்டர் போப்1848இல் நமது ஆண்டவரும் இரட்சகருமான இயேசு கிறிஸ்வின் மனிதத் தன்மையைப் பற்றி விவிலியத்தில் உள்ள கொள்கை (The Scripture Doctrine concerning the person of our Lord and Saviour Jesus Christ) என்ற நூலைப் படைத்துள்ளார்.

**புறநானூறு**

புறநானூறு டாக்டர் உ.வே.சாமிநாதையரால் பதிப்பித்து வெளியிடப்பட்டது. அதனால் போப் அதில் நல்லதொரு ஆய்வு செய்ய முடிந்தது. புறநானூற்றுப் பாடல்களில் சுட்டப் பெறும் பழமையான பழக்க வழக்கங்களும், எண்ணங்களும், வாழ்க்கை நிலைகளும் சுவையானதாக உள்ளன என்றும் பழம்பாவலர்கள் மிகப் பெரிய கலிப்புலமையை வெளிப்படுத்தியும் உள்ளனர் என்றும் அவற்றில் சில பகுதிகள் உண்மையான மணிகளாக உள்ளன என்றும் போப் கூறுகின்றார். போப் புறநானூறு பற்றி ஒன்பது கட்டுரைகள் எழுதி வெளியிட்டுள்ளார். சில அரசர்கள், புலவர்கள், குறுநில மன்னர்கள் பற்றி அவை எழுதப்பட்டுள்ளன. அவர்கள் கபிலர், பாரி, கோப்பெருஞ்சோழன், பொத்தியார், பிசிராந்தையார், வையாவிக்கோப் பெரும்பேகன் என்ற அரசனும், அவனால் கைவிடப்பட்ட அரசி கண்ணகியும், ஓரி, கிள்ளிவளவன், பெருந்தலைச் சாத்தனார், பெருஞ்சித்திரனார்,

பாண்டியன் நெடுஞ்செழியன், திருமுடிக்காரி என்பவர்களாவர். சில குறிப்பிட்ட புலவர்களால் பாடப்பட்ட சில பாடல்களைப் போப் அவர்கள் மொழி பெயர்த்துள்ளார்.

## அறிஞரின் கொடை

1. First Lessons in Tamil, Madras, 1856.
2. Pope's Third Tamil Grammar, Madras, 1857.
3. இங்கிலாந்து தேச சரித்திரம், Madras, 1858.
4. Tamil Handbook of Full Instruction to the Common Dialect of that Language. On the Plan of Ollendorf and Arnold, Madras, 1859.
5. A Tamil Anthology with Grammatical Notes and a Vocabulary, Madras, 1859.
6. "Notes on the Kural of the Tamil Poet Tiruvalluvar," The Indian Antiquary, VII (September, 1881), 305-309, IX (August, 1880), 1996-9: X (December, 1881), 252-305.
7. The sacred Kural of Tiruvalluva Nayanar with Introduction, Grammar, Translation and Notes, London, 1886.
8. First Lessons in Tamil, Oxford, 1891.
9. நாலடியார் of Four Hundred Quatrains in Tamil with Introduction, Translation and Notes, Oxford, 1893.
10. "Kurinjipattu," Siddhanta Deepika, 1.3 (1897).
11. "Manikkavachaker's Morning Hymn," Siddhanta Deepika, 1.1 (1897).
12. "Sekkilar and the Periyapuranam or great Saiva History," Siddhanta Deepika, 1.4 (1897).
13. "The Legend of Chandesvara Nayanar: The young Brahmin Cowherd," Siddhanta Deepika, 1.4 (1897).
14. "The Poets of Tamil Land," Siddhanta Deepika, 1.5 (1897).
15. "The Sulamani-A Tamil Poem," Siddhanta Deepika, 1.7 (1897).
16. "Lay of the Jewelled Anklet,"Siddhanta Deepika, 1.7 (1897), 241-3, 11.2 (1998).
17. "Culamani1 (1897)7,161-164 Devaram SD XIII (1911)4," 145; 6, 241-144, Kabilar Akaval (1898).
18. "Kabilar Akaval," Siddhanta Deepika, 1.10 (1898).
19. "Kabilar and his friend Velpari," S.D.1.12 (1898).
20. "Thirugnana Sambandhar," Siddhanta Deepika, (1898), 1.10(1898)

21. "Patinenkilkanakku", Siddhanta Deepika, (1898),7.8 (1899).
22. "The Naladi Nannuru or 400 quatrains and the later Tamil Gnomic Poetry,"Siddhanta Deepika, 11.6 (1898), 7,8(1899).
23. "Notes on the Tamil anthology of Ancient Songs, Entitled Puranannuru," The Indian Antiquary, XXVIII (February, 1899).
24. "Puranannuru the four Hundred Lyrics- the Pandian Nedum Celiyan," Siddhanta Deepika, III.7 (1889).
25. "Puraporul Venba Malai," Siddhanta Deepika, II.10 (1899).
26. "The Minor Bards, Perunthalai Chattanar and Perunccittiranar," Siddhanta Deepika, III.6(1899).
27. "An Anthology of 400 Songs relating to the Ancient poets and Chiefs of Southern Indian," Siddhanta Deepika, III.8 (1900).
28. "Leaves from an old Indian Note Book: The Puranannuru: The Hill Chieftain, Strong Bows," The Indian Antiquary, XXIX (August 1900).
29. "The 400 Lyrics Puranannuru: The Colan king Killivalavan who fell at Kulamuttam," The Indian Antiquary, XXIX (1900).
30. The Tiruvacagam or Sacred Utterances of the Tamil Poet, Saint and Sage Manikkavacakkar, Oxford, (1900).
31. Tanippacurattokai, Madras, 1901.
32. "The Life legends of St.Sundaramurthi," Siddhanta Deepika, V.3 (1901).
33. A Catalogue of the Tamil Books in the Library of the British Museum, British Museum, London, 1909.
34. "A Summarised Account of Purapporal Venba Malai," The Tamilian Antiquary, 1.6 (1910).
35. Manimekalai: A green epic and one of the Five Great Classics of Tamil Rendered into English, Madras, 1911.
36. "Thirugnana Sambandhar's Devaram," Siddhanta Deepika, XII.4 (1911).
37. A Hand Book of the Ordinary Dialect of the Tamil Language, rpt. London, 1926.
38. A Collection of the English Translations of Tirukkural, Madras, 1959.
39. Tamil Heroic Poems, rpt. Madras, 1973.

40. First Lesson in Tamil or Full Introduction to the Common Dialect of the Language on the Plan of Ollendorf and Arnold, Madras: Delphi Press, 1856.

41. One Alphabet for All India, Madras, 1859.

42. A Tamil Handbook: or Full introduction to the common dialect of that language on the plan of Ollendorf and Arnold, for the use of foreigners learning Tamil and of Tamilians learning English with copious Vocabularies (Tamil-English and English-Tamil). Appendixes containing reading lessons, analyses, letters, deeds, Complaints, Official documents and a key to the exercises. 2nd ed. Madras: P.R.Hunt. 1857.

43. First Tamil Book Primer, Containing Introductory lessons, exercises, Vocabularies and all the essential forms of the spoken dialect of Tamil in the Anglo Indian Characters. Madras, 1861.

44. First Lessons in Tamil: Or an Introduction to the Common dialect of the language for the use of foreigners learning Tamil and of Tamilians learning English with an easy Catechism in Tamil both the Colloquial and classical dialects, 5th ed.Oxford, 1891.

45. A Handbook of the Ordinary Dialect of the Tamil Languages, Part I, Oxford, 1904, (7th ed).

46. A Handbook of the Ordinary Dialect of the Tamil Languages, Part II: Key to the Exercises with notes on Analysis, Oxford, 1904.

47. A Handbook of the Ordinary Dialect of the Tamil Languages, Part IV: Tamil Prose reader adopted to the Handbook . Oxford, 1906.

48. ரெவரென்ட் டாக்டர் ஜி.யு.போப் ஒரு மறைப்போதகராக மட்டுமின்றி ஒரு பெரிய புலவராகவும் பரிமளித்திருக்கிறார் என்பதில் எள்ளளவும் ஐயமில்லை. அவருடைய படைப்புகள் இன்றளவும் பலரால் பாராட்டப் பெற்றுள்ளன.

## டாக்டர் சாமுவேல் பிஸ்க் கிரீன்
## (Dr.Samuel Fisk Green) 1822-1884

டாக்டர் சாமுவேல் பிஸ்க் கிரீன், 1822ஆம் ஆண்டு அக்டோபர்த் திங்கள் 10ஆம் நாள் ஹில் என்னுமிடத்தில் திருவாளர் வில்லியம் இ.கிரீன், திருமதி ஜூலியா பிலிம்ப்டன் தம்பதியருக்குத் திருமகனாய்ப் பிறந்தார். அக்குடும்பம் பதினொரு பேர் அடங்கிய ஒன்றாகும். கிரீன் தனது பதினோராவது வயதில் தன் தாயை இழந்தார். 1845 மார்ச் மாதம் 13ஆம்

நாள் அவர் ஒரு மருத்துவப் பட்டதாரியானார். 1846 நவம்பர்த் திங்களில் அமெரிக்கக் குழுவில் பணியாற்றத் தானே முன்வந்தார்.

அமெரிக்கன் சமயக்குழுதான் இலங்கையில் முதலில் மருத்துவப் பணியைத் தொடங்கியது. சமயச் சார்பான மருத்துவராக டாக்டர் கிரீன் இலங்கைக்கு வந்தார். 1847ஆம் ஆண்டு டிசம்பர் 4ஆம் நாள் அவர் சென்னையை வந்தடைந்து மறு மாதமான அக்டோபர் 4ஆம் நாள் சென்னையிலிருந்து இலங்கை போய்ச் சேர்ந்தார். வட்டக் கோட்டை என்னுமிடத்தில் சில மாதங்கள் தங்கினார். அங்கு டாக்டர் வார்டு அவர்களுடன் பணியைத் தொடர்ந்து செய்தார். அங்கிருந்து அவர் மணிப்பாய்க்குச் சென்றார். நோயாளிகளைக் கவனித்ததோடு ஓய்வு நேரத்தில் சில மாணவர்களைச் சேர்த்துக்கொண்டு அவர்களுக்கு மருத்துவம் சொல்லிக் கொடுத்தார். 1850இல் ஒரு மருத்துவப் பள்ளி தொடங்கப்பட்டு, டாக்டர் கிரீன் அந்த வேலையையும் மேற்பார்த்து வந்தார்.

டாக்டர் கிரீன் ஆரம்பக் காலத்தில் ஆங்கிலத்தில் வகுப்புகள் நடத்தினார். காலப்போக்கில் மக்களுக்கு அவர்களுடைய தாய் மொழியிலேயே கற்றுத்தர வேண்டும் என்பது அவரது அவா. மருத்துவப் பெயர்களைச் சரியாகத் தமிழில் குறியிடுவதும், பொருள்களுக்குப் பொருத்தமான பெயர்களைத் தமிழில் உருவாக்குவது மாகிய திட்டத்தை மேற்கொண்டார். டாக்டர் கிரீன் "உறுப்பமைப்பு, உடலியல் மற்றும் உடல் தூய்மை" என்ற தலைப்பில் டாக்டர் கால்வின் எழுதிய நூலைத் தமிழ்ப் படுத்த முதலில் தேர்ந்தெடுத்தார். அவர் 1855இல் மருந்தியல் தமிழ் அகராதியும் ஆங்கிலம்-தமிழ் மருத்துவப் பெயர்களடங்கிய நூலும் எழுதத் தொடங்கினார். வேறு பல மொழிபெயர்ப்புகளும் செய்யப்பட்டன.

சுமார் பத்து ஆண்டுகள் யாழ்ப்பாணத்தில் தங்கியிருந்த பின்பு அவர்தம் தாய்நாடு சென்றார். அங்கு ஐந்து ஆண்டுகள் தங்கியிருந்த போது தம்முடைய வாழ்க்கைத் துணைவியாரைத் தேர்ந்தெடுத்துத் திருமணம் செய்து கொண்டார். டாக்டர் கிரீன் தன் மனைவியுடன் யாழ்ப்பாணத்திற்குத் திரும்பி வந்தார். இரண்டாம் முறையாகப் பத்து ஆண்டுகள் கழித்து அவர் தாய்நாடு திரும்பினார். இதற்கிடையில் அமெரிக்கக் குழு அதன் சமயக் குழுக்கள் நடத்தி வந்த மருத்துவப் பணியை நிறுத்த முடிவு செய்தது.

டாக்டர் கிரீன் இலங்கையில் நீண்ட நாள் தங்கியிருந்தபோது இரண்டு முறை 'காலரா' மக்களைத் தாக்கியது. அவர் அம்மக்களுக்கு மகத்தான சேவை செய்து பல்லாயிரம் பேரைக் காப்பாற்றினார். மருத்துவ உலகிலும், தமிழ் மொழிபெயர்ப்புச் செய்வதிலும் பயனுள்ள பணி செய்து

தமது பெரும் புகழை நிலை நாட்டினார். டாக்டர் கிரீன் 1884 ஆம் ஆண்டு மே மாதம் 28 ஆம் நாள் இறைவனடி சேர்ந்தார்.

## டாக்டர் சாமுவேல் பிஸ்க் கிரீனின் தமிழ்ப்படைப்புகள்

1. டாக்டர் கால்வின் கட்டர் எழுதிய "உறுப்பமைப்பு, உடலியல் மற்றும் உடல்தூய்மை" என்ற புத்தகத்தைத் தமிழ்ப்படுத்த முதலில் தேர்ந்தெடுத்தது டாக்டர் கிரீன் அவர்களே.
2. அவர் 1855இல் மருந்தியல் தமிழ் அகராதியும், ஆங்கிலம்- தமிழ் மருத்துவப் பெயர்கள் அடங்கிய நூலும் எழுதத் தொடங்கினார். வேறு பல மொழிபெயர்ப்புகளும் செய்தார்.
3. அவர் இறப்பதற்கு முன்னமே, மேனுசெல்லின் மகப்பேறு மருத்துவம், ட்ரூட்டினுடைய அறுவை மருத்துவம், கிரேயுடைய உடல் உறுப்பு அமைப்பு மருத்துவம், ஹூப்பருடைய மருத்துவரின் கைச்சிற்றேடு, வெல்லுடைய வேதியியல், டால்ட்டோவினுடைய உடலியல், வாரிங்குடைய இந்திய மருத்துவப் பொருள் தொகுதி என்ற நூல்களின் தாய்மொழி தமிழ் வழியிலான பெயர்ப்புகளை அச்சிட்டு வெளியிட்டார். டாக்டர் சாப்மேன் என்றழைக்கப்பட்ட டாக்டர் வைத்தியலிங்கம் என்னும் யாழ்ப்பாணத் தமிழர் டாக்டர் கிரீன் அவர்களுடைய அன்புக்குரிய மாணவராகத் திகழ்ந்தார். ஆங்கில மருத்துவ நூல்களைத் தமிழ்ப்படுத்துவதில் அவர் டாக்டர் கிரீன் அவர்களுடன் ஒத்துழைத்தார்.

டாக்டர் கிரீன் தம் சமயப்பணியின் தொடக்க காலத்தில் நியூயார்க் மருத்துவ இதழ் ஒன்றுக்குத் 'தமிழ் மகப்பேறு மருத்துவம்' பற்றி ஒரு கட்டுரை எழுதினார். இறுதியாகத் தம் தாய்நாடு திரும்பிய பின்னர்த் 'தமிழ் கற்கும் ஆங்கிலேயருக்குச் சில குறிப்புகள்' என்னும் பொருள் பற்றி ஏறக்குறைய மூன்று பக்கங்களில் ஒரு கட்டுரை தயார் செய்தார். டாக்டர் கிரீன் அவர்களின் உழைப்பின் பயனாக 4500 அச்சிடப்பட்ட பக்கங்கள் கொண்ட தமிழ் நூல்கள் கிடைத்துள்ளன.

டாக்டர் சாப்மேன் என்னும் டாக்டர் வைத்தியலிங்கம் தம்முடைய கடிதமொன்றில் பின்வருமாறு குறிப்பிடுகின்றார்:

> டாக்டர் கிரீன் தமிழ்ச் சொற்களையும் சொற்றொடர்களையும், மரபுச் சொற்களையும், பழமொழிகளையும் மிக எளிதாகப் பயன்படுத்தித் தமிழைப் பேசினார். அவர் நாள்தோறும் பேசிய உரையாடல்களில் தமிழ் நீதிகள் மிகுந்து காணப்பட்டன.

### படைப்புக்கள்

1. The Science and art of Surgery, American Ceylon Mission, Jaffna, 1867.

2. Chemistry Practical and Theoretical, American Ceylon Mission, Nagercoil, 1875.
3. Vocabulary of Materia Medica , Diseases of Women and Children and Medical Jurisprudence, 1875.
4. Midwifery, Physiological Vocabulary, 1872.
5. The Principles and Practices of Physics, Vaittiyakaram, London Mission Press, Nagercoil, 1872.
6. Principles and Practice of Medicine, (Vaittiyam) Nagercoil, (First page missing).

## ஹென்றி மார்ட்டின் ஸ்கடர் (Henry Martin Scudder) 1822-1895

ஹென்றி மார்ட்டின் ஸ்கடர் அமெரிக்க மறை பரப்பும் போதகர். இவர் இலங்கையிலுள்ள பண்டிட்டெரிப்போவில் 1822ஆம் ஆண்டு ரெவரெண்ட் டாக்டர் ஜான் ஸ்கடருக்குத் தலைமகனாகப் பிறந்தார். இவர் நியூயார்க் பல்கலைக்கழகத்தில் 1840ஆம் ஆண்டு பல்கலைக் கழகப் பட்டம் பெற்றார். 1843ஆம் ஆண்டு ஒருங்கிணைந்த குரு மடத்தில் இறையியல் பட்டம் பெற்றார். மறு ஆண்டு அதாவது 1844இல் இவர் மறைப்போதகராக மதுரை வந்தடைந்தார். அங்கு இரண்டாண்டுகள் பணியாற்றியபின் 1846ஆம் ஆண்டு சென்னை வந்து அங்கு மறைப்பணி ஆற்றினார். இம்மறைப்போதகர் சென்னை, ஆற்காடு, வேலூர், குன்னூர், ஊட்டி ஆகிய இடங்களில் வெற்றிகரமாக ஆலயங்களைக் கட்டிப் பள்ளிக்கூடங்களையும் நிறுவினார். 1850ஆம் ஆண்டு ஆற்காட்டில் மறைத்தளத்தைச் சீர்திருத்தப்பட்ட டச்சு ஆலயக் குழுவுக்காக நிறுவினார். மேலும் அவர் 1851இல் வாலாஜாபேட்டையில் ஒரு மருந்தகம் ஒன்றைத் தொடங்கினார். மருத்துவப் படிப்பில் பட்டம் பெற்று மருத்துவராகப் பணிபுரிந்தார். 1853இல் இந்த மருந்தகம் வாலாஜாபேட்டையிலிருந்து இராணிப்பேட்டைக்கு மாற்றப்பட்டது. ஏனெனில் இராணிப்பேட்டை மையத்தளமாகவும், முக்கியத்துவம் பெற்ற இடமாகவும் இருந்தது. 1854ஆம் ஆண்டு இந்த மருந்தகம் ஹென்றி மார்ட்டின் ஸ்கடர் மிகவும் நோய்வாய்ப்பட்டதின் விளைவாக மூடப்பட்டது. பின்னர் இவர் உடல் நலத்தைத் தேற்றும் வண்ணம் கோடை வாசஸ்தலமான ஊட்டிக்குச் சென்றார்.

ஹென்றி மார்ட்டின் ஸ்கடர் ஒரு பல்மொழி வல்லுநராவார். அவரது தாய்மொழி ஆங்கிலம். இதைத்தவிர, சமஸ்கிருதம், தமிழ், தெலுங்கு ஆகிய மொழிகளையும் நன்குக் கற்றுத் தேர்ந்தவர். ஸ்கடர்

பாதிரியார் பல்வேறு மதசம்மந்தமான நூல்களையும், சமயம் பற்றிய சிறு ஆய்வுக் கட்டுரைகளையும் சமஸ்கிருதம், தமிழ், தெலுங்கு ஆகிய மொழிகளில் எழுதி வெளியிட்டுள்ளார்.

இவர் சீர்திருத்தப்பட்ட டச்சு சமய மறுநெறிக் கிறித்தவர்களின் வழிபாடு (Liturgy of the Reformed Protestant Dutch Church) என்னும் புத்தகத்தை 1862ஆம் ஆண்டு வெளியிட்டுள்ளார் (Madras). 1865இல் வட்டார மொழி ஆசிரியர் தோழன் என்னும் புத்தகத்தையும், 1868இல் இறையுண்மையின் இனிய சுவை (Sweet Savors of Divine Truth) என்னும் நூலையும், 1870இல் ஆன்மீகப் போதனை (Spiritual Teaching) என்னும் நூலையும் வெளியிட்டுள்ளார்.

இவர் மட்டுமல்லாது இவரது மூதாதையர், இவருடைய குடும்பத்தார் அனைவருமே மருத்துவத் துறையில் ஈடுபாடு கொண்டு பெருந்தொண்டாற்றியுள்ளனர். வேலூரில் உள்ள மருத்துவ மனை இதற்கு ஒரு எடுத்துக்காட்டு. ஹென்றி மார்ட்டின் ஸ்கடரின் ஆன்மா 1895ஆம் ஆண்டு இம்மண்ணகத்தைவிட்டு விண்ணகத்திற்குச் சென்றுவிட்டது.

## பீட்டர் பெர்சிவல்
## (Peter Percival)

பி. பெர்சிவல் இங்கிலாந்து நாட்டவர். தமிழகம் வருவதற்கு முன்பே அவர் தமிழ் மொழியின் அடிப்படைகளைத் தம் நாட்டிலேயே கற்றார். இவர் புத்திகூர்மையுடையவராதலால் எதனையும் எளிதில் புரிந்து கொள்ளும் ஆற்றல் உள்ளவர். பெர்சிவல் 1826ஆம் ஆண்டு சென்னை வந்து சேர்ந்தார். அவர் மறை போதிக்கும்போது மக்களிடம் கொண்ட ஈடுபாடு மூலம் அவர்கள் பேசும்பொழுது பயன்படுத்தும் பழமொழிகளைக் கேட்டு அவற்றில் மனத்தைச் செலுத்தினார். வங்காளம் சென்று அங்கு ஒரு சில ஆண்டுகள் பணியாற்றியபோது அங்கேயும் பழமொழிகளைத் திரட்டத் துவங்கி அது முற்றுப்பெறு முன்பே சென்னை வந்து சேர்ந்தார். 1833 முதல் 17 ஆண்டுகள் இலங்கை யாழ்ப்பாணத்தில் வெஸ்லி மிஷன் மூலம் கிறித்தவ சமயத்தைப் பரப்பினார். இலங்கையில் உள்ள யாழ்ப்பாணத்தில் இருந்த பொழுது தமிழ் அறிவை வளர்த்துக் கொள்வதற்கான நல்ல வாய்ப்பு கிடைத்தது. தமிழிலும் சைவ சமயத்திலும் மிகச் சிறந்த அறிஞரான யாழ்ப்பாண ஆறுமுக நாவலரின் கீழ்த் தமிழ் கற்றார். 1842இல் அறிஞர் 1900 தமிழ்ப் பழமொழிகளைத் திரட்டி அவற்றை ஆங்கில மொழி பெயர்ப்புடன் தொகுத்து யாழ்ப்பாணத்திலிருந்து வெளியிட்டார். இவர் நண்பர்களின் வற்புறுத்தலின் பொருட்டு ஒரு பத்திரிக்கை ஆசிரியராகவும் பணியாற்றினார். தமிழ்- ஆங்கிலம்,

ஆங்கிலம்-தமிழ் அகராதிகளையும் வெளியிட்டார். சென்னையில் 1855இல் தினவர்த்தமாணி என்ற முதல் தமிழ் நாளிதழை ஆரம்பித்து நடத்தினார். தெலுங்குப் பழமொழிகளைச் சேகரிப்பதிலும் முனைந்தார். பெர்சிவல் சென்னை மாநிலக் கல்லூரியில் தமிழ் மொழி இலக்கியப் பேராசிரியராகப் பணியாற்றியுள்ளார். 1860 வரை அவர் சேகரித்த பழமொழிகளின் எண்ணிக்கை 5000 ஆகும். இவர் பேராசிரியர் பணியிலிருந்து ஓய்வு பெற்றபின் சேகரித்த பழமொழிகளைச் சென்னையிலுள்ள வேப்பேரி அச்சகத்தில் அச்சடித்தார். 1874ஆம் ஆண்டு பழமொழிகளின் சேகரிப்பானது மறு ஆய்வு செய்து விரிவாக்கம் செய்யப்பட்டுப் பதிப்பித்து அச்சடிக்கப்பட்டது.

பள்ளியில் பயிலும் மாணவர்களுக்கு வேண்டிய பாடநூல்களையும், நாட்டு வரைபடங்களையும் தயாரிக்கும்படி பொதுக்கல்வி இயக்குனரிடமிருந்து ஆணை பெர்சிவலுக்கு வந்தது. பள்ளி மாணவர்களுக்குப் பயன்படும்படியான சுருக்கமான அகராதிகள் தயாரிக்கப்பட்டு ஏழு பதிப்புகள் வெளிவந்தன. தமிழ்ப் பழமொழிகளைத் தேடித் தொகுத்து ஆங்கில மொழிபெயர்ப்போடு நூலாகத் தந்துள்ளார். பெர்சிவல் ஔவையாரின் ஆத்திசூடியை மொழி பெயர்த்துள்ளார். இவர் செய்த இந்த மொழியாக்கம் இவரது வாழ்நாளிலேயே இரண்டு பதிப்புகளைக் கண்டது. இவர் 'வேதம் பிறந்த நாடு' என்ற நூலின் ஆசிரியருமாவார். இலங்கையைச் சேர்ந்த ஆறுமுக நாவலரின் உதவியுடன் பெர்சிவல் திரு விவிலிய நூலை நல்ல தமிழில் மொழிபெயர்த்துள்ளார். ஆராதனை ஒழுங்கு, மெதடிஸ்ட் வினாவிடை ஆகிய நூல்களை எழுதிய இவர் திருத்த முறைக் கிறித்தவர். திருக்குறளை ஆங்கிலத்தில் மொழிபெயர்த்துள்ளார்.

**படைப்புகள்**

1. Anglo-Tamil Dictionary, Madras, 1861.
2. Anglo-Tamil Dictionary, Madras, 1867.
3. Avvaiyar's Aphorisms (Translation of ஆத்திசூடி).
4. Tamil Proverbs with their English Translations, rpt.Madras, 1874.
5. Anglo-Tamil Dictionary, Madras, 1877.
6. Land of the Vedas (கபிலதேவர் அகவல்).
7. Collections of Proverbs in Tamil (Translation in English), Jaffna Book Society, Madras, (1953).
8. An English-Tamil Dictionary, The Madras School Book and Literature Society, Madras, (1953). (Compiler) Tamil-English Literature, the Madras School Book and Literature Society, Madras, (1953).

9. The Land of the Veda: India (Briefly described in some of the aspects Physical, Social, Intellectual and Moral). George Bell, London, (1854).
10. Tamil Proverbs with their English Translations, containing upto six thousand proverbs. 2nd ed., Madras, (1874).
11. Tamil-English Dictionary (with the Tamil words printed in the Roman as well as in the Tamil character. Intended for the use of European Officers, Soldiers and others employed in the several Executive Departments of the Govt.of Madras). 3rd Ed., Madras. (1877).
12. An Account of the Island Ceylon (containing its History, Geography, Natural History, with manners and Customs of the various inhabitants), London, 1805.

## லாப் ஜான் பேப்டிஸ்ட் அந்துவான்
## (Lap Jean Baptiste Antoine) 1826-1893

பிரான்ஸ் நாட்டிலுள்ள அவுசோன்வில்லில் (Hausssonville) 1826ஆம் ஆண்டு ஜூன் மாதம் 11ஆம் தேதி பிறந்தார். இவர் தமது பள்ளிப் படிப்பைப் போந்தா முஸ்சோனில் (Point-à- Mousson) முடித்தார். ஆயரவர்கள் இவரது சிறந்த பண்பைக் கண்டு சரேபுர்க்கி கல்லூரிக்கு அனுப்பினார். இவரது சிறந்த பண்பு, மகிழ்வான உள்ளம் ஆகியன அநேக நண்பர்களை அவர் பக்கம் ஈர்த்தன. இறைவன் அழைப்பை ஏற்று அவர்களை விட்டு வெளியேறத் தீர்மானித்தார். 1852 ஜனவரி 6ஆம் நாள் பாரீஸ் அந்நிய மறைப்போதகர்கள் சபை நடத்திய பெரிய குருமடத்தில் சேர்ந்தார். குருத்துவத்திற்கான இறையியல் படிப்பையும் சபையின் ஒழுங்கு முறைகளையும் கற்று லாப் அடிகள் 1853 டிசம்பர் 7ஆம் தேதி திருநிலைக்கு உயர்த்தப்பட்டார். இவர் இந்தியாவில் மறைப்பணி ஆற்றுவதற்குப் பாரீஸ் நகரிலேயே தன்னைத் தயார்படுத்திக் கொண்டார். 1854 ஜனவரி 26ஆம் தேதி பாண்டிச்சேரி வந்தடைந்தார்.

### ஆசிரியர் பணி

பாண்டிச்சேரி மறைமாவட்ட ஆயர் கிளமெண்ட் பொன்னாந்து கல்லூரிக்கு ஓர் ஆசிரியர் தேவைப்பட்டதால் அங்குக் கற்றுக் கொடுக்க லாப் அடிகளை அனுப்பினார். அடிகளுக்குக் கல்லூரியில் பணியாற்ற விருப்பம் இல்லை என்றாலும் ஆயரின் ஆணையை ஏற்று 1854லிருந்து 1860 வரை பேராசிரியராகப் பணியாற்றினார். ஆயரவர்கள் "எனது திருப்திப்படி லாப் அடிகள் தனது ஆசிரியப் பணியை நிறைவேற்றுகிறார்" என்று கூறினார். "நான் பணித்தபடி அவர் தமிழும் கற்றுக் கொடுக்கின்றார். அவர் பாரீசில் இருக்கும்பொழுதே தமிழை நன்கு கற்றுத் தேர்ந்தார். லாப்

அடிகளுக்கோ மறை மாவட்டத்திலுள்ள பங்குகளில் பணியாற்ற மிகுந்த அவா. மறைப்பணியாற்றும் காலம் வரும்போது நான் அவருக்கு அதற்கான உத்தரவைக் கொடுப்பேன்'' என்று ஆயரவர்கள் கூறி விட்டார்கள். இரண்டாண்டு பரிசோதனைக்குப் பின் லாப் அடிகளை ஆயர் சபையின் நிரந்தர உறுப்பினராக்கப் பரிந்துரை செய்தார்.

## மறைப்பணி

தந்தை லாப் (1860-1885) 25 ஆண்டுகள் பங்குக் குருவாகப் பல்வேறு பங்குத் தளங்களில் பணியாற்றினார். இவர் ஒட்டப் பாலய மாவட்டத்தில் பொறுப்பேற்றுப் பணியாற்றினார். 1864இல் இரண்டாகப் பிரிக்கப்பட்ட பிறகு அருட்திரு லாப் அடிகள் தோலூர்பட்டிப் பகுதியில் பணியாற்றத் தொடங்கினார். 1869இல் பாலியாவிலும் (Palea) 1873இல் கோலானூரிலும் 1874இல் எறையூரிலும் பணியாற்றினார். இவர் புதிய ஆலயங்கள், பள்ளிக்கூடங்கள், குருவானவர் தங்குவதற்கான பல இல்லங்கள் கட்டி எழுப்பினார். இவர் அநேகம்பேரைக் கத்தோலிக்கத் திருமறைக்கு மனம் மாற்றினார். கோட்டப்பாளையம், தூலூர்பட்டி, வடுகர்பட்டி, கொலோனூர், புறத்தாக்குடி, எரையூர் போன்ற ஊர்களில் லாப் அடிகள் பங்குக் குருவாக இருந்து அரும்பணியாற்றியுள்ளார்.

மறுபடியும் பாண்டிச்சேரிக்கு 1885ஆம் ஆண்டு அழைக்கப்பட்டு அச்சுக்கூடத்திற்குப் பொறுப்பேற்றார். அடிகள் இங்கு மறைப் பணியோடு இலக்கியத் தொண்டும் செய்தார். 1893ஆம் ஆண்டு நவம்பர்த் திங்கள் 22ஆம் தேதி புதுவையில் இன்னுயிர் நீத்தார்.

## இலக்கியப் படைப்புகள்

தந்தை லாப் அடிகள் பாண்டிச்சேரிக்கு வருவதற்கு முன்பே தன்னைத்தானே தயாரித்துக் கொண்டதால் இங்குள்ள மக்கள் பேசும் தமிழ் மொழியைப் போதிய அளவு கற்றிருந்தார். இவர் ஏழு ஆண்டுகள் சிறிய குருமடத்தில் ஆசிரியப் பணியாற்றியபோது தமது தமிழறிவை ஆழப்படுத்தித் தேர்ச்சி பெற்றார். மேலும் இவர் மறைப்பணி ஆற்றிய 25 ஆண்டுகளில் மக்களோடு பழகியதன் பொருட்டு இவரது தமிழறிவு அதிகரித்தது என்று கூறலாம். அடிகள் தமிழைப் பல வழிகளில் கற்றார். இவர் மிகவும் துணிச்சலான செயலில் இறங்கினார். சக மறைப்போதகர் கூறினார், ''லாப் அடிகள் தமது கைப்பட எழுதியவைகளை ஏழு பகுதிகளாக வெளியிட முற்பட்டார்.'' விரிவுரைகள், வரலாறும் புதுமைகளும் என்பனவற்றைத் தமிழில் எழுதி அத்தோடு முக்கியமான தேவ இரகசியங்களையும், கத்தோலிக்க மதத்தில் பின்பற்றப்பட்டு வருபவைகளையும் தமிழில் எழுதி ஏழு பகுதிகளாக வெளியிடும் பணியில் இறங்கினார். இவரது செயல் மறைப்போதகர்களுக்கும்

பொதுமக்களான விசுவாசிகளுக்கும் அன்னார் ஆற்றிய சொல்லற்கரிய பணியாகும்.

தந்தையவர்கள் பள்ளி மாணவர்களுக்குப் பாட்டுக் கற்றுக் கொடுத்தார். அடிகள் தமிழில் பாடல்களை எழுதி அவற்றுள் தமக்குப் பிடித்தமான 93 பாடல்களைத் தேர்ந்தெடுத்து அவற்றைத் தொகுத்து ஒரு புத்தகமாக வெளியிட்டுள்ளார். இவை தவிரப் பிரெஞ்சு-தமிழ் இலக்கணம், பிரெஞ்சு-தமிழ் இலக்கணச் சுருக்கம், சிறிய தமிழ்-பிரெஞ்சு சொல்லகராதி, பிரெஞ்சு-தமிழ் பேச்சுக்கான கையேடு, சிறிய பிரெஞ்சு-தமிழ் பேச்சுக்கான கையேடு, கிராபர்ட்சன் முறைப்படி தமிழில் பாடங்கள், பாலர் சுவடி போன்ற நூல்களையும் எழுதியுள்ளார்.

லாப் அடிகள் ஒன்பது படைப்புகளை எழுதி வெளியிட்டுள்ளார். தமிழ்-பிரெஞ்சு சொல்லகராதி (Lexicographic Vocabulaire1886), பிரெஞ்சு-தமிழ் சொல்லகராதி (1891) ஆகிய இரண்டும், ஆக மொத்தம் ஒன்பது நூல்களும், ஒரு பாட்டுப் புத்தகமும் லாப் அடிகள் எழுதியுள்ளார் என்று தெரிகிறது. இவர் அகராதி எழுதியதன் நோக்கம் தந்தை துப்புயி, தந்தை முசே ஆகியோர் எழுதிய அகராதிகள் மிகவும் பெரியவையாயும் கனமாயும் இருந்த காரணத்தால் அவைகளை எடுத்துச் செல்வது கடினமாயிருந்தது. எனவே பேசுவதற்குக் குறைந்த உபயோகமான வார்த்தைகள் அடங்கிய ஒன்றை வெளியிட எண்ணி அவ்வார்த்தைகளைத் தேர்ந்தெடுத்து அகராதியை வெளியிட்டார். லாப் அடிகள் அனைத்துப் படைப்புகளையும் அற்புதமாக எழுதுவதற்கு முயற்சி செய்துள்ளார். இவர் எழுதிய இரண்டு அகராதிகளும் இவரது சக மறைப் போதகர்களுக்கும், இந்தியர்களுக்கும் தங்களுக்குப் பிடித்த இரண்டில் ஒன்றை (தமிழ் அல்லது பிரெஞ்சு)க் கற்றுக்கொள்வதற்கு ஒரு விலைமதிப்பில்லாத கருவிகளாய் அமைந்தன. தமிழ்- பிரெஞ்சு சொல்லகராதியில் விளக்கவுரைப் பகுதியில் 9000 தமிழ் வார்த்தைகளும் பிரெஞ்சு-தமிழ் அகராதியில் தமிழில் விளக்கத்துடன் 20230 பிரெஞ்சு வார்த்தைகளும் உள்ளன. சிறிய தமிழ்- பிரெஞ்சு சொல்லகராதி அநேக முறை ஆசியக் கல்விச் சேவை நிறுவனத்தால் அச்சிடப்பட்டது. லாப் அடிகள் முக்கியமாகப் பேச்சுத்தமிழைப் பதிவு செய்துள்ளார்.

படைப்புகள்

1. 93 தமிழ்ப் பாடல்களின் தொகுப்பு.
2. பாலர் சுவடி, புதுச்சேரி, 1886, ப.48.
3. சிறிய தமிழ்-பிரெஞ்சு சொல்லகராதி, புதுச்சேரி, 1886.
4. தமிழ்-பிரெஞ்சு சொல்லகராதி, புதுச்சேரி, 1886, ப.285.
5. பிரெஞ்சு-தமிழ்ப் பேச்சுக்கான கையேடு, புதுச்சேரி, 1891.

6. பிரெஞ்சு-தமிழ் அகராதி புதுச்சேரி, 1891, ப.811.
7. சிறிய பிரெஞ்சு-தமிழ்ப் பேச்சுக்கான கையேடு, இரண்டாம் பதிப்பு, 1892, ப.157, மூன்றாம் பதிப்பு, 1952, ப.112.
8. பிரெஞ்சு-தமிழ் இலக்கணம், புதுச்சேரி, மிஷன் அச்சகம், 1884.
9. இராபர்ட்சன் முறைப்படி தமிழில் பாடங்கள், மிஷன் அச்சகம், 1894, ப.174, புதிய பதிப்பு 1905, புதுச்சேரி, ப.174.
10. பாலர் சுவடி, ஜெ.பி.லாப், நான்காவது பதிப்பு, 1901, ப.94. தமிழ் வாசிக்க இரண்டாவது நூல்.
11. தமிழில் வாசிக்க முதல் நூல், 1903, 48 பக்கங்கள்.
12. பிரெஞ்சு-தமிழ் இலக்கணச் சுருக்கம், மிஷன் அச்சகம், 1904, 249 பக்கங்கள், புதுச்சேரி, மூன்றாவது பதிப்பு, 1932, ப.248.
13. பிரெஞ்சு-தமிழ் இலக்கணம், 1904, மிஷன் அச்சகம், புதுச்சேரி, ப.249.

## ஜெனோ
## (Chenot)

இவர் ஈல் தெ ரெயூனியோன் (Ile De Reunion) என்னும் தீவில் அமைந்த செயின்ட் டென்னிசு (Saint Denis) நகரில் ஆசிரியராகப் பணியாற்றி வந்தவர். தமிழில் ஆர்வம் கொண்டு 1849ஆம் ஆண்டு அதைக் கற்கலானார். இவர் அங்கு வாழ்ந்து வந்த தமிழர்களோடு தொடர்பு கொள்ளும் வாய்ப்பைப் பெற்றார். ஏனெனில் அங்குத் தமிழ் மக்கள் குறிப்பாகப் புதுச்சேரி மக்கள் குடியேறியிருந்தார்கள். இம்மக்கள் பழந்தமிழ்ச் சொற்களைப் பேச்சு மொழியில் உபயோகித்தனர் என்பது தெரியவருகின்றது. தமிழை ஓரளவு அறிந்தபோது அவர் அதன் தொன்மையையும், இனிமையையும் கண்டு மகிழ்ந்து அதனைத் தன் நாட்டவர் கற்றுக் கொள்ளும் வாய்ப்பைத் தேடலானார். அதற்குரிய வழி நூல் இயற்றுவதே சிறந்தது என்பதை அறிந்திருந்தார். தம் நாட்டு மக்களுக்கு உணர்த்துவதற்குத் தமிழ் எழுத்திலேயே நூலை வெளியிடுவதைக் காட்டிலும் உரோமன் லிபியில் வெளியிடுவது பயன் தருமென்று அறிஞர் கருதினார். இவர் இம்முறையைக் கையாண்டு தமிழ் கற்க விரும்பும் பிரெஞ்சுக்காரர்களுக்குத் தமிழ்ப் பாட நூல்களை எழுதினார். அந்நூல்களுக்குத் 'தமிழ்ப் பாட நூல்கள்' என்றே பெயரிட்டார். ஜெனோவின் இப்புதிய முறை பெரும் பயனை அளித்தது.

## ஜூல் கோதேன்
## (Jules Godin)

பிரெஞ்சுக் குடிமக்கள் உலகில் பல குடியேற்றங்களில் வாழ்ந்து வந்தனர். அப்படிப்பட்டவற்றில் புதுச்சேரியும் ஒன்று. இங்கு வாழும் மக்களுக்குப் பிரதிநிதியாகத் தேர்தலில் நின்று முதியோர் சபைக்குத் தேர்ந்தெடுக்கப்பட்டவர்களில் ஒருவர்தான் ஜூல் கோதேன். இவர் புதுவைக்குப் பலமுறை வரவும் இங்குச் சிறிது காலம் தங்கவும் வாய்ப்பு ஏற்பட்டது. அதனால் இவர் தமிழரோடு நெருங்கிப் பழக நேர்ந்தது. இப்பழக்கம் காரணமாகத் தமிழில் இவருக்கு ஆர்வம் ஏற்பட்டு, தமிழ்மொழியின் பால் இவர் தம் கருத்தைச் செலுத்தினார். இவர் தமிழின் உயர்வு, அதன் இலக்கிய நயம் முதலியவற்றை அறிந்து மகிழ்ந்தார். தமிழைப் பாரீசு நகரில் கற்பிக்கும் ஏற்பாட்டைச் செய்ய வேண்டுமென்றும் எண்ணினார். பெரும் முயற்சியினால் அவர் வெற்றியும் கண்டார்.

1879ஆம் ஆண்டில் பாரீசு நகரத்தின் பல்கலைக் கழகத்தில் தமிழ்ப் பிரிவு ஒன்று ஏற்படுத்தப்பட்டது. பிரெஞ்சு மாணவர்களுக்குத் தமிழ்ப் பாடம் விருப்பப் பாடமாக ஏற்படுத்தப்பட்டது. மாணவர் சிலர் அதில் சேர்ந்து தமிழைப் பயின்றனர். தமிழைப் பற்றிய எண்ணம் பிரான்ஸ் நாட்டில் ஜூல் கோதேனுக்கு முன்னரே வேரூன்றிற்று. தமிழ் மொழியின் சிறப்பை மக்கள் உணர்ந்திருந்ததற்குக் காரணமாயிருந்த அறிஞர்கள் யூஜின் புர்நோப்பும் (Eugene Bournouf) லாங்கெல்சும் (Langles) ஆவர்.

## ஜே.பி.அதாம்
## (J.B.Adam)

ஜே.பி.அதாம் பிரெஞ்சுக் குடிமகன். இவர் பாண்டிச்சேரியின் ஆளுகையில் உள்ள காரைக்காலுக்குத் தலைமை நீதிபதியாகப் பிரெஞ்சு அரசாங்கத்தால் அனுப்பப்பட்டவர். இவரது நாட்டம் இந்நாட்டு மொழியின்பால் சென்றது. இவர் தமிழ் மொழியை நன்கு கற்றுத் தெளிந்து தமிழின் சிறப்பையும் தமிழ் நூல்களின் பெருமையையும் நன்குணர்ந்தார். நீதி நூல்கள் இவர் மனத்தைக் கவர்ந்தன. இவர் பிரெஞ்சு மொழியில் திருவள்ளுவர் வரலாற்றை எழுதினார். ஔவையாரின் கொன்றை வேந்தனை ஆங்கிலத்திலும் பிரெஞ்சு மொழியிலும் மொழியாக்கம் செய்துள்ளார். இணைப்பாகக் கொன்றை வேந்தனின் தமிழ்ச் செய்யுளையும் கொடுத்துள்ளார். சிறப்பாக நீதிநெறியின் இலக்கியங்களான ஆத்திசூடி, வெற்றி வேற்கை, மூதுரை, நல்வழி, நன்னெறி, நீதிநெறி விளக்கம் ஆகிய நூல்களைப் பிரெஞ்சு மொழியாக்கம் செய்து வெளியிட்டார்.

இம்மொழிபெயர்ப்புகள் புதுச்சேரியிலும், பிரான்சு நாட்டிலும் பெரிதும் வரவேற்கப்பட்டன.

இவர் ஔவையார், அதிவீரராம பாண்டியன், சிவப்பிரகாச தீட்சிதர், குமர குருபர சுவாமிகள், திருவள்ளுவர் ஆகியோரின் வாழ்க்கை வரலாறுகளை எழுதியுள்ளார்.

1. ஔவையார் எழுதிய கொன்றை வேந்தன், பாண்டிச்சேரி, 1878.
2. திருவள்ளுவரின் வாழ்க்கை வரலாறு, காரைக்கால், 1879.
3. சிறுசிறு தமிழ்க் கவிஞர்களின் வாழ்க்கை வரலாறு, 1880.

## சார்லஸ் தலே
## (Charles Dallet) 1829-1878

1. இராபர்ட்சன் முறைப்படி தமிழ் இலக்கணம். சார்லஸ் தலே (M.E.P.) 310 பக்கங்கள் 19 அதிகாரங்கள். அசல் கைப்பிரதி பாரீசு மறைப்போதகத் தலைமையகத்தின் ஆவணக் காப்பகத்தில் உள்ளது.
2. தமிழ் எழுத்துக்கள். தலே அடிகளின் வழிகாட்டுதலின் பேரில் தமிழ் எழுத்துக்களை வடிவமைத்தவர் தந்தை பெர்ரண்ட் லோயிலே, 1863 தேசிய அச்சகம் பிரான்ஸ் 1863 (ஆவணக் காப்பகம், M.E.P.)
3. தமிழ் எழுத்தின் மாதிரி எழுத்தறைப் பலகை. தலே, 1875 தேசிய அச்சகம் (பிரான்ஸ்).
4. 20000 தமிழ் எழுத்துக்களுக்கு அகரத் திட்டம் அமைத்தது தந்தை தலே, 1875, பாரீசு அச்சகம்.
5. வீமனாவிலிருந்து தேர்ந்தெடுக்கப்பட்ட செய்யுள்கள். தலேயும், நலோட்டும் 1861. 30 பக்கங்கள் ஆங்கிலத்தில் மொழி பெயர்க்கப்பட்ட தமிழ்ச் செய்யுள்கள்; அசல் கையெழுத்துப் பிரதிகள். (MEP ஆவணக் காப்பகத்தில் உள்ளது)

## சார்லஸ் கோவர்
## (Gover, Charles, E)

பாப்லார் மிடில்செக்ஸ் நகரைச் சேர்ந்த தாமஸ் கோவரின் மகன் சார்லஸ் கோவர். இவர் 1864ஆம் ஆண்டு சென்னை எழும்பூரில் உள்ள மெட்ராஸ் மிலிட்டரி ஆண் அர்பன் விடுதியின் முதல்வராகவும் செயலாளராகவும் நியமனமானார்.

**பங்களிப்பு**

1. 1866ஆம் ஆண்டு ஆசியக் குழுவுக்கு (Asiatic Society) "தென்னிந்தியாவில் பொங்கல் திருவிழா'' என்ற தலைப்பில் ஒரு கட்டுரை அனுப்பி வெளியிட்டார்.

2. மற்றுமொரு பங்களிப்பானது தென்னிந்திய கீழ்த்தட்டு மக்களின் நல்லொழுக்க நிலைமையும் சமயத்தையும் பற்றிய பார்வை பற்றிய ஒரு தொகுப்பாகும். இதை ஆங்கிலத்தில் செய்யுள் வடிவில் எழுதியுள்ளார்.

3. ''தென்னிந்திய நாடோடிக் கதைகள்''. இதைக் கோர்ன்கில் வருடாந்திரச் செய்தித்தாளுக்கு (Cornhill Magazine) அனுப்பினார். இக்கட்டுரைகளைச் சேகரித்து 1877இல் வெளியிட்டுள்ளார்.

## தந்தை அருனோ பென்சோல்
## (Fr.Arnaud Pinsolle S.J.) 1833-1897

பிரான்ஸ் நாட்டில் காஸ்கோனி (Gascony) மாவட்டத்திலுள்ள சுஸ்தேன் (Soustons) என்னும் ஊரில் பக்திநிறை பென்சோல் தம்பதியருக்கு 1833ஆம் ஆண்டு பெப்ருவரி மாதம் 2ஆம் தேதி அருனோ பென்சோல் பிறந்தார். அப்பகுதியில் வாழ்ந்த மக்கள் சுறு சுறுப்பும் ஆற்றலும் மிக்கவர்களாய் இருந்தனர். புதிதாகப் பிறந்த அருனோ பென்சோல் மேற்கூறியபடி தனது துறவற வாழ்க்கையில் நடந்து காட்டினார்.

இவர் இளநிலை குருத்துவப் பயிற்சி அளிக்கும் மடத்தில் அடிப்படை மதக் கோட்பாடுகளைக் கற்று வரும்போது புனித ஞானப்பிரகாசியார் வாழ்க்கை வரலாறு நூலை வாசிக்கும்படி அவருக்கு அவரது அதிபர் கொடுத்தார். அருனோ பென்சோலும் அப்புனிதரைத் தனது மாதிரியாகவும் அவரைப்போன்று புனிதராகவும் தீர்மானித்தார். 1854ஆம் ஆண்டு முதுகலை முதுநிலை குருத்துவப் பயிற்சி அளிக்கும் மடத்தில் சேர்ந்து மெய்யியல், இறையியல் ஆகியவற்றைக் கற்றுத் தேர்ந்தார். இந்த மடம் இயேசு சபைக் குருவானவர்களால் நிர்வகிக்கப்பட்டு வந்தது. இங்குத் தலைமைப் பொறுப்பிலிருந்த தந்தையை அருனோ பென்சோல் அணுகித் தானும் துறவற இயேசு சபையில் சேர ஆசிப்பதாகக் கூறினார்.

எனவே அருனோ 1858ஆம் ஆண்டு தூலூஸ் நகரில் உள்ள இயேசு சபையில் இளந்துறவியாகச் சேர்ந்தார். இவர் பெற்ற பயிற்சிகளைப் பற்றிய குறிப்புகளை ஏட்டில் எழுதியுள்ளார். சபையின் நிறுவனரான புனித இன்னாசியார் இலோயோலா எழுதிய 30 நாள் ஞான ஒடுக்கத்தைச் செய்யும் பொழுது மறைப்பணியாற்ற மதுரை மறை மாநிலத்திற்குச் செல்லத் தீர்மானித்தார். அதன்படி தந்தை அருனோ பென்சோல் 1873ஆம் ஆண்டு ஏப்ரல் மாதம் 2ஆம் நாள் நாகபட்டினம் வந்து சேர்ந்தார். கல்லூரியில் இறையியல் பேராசிரியராகவும், மடத்தின் செயலாளராகவும் நியமிக்கப்பட்டார். ஓராண்டுக்குப்பின் மறைப் பணியாற்றத் தந்தை

பென்சோல் சூசையப்பர் பட்டினம் சென்றார் மறு ஆண்டு தந்தை திருச்சியிலுள்ள மடத்திற்குப் பொருளாளராகவும், பரிகார மாதாக் கன்னியர்களுக்கு ஆன்ம குருவாகவும் பணியாற்றினார்.

பத்தொன்பதாம் நூற்றாண்டில் அரசு தந்த ஊக்கமும், சில இயக்கங்களின் கல்வி நோக்கிய முனைப்பும் பெண்களுக்காகக் கல்வி நிறுவனங்களை ஏற்படுத்தச் சாதகமாயிருந்தன. பெண்கல்வியை மக்கள் சிறந்ததெனக் கருதவில்லை. மறைப்போதகர்கள் பெண்களுக்குக் கல்வி புகட்ட எண்ணிப் பள்ளிகளைத் திறந்தனர். இவற்றை ஏற்று நடத்துவதற்குத் திருச்சியில் இருந்த மதுரைப் பணித்தளத் தலைவர் கல்வி கற்பிக்கும் சகோதரிகளுக்கு ஒரு சபையை நிறுவத் தீர்மானித்தார். அதனோடு அறச்செயல் புரிய மற்றுமொரு சபை நிறுவப்பட்டது. 1876இல் புனித வியாகுல அன்னை சபை கல்வி கற்பிக்கும் சகோதரிகளுக்கும் 1877இல் புனித அன்னாள் சபை விதவைகளுக்கும் தொடங்கப்பட்டன. இவ்விரு சபைகளுக்கும் தந்தை அருனோ பென்சோல் வழி நடத்தும் இயக்குநராக நியமிக்கப்பட்டார். இக்கன்னியர்களின் ஆன்ம நலனுக்காக ஒவ்வொரு சபைக்கும் ஒழுக்கங்கள், தியானங்கள் அடங்கிய நூல்களைத் தமிழில் மொழி பெயர்த்துத் தந்துள்ளார்.

### தந்தை அருனோ பென்சோல் தமிழாக்கம் செய்து பதிப்பித்த நூல்கள்

1. புனித வியாகுல மாதா சபையின் ஒழுங்குகள். ஆசிரியரும் பதிப்பாளரும் தந்தை அருனோ பென்சோல். இயேசு சபை, திருச்சிராப்பள்ளி. முதல் பதிப்பு 1877.
2. ஞான பொக்கிஷம், புனித வியாகுலமாதா சபைக் கன்னியர்களுக்காக. ஆசிரியரும் பதிப்பாளரும் தந்தை அருனோ பென்சோல். இயேசு சபை, திருச்சிராப்பள்ளி.
3. புனித அன்னாள் சபையின் ஒழுங்குகள். ஆசிரியரும் பதிப்பாளரும் தந்தை அருனோ பென்சோல். இயேசு சபை, திருச்சிராப்பள்ளி. முதல் பதிப்பு 1877.
4. ஞான பொக்கிஷம், புனித அன்னாள் சபைக் கன்னியர்களுக்காக. பதிப்பாளர் தந்தை அருனோ பென்சோல். இயேசு சபை, திருச்சிராப்பள்ளி.
5. வருஷானுதின அனுசரணைக்குரிய புதுத் தியானங்கள். இது நமது ஆண்டவராகிய இயேசு கிறிஸ்துநாதரின் வாழ்க்கையையும், போதனைகளையும் ஆதாரமாகக் கொண்டு எழுதப்பட்டது. பிரதானமாய்த் துறவறத்தார் உபயோகத்துக்காக எழுதப்பட்டது. ஆசிரியர் புருனோ வெர்குரிஸ், இயேசு சபை. திருச்சிராப்பள்ளி, வி.பாக்கியம் பிள்ளை அன்ட் சன்ஸ் சௌத் இந்தியா டைம்ஸ் பிரஸ்,

1893. அருனோ பென்சோல் அடிகளும், தந்தை ஞானப்பிரகாசியாரும் தமிழில் திருத்தம் செய்தனர்.

6. ரொட்ரிக்கஸ் (Rodriquez) வெர்குயிசின் தியானங்கள். திருச்சிராப்பள்ளி, அர்ச்.சூசையப்பர் மடத்து அச்சுக்கூடம் 1898. அருனோ பென்சோல் அடிகளாலும், தந்தை சூசை மரியநாதராலும் தமிழில் திருத்தம் செய்யப்பட்டது

1897ஆம் ஆண்டின் இறுதிமாதத்தின் இறுதியில் திருச்சிராப்பள்ளியிலுள்ள புனித மரியன்னையின் பேராயலத்தின் இரு மருங்கிலும் அமைந்துள்ள இரு கன்னியர் மடங்களிலிருந்து அதிகாலையில் புலம்பல் சத்தத்தை அவ்வழியே சென்ற மக்கள் கேட்டு நின்று விசாரித்தனர். இரு கன்னியர் மடங்களுக்கும் நேர்ந்த ஒரு பெரிய பேரிழப்பு அது. இருபது ஆண்டுகளுக்கு மேல் இவ்விரு நிறுவனங்களையும் வழிநடத்தி வந்த அருட்தந்தை அருனோ பென்சோல் 1897ஆம் ஆண்டு கிறிஸ்து பிறப்பு விழாவிற்கு மறுநாள் 26ஆம் தேதி அதிகாலை மூன்றரை மணிக்கு இன்னுயிர் நீத்தார்.

## கோஸ்டன்
## (Hosten)

கோஸ்டன் ஒரு கல்வியாளர். தமிழ் அறிஞரான மரியதாஸ் பிள்ளையிடம் தமிழ் கற்றார். அவர் தமிழ் மொழியிலுள்ள பாகவதத்தை மரியதாஸ் பிள்ளையின் உதவி கொண்டு பிரெஞ்சு மொழியில் மொழியாக்கம் செய்தார். செய்யுள் வடிவிலுள்ள பாகவதம் பிரெஞ்சு மொழியில் விளக்க உரையுடன் உள்ளது. இந்நூல் 1920இல் மறுபதிப்பானது.

## ஆர்டன்
## (Arden A.H.)

அறிஞர் ஆர்டன் இங்கிலாந்தைச் சேர்ந்த ஓர் மறைப் போதகர். அவர் தமிழ், தெலுங்கு மொழிகளைப் பற்றிய முழுமையான அறிவு பெற்றவர். மேலும் அவர் தமது மறைப்பணியை மட்டுமல்லாது கல்விப் பணியிலும் ஈடுபட்டிருந்தார்.

இங்கிலாந்திலுள்ள கேம்ப்ரிட்ஜில் இந்திய சிவில் சர்வீஸ் அதிகாரிகளுக்குத் தமிழ் கற்றுக் கொடுத்தார். அறிஞர் படைத்த "A Progressive Grammar of common Tamil" என்னும் நூல் வெளிநாட்டவர் தமிழ் மொழியை இலகுவாகக் கற்றுக் கொள்ள மிகவும் பயனுள்ளதாக இருந்தது. இந்நூல் நான்கு பதிப்புகளைக் கண்டது. நான்காவது பதிப்பு

எ.சி.கிளேட்டன் (A.C.Clayton) அவர்களால் முழுமையாகத் திருத்தப்பட்டு 1934-இல் வெளியிடப்பட்டது. மறுபடியும் கிளேட்டன் இப்பதிப்பை மறு ஆய்வு செய்து, இதனுடைய ஐந்தாவது பதிப்பு 1942இல் வெளியானது.

**ஆர்டன் தமிழுக்கு அளித்த பங்களிப்பு**

1. தமிழில் குறிப்புகளுடன் கூடிய பஞ்சதந்திரக் கதைகளும் அவற்றின் மொழிபெயர்ப்பும்: (ஆர்டனின் தமிழ் வாசகம் என்ற நூலின் இரண்டாவது பிரிவு) Published by Messrs. Kegan Paul, French, Trabner and Co. Madras and London, 1873.
2. தமிழிலும் ஆங்கிலத்திலும் கேள்விகளும் பதில்களும் அடங்கிய படிவம். 1891.
3. A Progressive Grammar of Common Tamil, Madras, 1891.
4. A Companion Reader to the Progressive Grammar of Tamil Language (2 parts) London: Kegan Paul.
5. French, Trabner and Co. Madras and London, 1893.
6. Tamil Prose Reading Book, G.U.Pope (tr.)
7. A Companion Reader to Arden's Progressive Tamil Grammar, Madras, 1914.

## இராபர்ட் அட்கின்சன்
## (Atkinson Robert)

இராபர்ட் அட்கின்சன் ஒரு மொழியியல் வல்லுநர். அவர் திராவிட மொழிகளின் இலக்கணத்தை ஒப்பாய்வு செய்து ஒரு நூல் படைத்து வெளியிட்டுள்ளார்.

**படைப்பு**

1. Comparative Grammar of the Dravidian Languages, Dublin, 1846.

## பெர்ஜெஸ் ஜூல்ஸ்
## (Bergez Jules) 1835-1891

தந்தை பெர்ஜெஸ் ஜூல்ஸ், பேயி பியோ (Pays Beeot) என்னும் ஊரில் 1835ஆம் ஆண்டு அக்டோபர்த் திங்கள் 18ஆம் நாள் பிறந்தார். பாரீசு அந்நிய மறைப்போதக சபையில் உள்ள குருமடத்தில் 1853 ஜூலை மாதம் 27ஆம் தேதி சேர்ந்து பயிற்சி முடித்தார். இவர் 1858 மே மாதம் 29ஆம் நாள் குருவாகத் திருநிலைப்படுத்தப்பட்டார்.

1858ஆம் ஆண்டு தந்தை பெர்ஜெஸ் ஜூல்ஸ் புதுவைக்கு வந்து சேர்ந்தபின் தமிழ் மொழியைக் கற்றுக் கொண்டே காரைக்கால், புறத்தாக்குடிப் பகுதிகளில் மறைப்பணி ஆற்றினார். பின்னர்ப் பாளையத்தில் 1861 முதல் 1863 வரையிலும், கும்பகோணத்தில் 1863 இலிருந்து 1871வரையிலும் பணியாற்றினார். 1871இல் புதுவை மிஷன் அச்சகத்தில் அப்போது பொறுப்பிலிருந்த துப்புயி அடிகளுக்கு உதவி செய்ய வரவழைக்கப்பட்டார்.

1882ஆம் ஆண்டில் பிரெஞ்சு அரசானது தமிழ்ச் செய்யுள், தமிழ் இலக்கணம் ஆகியவற்றைக் கற்றுத் தரும் பொறுப்பை இவருக்கு வழங்கியது குறிப்பிடத்தக்கது.

1890இல் அடிகள் மிகவும் நோயுற்ற நிலையில் பிரான்ஸ் நாட்டிற்குத் திரும்பினார். உடல் நலம் நலிவடைந்த நிலையில் மோன் பெத்தோன் என்னுமிடத்தில் உள்ள உடல்நலக் காப்பகத்தில் (Sanatorium) ஓய்வு எடுத்து வந்தார். 1891ஆம் ஆண்டு நவம்பர் மாதம் 26ஆம் தேதி தமது 56வது வயதிலேயே இறைவனடி சேர்ந்தார்.

**தமிழ் இலக்கியப் பணி**

தந்தையவர்கள் பால பிரெஞ்சு இலக்கண நூலடையம் (தமிழில் அடிப்படைப் பிரெஞ்சு இலக்கணம்) என்ற நூலை வெளியிட்டுள்ளார்.

## பொத்தேரோ யூக்
## (Bottero Hugues) 1837-1913

பொத்தேரோ யூக் 1837ஆம் ஆண்டு சனவரி மாதம் 20ஆம் தேதி ஷாம்பெரி (Chambéry) என்னும் ஊரில் பிறந்தார். இவர் தமது 19வது வயதில் 1856ஆம் ஆண்டு மே மாதம் 8ஆம் தேதி பாரீசு அந்நிய மறைப்போதக சபையில் சேர்ந்தார். குருத்துவக் கல்லூரியில் மெய்யியலும், இறையியலும் கற்றபின் 1859ஆம் ஆண்டு திசம்பர்த் திங்கள் 22ஆம் நாள் குருப்பட்டம் பெற்றார்.

1860இல் தந்தை பொத்தேரோ புதுச்சேரி மறைத்தளத்திற்கு வந்து சேர்ந்தார். 1860முதல் 1869வரை பேராசிரியராகக் கல்லூரியில் பணியாற்றினார். பின்னர் 1868லிருந்து 1869வரை கடலூர் பங்கிலும், எறையூரிலும், புதுச்சேரியின் பேராலயத்திலும் மறைப்பணி யாற்றினார். பின்பு கொல்கத்தாவை அடுத்த சந்திர நாகூரின் பங்குத் தந்தையாக 1887ஆம் ஆண்டிலிருந்து 1890ஆம் ஆண்டுவரை மறைப் பணியாற்றினார்.

அப்போதைய புதுச்சேரியின் பேராயர் காந்தி (Gandy) ஆண்டகை அவர்கள் புதுச்சேரியிலிருந்து அதன் தென் பகுதியான தஞ்சாவூர் மாவட்டத்தைப் பிரித்துப் புதிய மறைமாவட்டமாகவும் அதற்குத் தலைமையகமாகக் கும்பகோணத்தை அமைக்க வேண்டுமென்ற கோரிக்கையை உரோமைக்குப் பரிந்துரை செய்தார். நான்கு ஆண்டுகளுக்குப் பிறகு இந்தத் திட்டத்தை உரோமை ஏற்றுக் கொண்டது. கும்பகோணத்தைத் தலைமையகமாகக் கொண்டு 28 பங்குத் தளங்களைக் கொண்ட மறைமாவட்டம் அமைக்கப்பட்டது. மறைப்போதகக் குருக்கள் ஒரே மனத்தவராய்ப் பொத்தேரோ அடிகளைத் தேர்ந்தெடுத்தனர். 1899ஆம் ஆண்டு செப்டம்பர் மாதம் முதல் தேதி திருச்சபை சட்டப்பிரகாரம் கும்பகோணம் ஒரு மறைமாவட்டமாக நிறுவப்பட்டது. உரோமையின் அதிகாரப் பூர்வமான நியமனத்தோடு 1899ஆம் ஆண்டு நவம்பர் 30ஆம் நாள் பொத்தேரோ அடிகளார் கும்பகோணத்தின் முதல் ஆயராகத் திருநிலைப்படுத்தப் பட்டார்.

பொத்தேரோ ஆண்டகை சிறப்பாகப் பணியாற்றிய மறைப்பணியாளர். அவருடைய மறையுரையைக் கேட்க மக்கள் மகிழ்வோடு வந்தனர். தூய பணிவாழ்வோடு அவர்தம் அறிவுச் சிந்தனையும், தடைப்படா ஆற்றலும் இணைந்தே சென்றன.

அவர் ஓய்வு பெற விரும்பியதற்கு உடல் நல நலிவு ஒரு காரணமாக இருந்தாலும், இணை ஆயரிடம் நிருவாகத்தை ஒப்படைத்து விட்டு, விட்டுப்போன நற்செய்தியின் மொழிபெயர்ப்பை முடிக்க விரும்பினார். மறைமாவட்ட நிர்வாகத்தின் பற்பல அலுவல்களுக்கிடையே பழைய, புதிய ஏற்பாடுகளைத் தமிழில் மொழிபெயர்த்தார்.

அயராது உழைத்து வந்த ஆயர் கும்பகோணத்தில் 1913 மே மாதம் 22ஆம் தேதி மரணமடைந்தார்.

### ஆயரின் கொடை

1. பாலர் சுவடி, மூன்றாம் பாடம். பி.பொத்தேரோ, புதுச்சேரி, மிஷன் அச்சகம் 1888-12 தமிழில் வாசிக்க மூன்றாவது நூல்.
2. சத்தியவேதப் புத்தகம் பழைய ஏற்பாடு. தமிழ் மொழியாக்கம், தந்தை பொத்தேரோ-புதுச்சேரி மிஷன் அச்சகம் 1904, 1600 பக்.
3. சத்திய வேதப் புத்தகம்: புதிய ஏற்பாடு, தமிழ் மொழியாக்கம், தந்தை பொத்தேரோ, மிஷன் அச்சகம் 1910, ப.1000.

## ரெவரெட் டாக்டர் கார்ல் கிரால்
## (Rev.Dr.Karl Graul) 1838-1879

ஜெர்மனி நாட்டில் சேக்சனியில் அமைந்துள்ள மீகெலன் என்னுமிடத்தில் 1838ஆம் ஆண்டு ஜனவரி முதல் நாள் கார்ல் கிரால் பிறந்தார். அவர் பள்ளி, கல்லூரிப் படிப்புகளை லீப்சிக்கில் முடித்தார். 1870இல் பாதிரியாராக அமர்த்தப்பட்டார். அதே ஆண்டு நவம்பர் மாதம் 19ஆம் தேதி இந்தியா வந்து சேர்ந்தார். 1879ஆம் ஆண்டு ஜூலை 15ஆம் தேதி தரங்கம்பாடியில் உயிர் நீத்தார்.

இவர் ஜெர்மன் மொழியில் திருக்குறளை மொழிபெயர்த்தார். ஆனால் முழுத் திருக்குறளையும் மொழிபெயர்க்குமுன் காலமானார். போப் ஐயர் இவரின் மொழிபெயர்ப்பைப் பயனுள்ள ஒன்று எனப் பாராட்டியுள்ளார்.

படைப்புகள்

1. Kural of Tiruvalluvar, High- Tamil text with Translation into Common Tamil and Latin, Notes and Glossary, Tranquebar, 1965.
2. Tiruvalluvar's Kural, (tr.in German) Leipzig, 1856.
3. "The Gopuras of Tiruvannamalai," Bulletin of the Madras Museum, VII.5 (1875), 161.
4. "Refutation of Buddhist system from the standpoint of Saivism," Journal of the German Oriental Society, Vol. VIII, Leipzig, (1854), 720-738.
5. "நம்பியினுடைய அகப்பொருள் விளக்கம்," Journal of the German Oriental Society, Vol.XI. (1857).
6. Indian Symbolic Plants and Flowers, characteristics of Indian and especially of Tamil Script, Erlangen, 1865.
7. Outline of Tamil Grammar, Otto Harrassowitz, Leipzig (1865), 101.
8. Kaivalyanavanitam: A Vedante Poem, (The Tamil text with a translation, a glossary and grammatical notes, to which is added an outline of Tamil grammar with specimens of Tamil Structure and Comparative tables of the fluxional system in other Dravidian Languages). Leipzig: Dorffling and Franke, 1855.

## தந்தை ஜோசப் பேசெய் சே.ச.
## (Fr.Joseph Faseuille, S.J.) 1839-1911

பிரான்ஸ் நாட்டில் 1839ஆம் ஆண்டு செப்டம்பர் மாதம் 26ஆம் தேதி பிறந்தார். இவர் ஆரம்ப, உயர்கல்விப் படிப்பை முடித்தபின் 1856இல்

தூலூஸ் மறைமாவட்டத்திலுள்ள இயேசு சபையின் குருமடத்தில் அனுமதிக்கப்பட்டு மறைப் பயிற்சிகளை முடித்து, குருவானவராகத் திருநிலைப் படுத்தப்பட்டு 1874ஆம் ஆண்டு மதுரை மறை மாநிலப் பணித்தளத்திற்கு வந்து சேர்ந்தார். இவர் பல்வேறு பங்குத் தளங்களில் பங்குக் குருவாக மறைப்பணியாற்றினார். குறிப்பாக வடக்கன்குளத்தில் நான்கு ஆண்டுகள் பணியாற்றினார். 1882ஆம் ஆண்டு பாளையங்கோட்டை மறை மாவட்டத்தில் மேல்பதவி வகித்தார். அதன்பின் 1884ஆம் ஆண்டிலிருந்து 9 ஆண்டுகள் திருச்சிராப்பள்ளியிலுள்ள புனித வளனார் கல்லூரியின் அதிபராகப் பொறுப்பேற்றார். தந்தையவர்கள் இரு பெரும் பதவிகளிலிருந்து விடுபட்டு மறுபடியும் பங்குத் தளங்களுக்குப் பணியாற்றச் சென்றார். இரண்டாண்டுகள் மதுரை மறை மாவட்டத்தில் மேல்பதவி வகித்தார். 1898ஆம் ஆண்டிலிருந்து 7 ஆண்டுகள் மதுரை மறைமாநிலத்தின் தலைமை அதிகாரியாகப் பொறுப்பேற்று மறைத் தளத்தைச் செவ்வனே நடத்தி வந்தார். இறுதியாகக் கொடைக்கானலில் உள்ள செண்பகனூரில் அமைந்த தூய திரு இருதயக் கல்லூரியின் அதிபராகப் பணியாற்றினார். 1911ஆம் ஆண்டு மே மாதம் 4ஆம் தேதி இன்னுயிர் நீத்தார். இவர் தெரோசியார் எழுதிய 'ஞான செல்வம்' என்னும் நூலை 1884ஆம் ஆண்டு பதிப்பித்துள்ளார்.

## எர்னஸ்ட் மார்டிநெட்
## (Martinet, Ernest)

எர்னஸ்ட் மார்டிநெட் ஒரு பிரெஞ்சு நாட்டு அறிஞர். இவர் பாண்டிச்சேரிக்கு வந்து தமிழ் கற்றுத் தமிழ் - பிரெஞ்சு அகராதியைத் தொகுத்து இரண்டு பகுதிகளாக வெளியிட்டுள்ளார்.

**பங்களிப்பு**

1. Dictionnaire De Pronunciation Tamoule Figurée En Français, 2 vol. Pondicherry: Government, 1890-97.
2. (தமிழ்-பிரெஞ்சு அகராதி, பிரெஞ்சு மொழியில் தமிழ் வார்த்தைகளின் உச்சரிப்புகளை எழுதியுள்ளார்.)

## ரெவரெண்ட் டபிள்யூ.எச்.ட்ரூவ்
## (Rev.W.H. Drew) 1840

டபிள்யூ.எச்.ட்ரூவ் புகழ் வாய்ந்த இராமனுஜ கவிராயரிடம் தமிழ் கற்றார். ஒரு ''பணிவுள்ள மனிதர், ஆர்வமுள்ள சமயப் பணியாளர், பண்பாடுள்ள மனிதர், ஆழ்ந்த பற்றுள்ள தமிழ் மாணவர்...தமிழில் சிறப்பு வாய்ந்த இலக்கியமான குறளுக்கு அவர் செய்த பதிப்பு, அது முற்றுப்

பெறும் வரையில் அவர் உயிருடன் இல்லாமல் மறைந்தாலும் ஐரோப்பியத் தமிழ் அறிஞர்களில் அவரை முதலிடம் பெறச் செய்கிறது...நான் நாள்தோறும் ட்ரூவுடன் மேற்கொண்ட உரையாடல் எனக்குத் தமிழாய்வில் ஊக்கத்தையும் அதிகப் பயனையும் அளித்தன" எனக் கவிராயர் குறித்துள்ளார். (1894 ப.52)

அவர் கவிராயரை நன்னூலுக்கு ஒரு காண்டிகை உரை எழுதுமாறு வற்புறுத்தினார். இராமானுஜ கவிராயர் அந்நூலில் ட்ரூவ் பற்றிக் கீழ்வருமாறு இரண்டு வரிகளில் பாடுகின்றார்:

இல்லையாந் தன்னிகரென உலகோது றூஉம்
முல்லையாந் துரு வெனும் ஒளிகொள் போதகன்

ட்ரூவ் கிறித்தவ சமயக் கருத்துக்களைப் பரப்பும் சிறு வெளியீடுகள் பலவற்றைத் தமிழில் வெளியிட்டுள்ளார். ட்ரூவ் மொழியாக்கம் செய்த ஆங்கிலத் திருக்குறள் பரிமேலழகரின் விரிவுரையுடனும் இராமானுஜ கவிராயரால் விரிவாக்கப்பட்டும் இரண்டு பகுதிகளாக வெளியிடப் பட்டது. சென்னை 1840-52, Vol.I, பக்கங்கள் IV+191+24+9., Vol.II பக். 320+10.

## ஹெர்மன் ஜென்சென்
## (Herman Jensen)

ஹெர்மன் ஜென்சென் ஒரு ஜெர்மன் அறிஞர். அவர் டேனிஷ் மறைத்தூதர். அவர் தமிழ்ப் பழமொழிகளை ஒரு நூலாக வெளியிட்டுள்ளார். ரெவரென்ட் பெர்சிவெலின் பழமொழிகளின் சேகரிப்பும் ரெவரென்ட் ஜான் லாசரஸின் தமிழ் மொழிகளின் அகராதி ஆகிய இவ்விருவரின் சேகரிப்புகள் ஹெர்மன் ஜென்செனின் சேகரிப்புக்கு உதவியாக இருந்தன. இந்நூலில் அகரவரிசையில் 3644 பழமொழிகளும் ஆங்கிலத்தில் குறிப்புகளும் அடங்கியுள்ளன.

**ஹெர்மன் ஜென்செனின் படைப்புக்கள்**

1. A Pictorial Reading Book for Europeans, 1882.
2. Tamil Proverbs, A classical collection, London, 1897.

## போலே மாரியுஸ் ஜோசப்
## (Baulez Marius Joseph) 1842-1906

தந்தை போலே மாரியுஸ் ஜோசப், மார்செய்ஸ் என்னும் துறைமுகப் பட்டணத்தில் 1842ஆம் ஆண்டு செப்டம்பர் மாதம் 12ஆம் நாள் பிறந்தார். 1864ஆம் ஆண்டு பாரீசு மறைப்போதக சபையின் குருமடத்தில் சேர்ந்து

குருவானவர் ஆவதற்காகப் பயிற்சிகளையும், மெய்யியல், இறையியல் ஆகியவற்றையும் பயின்று 1865ஆம் ஆண்டு திசம்பர் மாதம் 23ஆம் நாள் குருவாகத் திருநிலைப் படுத்தப்பட்டார். மறு ஆண்டு அதாவது 1866இல் புதுச்சேரி மறைத்தளத்திற்குப் புறப்பட்டுச் சென்றார்.

புதுச்சேரி வந்தடைந்ததும் தந்தை போலே, பெத்தி செமினேரியில் இரண்டு ஆண்டுகள் பேராசிரியராகப் பணியாற்றினார். 1868ஆம் ஆண்டு புறத்தாக்குடியில் உதவிப் பங்குக் குருவாகவும், 1869இல் கடலூரிலும், 1872இல் சேலத்திலும், 1874இல் சிறிது காலம் மட்டும் காரைக்காலிலும் பணியாற்றினார். பின்னர் 1875ஆம் ஆண்டிலிருந்து இறுதி வரை வேலூரில் பங்குக் குருவாகப் பணியாற்றினார். 1906ஆம் ஆண்டு ஏப்ரல் மாதம் 29ஆம் தேதி போலே அடிகள் உயிர் பிரிந்தது.

### அருட்தந்தை போலே அவர்கள் எழுதிய நூல்கள்

1. பஞ்ச தந்திரக் கதைகள். வி.யி.போலே விணிறி, பெங்களூர், கத்தோலிக்க மிஷன் அச்சகம்,1878.
2. தமிழ் உரையாடலின் கையேடு. வி.யி.போலே, விணிறி, மெட்ராஸ் இந்தியன் அச்சகம்,1883, ப.89.
3. விநோத வாசகக் கதைகள், M.J.போலே, MEP, புதுச்சேரி மிஷன் அச்சகம், 1885, ப. 96.
4. உரையாடல் கையேடு, ஆங்கிலமும் தமிழும்: (இந்தச் சிறிய நூலைச் சில நாள்கள் படிப்பதன் மூலம் புதிதாக ஐரோப்பாவிலிருந்து வந்து சேரும் குருவானவர்கள் பேச முடியும்.) வி.யி.போலே , விணிறி, புதுச்சேரி மிஷன் அச்சகம் 1895, பக்.72, மறுபதிப்பு 1904, 1915.
5. தமிழ் பயிலும் முறை, வி.யி.போலே, விணிறி, புதுச்சேரி மிஷன் அச்சகம் 1896, பக்.219-25, மறுபதிப்பு 1904, 1915.

## ஜூலியன் வேன்சோன்
## (Julien Vinson) 1843-1926

ஜூலியன் வேன்சோனின் தந்தை, வேன்சோன் தமது குடும்பத்துடன் பிரான்சு நாட்டிலிருந்து பாண்டிச்சேரிக்கு வந்து சேர்ந்தார். அந்நாட்டு அரசு அவரைக் காரைக்காலில் நீதி அரசராகப் பணியாற்ற அனுப்பியது. 1843ஆம் ஆண்டு பாண்டிச்சேரியில் ஜூலியன் வேன்சோன் பிறந்தார். இவர் சிறுவயதிலிருந்து தமிழ் கற்பதில் மிகுந்த ஆர்வம் காட்டினார். அவரது தந்தையும் அவர் தமிழ் கற்பதை ஊக்குவித்தார். 1861ஆம் ஆண்டு நீதி அரசரின் குறிப்பிட்ட காலப் பணி முடிந்தவுடன் தமது குடும்பத்துடன் தாயகம் திரும்பினார்.

ஜூலியன் வேன்சோன் தாயகம் திரும்பியபின் பாரீசில் உள்ள பல்கலைக் கழகத்தில் தமிழ் இலக்கியங்களையும், ஏனைய இந்திய மொழிகளான இந்துஸ்தானி, தெலுங்கு போன்ற மொழிகளையும், ஸ்பெயின் நாட்டிலுள்ள மூன்று மாவட்டங்களில் பேசப்படும் பாஸ்கு என்னும் மொழியையும் கற்றார். தமிழ், இந்துஸ்தானி, பாஸ்கு போன்ற மொழிகளில் ஆராய்ச்சிகள் செய்து பத்திரிக்கைகளில் வெளியிட்டுள்ளார். பிரான்ஸ் நாட்டிலுள்ள நான்ஸி (Nancy) என்னும் ஊரில் உள்ள கல்லூரியில் வனத்துறை சம்பந்தமாகக் கற்றுத் தேர்ந்து வனத்துறை, நீர்வளத்துறை ஆய்வாளராகப் பணியாற்றினார். 1873ஆம் ஆண்டு துணைப் புத்தக மதிப்புரை நிறுவனத்தில் பணியாற்றி வந்தார். 1879இல் ஜூலியன் வேன்சோன் கிழக்கத்திய மொழிகளான தமிழ், இந்துஸ்தானி மொழிகளடங்கிய மொழித்துறைக்குப் பொறுப்பேற்றுப் பேராசிரியராகப் பணியாற்றினார். 1880ஆம் ஆண்டிலிருந்து 1916ஆம் ஆண்டுவரை தனது வாழ்நாளில் 36 ஆண்டுகள் கிழக்கத்திய மொழிகளுக்கான பதிப்புரை நிறுவனத்தின் ஆணையராக இருந்து பணியாற்றியுள்ளார். பாரீஸ் பல்கலைக் கழகத்தில், கீழ்த்திசை மொழிகளில் அறிஞர் ஜூலியன் வேன்சோனின் திறமையைக் கண்டு தமிழ், தெலுங்கு கற்பிக்கும் பேராசிரியராகப் பணியமர்த்தப்பட்டார். 1926ஆம் ஆண்டு இவர் இறைவனடி சேர்ந்தார்.

பிரெஞ்சு மொழி பேசும் இந்திய எழுத்தாளரும், பன்மொழி வல்லுநரான இவர் இந்தியக் கதைகளைச் சேகரித்து, பாமர மக்களிடையே பரம்பரையாய் வழங்கிவரும் கதைகளைப் பற்றிய ஆய்வினை மேற்கொண்டு ஆராய்ச்சிக் கட்டுரைகள் பல எழுதியுள்ளார். தமிழ் மொழி அறிவை வளர்த்துக் கொள்ள மிகுந்த ஆர்வம் கொண்ட இவர் பல தமிழ்ப் புலவர்களோடு தொடர்பு கொண்டார். அவர்களில் உ.வே.சாமிநாதையர், நாகை வேதாச்சலம் பிள்ளை (மறைமலையடிகள்) பண்டிதர் சவேரியார், காரைக்கால் ஐயாக்கண்ணு, ஐயாசாமிப் புலவர் ஆகியோர் குறிப்பிடத் தக்கவராவர். தமிழைச் சிறந்த முறையில் சரளமாகப் பேசவும், எழுதவும் கூடிய ஆற்றல் பெற்றார். கூர்ந்த மதியுள்ள வேன்சோன் தமிழை விருப்பத்துடனும், கருத்துடனும் கற்றுத் தமிழ் நூல்களின் கருத்துக்களை அறிந்து கொள்ளும் ஆற்றல் பெற்றவராக இருந்தார்.

**எழுதிய நூல்கள்**

ஜூலியன் வேன்சோன் தாம் பெற்ற தமிழறிவைக் கொண்டு 'தமிழ்ப்பாட நூல்' என்னும் பெயரில் ஒரு நூல் இயற்றினார். இந்நூல் பிரெஞ்சு மக்களுக்கு அதிகப் பயனுள்ளதாயிருந்தது. இந்த நூல் பிரான்சு நாட்டில் தமிழ் கற்க விரும்பியவர்களுக்குப் பெரிதும் உதவியாகவும் பயனுள்ளதாகவும் இருந்தது எனலாம். இதன்பின் வேன்சோன் தமிழிலேயே சின்னஞ்சிறிய கதைகள் பல எழுதியுள்ளார். இக்கதைகளில்

தமிழ்நடை ஒரு தனி நடையாகத் தோற்றமளித்தது. இலக்கண அமைதியும் பொருட் செறிவும் கொண்ட இவரது படைப்பில் ஒரு புதுப்போக்கைக் காணலாம். தமிழில் எழுதும் ஆற்றல் பெற்ற வேன்சோன் தமிழிலிருந்து பிரெஞ்சு மொழிக்கு மொழியாக்கம் செய்யும் திறமையும் கொண்டிருந்தார்.

## இலக்கணமும் மொழியியலும்

பிரெஞ்சு மாணவர் நன்மைக்காகப் பிரெஞ்சு மொழியில் தமிழின் இலக்கணம் எழுதினார். ஜூலியன் வேன்சோன் பிரெஞ்சு மொழியில் "தமிழ் மொழி இலக்கணம், பாடங்கள், சொற்பொருள்கள்" (Manual de la Langue Tamuole, Grammarie, textes, vocabulaire) என்ற தலைப்பில் நூலை எழுதியுள்ளார். இந்த நூல் அவர் தமிழில் பதினான்கு உயிரெழுத்துக்களும், இருபத்தாறு மெய்யெழுத்துக்களும் உள்ளன என்று குறிப்பிட்டிருப்பது நமக்கு வியப்பளிக்கின்றது. அவர் சொற்களின் மூலங்களைப் பகுப்பாய்வு முறையில் ஆராய்ந்து எழுதியுள்ளார். இது பிரெஞ்சு மொழியில் வெளிவந்ததால் பிரெஞ்சு பேசும் மக்களிடையே பரவி நல்ல பயனை அளித்திருக்கக்கூடும் என்பதில் சந்தேகமே இல்லை எனலாம். இவர் பிரெஞ்சு மொழியில் எழுதிய சில பகுதிகளில் காணும் வரலாற்று நிகழ்ச்சிகள் மிகத் தெளிவாகவும், விரிவாகவும் இருக்கின்றன. இதை ஒப்பிட்டுப் படிப்போர் இந்தச் சிறப்பைக் காணமுடியும். மேலும் இவர் திருக்குறளின் ஒரு பகுதியைப் பிரெஞ்சு மொழியில் மொழிபெயர்த்துள்ளார்.

## கம்பன் பிரியர்

ஜூலியன் வேன்சோன் கம்பரின் படைப்பாகிய கம்பராமாயணத்தில் அதிக ஈடுபாடு கொண்டு ஆராய்ச்சி செய்தவராவார். கம்பராமாயணப் பாடல்கள் இவருக்கு இன்பத்தை ஊட்டின. இதில் சில பகுதிகளைத் தேர்ந்தெடுத்துப் பிரெஞ்சு மொழியாக்கம் செய்துள்ளார். தாடகை வதைப் படலம், அகலிகை பாவ விமோசனப் படலம் என்னும் இரண்டும் வேன்சோனால் பிரெஞ்சு மொழியாக்கம் செய்யப்பட்டு 1861ஆம் ஆண்டு பிரெஞ்சிந்திய அரசாங்கப் பத்திரிக்கையில் (Journal official de l'Inde Francaise) வெளி வந்தவையாகும்.

## ஆராய்ச்சியாளர்

வேன்சோன் அடுத்து வேறுசில தமிழ் இலக்கிய நூல்களாகிய சிலப்பதிகாரம், மணிமேகலை, சீவக சிந்தாமணி போன்றவற்றின் சில பகுதிகளை ஆராய்ச்சி செய்து பல கட்டுரைகள் எழுதி வெளியிட்டுள்ளார். ஆனால் ஒரு நூலின் முழு ஆய்வும் இவற்றுள் காணக் கிடைக்கவில்லை. இந்த அரிய கட்டுரைகள் மூலம் பிரெஞ்சு மக்கள் மேற்குறிப்பிட்ட நூல்களின் பெருமையை உணர்ந்தனர். இவர் ஆராய்ச்சி செய்து

வெளியிட்ட கருத்துக்கள் மிகச் சிறந்த முறையில் அமைந்துள்ளன. சான்றாக ஒன்றைக் குறிப்பிடுவோம். சீவக சிந்தாமணியைப் பற்றி வேன்சோன் எழுதியுள்ள கட்டுரையில் இரண்டொரு வரிகளை இங்குக் காண்போம். இவர் ''சிந்தாமணியில் இலக்கிய நயம் அதிகமிருக்கிறது. அதன் ஆசிரியரின் நடை ஒரு தனி நடையாகும். ஒரு பொருளைக் குறிக்கும் பல சொற்களை அவர் ஏராளமாகக் கையாளுகின்றார். சிந்தாமணி உயர்ந்த இலக்கிய நூலாக அமைந்துள்ளது. சிந்தாமணியின் உரை புலமை நடையில் எழுதப்பட்டுள்ளது'' என்று எழுதியுள்ளார்.

## மொழியில் அறிஞர்

மேலும் வேன்சோன் திராவிட மொழிகளைப் பற்றி ஆராய்ச்சிக் கட்டுரைகளைப் பிரெஞ்சுக் குடியரசு என்னும் பத்திரிக்கையில் 26 ஜூலை 1873ஆம் ஆண்டு வெளியிட்டுள்ளார். ''திராவிட மொழிகளும் திராவிடர்களைப் பற்றியதும்'' (Les Langues et les études Dravidiennes) என்ற தலைப்பில் எழுதி மேற்கூறிய அதே பத்திரிக்கையில் மே 12 1876ஆம் ஆண்டு வெளியிட்டுள்ளார். வேன்சோன் வரலாறு, வணிகம், அறிவியல் என்னும் மூன்று கோணங்களில் ஆராய்ந்துள்ளார். செந்தமிழ் இதழ்களில் பேராசிரியர் வேன்சோனின் இலக்கணக் கட்டுரைகள் இடம் பெற்றிருக்கின்றன.

Revue de linguistique, பகுதி 3, பக்.294- 306 களில் புத்தேலியர், அம்பார், புலவர், இமையார், ஐயா, அனான்கு, உண்மை, கடவுள், இறைவன், சாமி போன்ற வார்த்தைகளை 'ethimological' முறையில் ஆராய்ந்துள்ளார். சமண, புத்த மதங்களைப்பற்றி (Revue de linguistique, பகுதி 3, பக்.306-327களில்) ஆராய்ந்துள்ளார். சிந்தாமணியிலிருந்து ஜீவாத்மா, பரமாத்மா நாலடியாரிலிருந்து மோட்சம் போன்றவை மேற்கோள் காட்டப்பட்டுள்ளன.

கபிலனின் அகவலில் (L' Agaval de Kapila) இந்தியாவிலுள்ள சாதிகள் பற்றி (Revue ethnographique 1869, பகுதி 1 பக்.25-40) ஆராய்ச்சி செய்துள்ளார். வீரமாமுனிவர் இயற்றிய தேம்பாவணியைப் பற்றி ஆராய்ந்துள்ளார். இதில் முனிவர் மலைக்காட்சியைப் பற்றிக் கூறும்போது அது நற்செய்தியிலிருந்து எடுக்கப்படவில்லை. ஆனால் தெசே (Tesse) என்பவர் எழுதிய 'எருசலேம் மீட்கப்பட்டது' என்ற நூலில் தேம்பாவணியைப் பற்றிய ஆங்கிலிக்கன் மறைப்போதகர்களின் கருத்துக்களைப் பற்றி எழுதியுள்ளதிலிருந்து அதிகாரம் XVIII, 25 செய்யுள் பாக்களில் இந்த வருணனையை முனிவர் பாடியுள்ளார்.

டாக்டர் உ.வே. சாமிநாதையர் சீவக சிந்தாமணியைப் பதிப்பித்து வெளியிட்டதும் அதனைப் பார்த்த வேன்சோன் பெருமகிழ்ச்சியடைந்தார். சிந்தாமணிச் சுருக்கத்தைப் பிரெஞ்சு மொழியில் மொழியாக்கம் செய்து

அப்பெருங்காப்பியச் செல்வத்தை ஐரோப்பியருக்கு அறிமுகப்படுத்தினார். சாமிநாதையரின் பணியைப் பாராட்டிக் கடிதம் எழுதினார். இக்கடிதம் 1891ஆம் ஆண்டு ஏப்ரல் மாதம் பாரீசிலிருந்து வந்தது. சிந்தாமணிப் பதிப்பைக் கண்டு தாம் இன்புற்றதாகவும், சிலப்பதிகாரம் முதலிய மற்ற நான்கு காவியங்களையும் பதிப்பிக்க வேண்டும் என்பதாகவும் அவர் அக்கடிதத்தில் எழுதியிருந்தார். ''என்னுடைய புன் தமிழை உம்முடைய தயையினாலே வாசித்துக் கொண்டு ஒரு காகிதம் எமக்கு மறுபடியனுப்பினால் மிகவும் சந்தோஷமாயிருப்போம். சுவாமியுடைய கிருபையெல்லாம் உம்மேல் வருக! என்றும் உங்கள் சகத்தோழனும் பணியாளுமாய் (colleague and servant) ஆகியிருக்கிறேன்'' என்று அக்கடிதம் முடிக்கப் பெற்றிருந்தது.

பாரீசு நகரத்தில் உள்ள நூலகத்தில் சிலப்பதிகாரப் பிரதி கிடைக்குமா என்று விசாரித்து வேன்சோனுக்குச் சாமிநாதையர் கடிதம் எழுதினார். அதற்குப் பதில் கடிதமாக 1891ஆம் ஆண்டு மே மாதம் 7ஆம் நாள் அவர் எழுதிய கடிதம். ''தேசிய நூலகத்திலிருக்கிற (Bibliotheque Nationale) ஓராயிரம் கையெத்துப் புத்தகங்கள் ஸமக்கு நன்றாய்த் தெரியும். அவைகளை வரிசைப்படுத்தி (Catalogue) நூல் அட்டவணை எழுதியதில் சிலப்பதிகாரம் இல்லை. பழைய புத்தகங்களிலோ வென்றால் அந்த நூலகத்திலே மணிமேகலை ஒரு கையெழுத்துப் பிரதி உண்டு. ஆனால் நாம் போன மாசம் எழுதிய காகிதத்தில் சொன்னபடி அந்தப் பிரதியில் பற்பல கவியும், வார்த்தையும் எழுதாமல் விடப்பட்டிருக்கின்றது. பிரதியைத் தங்கள் சிறு புத்தகசாலையிலே வைக்க. ஆதலால் நீர் அதைப் பார்க்க வேண்டுமேல் அந்தக் கடுதாசிப் பிரதி அனுப்புவோம். நீர் அதைக்கண்டு இல்லாத கவிதைகளும் வார்த்தைகளும் போட்டுத் திருப்பி அனுப்புவோம்.''

வேன்சோன் எழுதிய மற்றொரு கடிதம் டாக்டர் உ.வே. சாமிநாதையர் அவர்களின் சதாபிஷேக வரலாறு என்னும் வெளியீட்டில் காணப்பட்டது. அது பின்வருமாறு:

பாரிசு
17.4.1895

எனதன்பிற்குரிய ஐயாவே,

நீர் அனுப்பிய 2 புத்தகங்களும் எழுதின கார்டும் என்கிட்ட சேர்ந்தன. ஆதலால் மிகவும் சந்தோஷம் பெற்றிருக்கிறேன். நீர் பெரிய வேலைக்காரனென்றும் (கடின உழைப்பாளி என்ற அர்த்தத்தில் இந்த வார்த்தை எடுத்தாளப்படுகிறது) மகாகனம் பொருந்திய வித்துவானாயிருக்க வேணுமென்றும் நினைத்து வருகிறேன். பணமோவென்றால் இன்றுமெப்படியதை அனுப்பலாமென்றெனக்குத் தெரியாது. ஆனால் சில

நாட்களில் எப்படியாகிலும் புதுச்சேரி வழியாய்ச் சென்னைப் பட்டணம் வழியால் அனுப்புவேன். மணிமேகலையை அச்சிட்டு முடிக்கும்போது 2 பிரதிகளை அனுப்புக. அது உரையின்றி இருக்குமோ? உரையை எழுதினீரோ?

இங்ஙனம்
தங்கள் அன்பன்
J. Vinson

**வில்லைப் புராணம்**

வேன்சோன் பாரீசிலுள்ள தேசிய நூலகத்தில் இருந்த தமிழ் நூல்களின் பட்டியலை உ.வே.சாமிநாதையரின் வேண்டுகோளுக்கிணங்க அவருக்கு அனுப்பி வைத்தார். அப்பட்டியலில் 'வில்லைப் புராணம்' என்னும் பெயரில் நூல் ஒன்றிருக்கக் கண்டார். திருக்கோயில்களமைந்த ஊர்களைப் பற்றி எழுந்த பல புராணங்களை உ.வே.சாமிநாதையர் அச்சில் கொணர்ந்து வெளியிடும் தொண்டை மேற்கொண்டிருந்தமையால் இந்த வில்லைப் புராணத்தைப் பற்றிய விவரங்கள் பலவற்றையும் அறிந்து கொள்ள விழைந்தார். இந்நூலைக் கண்ட ஐயர் இது ஒரு சிறந்த புலவரால் எழுதப்பட்டுள்ளதென்பதை அறிந்து மகிழ்ந்தார். தமிழ் நாட்டில் உள்ள சைவத் திருத்தலம் ஒன்றைப் பற்றிய நூல் இஃதென்பதைத் தெரிந்துகொண்டார். ஆனால் அத்தலம் எங்குள்ளதென்பதையும் அதன் வரலாறு யாது என்பதையும் அறிந்து கொள்ளும் வாய்ப்பு அவருக்கு அப்போது நேரவில்லை. சிறிது காலம் சென்றபின் ஐயர் புதுச்சேரிக்கு வர நேர்ந்தது. புதுச்சேரிக்கு அருகிலுள்ள வில்லியனூர் என்னும் தலத்திற்குச் சென்றார். இது ஒரு சிவதலம். இறைவன் பெயர் திருக்காமீசுரர். இறைவியின் பெயர் கோகிலாம்பாள். வில்வனூர் அல்லது வில்லியனூர் என்று வழங்கப்படுகின்ற புராணமே வில்லைப் புராணம் என்பது தெளிவாயிற்று. குயிலம்மை என்ற சொல்லைக் கொண்டு விளங்கிய தேவியே கோகிலாம்பாள் என்னும் பெயரால் குறிக்கப்படுகின்றார் என்பதையும் உணர்ந்தார். இப்புராணம் வில்லியனூர் அமைப்பு, இவ்வூர்த் திருக்கோயிலின் பெருமை, இதன்கண் எழுந்தருளியிருக்கும் இறைவன் இறைவியர் சிறப்பு முதலியவற்றை வெளியிடுகிறது. இப்புராணம் பெரும்புலவர் ஒருவரால் இயற்றப்பட்ட தென்பதை அறிந்து உறுதிப்படுத்திக் கொண்டார்.

**கவிதை புனையும் ஆற்றல்**

உ.வே.சாமிநாததையருக்கு எழுதிய பல கடிதங்களில் வேன்சோன் பல கவிதைகளை எழுதியுள்ளார். சான்றாக: சிந்தா மணியாஞ் சிறப்புடைய காப்பியமே, பொன் றாதின் மாலை பொருந்திவரக்-

கண்டேன், சிலப்பதிகார முதல் சீர் நூல்கள் நான்கும், அளித்தலாம் என்மர் அறைந்து.

### வேன்சோன்-போப்

"பாரிசு நகரிலிருந்த ஜூலியன் வேன்சோனது தமிழன்பையும் ஆக்ஸ்போர்டில் இருந்த போப்பினுடைய தமிழன்பையும் ஒப்பிட்டுப் பார்த்தேன். ஒவ்வொன்றும் ஒவ்வொரு முறையில் சிறப்புடையதாக இருந்தது. இருவரிடத்தும் விடா முயற்சியும், மேற்கொண்ட காரியத்தில் ஆழ்ந்த அன்பும் இருந்தன." இவ்வாறு டாக்டர் சாமிநாதையர் 'என் சரிதம்' என்னும் தம் வாழ்க்கை வரலாற்றில் குறிப்பிடுகின்றார்.

### நூல் பட்டியல்

அறிஞர் ஜூலியன் வேன்சோன் பாரீசில் உள்ள தேசிய நூல் நிலையத்தில் உள்ள தமிழ் ஓலைச் சுவடிகள், கைப்பிரதிகள், அச்சிட்ட நூல்களின் பட்டியலைத் தயாரித்தார். கீழ்க்காணும் நூலும் அப்பட்டியலில் அடங்கும்.

1. Catalogue des Manuscripts tamouls et télingas- Par Julien Vinson et Léon Feer MSS Tamouls 1-496 et 497- 574. et télingas 1-59 et 60-65. 1867-1903, è£Aî‹, 142 ð,è𝑓èœ 240x310mm (Bibliothèque Nationale de Paris.
2. பொதுவாக ஜூலியன் வேன்சோன் தமிழ் மொழிக்காற்றிய பணி சிறந்த ஒன்றாகும்.

### ஜூலியன் வேன்சோன் அவர்களின் படைப்புகள்

1. பிரெஞ்சு மொழியில் ஒரு தமிழ் இலக்கணம் படைத்துள்ளார்.
2. சீவக சிந்தாமணியின் சுருக்கமும் பொருள் நிறைந்ததுமாகப் பிரெஞ்சு மொழியில் எழுதியுள்ளார்.
3. (தொன்மையான தமிழ் இலக்கியம்: செய்யுள் இதிகாசமான கம்பரின் இராமாயணம்) பாண்டிச்சேரி, 1861.
4. "திராவிட மொழிகள்" பிரெஞ்சுக் குடியரசு (1893) 26.
5. திராவிட மொழிகளும் திராவிட இலக்கியங்களின் ஆராய்ச்சியும். பிரெஞ்சுக் குடியரசு (1876) 12.
6. திராவிட மொழிகளில் ஒன்று சேர்த்தல் (conjugation), பிரெஞ்சுக் குடியரசு (1876).
7. மொழி சம்பந்தமானதும் மனித இனங்கள் பற்றிய விளக்க ஆய்வியலும் பற்றிய ஆராய்ச்சி, பாரீஸ் (1878).
8. திராவிட மொழிகளில் வினைச்சொல், பாரீஸ் (1878).

9. திராவிட மொழிகளின் வரலாற்று ஆராய்ச்சிக்காகப் பயன்படும் ஆவணங்கள், பிரெஞ்சுக் குடியரசு, (1879), 13.
10. திராவிட மொழிகளிலுள்ள 'தென்சும்' (dens) இஸ்மானிய மொழியிலுள்ள 'தியென்' (dian) RL (1879), 13.
11. "திராவிட மொழிகள்" அறிவியல் புனராய்வு, ஸிலி, (1880), 14.
12. மொழிகளின் அறிவியலும் திராவிட ஆராய்ச்சிகளும், ஸிலி (1880) 14.
13. செய்யுள் வடிவில் உள்ள இதிகாசமான சிந்தாமணியிலிருந்து ஒரு கிளைக்கதை, பாரீஸ் (1883).
14. "தமிழ்ச் செய்யுளில் எதுகை" ஸிலி, (1894), 28.
15. இந்தியாவில் பிரெஞ்சு மக்கள்: டியூப்ளேவும் புர்தோனியர்களும் (ஆனந்த ரங்க பிள்ளையின் குறிப்புகளிலிருந்து எடுக்கப்பட்ட பகுதிகள் 1736-1748, பாரீஸ் (1894).
16. "அராபி எழுத்து திராவிட மொழிகளில் இணக்குதல் J.A. (1875), 5.
17. பேச்சுத்தமிழில் மொழியியல் மாறுபாடுகள், பாரீஸ், 1895.
18. தமிழிலுள்ள புத்த ஜைன மதப் புராணக் கதைகளின் பிரெஞ்சு மொழியாக்கம், பாரீஸ், 1895.
19. தமிழும் சமஸ்கிருதமும் (சில பிரச்சினைக்குரிய கருத்துக்கள் களையப்பட்டன), S.D.V. (1901) 1&2, 31. சித்தானந்த தேசிகர், Vol. 1&2 (1901) 310.
20. "மாணிக்கவாசகரும் தமிழ் இலக்கியத்திலுள்ள பிரச்சினையும்," சித்தானந்தா தேசிகர், IX-2. (1908), 35-38.
21. "பெஸ்கியின் தமிழ்ப் படைப்புக்களைப் பற்றிய பிற்சேர்க்கைக் குறிப்பு" மொழி சார்ந்ததும் மொழி நூல் சார்ந்த ஒப்பாய்வின் புனராய்வு. 39, (1909), 198-201.
22. "அச்சான முதல் தமிழ் அகராதி" மொழி சார்ந்ததும் மொழி நூல் சார்ந்த ஒப்பாய்வின் புனராய்வு, 43 (1910), 74-82.
23. "தமிழ் அகர வரிசையில் ஒற்றெழுத்துப்பற்றி" J.A.(1916) 7.
24. தமிழ் மொழியின் கையேடு நூல் (இலக்கணம், பாடநூல், அகராதி), பாரீஸ், 1930.
25. கைப்பிரதிகளின் அட்டவணை (தமிழ், தெலுங்கு), பாரீஸ்.
26. "திராவிட மொழியில் ல், லு, ஒன்று முதல், அனைத்திந்திய மொழியியல் கருத்தரங்கின் நடவடிக்கைக் குறிப்பேடு, பூனா, 1970.

## சாமுவேல் பால்
## (Samuel Paul) 1844-1900

கிறித்தவக் கருத்துக்களைத் துண்டுப் பிரதிகளாக அச்சிட்டு வெளியிட்டார். 1890 முதல் 'நற்போதகம்' என்ற இதழை நடத்தி வந்தார். பரதேசியின் மோட்சப் பிரயாணம் என்று 1882இல் The Pilgrims Progress என்ற ஆங்கில நூலைத் தமிழ்ப்படுத்தி வெளியிட்டார்.

## பெய்சென்கெரென்
## (Beissnhern.H.) 1844 -

பெய்சென்கெரென் ஜெர்மனியிலுள்ள லெய்பிக்கு என்னும் ஊரில் 1844ஆம் ஆண்டு பிறந்தார். இவர் ஒரு கிறித்துவ மறை பரப்பும் பாதிரியாராகத் தரங்கம்பாடிக்கு வந்தார். தரங்கம்பாடிக்குழு 1897ஆம் ஆண்டு ஓர் அகராதியை வெளியிட்டது. இந்த அகராதி பபிரியுஸ் எழுதிய தமிழ்-ஆங்கில அகராதியை அடிப்படையாக வைத்து எழுதப்பட்டது. இவ்வகராதி 656 பக்கங்கள் கொண்டது. 11590 முக்கியமான வார்த்தைகளும், 21305 மூலத்திலிருந்து தோன்றிய வார்த்தைகளும் சொற்றொடர்களும் இந்த அகராதியில் தொகுக்கப் பட்டுள்ளன.

பெய்சென்கெரென் 1910ஆம் ஆண்டு இந்த அகராதியின் இரண்டாம் பதிப்பைத் திருத்தித் தற்காலத்துக்கு ஏற்றவாறு அமைத்தார். இந்த வேலையில் இவருக்கு உதவியாக ரெவெரெண்ட் என்.சாமுவேலும் பண்டிதர் முத்துத்தாண்டவ பிள்ளையும் இருந்தார்கள்.

**அகராதி**

தமிழும் ஆங்கிலமும், தரங்கம்பாடி, 1897. (A Dictionary: Tamil and English, Tranquebar, 1897).

## தந்தை லியோ பெஸ் சே.ச.
## (Fr.Leo Besse S.J.) 1853-1919

தந்தை லியோ பெஸ் பிரான்ஸ் நாட்டில் 1853ஆம் ஆண்டு மார்ச் திங்கள் 27ஆம் நாள் பிறந்தார். தூலூஸ் மறை மாவட்டத்திலுள்ள குருமடத்தில் 1881ஆம் ஆண்டு இயேசு சபையில் சேர்ந்து, குரு ஆவதற்கான அனைத்துப் பயிற்சிகளையும் முடித்த பின்பு, 1888ஆம் ஆண்டு இந்தியாவை நோக்கிப் பயணம் மேற்கொண்டு, திருச்சிராப்பள்ளியில் உள்ள புனித வளனார் கல்லூரியை வந்தடைந்தார். அந்நகரிலுள்ள புனித ஆரோக்கிய மாதா தேவாலய வளாகத்தில்

அமைந்துள்ள குருக்களுக்கான மடத்தின் அதிபராக 1889-லிருந்து 1909 வரையில் நிர்வாகம் செய்தார். இப்பதவியை அடுத்து 1909ஆம் ஆண்டு மதுரை மறைமாநிலத்தின் அதிபராகப் பொறுப்பேற்றுச் சிறந்த முறையில் சகபணியாளர்களை வழி நடத்தி வந்தார். 1919ஆம் ஆண்டு மே மாதம் சென்னையிலுள்ள ஒரு தனியார் மருத்துவ மனையில் மரணமடைந்தார். பெஸ் அடிகள் மறைப்பணியும், நிர்வாகமும் செய்ததோடு அல்லாது பல நூல்களைத் தமிழிலும், பிரெஞ்சு, ஆங்கில மொழிகளிலும் எழுதியுள்ளார். இவர் அநேக ஆராய்ச்சிக் கட்டுரைகள் எழுதி வெளியிட்டுள்ளார்.

இவர் எழுதிய மலபார் மாநிலத்தின் வரலாறு ஒன்று கைப்பிரதியாக இருந்தது. புதிய மதுரை மறைத்தளத்தில் உள்ள ஒவ்வொரு பங்கைப் பற்றிப் பிரெஞ்சில் எழுதியது அச்சாகி நூலாக வெளிவந்தது. இந்நூல் ஆங்கிலத்தில் மொழிபெயர்க்கப் பட்டுள்ளது. மேலும் இவர் பெஸ்கி அடிகளின் வாழ்க்கை வரலாற்றைப் பதிப்பித்து வெளியிட்டார். பெஸ்கி எழுதிய செந்தமிழ் இலக்கணத்தையும் பதிப்பித்து வெயியிட்டார். இவர் தெ நொபிலி எழுதிய அனைத்து ஆவணங்களையும் சேகரித்து அவைகளில் அநேக ஆவணங்கள் இத்தாலிய, போர்ச்சுக்கீசிய மொழிகளில் தெளிவின்றியும், புரியாமலும், மோசமாகவும் எழுதியவற்றைப் பொருள்கள் கண்டுபிடித்துத் திருத்தி எழுதினார்.

### தந்தை லியோ பெசின் படைப்புக்கள்

1. துணை சகோதரர்களுக்கான கையேடு. Uclès 1888 (அருட்தந்தை கல்வேட்டின் அறிவுரையுடன் தந்தை எத்தியன் சார்ரின் ஒத்துழைப்புடன் எழுதப்பட்ட நூல்) (Manual of Coadjuteur Brothers, Uclès, 1888, under the direction of R.P.Calvet in collaboration with Fr.Estienne Charel.
2. புனித ஜான் பெர்க்மான்சின் பேரில் நவநாள் செபம் (இஸ்பானிய மொழியிலிருந்து மொழியாக்கம் செய்யப்பட்டது) 1894 (Novena to St.John Berchmans, translated from Spanish. 1894).
3. முத்துப்பேர் பெற்ற பால்டினுச்சியின் வாழ்க்கை (தந்தை F.A.Feirestein, S.J.) 1904.
4. திரு இருதய ஆண்டவரின் மேல் பக்திச் சின்னக் குறிப்பிடம், 1895, மறுபதிப்பு,1902.
5. ஒவ்வொரு மாதத்தின் முதல் வெள்ளிக் கிழமை பக்தி நூல் முதல்பதிப்பு 1895, 2வது பதிப்பு, 1902.
6. முத்திப்பேர்பெற்ற பெர்னாடின் ரியலினோவின் வாழ்க்கை வரலாறு. (தந்தை Feierstein எழுதி, பிரெஞ்சு மொழியிலிருந்து ஆங்கிலத்தில் மொழியாக்கம் செய்யப்பட்டது, 1896.

7. மரியாள் நாள். புலாட் (Blot) இத்தாலி மொழியில் எழுதியது ஆங்கிலத்தில் மொழிபெயர்க்கப்பட்டது.) 1897.
8. கிறித்தவ மறையின் தெய்வத் தன்மையின் தொடக்கம், ஒரு வரலாற்று உண்மை, 1897.
9. நமது புனித வியாகுல மாதாவின் கடவுள் பற்று, தந்தை பெரோரோ எழுதியது, புதுப் பதிப்பு, 1897.
10. உண்மையான ஒப்புரவு சாதனம். விண்ணகத்தைத் திறக்கும் அபேபாபிரு எழுதிய பிரெஞ்சு நூலின் சுருக்கம்.1897. (Heaven opened by a sincere confession, abridged from French of M.L'Abbé Fabre, 1897).
11. நல்ல பாவசங்கீர்த்தனம் (மொழியாக்கம் தந்தை மரிய சூசைநாதர்) முதல் பதிப்பு 1896, இரண்டாவது பதிப்பு 1900, மூன்றாவது பதிப்பு 1903.
12. முத்துப்பேர் பெற்ற அல்போன்ஸ் இரோட்ரிக்கஸ் அடிகளின் வாழ்க்கை வரலாறு (சந்நியாசி அமிர்தநாதரால் மொழியாக்கம் செய்யப்பட்டது. 1906. (Life of Blessed Alphonus Rodrgiiur, translated into Tamil by Amirthanathar Sanyasi).
13. மாதாந்திர நெறி முறைகள். (Monthly instructions 1898,1899).
14. கிறித்துவ சமயம் இந்துக்களுக்குப் பொருத்தமில்லாததா? பகுதி-1 (Is Christianity unsuited to the Hindus. Part- 1).
15. அமல உற்பவம். 1904. (The Immaculate Conception, 1904).
16. புனித ஜோசப் கலசானாவின் கோட்பாடுகள், துண்டுப் பிரசுரம். (Maxims of St.Joseph Calasana. Leaflet).
17. ஞான செல்வம், பழைய இயேசு சபையின் ஒரு தந்தை எழுதியது. (Gnana Selvam, by an old missionary of Madurai Mission.).
18. மதுரை மறைத்தளம், லியோ பெஸ் அடிகள். (La Mission du Maduré) திருச்சிராப்பள்ளி, 1914.
19. தந்தை பெஸ்கியின் காலங்களும் படைப்புகளும். லியோ பெஸ் திருச்சி 1918.

## தந்தை ஜான் காஸ்தெஸ், சே.ச.
## (Fr.John Castets,S.J.) 1858-1936

1858ஆம் ஆண்டு ஜூலை மாதம் 22ஆம் நாள் ஜான் காஸ்தெஸ், பிரான்ஸ் நாட்டிலுள்ள ஓரிஸ் (Aurice) என்னும் ஊரில் பிறந்தார். இவர் இலத்தீன் மொழியிலுள்ள உயர்தர இலக்கியங்களை அயிர் (Aire) என்னும்

நகரிலுள்ள இளநிலைக் குருமடத்தில் தொடங்கி, போர்தோ (Bordeaux) வில் மிகத் திறமையோடு தமது குருத்துவத்திற்கான இளநிலைப் படிப்பை முடித்துவிட்டு 1879ஆம் ஆண்டு செப்டம்பர் மாதம் தூலூஸ் நகரிலுள்ள நவ சந்நியாச மடத்தில் சேர்ந்தார். ஸ்பெயின் நாட்டிலுள்ள ஓனாவில் ஏனைய மறைப் பயிற்சிகளை முடித்துவிட்டு இந்தியாவிலுள்ள மதுரை மறை மாநிலத்தில் அமைந்துள்ள நாகபட்டினத்தில் நிறுவப்பட்ட கல்லூரிக்குப் பல்கலைக் கழகப் படிப்பிற்காகத் தேர்வு செய்யப்பட்டு மதுரை மறைத்தளத்திற்கு 1881ஆம் ஆண்டு ஆகஸ்டு மாதம் 30ஆம் தேதி வந்தடைந்தார். இவர் 55 ஆண்டுகளாக இத்தளத்தில் பணியாற்றினார். 'நான் அநேக இந்தியர்களைவிட இந்தியக் குடிமகன். ஏனென்றால் நான் ஐம்பத்தைந்து ஆண்டுகள் இந்த நாட்டில் வாழ்ந்துள்ளேன்' என்று இவர் கூறுவது வழக்கம்.

தந்தை ஜான் காஸ்தெஸ் நல்ல அறிவுத்திறமையும், ஆரோக்கியமான உடற்கட்டும், அறிவு ரீதியான வேலைக்கு மிகுந்த திறமையுள்ளவராக இருந்தார். இவர் பல்கலைக் கழகத் தேர்வுக்குத் தன்னைத்தானே தயாரித்துக் கொண்டிருந்த பொழுது கல்லூரியில் வரலாறு கற்பித்தார். பாடற் குழுவின் நடத்துனராகப் பணியாற்றினார். மேலும் இவர் கல்லூரியிலுள்ள அருங்காட்சியகத்திற்குக் காப்பாளராகவும் மட்டுமின்றி உதவியாளர்களைக் கொண்டு அருங்காட்சியகத்திற்குத் தேவையானவைகளைச் சேகரிக்கவும் செய்தார்.

புனித வளனார் கல்லூரியில் பணியாற்றிக் கொண்டிருந்த தந்தையவர்கள் தலோன் (Talon), பெஸ் (Besse), பெசாந்தியர் (Faissandier) ஆகியோரின் கண்காணிப்பில் மறையியலைக் கற்றபின் 1893இல் குருவாகத் திருநிலைப் படுத்தப்பட்டார். 1894ஆம் ஆண்டு தந்தை காஸ்தெஸ் சென்னைப் பல்கலைக் கழகத்தின் வரலாற்றுப் பாடத்துக்குத் தேர்வு நடத்துபவராக நியமிக்கப்பட்டார். இவர் அப்போது கல்லூரியில் வரலாற்றுப் பேராசிரியராகப் பணியாற்றினார்.

காஸ்தெஸ் அடிகள் 28 ஆண்டுகள் கல்லூரியில் பணியாற்றியபின் 6 ஆண்டுகள் புதுக்கோட்டைப் பங்கு, பின்பு ஆலந்தலை, கடைசியில் பழைய காயலில் மறைப்பணி ஆற்றியபின்பு 1921இல் மறுபடியும் கல்லூரிக்கு வந்தார். பழைய புதிய மதுரை மறை மாநிலத்தைப் பற்றிய செய்திகளைச் சேகரித்தார். 1936ஆம் ஆண்டு செப்டம்பர் மாதம் 29ஆம் நாள் மரணமடைந்தார்.

**படைப்புகள்**

தந்தை காஸ்தெஸ் பழைய புதிய மதுரை மறைத்தளத்தைப் பற்றித் தாம் சேகரித்த தகவல்களைக் கொண்டு அநேக நூல்களை எழுதியுள்ளார். இவர் ஒரு பெரும் எழுத்தாளர்.

1. புனித அருளானந்தரின் (St.John De Britto) வாழ்க்கை வரலாற்றைப் படைத்துள்ளார்.
2. பழைய புதிய மதுரை மறைத்தளங்களின் வரலாற்றை இரண்டு பகுதிகளாக எழுதியுள்ளார். இந்நூல்கள் புனித வளனார் அச்சகத்தில் பதிப்பிக்கப்பட்டவை. இவ்விரு பகுதிகளும் பிரெஞ்சு மொழியில் உள்ளன.
3. அடிகள் மதுரை மறைத்தளத்தின் வரலாறு பற்றியும், என்றி என்றிக்கஸ், வணக்கத்துக்குரிய அந்தோணி கிரிமினாலே, புனித பிரான்சிஸ் சவேரியாரின் அழியாத் திருஉடல் பற்றியும், அத்தோடு மேலும் பல ஆய்வுக் கட்டுரைகளையும் எழுதி வெளியிட்டுள்ளார்.
4. உடன் வாழ்ந்த இயேசு சபை மறைப்போதகர்களின் கடிதங்களிலிருந்தும், ஆவணங்களிலிருந்தும் தென் இந்திய வரலாற்றுக்கு எதேச்சையாகக் கிடைத்த தகவல்கள், தூய வளனார் அச்சகம், திருச்சிராப்பள்ளி, 1929. (Sidelights on South Indian History from the Letters and records of contemporary Jesuit Missionaries, St.Joseph's Industrial Press, Trichirapalli 1929.) இந்நூல் ஆங்கிலத்தில் எழுதப்பட்டுள்ளது. இந்நூல் இரண்டு பெரும் பகுதிகளாகப் பிரிக்கப்பட்டுள்ளது. இந்நூலின் பொருளடக்கம்: முதல் பகுதி (1542-1640) I- மதுரை அரசு II- மீன் கடற்கரை III- வேம்பாறும் மறவ நாடும் IV. தென்னக நாயக்கர் அரசு. இரண்டாம் பகுதி(1641-1756) I. மதுரை அரசு (1644-1646), II. மூன்று நாயக்கர்கள் (1646- 1656), III. இரண்டு நாயக்கர்கள். (1656-1659), IV.தென்னிந்தியக் கடற்கரையில் டச்சுக்காரர்களின் செயல்பாடுகள் (1640-1660), V. மூன்று நாயக்கர்களின் அரசுகள் (1659-1667), VI. நாயக்கர் அரசுகள் (1667-1678), VII. தென்னக அரசுகள் (1700-1756), VIII. திருச்சிராப்பள்ளி, தஞ்சாவூர் அரசுகள் (1736-1756).

## புளிச்சு
## (Bulich,S.K.) 1859-1921

புளிச்சு ஓர் உருஷ்ய அறிஞர். தமிழ் மொழியையும் இலக்கியத்தையும் பற்றி உருஷ்ய மக்களிடையே விழிப்புணர்வை உண்டாக்குவதற்குக் காரணகர்த்தாவாக இருந்தவர். இவர் மாஸ்கோ பல்கலைக் கழகத்தில் தமிழ்மொழிப் பேராசிரியராக இருந்தபொழுது தமிழ் மொழியைப்பற்றி அநேகக் கட்டுரைகள் எழுதியுள்ளார்.

இவர் ஒரு தமிழ் அகராதியை 1901இல் வெளியிட்டுள்ளார். இவர் உருஷ்ய நாட்டில் தமிழ் நூல் சார்ந்த வரலாற்றின் கணக்கீடு என்ற நூலை

எழுதியுள்ளார். இந்நூலில் அவர் திராவிட மொழிகளைப்பற்றிப் பயனுள்ள சில செய்திகளைக் கொடுத்துள்ளார்.

## பாப்லி
## (Popley, H.A.)

பிரிட்டிஷ் பாதிரியாரான பாப்லி தமிழகம் வந்து திருப்பத்தூரில் மறைப்பணியாற்றினார். இவர் ஒரு தமிழ்ப்பள்ளி நடத்தி அதில் தமிழ் ஆசிரியராக மாணவர்களுக்குக் கற்பித்தார். மேலும் இவர் தாம் நிறுவிய பள்ளியில் உணவு உறைவிட விடுதி ஏற்படுத்தி அதன் பாதுகாவலராகவும் இருந்து நல்ல முறையில் பணியாற்றினார்.

பாப்லி 360 குறள்பாக்களைத் திருக்குறளிலிருந்து தேர்ந்தெடுத்து ஆங்கிலத்தில் செய்யுள் வடிவில் மொழியாக்கம் செய்துள்ளார். மக்கள் திருக்குறளைப் பற்றி மிக உயர்வாகப் பேசுகின்றனர். ஆனால் இம்மக்கள் திருக்குறளிலுள்ள கருத்துக்களையும், நோக்கங்களையும் மும்முரமாய் வாசிப்பதில் ஈடுபாடு கொள்வதில்லை என்னும் கருத்தை நூலின் முகவுரையில் கூறியுள்ளார். மாணிக்கவாசகரின் திருவம்மானையையும், திருக்காவலையும் அவற்றைப்பற்றிய தமிழ்ப் பொருள் விளக்கத்தோடு வெளியிட்டுள்ளார்.

பாப்லி சிவஞானபோதம், திருவருள்பயன், சிவஞான சித்தியார் மற்றும் சைவ சமய இலக்கியத்தைப் படிப்பதில் ஈடுபாடு கொண்டிருந்தார். சத்சமய விளக்கம் என்னும் ஒரு நூலைத் தொகுத்து அதைச் சென்னையில் 1915ஆம் ஆண்டு வெளியிட்டார். இந்நூல் குறள், நாலடியார், நன்னெறி, மூதுரை, நீதிநெறிவிளக்கம் ஆகியவற்றை அடக்கியுள்ளது.

மேலும் இவர் அப்பரும் அவரது சமயப்பணியும் என்பது பற்றி ஆங்கிலத்தில் கட்டுரை எழுதி "Young Men of India" என்ற இதழில் 1923ஆம் ஆண்டு வெளியிட்டுள்ளார்.

இவர் தமிழ்க் கீர்த்தனைகளை அடிப்படையாகக் கொண்டு கிறித்தவ சமயக் கீர்த்தனைப்பாக்கள் புனைந்துள்ளார். இவை 1921ஆம் ஆண்டு வெளியிடப்பட்டன. தமிழ்ச் சங்கீதத்தைப் பற்றிய விரிவான செய்திகள் இந்நூலின் எட்டுப் பக்கங்களில் உள்ளன.

**படைப்புகள்**

1. The Sacred Kural or The Tamil Veda of Thiruvalluvar, London, 1931.
2. Sath Samaya Vilakkam, Madras, 1915.
3. The Music of India, Calcutta, 1921.

4. The Sacred Kural, (Selections in Verses), Calcutta, 1951.
5. "Social Ethics in Tirukkural," Tamil Culture, II 3&4 (1953).
6. "Social Challenges in India Today," Tamil Culture, VIII 1(1959), 9-25.

## பால் கோசியன்
## (Paul Gouxien) 1860-1904

பால் கோசியன் ஒரு பிரெஞ்சு மருத்துவர். இவர் ஒரு மருத்துவக் கலைக்களஞ்சியத்தை மும்மொழியில் அதாவது பிரெஞ்சு-தமிழ்-ஆங்கிலம் ஆகியவற்றில் படைத்துள்ளார். இது மூன்று மொழிகள் பேசவும், ஒருவர் பேசுவதை புரிந்து கொள்ளவும் மருத்துவர்களுக்குப் பயனுள்ளதாக இருக்கிறது.

### படைப்பு

1. Manual Français-Angleis-Tamoul De conversation, Paris, 1904.

## தந்தை பீட்டர் சுவோ சே.ச.
## (Le Père Pierre Suau, S.J.) 1861-1916

### குழந்தைப் பருவம்

1861ஆம் ஆண்டு ஜூன் திங்கள் 7ஆம் நாள் புலாந்து- ஆ-பித்ருவில் பிறந்தார். இக்குழந்தைக்குத் திருமுழுக்குக் கொடுக்கப்பட்ட போது பியர்-பெலிக்ஸ்- அமான் (Pierre -Felix- Aman) என்னும் பெயர் சூட்டப்பட்டது. இப்பெயருடன் ஜோசப் என்னும் பெயரும் சேர்த்துக் கொள்ளப்பட்டது.

### பெற்றோர்கள்

அமெரிக்காவிலுள்ள சார்லஸ் நகரத்தில் இக்குழந்தையின் பெற்றோர் வாழ்ந்தனர். தந்தையின் பெயர் பீட்டர் சுவோ. தாய் தனது 18வது வயதில் கைம்பெண்ணானாள். குழந்தை பீட்டர் சுவோ (அமான்) பிறப்பதற்கு நான்கு மாதங்களுக்கு முன்பே மரணமடைந்து விட்டார். தாய் சுவோ 1869ஆம் ஆண்டு பிரான்ஸ் நாட்டிலுள்ள தம் தாயாரின் தந்தை (தாத்தா) வீட்டிற்குத் தாயும் குழந்தையுமாக வந்து சேர்ந்தனர். சிறுவன் சுவோ தனது பள்ளிப்படிப்பை 1875இல் முடித்தான்.

### இறைப்பணிக்கு அழைப்பு

இளம் வாலிபரான சுவோ தனது பள்ளிப் படிப்பை முடித்தபின் 1878ஆம் ஆண்டு இயேசு சபையில் நல சந்நியாசியாகச் சேர்ந்தார்.

இரண்டு ஆண்டுகள் பயிற்சிக்குப்பின் இளநிலை சந்நியாசியாக 1880லிருந்து 1882 வரை இலத்தீன், கிரேக்கம் போன்ற மொழிகளையும், அவற்றிலுள்ள இலக்கியங்களையும் கற்றுத் தேர்ந்தார். இவ்விளம் சந்நியாசி 1888 முதல் 1891 வரை தத்துவம், இறையியல் படிப்புகளை முடித்தபின் குருவானவராகத் திருநிலைப் படுத்தப்பட்டார். 1895 முதல் 1901வரை கயோசுவில் (Caousou) ஆசிரியர் பணியாற்றினார்.

**மதுரை மறைமாநிலத்தை நோக்கிப் பயணம்**

பிரான்ஸ் நாட்டிலுள்ள தூலூஸ் மறை மாநிலத் தலைவர் 19ஆம் நூற்றாண்டில் கத்தோலிக்க மறை பரப்பும் தளங்களுக்குப் பீட்டர் சுவோ அடிகளைப் பார்வையாளராகப் போகுமாறு கேட்டுக் கொண்டார். அதன்படி 1899இல் கல்லூரியில் கற்பிக்கும் இறுதியாண்டில் இந்திய நாட்டில் உள்ள தமிழகத்தின் தென் பகுதியில் அமைந்துள்ள மதுரை மறைமாநிலத்திற்குப் பார்வையாளராக ஜூன் திங்கள் பீட்டர் சுவோ அடிகள் தூலூஸ் நகரத்திலிருந்து மதுரையை நோக்கிப் பயணமானார். இவருடைய அதிபர் தந்தை மதுரை மறைமாநிலத்தைப் பற்றிய செய்திகளைச் சேகரித்துக் கொண்டு வரும்படி கேட்டுக் கொண்டார். மதுரை மறைமாநிலத்தைப் பற்றி நூல்கள் மூலமாகவும், கடிதங்கள் மூலமாகவும், வரலாறு படித்ததின் மூலமாகவும், முன்னாள் திருச்சிராப்பள்ளி மறைமாவட்டத் தலைமை ஆயராய்ப் பணியாற்றிய மறைத்திரு கனோஸ் ஆண்டகையின் வாழ்க்கை வரலாற்றை எழுதியதன் மூலமாகவும் அநேக செய்திகளை அறிந்து கொண்டார். அத்தோடல்லாமல் தாமே நேரில் இம்மறை மாநிலத்திற்கு வந்து சக பணியாளர்களைச் சந்தித்து அவர்களோடு உரையாடி ஆராய்ந்து செய்திகளைச் சேகரித்தார். இவர் அநேக நிழற்படங்களையும் எடுத்துச் சென்றார். அடிகள் திரும்பவும் பிரான்ஸ் நாட்டிற்குப் பயணம் செய்தபோது வடக்கு எகிப்து சென்று அங்குள்ள பிரமிடுகளில் ஏறிச் சென்று பார்வையிட்டுச் சென்றார். தந்தையவர்கள் ஒரு நூல் எழுதுவதற்குத் தேவையான அளவு செய்திகளைக் கொண்டு சென்றார். அடிகள் தாம் சேகரித்த செய்திகளையும், எடுத்த நிழற்படங்களையும் கொண்டு 'தமிழ் இந்தியா' (L'Inde Tamoule) என்னும் தலைப்பில் ஓர் அழகான நூல் எழுதி 1901ஆம் ஆண்டு வெளியிட்டார். இப்பேராசிரியர் மொத்தம் எட்டு நூல்கள் எழுதி வெளியிட்டுள்ளது குறிப்பிடத்தக்கதாகும். அறிஞர் தந்தை பீட்டர் சுவோ 1916ஆம் ஆண்டு ஆகஸ்ட் மாதம் 16ஆம் நாளன்று தமது 55 வது வயதில் காலமானார். திருத்தொண்டர் பீட்டர் சுவோ தமிழர்களின் வாழ்க்கை முறை, பண்பாடு, கலை, இயல் இசை நாடகம் அடங்கிய தமிழ் இலக்கியங்களைப் பற்றியும், முதல் தமிழ் இலக்கியப் பட்டியலைப் பற்றியும் எழுதியதோடல்லாமல் மேல் நாட்டவருக்குத் தமிழ் இலக்கிய

வரலாற்றை அறிவித்த பெருமை இவரைச் சாரும். இவர் தமிழ் செம்மொழி என்பதை ஆணித்தரமாகக் கூறியுள்ளது தமிழுக்கு இன்னும் பெருமை சேர்க்கின்றது. தமிழ் செம்மொழி என்ற தகுதியைப் பெறுவதற்கு இயேசு சபை மறைப் போதகர்களின் தமிழ்த் தொண்டும் ஒரு காரணமாகும்.

முதல் தமிழ் இலக்கிய வரலாற்றுப் பட்டியல்: ஐரோப்பியர்கள் தங்கள் மொழியின் இலக்கிய வரலாற்றைக் கால வரையறுத்து எழுதியுள்ளனர். தமிழ் இலக்கியத்திற்குக் கால வரையறைப் பட்டியல் இல்லாததை உணர்ந்து சுவோ அடிகள் ஓர் முற்றுப் பெறாத இலக்கிய வரலாற்றை எழுதியுள்ளார். தமிழ் எழுத்தாளர்கள், மன்னர்கள் ஆண்ட காலங்களை அடிப்படையாகக் கொண்டு தமிழ் வரலாற்றுப் பட்டியலைத் தயாரித்து எழுதியுள்ளனர். சங்க காலம், சங்கம் மருவிய காலம், பல்லவர் காலம், சோழர் காலம், நாயக்கர் காலம், ஐரோப்பியர் காலம், இக்காலம் எனப் பகுத்துள்ளனர். சுவோ அடிகள் நூற்றாண்டு வாரியாகத் தமிழ் இலக்கிய வரலாறு படைத்துள்ளதை இனிக் காணலாம்.

கி.மு. 9ஆம் நூற்றாண்டில் தமிழ் மொழியின் தந்தை அகத்தியர் வாழ்ந்தார். இவர் தமிழ் எழுத்துக்களைக் கண்டுபிடித்து, தமிழில் முதல் இலக்கணத்தைத் தொகுத்து எழுதியவர். வேதியியல், வானவியல் மேலும் மருத்துவ இயல் ஆகியவற்றைப் பற்றிய இவரது அறிவுத்திறன் ஆச்சரியப்படக் கூடிய வகையில் அமைந்ததாகும். கணிதவியல், வானவியல் ஆகியவற்றில் புகழ் பெற்ற கிரேக்க மேதை ஹிப்பார்கோஸ் (Hippparchos) என்பவரோடு அகத்தியரை ஒப்பிடுவர். அகத்தியருக்குப்பின் தொள்ளாயிரம் ஆண்டுகள் கழித்து இலங்கையில் உள்ள யாழ்ப்பாணத்தில் புலவர் யாழ்ப்பாண நாயனார் வாழ்ந்தார். 5ஆம் நூற்றாண்டில் ஒரு சிறிய புலவர் கூட்டம் யாழ்ப்பாண நாயனாரால் தூண்டப்பட்டுப் புத்த மதத்தினருக்கு எதிராகச் செயல்பட்டது. இந்தப் புலவர் கூட்டத்தில் சிவனைப் பற்றிப் பாடும் புலமை பெற்ற அரசர் சேரமான் பெருமான், சம்பந்தர், சுந்தரர், அப்பர், வில்லிபுத்தூரார் ஆகியோர் அடங்குவர். நாம் இப்புலவர் கூட்டத்திற்கு நன்றி சொல்லக் கடமைப் பட்டுள்ளோம். ஏனெனில் இக்குழு சமணர்களைத் தென்னிந்தியாவில் நுழைய விடாமல் தடுத்தது.

வைணவப் பிராமணர் வில்லிபுத்தூரார், சமஸ்கிருதத்தில் எழுதப்பட்ட மகாபாரதப் புராணத்தைத் தழுவித் தமிழில் மகாபாரதம் எழுதி மிக்க புகழ் பெற்றவர். குடும்பங்கள் ஒன்று கூடும்பொழுது, கெலாடு (Hellade) இல்லங்களில் இலியடு (Iliad) கட்டாயமாகப் பாடப்படுவதைப் போன்று தமிழ் மக்கள் தங்கள் வீடுகளில் வில்லிபுத்தூராரின் மகாபாரதத்தைப் பாடி வந்தனர்.

8ஆம் நூற்றாண்டில் காசியப்பர் என்ற பெயரில் ஒரே ஒரு கவிஞர் வாழ்ந்தார். இவர் இயற்றிய பக்திப்பாடல்கள் யாழ்ப்பாணத்திலுள்ள கோவில்களில் பாடப்பட்டு வருகின்றன.

தென்னிந்தியாவை மூன்று தலையாய அரசர்கள் ஆண்டு வந்தனர். சேர மன்னர்கள் மேல் காவேரியில் உள்ள தலைக்காடு பகுதியையும், சோழ மன்னர்கள் திருச்சிராப்பள்ளியின் அருகில் அமைந்த உறையூரைத் தலைநகராகக் கொண்டும், பாண்டிய மன்னர்கள் மதுரையைத் தலைநகராகக் கொண்டும் நாட்டை ஆண்டனர். சேர, சோழ மன்னர்கள் தமிழ் இலக்கியத்தை ஊக்குவித்தனர். ஆனால் கி.பி.9ஆம் நூற்றாண்டிலிருந்து 14ஆம் நூற்றாண்டு வரை பாண்டிய மன்னர்கள்தாம் அதிகாரப் பூர்வப் பாதுகாப்பாளர்களாவர். இவர்கள் மதுரையில் தமிழ்ச் சங்கங்களை நிறுவினர். பழங்கதை வரலாறு இச்சங்கங்களின் முக்கியத்துவத்தைச் சற்று மிகைப்படுத்திக் கூறியுள்ளது. ஆனால் அவற்றில் ஒன்று வரலாற்றுச் சிறப்புடையது. அச்சங்கம் புகழ்பெற்ற 49 கவிஞர்களைக் கொண்டது. எந்த ஒரு இலக்கியப் படைப்பும் முதன் முதலில் கடுமையான விமர்சனத்துக்கு உட்படாமல் பொது மக்களுக்குப் போய்ச் சேர்வதில்லை. 16ஆம் நூற்றாண்டில் முசுலீம் மன்னனால் தோற்கடிக்கப்பட்ட மதுரையை ஆண்ட பராக்கிரமன் தில்லிக்குக் கூட்டிச் செல்லப்பட்டான். அவன் கைதியாய் இருந்தபோது திருக்குறளைப் பாடித் தன்னைத்தானே ஆறுதல்படுத்திக் கொண்டான். தமிழ் இலக்கியத்தின் பொற்காலம் சிறப்பாகக் கடந்து சென்றது. தொடர்ந்து வந்த நூற்றாண்டுகளில் புகழ் பெற்ற கவிஞர்கள் அதிக எண்ணிக்கையிலிருந்த போதிலும் அவர்கள் தங்களுக்கு முன்னால் வாழ்ந்த கவிஞர்களின் சிறப்புத் தன்மையை அறியாமல் இருந்தனர்.

9ஆம் நூற்றாண்டு தமிழ் இலக்கியத்தின் நூற்றாண்டாகக் கருதப்படுகின்றது. அக்காலத்தில் திருவள்ளுவரும், அவருடைய மூன்று சகோதரிகள் ஔவை, உப்பை, ஊர்வாள் ஆகியோர் வாழ்ந்தனர். அதேபோன்று கம்பர், கபிலர், ஒட்டக்கூத்தர், புகழேந்தி மேலும் பல புலவர்கள் வாழ்ந்தனர். அவர்களின் செய்யுள்கள் வீதிகளில் இன்றும் பாடப்படுகின்றன. உலகக்கவி திருவள்ளுவர் தமது சிறப்பு மிக்க படைப்பான திருக்குறளுக்குப் பிரசித்தி பெற்றவர். வீரமாமுனிவர் திருக்குறளை மேலை நாட்டவருக்கு முதல் முதலில் அறிமுகப் படுத்தினார். குறள்கள் மூன்று பாகங்களாகப் பிரிக்கப் பட்டுள்ளன. நீதிமொழியாகிய குறள்கள் இரண்டடியில் எழுதப்பட்டவை. முதல் பாகம் அறத்தைப் பற்றியது. இரண்டாம் பாகம் பொருளைப் பற்றியது. மூன்றாம் பாகம் இன்பத்தைப் பற்றியது. மூன்றாம் பாகம் வாசிப்பதற்குக் கடினமானது எனினும் முதல் பாகம் வியக்கத்தக்கது.

இத்தாலியக் கவிஞர் செனக்காலின் சிறந்த கவிதைகளோடு திருக்குறள் ஒப்பிடப்பட்டுள்ளது. மேலும் திருக்குறளைச் சாலமோனின் ஞானத்திற்கு அருகில் கொணர முடியும்.

திருவள்ளுவரின் மூன்று சகோதரிகளும் தெய்வங்களாக்கப்பட்டு வணங்கப்படுகின்றனர். இவர்கள் நல்லொழுக்கம் கற்பிக்கும் சில செய்யுள்களையும் சிவன் பேரில் சில பாக்களையும் படைத்துள்ளார்கள். 'ஆத்திசூடி' செய்யுள்கள் பள்ளிக்கூடங்களில் கற்பிக்கப்படுகின்றன. ஔவையாரின் 'கொன்றை வேந்தன்' அவரது மிகச் சிறந்த வாழ்நாள் சாதனைப்படைப்பாகக் (Master piece) கருதப்படுகின்றது. கிரேக்கப் பெண்புலவர் சாப்போவோடு (Sappho) ஔவையாரை ஒப்பிட்டு 'இந்திய சாப்போ' என்று அவர் அழைக்கப்படுகின்றார்.

கம்பர் இரண்டாவது தமிழ் இதிகாசப் புலவர். இவர் வால்மீகியின் கம்பராமாயணத்தைத் தழுவி தமிழில் இதிகாசம் பாடியுள்ளார். ஓர் அரசனின் மகனான கம்பர் தம்முடைய தந்தையின் தோல்விக்கும், மரணத்திற்கும் பின்பு உறையூரில் வாழ்ந்த சோழ அரசரால் ஏற்றுக் கொள்ளப்பட்டார். மதுரையை ஆண்ட பாண்டிய மன்னன் வரகுணன் இவரைத் தமது அரச சபைக்கு அழைத்துக் கொண்டார். கம்பர் எழுதிய இராமாயணம் எப்பொழுதும் பல்கலைத் தேர்வுகளுக்குப் பாடத்திட்ட நூலாகக் கற்பிக்கத் தேர்வுக் குழு பரிந்துரைப்பதுண்டு.

கபிலர் மதுரையின் நாற்பத்தொன்பது கழக அங்கத்தினர்களில் ஒருவர். கம்பரின் போட்டியாளரான ஒட்டக்கூத்தர் தமிழ் இராமாயணத்தின் ஏழாவது காண்டத்தைப் படைத்துள்ளார். செயங்கொண்டார் பாடியது கலிங்கத்துப் பரணியாகும். புகழேந்தி 'நளவெண்பா' அல்லது நளனின் வரலாற்று ஆசிரியர். இராமாயணத்தின் ஒரு காட்சி மெட்ரிகுலேஷன் தேர்வுக்குப் பாடத்திட்டமாகப் பரிந்துரை செய்யப்படுவது வழக்கம்.

பத்தாம் நூற்றாண்டிலிருந்து பட்டணத்துப் பிள்ளையின் கவிதைகள் காக்கப்பட்டு வருகின்றன. அவரது நண்பரான பத்திரகிரியார் ஒரே கடவுள்தான் உண்டு என்ற சித்தாந்தம் கொண்டவர். பவணந்தியாரது புகழ் பெற்ற இலக்கணத்தைப் பற்றி எழுதப்பட்ட ஆராய்ச்சி நூல் நன்னூலாகும். இளவயதிலிருந்தே அனைத்துப் பள்ளிக் குழந்தைகளும் நன்னூலை மனப்பாடமாகக் கூறுவர். தமிழகத்தில் நன்னூலைப் புறக்கணிப்பது தமிழ் மொழியையே புறக்கணிப்பதற்கு ஒப்பாகும்.

சிவவாக்கியர் ஒரே கடவுள்தான் உண்டு என்ற சித்தாந்தத்தைப் பின்பற்றும் சித்தர். இவர் மிக்க புகழ் பெற்ற சில கவிதைகள் எழுதியுள்ளார். அவற்றுள் ஒன்றில் நாம் வாசிப்பது பின்வருமாறு:

**பண்டுதான் பறித்தெறிந்த பன்மலர்கள் எத்தனை?**
**பாழிலே செபித்துவிட்ட மந்திரங்கள் எத்தனை?**
**மிண்டனாய்த் திரிந்தபோது இறைத்தநீர்கள் எத்தனை?**
**மீளவும் சிவாலயங்கள் சூழவந்தது எத்தனை?**

**(25ஆம் பாட்டு)**

**ஊறுபட்ட கல்லின்மீதே ஊற்றுகின்ற மூடரே!**

**(30ஆம் பாட்டு)**

**கோயிலாவது ஏதடா? குளங்களாவது ஏதடா?**

**(31ஆம் பாட்டு)**

**(ராம் பிரசாத் பதிப்பகம், சென்னை, 2005)**

பதினோராம் நூற்றாண்டில் படைக்கப்பட்ட இலக்கியங்களில் எதுவும் கிடைக்கப் பெறவில்லை. பன்னிரெண்டாம் நூற்றாண்டு, அணி இலக்கணப் படைப்பாளராகிய தண்டி ஆசிரியரைத் தோற்றுவித்தது. இவர் சமஸ்கிருத நாடக ஆசிரியரான காளிதாசருக்கு ஏறத்தாள சமமாகக் கருதப்படுபவர்.

பதினான்காம் நூற்றாண்டில் இரட்டைப் புலவர்கள் வாழ்ந்தனர். அவர்களில் ஒருவர் கால் ஊனமுற்றவர். இரண்டாமவர் கண் பார்வையற்றவர். இருவரும் சேர்ந்து கவிதைகள் புனைவார்கள். ஒருவர் முதல் இரண்டு அடிகளைத் தொடங்குவார். மற்றவர் அக்கவிதையை முடிப்பார்.

பதினைந்தாம் நூற்றாண்டின் பெரும் அங்கதம் புனைந்த இந்தியக் கவிஞர் காளமேகம் ஆவார். இவர் 'சரசுவதி மாலை' எழுதினார். இவரது பாடல்கள் சிலேடை நயமுள்ளவை. மேலும் இவர் 'யமகண்டம்' எனப்பட்ட 'யமகண்ட மாலை' எழுதினார். இதே காலக்கட்டத்தில் காங்கேயர் வாழ்ந்தார். இவர் 'உரிச்சொல் நிகண்டு' எழுதினார். உரிச்சொல் நிகண்டு அனைத்துப் பள்ளிகளிலும் பயன்பாட்டில் உள்ளது.

பதினாறாம் நூற்றாண்டில் நிகண்டு ஆசிரியர் மண்டலபுருடர் 'சூடாமணி நிகண்டு' எழுதினார். புகழ்பெற்ற அரிச்சந்திர புராணம் பாடியவர் வீரகவிராயர். தத்துவராயர், குறுந்திரட்டு மற்றும் பெருந்திரட்டுப் பாடியவர். இக்கவிஞர்கள் போற்றுதற்குரியவர்கள்.

பதினேழாம் நூற்றாண்டில் வெவ்வேறான இதிகாசம் படைக்கும் கவிஞர்கள் தோன்றினார்கள். அப்படிப்பட்டவர்களில் குறிப்பிடத்தக்கவர்கள் சிந்தாமணி ஆசிரியர் திருத்தக்க தேவர். விரும்பிப் படிக்கக்கூடிய படைப்புகளின் ஆசிரியர்கள் வீரமாமுனிவர், திருச்சிராப்பள்ளியில் பிறந்து எல்லாத் தேவதைகளையும் நம்புகின்றவரான தாயுமானவர்

போன்றவராவர். இவர்களின் படைப்புக்கள் நம் காலத்தில் வாசிக்கப்படுகின்றன.

பதினெட்டாம் நூற்றாண்டைக் கவிஞர்கள் செறிந்த நூற்றாண்டு எனக் கூறலாம். 'இராம நய்யத்' (இராம நாடகம்) நாடக ஆசிரியர் அருணாசலக் கவிராயர், அலங்கார ரூபா, வல பீம்மா ஆகிய பெயர் போன நாடகங்களின் ஆசிரியர் கணபதி ஐயர் ஆகியோர் தலை சிறந்த நாடக ஆசிரியர்களாவர். இக்காலக்கட்டத்தில் கணிசமான எண்ணிக்கையில் கிறித்தவக் கவிஞர்கள் இருந்தனர். அவர்களில் ஒருவர் இன்பக் கவிராயர். இவர் மணப்பாட்டில் பரவர் குலத்தில் பிறந்தவர். இவர் கன்னிமரியாளின் பேரில் சிறப்பும், அழகும் மிக்க பக்திப் பாடல்களைப் புனைந்துள்ளார். ஆனால் அவரிடம் கவிதைத் தேவதை (Muse) நிதானமாக வேலை செய்தாள். கள் அருந்திவிட்டுச் சில வேளைகளில் இன்பக்கவிராயர் இந்துக் கோவில்களுக்குச் சென்று அவர்களின் கடவுள்களைப் பற்றிப் பாடுவார். ஆனால் இந்த நூற்றாண்டின் மறுக்க முடியாத மிகப் பிரபலமான கவிஞர் வீரமாமுனிவர். கிறித்தவர்கள் நடுவிலும் இந்துக்கள் நடுவிலும் அறிமுகமானவர். உயர்நடைக் கவிதைகளின் மேன்மையில் மட்டும் நிறைவு கொள்ளாமல் கதைகள், இலக்கணம், கொடுந்தமிழ்ப் பயன்பாடு ஆகியவற்றில் நிலை நிறுத்தப்பட்ட, கீர்த்தி பெற்ற ஆசிரியராய்த் திகழ்ந்தார்.

பத்தொன்பதாம் நூற்றாண்டு புகழ் பெற்ற கவிஞர்கள் சிலரை உள்ளடக்கியதாய்த் திகழ்ந்தது. தெய்வசிகாமணி என்பவர் திண்டுக்கல்லில் வாழ்ந்த வேதியரின் மகனாவார். இவர் 1846இல் இறைவனடி எய்தினார். இக்கவிஞர் நம் ஆண்டவராகிய இயேசு கிறிஸ்துவின் பெருமையினை அழகிய கவிதைகளில் படைத்துள்ளார். முத்துசாமிப்பிள்ளை, தந்தை வீரமாமுனிவரின் வாழ்க்கை வரலாற்றை எழுதியுள்ளார். மேலும் இவர் பிரிந்து சென்ற கிறித்தவச் சகோதரர்களுக்கு எதிராக ஓர் நூலும் எழுதியுள்ளார். 'தூசணதிக்காரம்' என்னும் பெயர் கொண்ட இந்நூல் மிகவும் பாராட்டத்தக்க ஒன்றாகும். தானப்ப முதலியார் படைத்த நாலடியார் என்னும் கவிதைநூல் திருவள்ளுவரின் திருக்குறளை ஒத்ததாகும்.

மேற்கூறிய வரலாற்றை முழுமை பெறாத இலக்கியக் காலவரைப் பட்டியல் என்று பெயரிடுவது போதுமானதாகும். இந்தியாவி்ல் இப்படிப்பட்ட இலக்கிய வரலாற்றுப் பட்டியல் இல்லை என்பதை விளக்கவே இப்பட்டியல் எழுதப்பட்டது.

### சில தமிழ் இலக்கியங்களின் மறைவுக்குக் காரணம்

கடல் கோள், பூமி அதிர்வு, வெள்ளம், நெருப்பு போன்ற இயற்கைச் சீற்றங்களாலும், நீர், கறையான் போன்றவற்றாலும் சில

இலக்கியங்கள் மறைந்துள்ளன. எஞ்சி நின்ற பாடல்களில் சிறந்தவற்றைப் பொருள் நோக்கியும், செய்யுள் அமைப்பின் திறன் நோக்கியும் தொகுத்துள்ளனர். மேலும் மனிதனின் கவனக்குறைவு, தீயிட்டு எரித்தல், மாற்றுதல், சில பகுதிகளை நீக்கி உருக் குலைத்தல் போன்ற காரணங்களாலும் சில இலக்கியங்கள் மறைந்திருப்பது கவனிக்கத் தக்க ஒன்றாகும்.

**கடல் கோள்**

**வடிவே லெறிந்த வான்பகை பொறாது**
**பஃறுளி யாற்றுடன் பன்மலை யடுக்கத்துக்**
**குமரிக்கோடும் கொடுங்கடல் கொள்ள**

என்ற சிலப்பதிகார அடிகளும்,

**மலிதிரை யூர்ந்துதன் மண்கடல் வௌவலின்**

என்ற முல்லைக் கலித்தொடரும்,

**முந்நீர் விழவின் நெடியோன்**
**நன்னீர்ப் பஃறுளி மணலினும் பலவே** (புறம்.09)

என்ற புறப்பாட்டின் பழைய உரைகாரர் குறிப்புரையும் கடல்கோள் நிகழ்ந்ததென்பதைத் தெரிவிக்கின்றன.

**நெருப்பு**

பதினாறாம் நூற்றாண்டில் மதுரை முசுலீம் மன்னனால் கொள்ளையடிக்கப்பட்டது. அப்பொழுது மதுரையில் தமிழ்ச்சங்கம் கலைக்கப்பட்டது. அந்நகரில் கண்ணுக்குப்பட்ட அனைத்து எழுத்துப் பிரதிகளும் வெற்றி வீரர்களால் தீ வைத்து எரித்து அழிக்கப்பட்டன.

**அழித்தல்**

திருவிதாங்கூர் போன்ற இடங்களில் பிராமணர்கள் தலைவர்களைப் போன்று ஆட்சி செய்து வந்தனர். பழைய தமிழ்ப் படைப்புக்கள் அனைத்தும் அழிக்கப்பட்டு விட்டன. இன்று, அச்சடிக்கப்பட்ட பழங்காலத் தமிழ்ப் பிரதிகளைப் பெறுவது முற்றிலும் முடியாதது. அனைத்துத் தமிழ் இலக்கியங்களும் பிராமணர்களால் மாற்றியும், சில பகுதிகள் நீக்கப்பட்டு உருக்குலைக்கப்பட்டும் உள்ளன.

**சார்லஸ் இ.கோவர் கூறியுள்ளதாவது**

இறுதியாகப் பிராமணர்கள் தங்கள் வாழ்வாதாரத்திற்கு யாரைச் சார்ந்து இருந்தனரோ, அவர்களைத் திருப்திப்படுத்தும் பொருட்டு, அனைத்துத் தமிழ் இலக்கியங்களையும் பிராமணர்கள் மாற்றியும், சில

பகுதிகளை நீக்கி உருக்குலைத்தும் உள்ளனர். (தென்னிந்திய நாட்டுப்புறப் பாடல்கள் சார்லஸ் இ.கோவர்).

## தமிழ் சந்தித்த தடைகள்

தமிழ் இலக்கியம், செறிந்த வளர்ச்சியடைந்ததும், பழமை மிக்கதும், பண்பட்டதுமாகும். மாசற்ற திராவிட மொழியான தமிழை இன்றுவரையிலும் புத்த மத இலக்கியங்களோ, அல்லது பிராமண இலக்கியப் பிரவாகமோ மாற்ற முடியவில்லை. பிராமணவியல் தமிழ் இலக்கியத்திற்குத் தண்டனை தரும் சாட்டையாக இருந்திருக்கிறது. தொடக்க நாளிலிருந்தே தமிழ்க் கவிதைகளுக்கும், பிராமணவியலுக்கும் வலுத்த மோதல் இருந்தது. தமிழ்க் கவிதைகள் பிராமணவியலால் இகழப்பட்டு, சிதைக்கப்பட்டன. தமிழ் இலக்கியங்களில் பிராமணவியல் திணிக்கப்பட்டது. சிவவாக்கியரின் படைப்புகள் முழுமையாகக் கடவுள் பக்தி உடையவை. இவர் கடவுள் ஒருவரே என்ற கொள்கையைத் தீவிரமாகப் பின்பற்றியவர். சிலை வழிபாட்டை முற்றிலும் எதிர்த்தவர். சமஸ்கிருதத்திலிருந்து இவரது பாடல்களைப் போன்றவை மொழி பெயர்க்கப்பட்டு இடையில் செருகப்பட்டன. மேலும் அவை அவர்களின் புதிய கடவுள்கள் வழிபாட்டுக்குப் பயன்படுத்தக் கட்டாயப்படுத்தப் பட்டன. பெரும்பாலான பாடல்கள் இதே போன்று இடையில் செருகப்பட்டுள்ளன.

## சமஸ்கிருதம் தமிழ் வளர்ச்சிக்கு முட்டுக்கட்டை

சமஸ்கிருத இலக்கியங்கள் மொழிபெயர்க்கப்பட்டு, தமிழ் இலக்கியங்களில் இடை இடையே செருகப்பட்டன. வெகு காலமாகத் தமிழ், முழுக்க முழுக்கச் சமஸ்கிருதத்திலிருந்து வந்தது என்ற கருத்து ஏற்றுக் கொள்ளப்பட்டு, அதன் பின்னணியில் பிராமணர்கள் தமிழ் இலக்கியம் சமஸ்கிருதத்திலிருந்து கடன் வாங்கப்பட்டதாகக் கூறி வந்தனர். பதினைந்தாம் நூற்றாண்டு வரை ஞான வெண்பா போன்ற புகழ் பெற்று விளங்கிய பல தமிழ் இலக்கியங்கள் நசுக்கப்பட்டன. பிராமணர்களின் அதி மிகக் கவலையானது, தமிழ்க் கவிதைகளை எல்லை வரையறுத்துத் தமிழில் எழுதப்பட்ட எல்லாப் படைப்புகளையும் சில பிராமணர்களே எழுதினார்கள் என்று காண்பிப்பதுதான். அனைத்துக் கவிஞர்களும் பிராமணர்களே என்று கூற அவர்களுக்கு அதிகாரம் இருந்தது. ஆனால் தலையாய தமிழ்க் கவிஞர்கள் சூத்திரர்களாய் இருந்தனர். இதுநாள் வரையிலும் மிகச் சிறந்த கவிஞர்கள் வெள்ளாளர் அல்லது முதலியார் குலத்தைச் சார்ந்தவராவர். பிராமணர்களோ மிகத் துணிச்சல் உள்ளவர்கள். பெரும் எழுத்தாளர்களின் வாழ்க்கை அடங்கிய நூல் மாற்றி எழுதப்பட்டதாகும். அதில் கூறப்பட்ட எல்லாக் கவிஞர்களும் பிராமணர்கள். திருவள்ளுவர் பற்றிய வரலாறும் இந்நூலில் காணப்படும். ஏனென்றால் இதனுடைய முக்கிய நோக்கமே திருவள்ளுவர்

தாழ்த்தப்பட்ட இனத்தைச் சார்ந்தவர் என்ற உண்மையைச் சுட்டிக்காட்டுவதற்காகத்தான்.

## தமிழ் ஓர் சிறந்த செம்மொழி

தந்தை பீட்டர் சுவோ இயல், இசை, நாடகம் இவை மூன்றையும் உள்ளடக்கிய முத்தமிழைப்பற்றி எழுதியுள்ளார். இதில் தமிழ் செம்மொழி என்பதற்கான சில தகுதிகளைக் காண இயலும். தமிழ் இலக்கியம் இவற்றையும் மிஞ்சி இன்னும் பல தகுதிகளைப் பெற்றுள்ளது. நீண்ட நெடிய வருணனை, எதுகைக் கலப்பு, எல்லையடங்கா இன்னிசைச் செயல்பாட்டைக் கொண்டுள்ளது. தமிழ் மொழியின் தனிச்சிறப்பை எவராலும் மறுக்க முடியாது. திராவிட மொழிகளான தெலுங்கு, மலையாளம், கன்னட மொழிகளைவிடத் தமிழ் மொழி மேம்பட்டதாகும். தமிழ் மொழி ஒப்பிடற்கரிய அளவுக்கு சொல் வளம் மிக்கது. தமிழ் இலக்கியத்தில் உரைநடைப்பகுதி குறைந்திருந்த போதிலும், செய்யுள் வடிவில் ஏராளமாயுள்ளது. செய்யுள் வடிவிலுள்ள தமிழ் இலக்கியப் படைப்புகள் மிகுந்த செறிவு உள்ளவையாகவும், தனித்தன்மை யுள்ளதாகவும் மேலும் வியப்பிற்குரியதாகவும் உள்ளன. அப்பழுக்கற்ற தமிழ் மொழியை இந்நாள்வரை புத்த இலக்கியங்களோ, பிராமண இலக்கியப் பிரவாகமோ மாற்ற முடியவில்லை.

தமிழின் சீர்வரிசையோடு புகழ் மிக்க அசையடி சீர்வரிசையை (Alexandrian) ஒப்பிடுகையில், அசையடி சீர்வரிசை தமிழின் சீர்வரிசைக்குமுன் ஒரு சிறுபிள்ளை விளையாட்டைப் போன்றது. தந்தை சுவோ கூறுகின்றார்: “நான் எண்ணுகிறேன் சில ஐரோப்பியர்கள் தமிழ் இசையின் இன்னிசை நயத்தைப் புரிந்து கொள்ள இயலாததால், அதைத் திறம்பட அறிய முடியும் என்ற நம்பிக்கையை இழந்து விட்டனர்.” அதே போன்று கிரேக்கச் சங்கீதங்களைப் பற்றியும் சரணங்களைப் பற்றியும் அவர்களுக்குத் தெரியுமா? இளைய சகோதரர்களான கிரேக்க ஹெலனியர்களின் (Hellanians) புகழ் மிக்க பாடலின் சந்தம் மூத்த சகோதரர்களான இந்தியர்களின் தமிழிசையில் இல்லை என நினைக்கின்றனர். ஆகவே சில ஐரோப்பியத் தமிழறிஞர்கள் தமிழிசையின் மேன்மையை உணர்த்துவதற்குக் காட்டிய உற்சாகத்துக்குப் பின்னும் தமிழிசை செம்மொழிக்கு மாதிரியாக இருக்கும் நிலையை அடைய இயலவில்லை. இதற்கு மாறான டபிள்யூ.டெய்லரின் (W.Taylor) கருத்து பின் வருமாறு: “தமிழ், தெலுங்கு மொழிகளின் பண்பும், நேர்த்தியும் ஐரோப்பியர்களுக்குத் தெரிந்திருத்தல் விரும்பத்தக்கது. கிரேக்கம், இலத்தீன் மொழிகளை ஒப்பிட முடியாத, அதாவது ஒப்பிடுதலுக்கு அப்பாற்பட்ட மொழிகள் என்று கொடுக்கப்பட்டுள்ள முதன்மைத்துவம் சரிதானா? என்பதைத் தலைசிறந்த வல்லுநர்கள்தான் வரையறுத்துக்

கூறவேண்டும். மனிதனால் பேசப்படும் மெருகூட்டப்பட்ட, வளமை மிகுந்த, நுண்மையுள்ள மொழிகளில் தமிழ் மொழியும் ஒன்றாகும் என்பதை ஆணித்தரமாகக் கூறமுடியும்.'' கீ.டெய்லரின் இந்தக் கருத்தோடு இணைந்த ஒத்த கருத்துடையவர் சுவோ அடிகள்.

'திராவிட மொழிகளின் ஒப்பிலக்கணம்' என்னும் நூலின் ஆசிரியர் முனைவர் கால்டுவெல் ஐயரின் கருத்தையே சுவோ அடிகளும் ஏற்றுள்ளார். ''திராவிட மொழிகளில் தமிழ் மொழி ஒன்றுதான் சமஸ்கிருதத்தைப் பின்பற்றாமல், அதற்கு நிகரான நிலையை அல்லது அதனினும் உயர்ந்த நிலையை அடையும் முயற்சியில், ஒரு குறிப்பிட்ட தருணத்தில், நீதிமொழிகளின் வாயிலாக, அதைவிட மேல்நிலை அடைந்திருக்கின்றது எனலாம்'' என்பதே அக்கருத்து.

**இசைத்தமிழ்**

இசை என்ற சொல்லுக்கு வயப்படுவது என்பது ஒரு பொருள். நம் முன்னோர் இறைவனையே இசை வடிவமாகக் கண்டனர். 'ஓசை ஒலி எல்லாம் ஆனாய் நீயே' என்பது அப்பர் அருள்வாக்கு.

தமிழிசை இருவகைப்படும். ஒன்று முரட்டுத் தன்மையுடையதும் அகோரமானதுமாகும். மற்றொன்று மனிதத் தன்மையானது. முதல் வகை இசையை நாம் இலங்கை முதல் திபெத் வரையில் உள்ள அனைத்துக் கோயில்களிலும் கேட்கலாம். இரண்டாம் வகை மனிதத் தன்மையும் சாந்தமும் உள்ளது. இவ்விசை வெளியுலகிற்கு அதிகம் தெரியாதாயினும் மிக்க மதிப்பிற்குரியதும், மனிதனை வயப்படுத்தக் கூடியதுமாகும்.

சாந்தம் தரக்கூடிய கர்நாடக இசை, தமிழனுக்குத் தேசிய இசையாகும். அவன் பேசும் தமிழ் மொழியும் வணங்கும் தெய்வங்களும் எவ்வளவு பழமை வாய்ந்தனவோ, அவ்வளவு பழமை வாய்ந்தது தமிழிசை. இது இனிமை மிக்கது. தட்டார்கள், வலை வடிவமைப்பு மூலம் ஆபரணங்களுக்கு அழகூட்டுவது போல, தமிழிசைக்கு இராகங்கள் மெருகூட்டுகின்றன. தமிழிசை அறுபத்து இரண்டு ஆரம்ப மேளகர்த்தாக்களைக் கொண்டுள்ளது. இவற்றிலிருந்து ஆயிரத்துக்கும் மேற்பட்ட இராகங்களைப் பிறப்பிக்க முடியும். இராகங்கள் ஒவ்வொன்றும் தனிப்பட்ட மாறாத் தன்மையுடையவை. மகிழ்ச்சி, துயரம், துடுக்குத்தன்மை ஆகிய உணர்வுகளை உள்ளடக்கியவை. இவ் இராகங்களைக் கொண்டு இன்னிசை வாக்கியங்களை மிகச் சிறந்த முறையில் இசைக்க முடியும். இசைக் கலைஞன் பல்வகை இராக தாளங்களில் பெருமகிழ்வு அடைகிறான். இராகங்களின் அமைப்பு மிகச் செறிவுள்ளது. வரையறுக்க முடியாத ஓர் அமுத சுரபி. ஓர் இசைக் கலைஞன் எந்த ஓர் இராகத்தின் முழுச் செறிவையும் அடைந்து விடுவதில்லை. ஒவ்வொரு கலைஞனும் எந்த ஒரு மேளகர்த்தாவில்

சிறந்து விளங்குகின்றானோ, அந்த மேளகர்த்தாவை ஒரு குறிப்பிட்ட எண்ணிக்கைக்கு உட்படுத்துகிறான். ஒவ்வொரு இராகமும் பாடும் பொழுது நம்மை உணர்ச்சியில் ஆழ்த்தி மயக்குவிக்கிறது. என்னே இந்த இசையின் வல்லமை! இந்த இசை எப்படியெல்லாம் நம்மை ஆட்டிப் படைக்கிறது! மேற்கத்திய இசையை உணர்ச்சியற்ற, உறைந்துபோன ஒன்றாகக் கருதுவதற்குத் தமிழர்களிடம் காரணம் உண்டல்லவா?

மேளகர்த்தாக்களில் சில, ஐரோப்பியர்களின் செவிகளைக் கிழிப்பது போல இருக்கும். ஆனால் ஏனைய மேளகர்த்தாக்கள் நம் உள்ளத்தின் ஆழத்தில் பதிந்து, உள் மனதை ஒரு புது உலகுக்கே இட்டுச் செல்லும் திறன் கொண்டவை. இவைகளின் உபாயங்களின் செழுமை நம்மை மயக்கத்தில் ஆழ்த்துகின்றன. ஒரு சாதாரண இசை முதற்கொண்டு, அதன் செறிவு மற்றும் இணக்கத் தன்மைகளினால் நம்மை மெய்மறந்த நிலையில் கனவுலகத்திற்கு அழைத்துச் செல்கின்றன. இவை சில அயர்லாந்து அல்லது கங்கேரி இன்னிசையை நினைவூட்டுகின்றன.

திருச்சிராப்பள்ளியில் உள்ள தூய வளனார் கல்லூரியில் பேராசிரியராகப் பணிபுரிந்த பிரெஞ்சு மறைப்போதகர் அருட்தந்தை ஹோனோரே (Father Honoré) மேற்கத்திய இசையிலும், தமிழ் இசையிலும் திறமை கொண்டவர். தமிழ் இசையை மேற்கத்திய முறையில், சுரங்களின் குறிகளை (Notation) எழுதியுள்ளது குறிப்பிடத்தக்கது. (Oriental Music in Western notation, Madras, 1902, Music Sacra (Sacred Music) September 1900.

### நாடகத்தமிழ்

'நாடகத்தமிழ்' என்பது தமிழ் மொழி ஒன்றிற்கே உரிய சிறந்த செல்வமாகும். ஏனெனில் தமிழ் மொழியில் இருப்பது போல் நாடகப் பிரிவு மற்றெந்த மொழிகளிலும் இல்லை. (பி.சம்பந்த முதலியார், நாடகத் தமிழ், மதுரைத் தமிழ்ச் சங்கப் பெருவிழா மலர் ப.137).

இந்தியர்கள் நாடகத்தை அளவுக்கு மீறி நேசிக்கின்றனர். நாடகக் குழுக்கள் நகரங்களுக்குச் சென்று எழுச்சியை ஊட்டும் காட்சிகளை அல்லது தேவலோகக் காட்சிகளை ஆடிப்பாடி நடிப்பர். இவ்வகையான நாடகங்கள் மக்களை மட்டற்ற மகிழ்ச்சியில் ஆழ்த்துவதால் பொதுமக்களிடையே அமோக வரவேற்பைப் பெற்றுள்ளன. மேலை நாட்டு ஆங்கில நாடகங்கள் பள்ளி, கல்லூரி மாணவர்களால் நடிக்கப் படுவதை மக்கள் இகழ்ந்தனர். இயல்பாகப் பொது மக்களிடையே பழைய தேசிய நாடகங்களுக்கு மிகுந்த வரவேற்பு இருந்தது.

இந்து அல்லது கிறித்துவ விழாக்காலங்களில் திறந்த வெளியில் ஓர் நாடக மேடை அமைக்கப்படும். நாடக மேடையின் மூன்று

பக்கங்களில் மூங்கில் தட்டிகளைக் கட்டி அவற்றை வண்ணத் துணிகளால் மறைப்பர். இரவு நேரங்களில் தீவட்டிகளின் வெளிச்சத்தில் நாடகம் நடைபெறும். நடிகர்கள் கிராமங்களிலிருந்து தேர்வு செய்யப்படுவர். அவர்கள் தற்காலத்துப் பளபளப்பான ஆடைகளை அணிவர். பெண்கள் நாடகத்தில் நடிப்பதில்லை. அவர்களுக்குப் பதிலாக இளைஞர்கள் நடிப்பர்.

நாடகம் இரவு ஒன்பது மணியிலிருந்து காலை நான்கு மணிவரை நடைபெறும். மூன்று அல்லது எட்டு, சில வேளைகளில் பதினைந்து இரவுகள் நடைபெறுவது வழக்கம். இந்து மக்கள் கவிராயர் அல்லது தண்டி ஆசிரியரின் கவிதை நாடகங்களை நடிப்பர். விழாக் காலங்களில் மிக நீண்ட புராண வரலாறு, வீரகாவியங்கள், செய்யுள் வடிவிலுள்ள மகாபாரதம், இராமாயணம் போன்ற இதிகாசங்களைப் பாடி நடிப்பர். கிறித்தவர்கள் தேவ இரகசியங்கள் (Mysteries), புதுமைகள், புனிதர்களின் வாழ்க்கை வரலாறுகள் ஆகியவற்றை நாடகமாக நடிப்பர். சாதாரண மக்களுக்குப் புரியும்படி பேச்சுத் தமிழில் வருணனை செய்யப்படும். இடைவேளைகளில் நடன நிகழ்ச்சி, கோமாளியின் கூத்து நடைபெறும். பாஸ்கு என்னும் கிறிஸ்துவின் பாடுகள் மாலை ஏழு மணி முதல் காலை ஆறு மணிவரை நாடகமாக நடிக்கப்படும். கிறிஸ்து உயிர்த்தெழுதல் (Easter) விழாவைத் தொடர்ந்து இந்நாடகம் தேவாலயங்களின் வளாகத்தில் இரண்டு அல்லது மூன்று இரவுகள் நடைபெறும். முன்னாள் மதுரை மறைமாநில மறைப்போதகர்கள் கிறிஸ்துவின் பாடுகளை நாடகமாக எழுதினார்கள்.

பீட்டர் சுவோ அடிகள் தமிழர்களின் வாழ்க்கை முறை, பண்பாடு, இயல், இசை, நாடகம் அடங்கிய தமிழ் இலக்கியங்களைப் பற்றித் ''தமிழ் இந்தியா'' என்னும் நூலைப் பிரெஞ்சு மொழியில் எழுதியுள்ளார். இவர் மேலை நாட்டு அறிஞர்கள் தமிழைப்பற்றி பிரெஞ்சு, ஆங்கில மொழிகளில் எழுதிய நூல்களைப் படித்தும், தமிழ் வித்துவான்கள் மூலம் கேட்டு அறிந்தும் சேகரித்த செய்திகளை இயல், இசை, நாடகம் என்று வகைப்படுத்தி எழுதியுள்ளார். தந்தை எழுதிய முதல் இலக்கிய வரலாறு பட்டியல் முற்றுப் பெறாதது எனினும் இந்தியாவில் இப்படிப்பட்ட இலக்கிய வரலாறு இல்லை. இந்த இலக்கிய வரலாறு முதன்மையானதாகவும், முன்னோடியாகவும், மாதிரியாகவும் இருப்பதற்கு நாம் அவரைப் பாராட்ட வேண்டும். மேல் நாட்டவருக்குத் தமிழ் இலக்கிய வரலாற்றை அறிவித்த பெருமை இவரைச் சாரும். தமிழ்க் கவிஞர்களை மேல் நாட்டுக் கவிஞர்களோடு ஒப்பிட்டுள்ளது தமிழுக்கு மேலும் சிறப்பைத் தந்துள்ளது. இவர் தமிழ் செம்மொழி என்பதை ஆணித்தரமாகக் கூறியுள்ளது தமிழுக்கு இன்னும் பெருமை சேர்க்கின்றது. தமிழ் செம்மொழி என்ற தகுதியைப் பெறுவதற்கு இயேசு சபை மறைப்போதகர்களின் தமிழ்த் தொண்டும் ஒரு காரணமாகும். தமிழ்

இலக்கியத்திற்கு கால வரையறைப் பட்டியல் இல்லையே என்ற ஆதங்கத்துடன் சுவோ அடிகள் அதனை எழுத எடுத்துக்கொண்ட முயற்சியை, நூற்றாண்டைத் தழுவிய தமிழ் இலக்கியப் பட்டியல் ஒன்றை உருவாக்குவதன் மூலம் அன்னாரின் கனவை நனவாக்க முடியும்.

## ஆன்ரூஸ்
## (A.Andrews)

ஆன்ரூஸ் பிரிட்டன் நாட்டவர். இவர் மெட்ராஸ் கிறித்தவ மறைக்குழு நடத்திய பள்ளியில் மேலாளராகப் பணியாற்றினார்.

பங்களிப்பு

1. ஆங்கில தமிழ்ச் சொல் அகராதியும், ஐரோப்பிய மங்கையர்களும் முதியோர்களும் தமிழ் கற்பதற்கான பாட நூல்.

   The English and Tamil Vocabulary and Reader, for European ladies and aged people to learn Tamil.

2. பொது மக்களினால் பாராட்டப்பட்ட ஆங்கில-தமிழ்ச் சொல்லகராதி சொல்லிணக்கக் கூறுகளின்படி அமைந்தது, சென்னை, 1889.

   English and Tamil Popular Vocabulary arranged to Parts of Speech, Chennai, 1889.

3. ஆங்கிலமும் தமிழும் கொண்ட சொல்லகராதி பாடநூல், சென்னை, மூன்றாம் பதிப்பு, 1911.

   The English and Tamil Vocabulary and Reader, Chennai, III Edn., 1911.

## புலேஜ்
## (Boulez)

இவர் இந்தியாவிற்கு வந்து வேலூர் மாவட்டத்திற்குப் பயணியாகச் சென்று அங்கேயே தங்கி வாழ்ந்தார். பல ஆண்டுகளாக இவர் வேலூரிலும் அதைச் சுற்றியுள்ள அக்கம் பக்கக் கிராமங்களிலும் வழங்கும் தமிழ் முறையைப் பற்றி ஆராய்ச்சி செய்தார். 1895ஆம் ஆண்டில் 'கொச்சைத் தமிழ்' (Methode de Tamoul Vulgaire) என்னும் பெயரில் பிரெஞ்சு மொழியில் ஒரு நூல் இயற்றினார். அந்நூலில் தமிழ்ச் சொற்களின் உச்சரிப்பு, இலக்கண அமைதி முதலியவற்றைக் குறிப்பிட்டுள்ளார். தம் நாட்டினருக்கு உதவியாயிருக்கும் என்று எண்ணித் தமிழ்ப் பணியைச் செய்துள்ளார்.

## இராபர்ட்ஸ்
## (Roberts, S.G.)

இராபர்ட்ஸ் ஒரு பிரிட்டிஷ் குடிமகன். இவர் ஓர் அரசாங்க உயர் அதிகாரியாகத் தமிழகம் வந்தார். இவர் தமிழ்ப் பழமொழிகளைத் தொகுத்து

எழுதினார். இவற்றைப் படித்து ஒரு கட்டுரையும் எழுதி ஏசியாட்டிக் ரெவ்வியூவில் "தமிழ்ப் பழமொழிகள்" என்னும் தலைப்பில் 1920இல் வெளியிட்டார்.

**படைப்புகள்**

1. "Tamil Proverbs", Asiatic Review (16), 1920.
2. "Tamil Proverbs as essential to correct conversation and to self comprehension of the language". International Congress of Orientalists, 17.

## செயிக்பிரைடு
## (Siegfried, Ze Lme) 1864-1940

திருவாளர் செயிக்பிரைடு ஒரு ஜெர்மன் நாட்டு அறிஞர். இவர் 1864ஆம் ஆண்டில் ஜெர்மனியில் பிறந்தார். கிறித்தவ மறைக் கொள்கைகளைக் கற்றுப் பாதிரியார் நிலைக்கு உயர்த்தப்பட்டு 1891இல் மறைப்பரப்பாளராக இந்தியா வந்தார். இவர் பெரியபுராணத்தில் மிகுந்த ஆர்வமும் ஈடுபாடும் கொண்டிருந்தார். அதன் விளைவாக இவர் பெரியபுராணத்தை ஜெர்மானிய மொழியில் மொழியாக்கம் செய்து அதை வெளியிட்டுள்ளார். இவ்வறிஞர் 1940ஆம் ஆண்டு இறைவனடி சேர்ந்தார்.

**பங்களிப்பு**

1. பெரிய புராணத்தின் ஜெர்மன் மொழியாக்கம்.
2. Die Tamulische Singpredigt, Leipzig, 1903.

## லூராய் பியர்
## (Père Leroy Pierre) 1864-1919

லூராய் பியர் அடிகள் 1864ஆம் ஆண்டு திசம்பர் மாதம் 3ஆம் தேதி பாரீசில் பிறந்தார். 1881ஆம் ஆண்டு செப்டம்பர் மாதம் 9ஆம் தேதி பாரீசு அந்நிய மறைப்போதகர் சபையில் உள்ள குருக்களுக்கான பயிற்சி மடத்தில் சேர்ந்தார். 1887ஆம் ஆண்டு மே மாதம் 27ஆம் தேதி குருப்பட்டம் பெற்றார். அதே ஆண்டு ஜூலை மாதம் 27ஆம் தேதி புறப்பட்டு, புதுவை மறைத் தளத்திற்கு வந்து சேர்ந்தார்.

அருட்தந்தை லூராய் 1894இல் பெத்தி செமினேரியில் பேராசிரியராகப் பணியாற்றத் தொடங்கினார். சிறிது காலம் சம்மனசுகளின் இராக்கினி பங்கை நிருவகித்து வந்தார். 1895ஆம் ஆண்டில் பெத்தி செமினேரி பள்ளியை நிருவகிக்கும் பொறுப்பை ஏற்றார். இதற்குப்

பின்னர்க் காரைக்காலில் சிறிது காலம் தங்கிப் பணிபுரிந்தார். 1905ஆம் ஆண்டு எறையூர் மாவட்டத்தின் பொறுப்பை ஏற்று அங்கு 14 ஆண்டுகள் பணியாற்றினார். 1919ஆம் ஆண்டு ஜூன் மாதம் 15ஆம் நாள் பெங்களூரில் இயற்கை எய்தினார்.

**இவர் எழுதிய இலக்கண நூல்கள்**

1. தமிழ்-பிரெஞ்சு இலக்கணம். P.லூராய் பியர், MEP, இரண்டாம் பதிப்பு, 1888, ப.146.
2. பேச்சு நடைக் கையேடு. P.லூராய் பியர் MEP, புதுச்சேரி மிஷன் அச்சகம், 1898, ப.128.
3. பிரெஞ்சு வினை விகுதிகள். P.லூராய் பியர், விணிறி, புதுச்சேரி மிஷன் அச்சகம், 1902, ப.28.

## பால் மிமாந்த்
## (Paul Mimande)

இப் பிரெஞ்சு நாட்டவர் தமிழ் நாட்டிற்கு வந்து தமிழ் மக்களின் சமய சம்பந்தமான கொள்கைகளை ஆராய்ந்துள்ளார். இவ்வாராய்ச்சி 1904ஆம் ஆண்டில் செய்யப்பட்டது. இவர் பிரெஞ்சு மொழியில் எழுதிய ஒரே நூலுக்குத் 'தமிழ் நாட்டின் சமயக் கோட்பாட்டாராய்ச்சி' என்னும் தலைப்பைக் கொடுத்துள்ளார்.

## கில்கோ வியார்டோ ஷோமரஸ்
## (Hilko Wiardo Schomerus)

கில்கோ வியார்டோ ஷோமரஸ் ஒரு ஜெர்மானிய அறிஞர். 1902ஆம் ஆண்டு அவர் பாதிரியாராகத் திருநிலைப் படுத்தப் பட்டார். தமிழகத்திற்கு வருமுன்பே அவர் தமிழைக் கற்றிருந்தார். 1905இல் ஈரோடு மறைத்தளத்திற்கு வந்து பொறுப்பேற்றார். பின்பு அவர் தமிழையும், தமிழ் இலக்கியத்தையும் தீவிரமாய்க் கற்றார். அவர் கிறித்தவமறை போதிக்கும் பாதிரியாராக இருந்தாலும், சைவ சித்தாந்தத்தில் வெகுவாக ஈடுபாடு கொண்டார். இதற்கு அவர் சைவ சித்தாந்தத்தை ஜெர்மன் மொழியில் மொழியாக்கம் செய்து வெளியிட்ட நூல்களே சாட்சியம் அளிக்கின்றன.

**படைப்புகள்**

1. கில்கோ வியார்டோ சைவ சித்தாந்தத்தைப் பற்றி அநேக கட்டுரைகள் எழுதி அவை 1923-1925 ஆண்டுகளுக்கிடையே Des Alteu Indien என்னும் வருடப் பத்திரிக்கையில் வெளிவந்துள்ளன.
2. ஜெர்மன் மொழியில் திருவாசகத்தை மொழியாக்கம் செய்து அத்தோடு தமிழ் மூலத்தையும் ஜெர்மன் மொழியில் விரிவுரையையும்

சேர்த்து வெளியிட்டுள்ளார். அவர் திருக்குறளின் மீது மிகுந்த ஈடுபாடு கொண்டிருந்தார்.

3. சிவஞான சித்தி, திருக்குறள் இரண்டையும் மொழியாக்கம் செய்துள்ளார். திருக்குறள் மூன்று பதிப்புகளைக் கண்டது.
4. இவ்வறிஞர் ஜெர்மனிக்குத் திரும்பிச் சென்றபோது அநேக ஓலைச் சுவடிகளையும், காகிதத்தில் கையால் எழுதியவைகளையும் தன்னுடன் எடுத்துச் சென்றார். பேரகத்தியம், தொல்காப்பியம், சூடாமணி நிகண்டு, பிரபுலிங்க மாலை, சகுன நூல், சித்தர் ஆரூட நொண்டிச்சிந்து, கிராமக் கும்மி, நீதிமொழி திரட்டு, சிவவாக்கியர் ஆகியவைகள் அவர் எடுத்துச்சென்ற 150 கைப்பிரதிகளில் குறிப்பிடத்தக்கவையாகும்.
5. Der Caiva Siddhanta, Leipzig 1962. Die Hymnen Des Manikka Vasaga Tiruvasakam, tr. 1923.

## பெர்நெட்
## (Barnett L.D.)

பெர்நெட் ஓர் ஐரோப்பியர். கிழக்கிந்திய வரலாற்றிலும் அதன் மொழிகளிலும் அறிஞர். குறிப்பாகச் சமஸ்கிருத மொழியிலும் சைவ மெய்யியலிலும் ஆழமான அறிவுள்ளவர். மேலும் அவர் திராவிட மொழிகளில் மிகுந்த ஈடுபாடு கொண்டவர். மெய்கண்டாரின் மெய்யியல் படைப்புகளிலும் ஆர்வமுடையவர்.

"Cambridge History of India"வும் பெர்நெட்டின் மற்றுமொரு படைப்பாகும். அவருடைய இந்நூலில் பழைய தமிழகத்தின் எல்லை விந்தியப் பகுதியிலிருந்து கன்னியாகுமரி வரையில் பரந்திருந்தது. 1909ஆம் ஆண்டு பெர்நெட்டும் முனைவர் G.U.போப்பும் ஒருங்கிணைந்து பிரிட்டிஷ் கண்காட்சி வளாகத்தின் நூலகத்தில் உள்ள தமிழ் நூல்களின் ஒருங்கிணைந்த ஒரு பட்டியலைத் தயாரித்தனர். இந்நூலின் முகவுரையில் அகத்தியரிலிருந்து இராமலிங்கர் வரை உள்ளடங்கிய தமிழ் இலக்கிய வரலாறு சேர்க்கப்பட்டுள்ளது.

மறுபடியும் 1931இல் பெர்நெட் ஒரு துணைப்பட்டியல் தயாரித்தார். அதில் அவர் தாயுமானவரின் வயதை 1650க்கு நிர்ணயிக்கின்றார். அவர் 1924இல் ஒரு பத்திரிக்கை தொடங்கினார். அந்தப் பத்திரிக்கையில் அவர் தமிழ் சைவம் காஷ்மீர் சைவத்திலிருந்து வேறுபட்டது என்று எழுதியுள்ளார்.

**படைப்புகள்**

1. Cambrige History of India.
2 Catalogue of the Tamil Books in the Library of British Museum 1909.

3. A Supplementary catalogue of the Tamil Books in the Library of British Museum, 1931.

## மெர்வார்ட்
## (Mervart A.M.)

இளவயதான மெர்வார்ட் மனித இனங்கள் பற்றிய விளக்க ஆய்வாளரும் பன்மொழி அறிஞருமாவார். சோவியத்து- திராவிட நிறுவனத்தை இவர் உருவாக்கினார். இவர் 1914-18ஆம் ஆண்டுகளில் தம்முடைய துணைவியாருடன் தென்னிந்தியா, இலங்கை ஆகிய இடங்களுக்கு இங்கு வாழும் திராவிட மக்களின் வாழ்க்கைமுறை, பழக்கவழக்கங்கள், மொழிகள், இலக்கியங்கள், தேசியத் தனித்தன்மை ஆகியவற்றைக் கற்கும் நோக்கத்தோடு வந்தார். இந்த ஆராய்ச்சிப் பயணமானது தமிழையும் மற்ற திராவிட மொழிகளையும் நன்கு ஆராய்ந்தறிய ஒரு நல்லதொரு உகந்த சந்தர்ப்பத்தைக் கொடுத்தது.

திராவிட மொழிகளின் இடையேயுள்ள குரலெழுப்புதலின் வரலாறு என்ற தலைப்பில் மெர்வார்ட் எழுதிய கட்டுரையானது திராவிடப் படைப்புகளிலேயே உயர்ந்த இடத்தைப் பிடித்துள்ளது. இவர் திராவிட மொழிகளில் முக்கியமாகத் தமிழ் இலக்கணத்திலும், சொற்களிலும் உள்ள வெவ்வேறு பிரச்சினைகளை ஆராய்ந்து, ஆய்வின் போது திராவிடர்களுடன் நேரடித் தொடர்பு கொண்டு பெற்ற செய்திகளை இவருடைய ஆய்வில் கையாண்டுள்ளார்.

**இவரது மிகச் சிறந்த படைப்பு**

1. உருஷிய மொழியில் தமிழ் ஆராய்ச்சிகள் அடங்கிய இவரது முதல் நூல் "பேச்சுத் தமிழ் மொழியின் ஓர் இலக்கணம்" என்பதாகும். இந்நூல் 1929இல் உருஷியாவில் வெளியிடப்பட்டது.
2. Grammatika Tamilskogo razgovor-nogo jazyka (A Grammar of the Colloquial Tamil Language) Leningrad, 1929.

## தந்தை லூயிஸ் ஆங்லாடு, சே.ச.
## (Rev.Fr.Louis Anglade, S.J) 1873-1953

பிரான்ஸ் நாட்டிலுள்ள காஸ்தெல்னோ வட்டாரத்திலுள்ள அவிரோனில் (Aveyron) பக்தி நிறைந்த விவசாயக் குடும்பத்தில் கசிமீர் ஆங்லாடுக்கும், ரோசாநியலுக்கும் திருமகனாக 1873ஆம் ஆண்டு நவம்பர் 30ஆம் தேதியன்று லூயிஸ் ஆங்லாடு பிறந்தார். இவர் தனது ஆரம்பக் கல்வியை வீட்டிலேயே தன்னுடைய ஒன்றுவிட்ட அண்ணன்கள், மூத்த சகோதரிகளிடமிருந்து கற்றுக் கொண்டார்.

இவருடன் உடன் பிறந்தவர்கள் இரண்டு இளைய சகோதரர்களும், ஓர் இளைய சகோதரியுமாவர்.

மேல்கல்வி கற்க இவர் எஸ்பாலியோனுக்குச் சென்றார். அங்கு இரண்டு ஆண்டுகள் மெய்யியலும், மறையியலும் கற்றார். இங்கு நான்கு ஆண்டுகள் செவ்வியல் மொழிகளான இலத்தீன், கிரேக்கத்தில் உள்ள இலக்கியங்களையும், மெய்யியலையும், இறையியலையும் படித்து முடித்தார். இவர் 1894ஆம் ஆண்டு செப்டம்பர் முதல் தேதி இயேசு சபையில் நவசந்நியாசியாகச் சேர்ந்தார். அதே வேளையில் உயிரியலும் கற்றார். இவர் தமது 30வது வயதில் குருவாகத் திருநிலைப் படுத்தப்பட்டார்.

1908ஆம் ஆண்டு திசம்பர் மாதம் நான்கு நவசந்நியாசிகளுடன் தமிழகத்திலுள்ள கொடைக்கானலுக்கு வந்தார். தந்தை ஆங்லாடு மெய்யியல் பேராசிரியராகச் செண்பகனூரில் உள்ள திரு இருதயக் கல்லூரியில் 1949ஆம் ஆண்டுவரை பணியாற்றினார். ஓய்வு நேரங்களில் தச்சு வேலை, அரும்பொருள்களைத் தேடிக் கண்டுபிடித்தல், மலர்கள், இலைகள் போன்றவற்றைத் தத்ரூபமாக நீர் வண்ணம் கொண்டு ஓவியங்கள் வரைதல் போன்ற வேலைகளில் ஈடுபட்டிருப்பார். இவரது திறமையைக் கண்டு வியந்தவர்களில் ஒருவரான வழக்கறிஞர் ஏ.என்.கோபாலகிருஷ்ண பிள்ளை, "தீபிக்கா" என்னும் பத்திரிக்கையில் 1952ஆம் ஆண்டு திசம்பர் 3ஆம் தேதி 'அந்தத் துறவி' என்னும் தலைப்பில் ஒரு கட்டுரை எழுதி வெளியிட்டார்.

விஞ்ச இயலாத ஓர் ஓவியர், ஒரு பெரிய மெய்நூல் அறிஞர், அறிந்திராத ஒரு துறவி, எண்பது வயதில் துணிந்து செயலாற்றத் தயங்காத ஒரு சிறு பையனின் எழுச்சி மிக்க நிலையில் தனது வேலையில் ஈடுபட்டுள்ளார். இவரது வெள்ளிநிறத் தாடி, கூர்ந்தாராயும் இரண்டு கண்கள், ஆரோக்கியமான உடல் அமைப்பு இவை யாவும் அநேகம் பேரின் கவனத்தை ஈர்த்ததை வழக்கறிஞர் கவனித் திருக்கின்றார். இவ்வழக்கறிஞர் அவரைச் சந்திக்கச் சென்றபோது இரும்புக் கம்பியை உராவிக் கொண்டிருந்தார். தந்தையவர்கள் அவருக்கு வீட்டைக் காண்பிப்பதற்காகப் பெரிய அலமாரிகள் உள்ள ஒரு கூடத்தில் நுழைந்தார். அது உலர்ந்த செடிகளைச் சேர்த்து வைக்குமிடம். அங்கிருந்த ஓவியங்கள் வயதான தந்தையால் வரையப் பட்டவைகள். ஆயிரக்கணக்கான செடிகளும் மலர்களும் இயற்கை நிறத்தில் நீர் வண்ணம் தீட்டி வரையப்பட்டவை. அவைகளைப் பல்கலைக் கழகங்கள் விலைக்கு வாங்க முயற்சித்தன. ஆனால் அவர் அவற்றை விற்கவில்லை. அத்தோடு அந்தப் பார்வையாளர் கூடத்திலுள்ள பொருள்களைப் (திகிலூட்டும் அந்தப் புலி இரு தாடைகளையும் நீட்டி வாயைத்

திறந்திருந்தது, அந்தச் சிறுத்தைப் புலி, காட்டெருது, குதிரை...) பார்த்துவிட்டுத் தந்தை ஆங்லாடுதான் இவைகளை எல்லாம் சேகரித்து ஒன்றாக இக்கூடத்தில் ஒழுங்குமுறைப் படுத்தி வைத்துள்ளார் என்று தெரிந்ததும் அவரது முகத்தில் வியப்புக்குறி தென்பட்டது. மேலும் தந்தை ஆங்லாடு எந்த வகையான எலும்புகளையும் பார்த்து அது எந்த மிருகத்தின் எலும்பு என்று கூறுவதைக் கேட்டு வியப்புற்றார். இவைதவிரப் பாம்புகள், பூச்சிகள், வண்ணத்துப் பூச்சிகள், பறவைகள் எனப் பலவகை. ஆங்லாடு அடிகள் மாதிரிக் கல்மேடைகளை மரத்தினால் செய்தும் கற்காலத்தின் பழம் பொருட்களைச் சேகரித்து அருங்காட்சியகத்தில் வைத்துள்ளதையும் அவர் கண்டார். அடிகள் அவர்கள் சில காலம் நோய்வாய்ப்பட்டு 1953ஆம் ஆண்டு ஜனவரி 13ஆம் தேதி இயற்கை எய்தினார்.

இவர் தொல்பொருள் ஆராய்ச்சி, நில அளவியல் துறைக்குத் தேவையான செய்திக் குறிப்புகளை அனுப்பியுள்ளார். மும்பையில் 136, அப்பல்லோ தெருவில் உள்ள மனித இன ஆராய்ச்சிக் கழகத்திற்கு ஒரு சிறந்த சிற்றேடும் அனுப்பியுள்ளார்.

**கடந்த கால மானிடப் பழம் பொருட்கள்**

நில அமைப்பியல் வகையில் பழனி மலைகள், பெரும்பாலும் ஒரே வகையான பெருந்திரள் கருங்கல் பாறைகளால் ஆன மேற்குத் தொடர்ச்சி மலைகள், நீலகிரி மலைகள், ஆனை மலைகளைப் போன்ற பழமை வாய்ந்த மலைகளின் தொடர்ச்சியாகும். இங்குக் குறைந்த உயரப் பகுதிகளில் மனித இன ஆராய்ச்சிக்குரிய தடயங்கள் முற்றிலுமாக இல்லை என்று கூறுவதற்கில்லை. பழனி மலையின் குறுகிய பள்ளத்தாக்குகளில் 150 கல்மேடைகள் (Dolmens), அநேக கல்லறைகள் (Tombs), கற்களினால் ஆன வட்டங்கள் (Stone circles) உள்ளன.

கல்மேடைகள்: 1"x5" அளவில் மரப் பலகையினால் ஆன 30க்கும் மேற்பட்ட கல்மேடைகளின் சரியான பிரதிகள் இங்கு உள்ளன. இந்தியாவிலும், பண்டைய உலகத்தின் அநேக பகுதிகளிலும் கல்லாலான அறைக் கூட்டங்கள் காணப்படுகின்றன. ஒவ்வொரு அறையும் செவ்வக வடிவில் ஏறக்குறைய 12'x3'x5'அளவில் நான்கு பலகைக் குத்துக் கற்கள் அவற்றின் மேல் பகுதியில் படுக்கையான கல்லால் மூடப்பட்டு உள்ளது. இவைகளைச் சுற்றி மேலே குறிப்பிட்ட அளவுள்ள பெரிய, செதுக்கப்பட்ட, பிரமாண்டமான குத்துப் பலகைக் கற்கள் நடப்பட்டுள்ளன. கற்கள் சுவர்களாக அமைகின்றன. இங்கு வாழும் மலைமக்கள் இக்கல் மேடைகளைப் "பாண்டவன் கோட்டை" அல்லது புராணத்தில் வரும் ''பாண்டவர்களின் கோட்டைகள்'' என்று கூறுகின்றனர்.

**கல்லறைகள்**

கல்மேடைகளும், கற்களாலான வட்டங்களும் உள்ள பகுதிகளில் கல்லறைகளும் பூமியிலிருந்து தோண்டி எடுக்கப்பட்டன. அநேகமாகக் கல்லறைகள் மேற்கூறிய இரண்டுக்கும் அருகில் அமைந்துள்ளன. இறந்த மனித உடலானது செவ்வக வடிவத்தில் கற்பலகைகளால் பூமிக்கடியில் நடப்பட்டு, கல்மேடையில் அல்லது கற்களாலான வட்டங்கள் அடியில் முதுமக்கள் தாழிகளில் வைத்துப் புதைக்கப்படும். இம் முதுமக்கள் தாழிகள் தட்டையான அடிப்பாகமும் குறுகிய கழுத்தும் கொண்டவை. இவை பல உருவ அளவுகளில் உள்ளன. இவைகளை அருங்காட்சியகத்தில் காணலாம். இத்தாழிகளில் மனித எலும்புகள்தாம் இருந்தன. அக்காலத்தில் முதுமக்கள் இறந்தவர்களின் உடலை எரிக்கவில்லை என்பது தெளிவாகின்றது.

**கற்களாலான வட்டங்கள்**

இவை கல்மேடைகளுக்கு அருகாமையில் காணப்படுகின்றன. தரை மட்டத்திலிருந்து சற்று உயரமாகப் பெரிய கற்பாறைகள் வட்டமாக நடப்பட்டுள்ளன. இவை சுற்றுச் சுவராகப் பயன்படுகின்றன. இவ் வட்டங்களைத் தோண்டி எடுத்தபோது அவற்றினுள் நிறையப் பலவகையான பொருள்கள் இருந்தன. பெரியதும், சிறியதுமாக மட்பாண்டங்கள், பித்தளையிலான வளையல்கள், இரும்பாலான கருவிகள் இவை எல்லாம் ஓரறை கொண்ட கல்மேடையினுள் முதுமக்கள் தாழியில் புதைக்கப் பட்டுள்ளன. தந்தை ஆங்லாடு அவர்களின் கூற்றுப்படி நடுவில் பழங்கால அல்லது சில தற்கால ஆதிவாசிகளிடையே நிலவிய பழக்க வழக்கங்களின்படி இப் பகுதிகளில் மனிதர்கள் குடியிருந்திருக்கிறார்கள். இவர்கள் இறந்தவர்களின் உடலை அவர்கள் குடியிருந்த வீட்டுக்குள்ளேயே புதைத்து விட்டு வேறு இடத்துக்குச் சென்று குடியேறியுள்ளனர். மேலே குறிப்பிடப்பட்டுள்ள மூன்றும் ஒரே காலத்தைச் சார்ந்தவைகளாக உள்ளன.

**சிற்றுரு அருங்காட்சியகம்**
**பழனி மலைகளின் பாலூட்டி விலங்குகளும் தாவரங்களும்**

கொடைக்கானலில் உள்ள செண்பகனூரில் அமைந்த திரு இருதயக் கல்லூரியின் அரும்பொருள் காட்சியகம் பழனி மலைகளின் சிற்றுருவை எடுத்துக் காட்டுகின்றது. இதன் சிறப்பு என்னவெனில் அருங்காட்சி மனையில் உள்ள அனைத்துச் சேகரிப்புகளும், அந்தத் தனியார் கல்லூரியில் இருந்த பேராசிரியர்களும், மெய்யியல் கற்ற மாணவர்களும் ஒன்றிணைந்து பழனி மலைகளில் எண்பத்தைந்து ஆண்டுகளுக்கு மேலாகச் சேகரித்தவைகளாகும். அவர்களுக்குக் கிடைக்கும் ஓய்வு நாள்களில் எல்லாக் காலங்களிலும் பழனி மலைகளின்

எல்லாத் திக்குகளுக்கும் சென்று தேடியலைந்து எப்பொருளெல்லாம் ஆய்வறிவு சார்ந்தவை எனக் கண்டறிந்து அவற்றைத் தேடிக் கொண்டு வந்தனர். இத்தேடலில் 18 பேராசிரியர்களும், முன்னாள் மெய்யியல் கற்ற மாணவர்களும் பலவகையான பூச்சிகள், செடிகள் ஆகியவற்றைச் சேகரித்து இம்மனைக்குக் கொண்டு வந்து சேர்த்தனர்.

**பாலூட்டிகளின் மாதிரி வகைகள்**

(விலங்கினங்கள்) வீட்டில் அல்லது காட்டில் வாழும் விலங்கினங்கள், யானைத் தந்தங்கள், புலி, சிறுத்தை, கருங்குரங்கு, காட்டுப் பன்றியின் தலை, கரடி போன்றவைகளின் உடல் அல்லது தலைநிரப்பப்பட்டுப் பதப்படுத்தி வைக்கப்பட்டுள்ளன. மற்றும் பல விலங்கினங்களை இக்காட்சியகத்தில் காணலாம்.

**பாம்பு வகைகள்**

குட்டி மலைப்பாம்பின் முதுகெலும்பு 15 அடி நீளத்தில் தொங்கவிடப்பட்டுள்ளது. வளர்ந்த மலைப்பாம்பின் முதுகெலும்பு 21 அடி நீளம் இருக்கும். நாகப்பாம்பு 12அடி நீளம். நஞ்சு உள்ள, நஞ்சு இல்லாத பாம்பு வகைகள் உள்ளன. தந்தை (Fr.C.Leigh,S.J.) பாம்புகளைப் பற்றிய நல்ல அறிவும் திறமையும் உள்ளவர்.

**பூச்சி வகைகள்**

15 கண்ணாடிப் பேழைகளில் 1000 மாதிரிப் பூச்சிகள் உள்ளன. வண்ணத்துப் பூச்சி வகைகள் 35 கண்ணாடிப் பேழைகளில் உள்ளன. 242 வகையான வண்ணத்துப் பூச்சிகள் உள்ளன.

**பறவைகள்**

பழனி மலைகளில் உள்ள 200 வகைகளில் காட்சியகத்தில் 193 வகைகள் உள்ளன. பாட்டுப் பாடும் பறவைகள், பல வண்ணப் பறவைகள் எனப் பலவற்றை நாம் காணலாம். 35 வகையான பறவைகளின் முட்டைகள் 10 கண்ணாடிப் பேழைகளில் உள்ளதை நாம் காண முடியும். தாவர வகைகள்: மூலிகைகள் சேர்த்து வைக்கப் பட்டுள்ள இடத்தில் 1500 மாதிரிகள் உள்ளன. 130 வகையான பெரணிச் செடிகள் உள்ளன. தாவரவியலில் 450 பாசிகள் தென்இந்தியா, வடஇந்தியா, ஐரோப்பா போன்ற நாடுகளிலிருந்தும் சேகரிக்கப் பட்டுள்ளன. தந்தை போரோ,சே.ச. இப்பாசிகளைச் சேகரித்து மெட்ராஸ் பல்கழைக்கழகத்தின் செய்தித்தாளில் இவற்றைப்பற்றி வெளியிட்டுள்ளார். 2000 நீர் வண்ண ஓவியங்கள் தந்தை ஆங்லாடுவினால் வரையப்பட்டவைகளாகும். இவை பல சேகர ஏடுகளில் உள்ளன. இவ் ஓவியங்கள் மிகவும் தத்ரூபமாக உள்ளன.

### மரத்துண்டு நூலகம்

300 வகையான மரங்களின் துண்டுகள் பாடநூல் அளவில் செதுக்கப்பட்டு அவற்றின் பின்புறம் அம்மரத்தின் பெயர் எழுதி ஒட்டப் பட்டுள்ளது. இவற்றில் 40 வகையான குங்கிலிய மரங்களை நாம் காணமுடியும். பழனி மலையின் குறைவான உயரத்தில் தோதகத்தி (Rose wood), சந்தனம், தேக்கு மரங்களைக் காணலாம். கல்லூரியைச் சுற்றி 200 வகையான மரங்கள், புதர்ச் செடிகள், பூச்செடிகள் உள்ளன. இவற்றில் பெரும்பாலானவை இமயமலையிலிருந்தும், ஐரோப்பாவிலிருந்தும் கொண்டு வரப்பட்டவைகளாகும். பழச் செடிகள், காய்கறிவகைகள் எல்லாம் வெளிநாட்டிலிருந்து கொண்டுவரப்பட்டு, பழனி மலைப் பகுதியில் அறிமுகப் படுத்தப்பட்டன.

### பகட்டு வண்ண மலர்ச்செடி வகைகள் (orchids)

இச்செடிகள் உள்ள தோட்டம் உள்ளது. ஏறக்குறைய 200 வகைச் செடிகள் உள்ளன. பல செடிகள் இமயமலையிலிருந்தும், சில செடிகள் மியான்மர், திருவாங்கூர், நீலகிரி மலையிலிருந்தும், சிலவகை அமெரிக்காவிலிருந்தும் கொண்டு வரப்பட்டன.

### கற்றாழை (Cactus)

கற்றாழை, கள்ளிச் செடிவகைகள் அஞ்சல் அலுவலகத்திற்குமுன் பலவகைகள் வளர்க்கப்பட்டு வருகின்றன.

### தந்தை ஆங்லாடு அவர்கள் எழுதிய நூல்கள்

1. Dolmens and tombs of Palani Hills. Rev.Fr.Anglade, S.J., Published by The Anthropological Society of Bombay, 136, Apollo Street, Bombay.
2. Biology and the nervous system, Rev.Fr.L.Anglade S.J., 1927.
3. A Musium of the Palanis, Sacred Heart College, Shembaganur, Rev.Fr.L.Anglade S.J., De Nobili Press, Madurai-625003.

தந்தை ஆங்லாடு இவ்வாறாகப் பல துறைகளில் ஈடுபட்டுச் சிறப்பாகத் தொல்பொருள், தாவரவியல் ஆகியவற்றில் ஆராய்ச்சிகள் பல செய்து தமிழகத்திற்குச் சேவை செய்துள்ளார்.

## தந்தை ஜோசப் கிறிஸ்டோபர் கியூபர்ட் சே.ச.
## (Rev.Fr.Joseph Christopher Houpert, S.J.) 1879-1967

ஜோசப் கிறிஸ்டோபர் கியூபர்ட் பிரான்ஸ் நாட்டின் மெட்ஸ் (Metz) மறைமாவட்டத்தில் இலோரேன் பகுதியிலுள்ள இன்ஸ்மில் என்னும் கிராமத்தில் 1879ஆம் ஆண்டு ஆகஸ்ட் மாதம் பிறந்தார். கியூபர்ட்டுடன்

பிறந்தவர்கள் மூன்று சகோதரர்களாவர். ஒருவர் குழந்தைப் பருவத்தில் மரித்து விட்டார். மற்ற இருவரும் வாரிசின்றி மரித்து விட்டனர். இவருக்கோ அநேக ஒன்று விட்ட சகோதரர்கள் இருந்தனர். இவர்களில் ஒருவர் கனடாவிலுள்ள ஷெர்புர்க்குப் பல்கலைக் கழகத்தில் கலைப்புலத்தின் தலைவராகப் பணியாற்றியுள்ளார்.

இவர் தமது 16வது வயதில் இங்கிலாந்திலுள்ள அமியன்ஸ் சிறிய கேம்ட்டன் ஊரிலுள்ள திருத்தூதர் பள்ளிக்குச் சென்று கல்வி கற்றார். இறுதியாண்டுத் தேர்வில் இவர் இலத்தீன், கிரேக்கம் மொழிகளில் முதல் பரிசு பெற்றார். மேலும் பக்தி சபையின் தலைவராகவும் நியமனம் செய்யப்பட்டார். 1893இல் இவர் பிரான்ஸ் நாட்டிலுள்ள லில்(Lille) உயர்நிலைப் பள்ளியில் கல்வி பயின்று சான்றிதழ் பெற்றார். ஒருமாதம் கழித்துத் தூலூசில் நவசந்நியாசப் பயிற்சி பெற்றார். சில மாதங்கள் கழித்து, கியூபர்ட் சபையின் சகஉறுப்பினர்கள் பத்துப் பேருடன் இந்தியா நோக்கிக் கப்பலில் பயணமானார். 1898ஆம் ஆண்டு தூத்துக்குடியில் வந்திறங்கினார். அதன்பின் கொடைக் கானலில் உள்ள செண்பகனூரில் அமைந்துள்ள தூய இருதயக் கல்லூரியில் தனது நவ சந்நியாசத்தைத் தொடர்ந்து முடித்தார். அக்கல்லூரியிலேயே இவர் மெய்யியலை மூன்று ஆண்டுகள் கற்றார். இதன்பிறகு கியூபர்ட் அடிகள் மேற்கு வங்காள மாநிலத்திலுள்ள மலைப் பகுதியில் அமைந்துள்ள கர்சியாங் சென்று நான்காண்டுகள் இறையியல் கற்று முடிவில் குருவானவராக 1910ஆம் ஆண்டு அக்டோபர் மாதம் 2ஆம் நாள் திருநிலைப்படுத்தப்பட்டார்.

அருட்தந்தையவர்கள் 1913 லிருந்து 1921 வரை மதுரைத் தலைமை மறை மாவட்டத்தில் பணியாற்றினார். 1921ஆம் ஆண்டு திருச்சிராப்பள்ளியிலுள்ள புனித சின்னப்பர் குருமடத்தில் 46 ஆண்டுகளாகக் குருவானவர் ஆவதற்குப் பயிற்சி பெறும் மாணவர்களுக்கு மெய்யியல், திருச்சபைச் சட்டம், திருச்சபை வரலாறு, சமூகவியல், இறையியல் ஆகியவற்றைக் கற்றுக் கொடுக்கும் பேராசிரியராகப் பணியாற்றினார். மேலும் அடிகள் இந்தியக் கத்தோலிக்க உண்மைக் கழகத்தின் (Indian Catholic Truth Society) செயலாளராக இருந்தார். ஒளிக்கதிர்கள் (Rays of Light) என்னும் மாதாந்திரப் பத்திரிக்கைக்கு 38 ஆண்டுகள் பொறுப்பாளராக இருந்தார். 1967ஆம் ஆண்டு ஏப்ரல் 5ஆம் தேதி இறைவனடி சேர்ந்தார்.

அருட்தந்தை ஜோ.கி.கியூபர்ட் ஓர் சிறந்த பேராசியரும் எழுத்தாளருமாவார். அடிகள் 50நூல்கள் எழுதியுள்ளார். இவைகளைத் தவிர்த்துத் துண்டுப் பிரசுரங்கள் அல்லது சமயம் பற்றிய சிறு ஆய்வுக் கட்டுரைகள் எழுதி வெளியிட்டுள்ளார்.

**தந்தை கியூபர்ட் யாத்த முக்கியமான படைப்புகள்**

1. மதுரைக் கத்தோலிக்க மறைப்பணிக்குழு (Madura Catholic Mission). இந்நூல் அநேக இளம் மறைப் பணியாளரிடம் மறைப் பணியாற்ற மிகுந்த ஆர்வத்தைத் தூண்டக் கூடியதாகும்.
2. கத்தோலிக்கத் திருச்சபையின் வரலாறு (The History of the Catholic Chruch).
3. இந்திய இலங்கையின் திருச்சபை வரலாறு (The Church History of India and Ceylon) 1965 reedited.
4. குருக்கள் மறைபரப்புவதற்கான வழிகாட்டி (Pastoral Guide, guiding the priests in their parish).
5. 500 பக்கங்கள் அடங்கிய ஜெப நூல், 'இறைவன் போற்றப் பெருவாராக!' என்ற தலைப்பில் அமைந்துள்ளது.
6. சாதாரண மனிதனுக்கான திருச்சபைச் சட்டம். (Canon Law for the Layman).
7. ஒரு தென்னிந்திய மறைத்தளம். மதுரைக் கத்தோலிக்க மறைத்தளம். இந்த நூல் தென்னகத்தின் அமைப்பு, மக்கள் தொகை, முக்கியமான மூன்று சமயங்கள், சமூக நிலை ஆகியவற்றைப் பற்றி நாம் அறிந்து கொள்ளப் பயன்படுகிறது. இந்நூல் 16ஆம் நூற்றாண்டில் தூத்துக்குடி முத்துக் குளித்துறையைச் சுற்றியுள்ள ஊர்களில் சமய, சமூக, அரசியல் பற்றிய செய்திகளை நாம் அறிந்து கொள்ள உதவும். 17ஆம் நூற்றாண்டில் மதுரை மறைத்தளத்திற்குட்பட்ட பகுதிகளில் மறைத் தொண்டர்களின் பணியைப் பற்றியும் அவர்கள் மதுரையை ஆண்ட நாயக்கர் மன்னர்களிடமும், சந்தாசாகிப்பிடமும் கொண்ட தொடர்புகளைப் பற்றியும் அறிந்து கொள்ள முடியும். 18,19,20ஆம் நூற்றாண்டுகளில் தமிழகத்தின் வெவ்வேறு பகுதிகளில் இயேசு சபை மறைப் பணியாளர்கள் ஆற்றிய மறைப்பணி, சமூகப்பணி, கல்விப்பணி, கத்தோலிக்க இலக்கியப் பணிகள் ஆகியவற்றை இந்நூலிலிருந்து விரிவான முறையில் நாம் அறிந்து கொள்ள முடியும்.

## லியோ செயின்ட் ஜான்
## (Leon Saint Jean)

லியோ செயின்ட் ஜான் ஒரு பிரெஞ்சு அறிஞர். இவ்வறிஞர் 'காரவேலன்' என்ற புனைப்பெயரில் சில தமிழ் நூல்களின் சிறந்த பகுதிகளைப் பிரெஞ்சு மொழியாக்கம் செய்துள்ளார். காரைக்காலம்மையாரின் 'திருவாலங்காட்டு மூத்த திருப்பதிகம்', ஔவையாரின் 'ஆத்திசூடி',

சுப்பிரமணிய பாரதியாரின் 'புதிய ஆத்திசூடி', அவருடைய கவிதைகளில் சில பகுதிகள், மாணிக்கவாசகரின் சில பாட்டுக்கள், தேவாரப் பாடல்களில் சில அவரால் பிரெஞ்சு மொழியில் மொழியாக்கம் செய்யப்பட்டுள்ளன. இவையன்றிச் சிலப்பதிகாரத்தில் சில பகுதிகளும், ஐங்குறுநூற்றின் பாக்கள் சிலவும் பிரெஞ்சில் மொழியாக்கம் செய்யப் பட்டுள்ளன. இவர் கவிமணி தேசிக விநாயகம் பிள்ளையின் ஒத்துழைப்புடன் அநேக செய்யுள்களைப் பிரெஞ்சு மொழியாக்கம் செய்துள்ளார்.

**படைப்புகள்**

1. La Literature Tamoule, Paris, 1933.
2. The Poems of Tamil etc., Karaikal, 1944.
3. ஒளவையாரின் ஆத்திசூடி மொழியாக்கம்.
4. சுப்பிரமணிய பாரதியின் 'புதிய ஆத்திசூடி' கவிதைகளுள் சில பகுதிகள்.
5. மாணிக்கவாசகரின் பாடல்கள் சிலவும், தேவாரப் பாட்டுக்கள் சிலவும் பிரெஞ்சு மொழியாக்கம்.
6. சிலப்பதிகாரத்தில் சில பகுதிகளும், ஐங்குறுநூற்றின் பாக்கள் சிலவும் பிரெஞ்சு மொழியில் மொழியாக்கம்.

## லூயிஸ் ரெனு
## (Louis Renu)

லூயிஸ் ரெனு ஒரு பிரெஞ்சு அறிஞர். இவர் தமிழ் இலக்கியங்களைப் பிரெஞ்சு மொழியில் எழுதி, பின்பு அதை ஆங்கிலத்திலும் எழுதினார்.

**படைப்புகள்**

1. Les Litteratures de l' Inde. 1951. (இந்திய இலக்கியங்கள்)
2. The Dravidian Literature 1964 (திராவிட இலக்கியங்கள்)
3. Kareikalammeiyar, Karaikal, (திருவாலங்காட்டு மூத்த திருப்பதிகம்) 1956.
4. Volume Commemoratiff Du Soix Antieme Anniversaire De sa Naissance, Pondicheri, 1960.

## வெல்ஸ்
## (W.G.B. Wells)

வெல்ஸ் ஒரு பிரிட்டிஷ் கல்வியாளர். இவர் கூலித்தமிழ் என்னும் தலைப்பில் இலங்கையில் தேயிலை, இரப்பர் தோட்டங்களில்

பணிபுரியும் கூலியாட்களால் பேசப்படும் பேச்சுவழக்கு மொழியைத் தொகுத்து ஒரு நூல் எழுதினார். இந்நூல் மாணவர்களுக்கும் தோட்ட உரிமையாளர்களுக்கும் எழுதப்பட்டது.

இவர் இரண்டு பகுதிகளாக ஓர் அகராதி தொகுத்தார். முதல் பகுதி தமிழ்-ஆங்கிலம். இரண்டாம் பகுதி ஆங்கிலம்-தமிழ். இந்த அகராதி சிறிய அளவான பதிப்பு. இந்த நூலில் ஆசிரியர் பேச்சுவழக்கு மொழி நடையில் ஒரு புதிய உச்சரிப்பின் அமைப்பைக் கொடுத்துள்ளார்.

மேலும் இவர் பேச்சுவழக்கு மொழியின் பயன்பாட்டிற்கு பேச்சுவழக்குத் தமிழ் என்ற தலைப்பில் எழுதினார்.

**படைப்புகள்**

1. கூலித்தமிழ், இலங்கை, 1915.
2. தமிழ்-ஆங்கில அகராதி, இலங்கை, 1932.
3. ஆங்கிலம்- தமிழ் அகராதி, இலங்கை, 1932.
4. Cooly Tamil as understood by Labourers on the Rubber Estates, Colombo. Ceylon observer Press 1915 (2nd ed. 1918 3rd ed. 1921, 4th ed. 1927).
5. Tamil-English and English-Tamil: A Concise new style Read-At-Sight Dictionary of Colloquial Tamil. Colombo, 1932.
6. Colloquial Tamil (Formerly cooly Tamil) Specially Arranged for Planters and planting students, Kandy, 1960.

## ஜூல் பிளாக்
## (Bloch, Jules) 1880-1953

ஜூல் பிளாக் நவீனமும் உயர்தரமுமான இந்திய-ஆரிய, திராவிடத்தை உள்ளடக்கிய இந்திய மொழியியலில் ஒரு பெரிய வல்லுநர். தமிழ் கற்ற பேரறிஞர். இவர் மைலட்டோடு (Meillet) இலக்கண ஒப்புமையும், சில்வான் லெவியோடு சமஸ்கிருதமும் பிராக்ருதமும், வேன்சோனோடு தமிழும், இந்தியும் கற்றவர். இவர் இந்தியாவில் இரண்டரை ஆண்டுகள் தங்கித் தனிப்பட்ட எந்த ஒரு மொழியையும் சிறப்பாகத் தேர்ந்தெடுத்து அதில் பாண்டித்தியம் பெறுவதை விட எல்லா மொழிகளையும் ஒப்பிட்டு ஒற்றுமைகளை வெளிக் கொணர்வதிலும் அவைகளில் அடங்கிய எண்ணிலடங்காத மாறுதல்கள், ஊடுருவல்கள் ஆகியவற்றின் புதிர்களைக் கண்டுணர அவற்றை ஆழமாக ஆராய்வதிலும் தம் நேரத்தைச் செலவழித்தார்.

1937ஆம் ஆண்டு கிழக்கத்தியப் பகுதியில் பிரெஞ்சு உயர்நிலைப்பள்ளியில் அவரது ஆசிரியர் பணி முடிவடைந்தது. பின்னர்

அவர் பிரான்சு நாட்டின் கல்லூரியில் தமிழ்ப் பாட நூல்களை விவரிக்கும் பேராசிரியராக 1951 வரையில் பணியாற்றினார்.

அறிஞர் ஜூல் பிளாக் தமிழ் இலக்கணத்தைப்பற்றி அநேக கட்டுரைகள் எழுதி வெளியிட்டுள்ளார். முனைவர் கால்டுவெல் அவர்கள் தொடங்கிய திராவிட மொழிகளின் ஒப்பாய்வை மேம்படுத்தியதோடன்றி அந்த ஒப்பாய்வை இந்தியாவில் பரவிக்கிடந்த எவ்வித எழுத்துவடிவமும் இல்லாத திராவிட மொழிகளுக்கும் கொண்டு சென்றார். கால்டுவெல் அவர்களை மேற்கோள் காட்டி (1856) இந்தியாவில் தென்பகுதியில் பேசப்படும் மொழிகள் ஒரு வளமான பாரம்பரியம் கொண்டுள்ளதை ஜூல் பிளாக் விவாதித்து நிரூபித்துள்ளார்.

இவர் தமிழைக் கற்கத் தொடங்கியது காரணமாகத் தமிழோடு உறவு கொண்டுள்ள பிற திராவிட மொழிகளின் தன்மைகளையும் ஆராய முற்பட்டார். இதனால் தமிழோடு நெருங்கியுள்ள பிற திராவிட மொழிகளையும் அவற்றின் இலக்கணப் போக்கையும் இவர் ஆராய்ச்சி செய்தார். 1946ஆம் ஆண்டில் 'திராவிட மொழிகளின் இலக்கண அமைப்பு' என்ற தலைப்பில் பிரெஞ்சு மொழியில் ஒரு நூல் எழுதினார். இதில் சிறப்பாகத் தமிழ் இலக்கண முறையைப் பற்றியே பேசுகின்றார். இந்த முறையை அடிப்படையாகக் கொண்டுதான் பிற திராவிட மொழிகளின் இலக்கண அமைதியை இவர் ஆராய்ந்தார். தமிழ் மொழியின் இலக்கண அமைதிதான் இவர் மனத்தைப் பெரிதும் ஈர்த்தது என்று கூறலாம்.

**படைப்புகள்**


1. "Tamoul Vaddyar, Sanskrit and Padyaga," 7. Indo-German Ische Forschungen 25 (1909) 239-40.
2. "Les Consonnes inter vocaliques en Tamoul", Memoires de la Societé Linguistique de Paris 19, French, 1914.
3. The Intervocalic Consonants in Tamil, (translated from French article with additions by J.D.Anderson) IA, Bombay, 48, (1919) 191-195.
4. Sanskrit et Dravidian, Bulletin de la Societé de linguistique de Paris 25, 1924, 1-21. (Reprinted in English in pre-Aryan and pre-Dravidian in India edited by Sylvain Levi, K.Pzyzluski and Jules Bloch, French, pp.35-50.
5. "Some Problems of Indo-Aryan Philology: Indo-Aryan and Dravidian". Bulletin of the School of Oriental and African Studies-London University Bulletin 5, (1930) 719-756.
6. "Une turnure dravidienne en marathe," Bulletin de la Societé de linguistique de Paris 33, French, (1932), 299-309.

7. "La forme negative de verbe dravidien," Bulletin de la Societé de linguistique de Paris 36,1935.
8. "Review of S. Vaiyapuri Pillai (ed.) Tamil Lexicon," Bulletin de la Societé de linguistique de Paris 37:3, (1936), 200-201.

## ஜோகன்னஸ் சாந்தகிரென் (Johannas Sandegren) 1883

ஜோகன்னஸ் அவர்களின் தந்தை கார்ல் ஜேக்கப் சாந்தகிரென் சுவீடன் நாட்டைச் சேர்ந்தவர். இவர் 1869ஆம் ஆண்டு லைப்சித் திருச்சபையைச் சார்ந்த மறைப்போதகராக இந்தியாவுக்கு வந்தார். ஜோகன்னசின் தாய்வழிப் பாட்டனார் சி.எப்.கிரம்மரும் மறைப் போதகரே. சான்றாண்மை மிக்க குருமரபிலே வந்தவர் ஜோகன்னஸ் சாந்தகிரென்.

ஜோகன்னஸ் 1883ஆம் ஆண்டு மதுரையில் பிறந்தார். இவர் தமது கல்விப் படிப்பைச் சுவீடனில் உப்சாலாப் பள்ளியில் பயின்றார். பள்ளி இறுதித் தேர்ச்சி பெற்றபோதே போதகராக உழைக்கும் ஆசை கொண்டிருந்தார். பல்கலைக் கழகத்தில் சேர்ந்து வரலாறு, தத்துவம் மற்றும் மொழிகள் பல கற்றார். கலைகளில் பி.ஏ. பட்டம் பெற்றார். சமய சாத்திரத்தில் பி.டி. பட்டம் பெற்றார். 1906ஆம் ஆண்டு பாதிரியாராகத் திருநிலைப் படுத்தப்பட்டார். பல்கலைக் கழகப் படிப்பின் காலத்திலேயே கிறித்தவ மாணவர் இயக்கத்தின் நடவடிக்கைகளில் பெரும் ஈடுபாடு கொண்டார். அதன்மூலம் அனைத்து நாடுகளில் உள்ள கிறித்தவ இயக்கங்களோடும் உறவு கொண்டிருந்தார். 1907ஆம் ஆண்டு மறைப் போதகராகப் பணியாற்ற இந்தியாவுக்குச் சாந்தகிரென் புறப்பட்டார். சுவீடனிலுள்ள கிறித்தவ மாணவர் இயக்கத்திற்கு இவரது பணி இன்றியமையாததாக இருந்ததினால் அந்த இயக்கம் ஜோகன்னசை இந்தியாவுக்கு அனுப்ப மறுத்தது. ஆயினும் தமிழகத்தில் சமய போதகம் செய்யும் தீராத ஆசையினால் சாந்தகிரென் விடாப்பிடியாய் இருந்தார். அனைத்துத் தடைகளையும் மீறி இந்தியா வந்தடைந்தார்.

சாந்தகிரென் பாதிரியார் தம் பெற்றோரும், அண்ணனும், அவர் மனைவியும் மக்களும் வசித்த விருதுநகரிலேயே தம் சமய போதகப் பணியைத் தொடங்கினார். இலங்கைச் சமய போதகப் பணியையும் ஏற்றுப் பலமுறை அங்குப் பயணம் செய்து அங்கேயே தங்கினார்.

1913ஆம் ஆண்டு சாந்தகிரே பாதிரியார் இங்கிரிட் ஆல்ஸ்றாண்டு அம்மையாரைத் திருமணம் செய்து கொண்டார். திருமணத்திற்குப் பின்பு இவர் மதுரைக்குக் குடியேறினார். அங்கு இவருடைய துணைவியார் பெண்கள் பள்ளியையும் அவர்தம் விடுதியையும் பொறுப்பேற்று நடத்தி வந்தார்.

சாந்தகிரென் ஐயர் பல ஆண்டுகளாக மதுரையில் திருப்பணி செய்தார். அங்கே இருந்த அமெரிக்க மிஷன் உயர்நிலைப் பள்ளியை விலைக்கு வாங்கி அதனை யூனியன் கிறிஸ்டியன் உயர்நிலைப் பள்ளியாக உருவாக்கினார்.

1927ஆம் ஆண்டு சென்னைச் சமய சாத்திரப் பள்ளியின் தலைமைப் பேராசிரியராகச் சாந்தகிரென் ஐயர் அனுப்பப் பெற்றார். போதகர்களுக்குப் பயிற்சி அளிப்பதில் சூழ்நிலைக்கேற்பப் புதுமுறைகளைப் புகுத்தினார். கிறித்தவ குருசேவை இந்நாட்டின் கலாச்சாரத்திற்கு ஏற்றதாக அமைய வேண்டும் என ஆசித்தார். அவர்தம் பயிற்சி நிலையத்தில் இந்திய இசையே ஆதரிக்கப் பட்டது. இந்தியப் பெயர் சூட்டுவதில் வல்லவர் சாந்தகிரேன்.

### தமிழ்ப்பணி

வேதாகம சாட்சி என்ற ஆங்கிலப் பத்திரிக்கை அருணோதயம் என்ற தமிழ்ப் பத்திரிக்கை ஆகியவற்றின் ஆசிரியராகவும் அதிபராகவும் பணியாற்றியுள்ளார்.

### தமிழ் இலக்கியத் துறை

1934ஆம் ஆண்டு சாந்திகிரென் ஐயர் தரங்கம்பாடி ஆயராக நியமனம் பெற்றார். இவர் சமயப் போதகராகப் பணியாற்றி வந்த தொடக்க காலத்திலிருந்தே மறை சாத்திர மேம்பாட்டிற்காக மிகவும் உழைத்துள்ளார். தமிழ் இலக்கியத் துறையிலும் ஆர்வங் கொண்டிருந்தார். தாம் நெருங்கிய தொடர்பு கொண்டிருந்த விருதுநகர், உசிலம்பட்டி வட்டாரங்களிலுள்ள கள்ளர் இனத்தின் நடுவே பணி செய்யும் வாய்ப்பு இருப்பதை அறிந்தார். அந்த இனத்தைப் பற்றிய வரலாறு ஆய்வு நிகழ்த்தினார். அதன் தொடர்பான ஒரு நூலும் வெளியிட்டுள்ளார்.

சுவீடன், ஜெர்மன் மொழிகளில் இவர் தம் பேச்சு வன்மைக்கு நிகரான ஆங்கிலப் பேச்சு வன்மையும் தமிழ்ப் பேச்சு வன்மையும் உண்டு. பேச்சுத் தமிழைப் போலவே இலக்கியத் தமிழிலும் ஈடுபாடு கொண்டிருந்தார். சங்க இலக்கியமான திருமுருகாற்றுப்படையைப் பற்றியும் ஆராய்ச்சிக் கட்டுரை எழுதியுள்ளார். பக்திமாலை, ஐஸ்நாக் மாணவர், சீர்திருத்தவாதி லூத்தர், வெற்றி வீரனும் வெகுமதியும், தரங்கை அலைகளின் இன்னிசை முதலியவை இவர் இயற்றிய நூல்கள் ஆகும். இவருடைய ஆங்கிலக் கட்டுரைகளும், சொற்பொழிவுகளும் நூல்களாகத் தொகுக்கப் பெற்றுள்ளன.

ஜோகன்ஸ் சாந்திகிரென் தரங்கம்பாடியின் மூன்றாம் ஆயர். "என் கடன் விவிலியத்தைப் பரப்புவதே" என்ற குறிக்கோளுடன் ஐம்பது

ஆண்டுகளுக்கு மேலாக மகத்தான மறைப் பணியாற்றியவர். இவர் சேவையின் மூலம் அகில உலகத்திற்கும் அறிமுகமான செம்மல், பண்பு நலமிக்க பழுத்த சாதனையாளர்.

## தந்தை அகஸ்டின் சொலியர்
## (Fr.Augustin Saulère S.J.) 1885-1966

அருட்தந்தை அகஸ்டின் சொலியர் 1885ஆம் ஆண்டு ஆகஸ்ட் மாதம் 26ஆம் நாள் இறைப் பக்தியுள்ள தம்பதியருக்குத் திருமகனாகப் பிரான்ஸ் நாட்டில் பிறந்தார். இவர் பள்ளிப் படிப்பைத் தமது 18வது வயதில் முடித்துவிட்டு 1903ஆம் ஆண்டு இயேசு சபையில் நவசந்நியாசியாகச் சேர்ந்தார். மறு ஆண்டு 1904இல் இந்தியா வந்து சென்னையிலுள்ள இலோயோலாக் கல்லூரியில் பிரெஞ்சுப் பேராசிரியராகவும், மாணவர்களுக்கான விடுதியின் மேற்பார்வையாளராகவும் கல்லூரியின் தொடக்க முதலே பணியாற்றினார். 1949ஆம் ஆண்டு கொடைக்கானலில் உள்ள செண்பகனூரில் அமைந்துள்ள தூய இருதயக் கல்லூரியில் உள்ள மதுரை மறைமாநிலத்தின் ஆவணக் காப்பகத்தின் பொறுப்பாளராகப் பணியாற்றினார். 1966ஆம் ஆண்டு அக்டோபர்த் திங்கள் 6ஆம் நாள் இறைவனடி சேர்ந்தார்.

அருட்தந்தை சொலியர் அடிகள் ஒரு சிறந்த சிந்தனையாளரும், எழுத்தாளரும் ஆவார். இவர் மறவ நாட்டில் மறைசாட்சியாய் மரித்த புனித ஜான் டி பிரிட்டோவின் (புனித அருளானந்தர்) வாழ்க்கை வரலாற்றைச் ‘செம்மண்’ (Red Sand) என்னும் தலைப்பில் எழுதி 1947ஆம் ஆண்டு வெளியிட்டார்.

அடிகள் படைத்த இந்நூல் மிகவும் பிரசித்தி பெற்றதாகும். நாம் இந்நூலில் மறவ நாட்டின் சமய, சமூக, அரசியல் நிலை, பண்பாடு போன்றவைகளைப் பற்றி அறிந்து கொள்ள முடியும்.

மறைசாட்சியான புனித ஜான் டி பிரிட்டோ சிந்திய இரத்தம் அப்பகுதியைச் செந்நிறமாக்கியது ஒரு புதுமையாகக் கருதப் படுகின்றது. எனவேதான் சொலியர் அடிகள் தாம் படைத்த இந்நூலுக்கு ‘செம்மண்’ என்னும் தலைப்பைக் கொடுத்துள்ளது மிகப் பொருத்தமான ஒன்றாகும்.

அடுத்து, தந்தை சொலியர் படைத்த இரண்டாவது நூல் இரு பகுதிகள் அடங்கியது. தமிழ் உரை நடையின் தந்தை என்றும், புதிய மதுரை மறைத்தளத்தின் நிறுவனர் என்றும் போற்றப்படும் அருட்திரு தந்தை இராபர்ட் தெ நொபிலியின் வாழ்க்கை வரலாற்றையும் அன்னார் படைத்த கிறித்தவத் தமிழ் இலக்கியங்களையும் 50 ஆண்டுகளாக ஆழ்ந்து ஆராய்ந்ததின் பயன்தான் இந்நூலின் இரு பகுதிகளாகும். தந்தை இராபர்ட் தெ நொபிலி மதுரையில் மறைப்பணி ஆற்றியபோது அச்சமயம்

மதுரையை ஆண்டு வந்த நாயக்கர் மன்னர்களிடம் நல்லுறவும், நன்மதிப்பும் பெற்றிருந்தார் என்பதும், நொபிலி அடிகள் அநேகக் கிறித்தவத் தமிழ் நூல்கள் எழுதியுள்ளதும் இந்நூலின் வழியாக அறிய முடிகிறது.

## ஜூவோ துய்ப்ரேய்
## (Jouveau Dubreuil)

ஜூவோ துய்ப்ரேய் புதுவையில் உள்ள பிரெஞ்சுக் கல்லூரிக்கு, பிரான்ஸ் நாட்டிலிருந்து பேராசிரியராய் நியமனம் பெற்று இங்கு வந்தார். இந்நாட்டின் பழங்காலச் சிறப்பை உணர்ந்து அது பற்றிப் பிரெஞ்சு மொழியில் விளக்கம் எழுத விரும்பினார். முதன் முதலில் பல்லவர்களைப் பற்றி ஆராய்ந்தார். இவ்வாராய்ச்சியின் பயனாகத் தமிழ் நாட்டவர் அதுவரையில் தெரிந்து கொள்ளாதிருந்த செய்திகளை இவர் வெளியிட்டார். இதனால் இவர் தமிழ் மக்களால் அறியப்பட்டுப் போற்றப்பட்டார். இத்துறையிலேயே இவரது பணி மேற்கொண்டு சென்றது. பல்லவர் கட்டடங்கள், அவர்கள் காலக் கல்வெட்டுக்கள் முதலியவற்றை இவர் ஆராயத் தொடங்கினார். பல கல்வெட்டுக்களை இவர் கண்டுபிடித்து வெளிப்படுத்தினார். 1920-ஆண்டில் புதுவையில் அரசாங்கப் பூங்காவிற்கு அண்மையில் ஒரு கோட்டையின் நுழைவாயில் இருந்ததை அறிந்து அந்த இடத்தை அகழ்ந்து வெளிப்படச் செய்தார். இக்கோட்டை செயின்ட் லூயிஸ் (Saint Louis) கோட்டையாகும். இதன் வரை படம் ஒன்றை இவர் சலவைக் கல்லில் வடித்து இக்கோட்டையிலிருந்த வாயிலில் வைத்தார்.

மாமல்லபுரம் சிற்பங்களில் 'அருச்சுனன் தபசு' என்று சொல்லப்பட்டு வந்த சிற்பத்தை ஆராய்ந்து அஃது அருச்சுனன் தபசைக் குறிக்கின்றதில்லையென்றும் பகீரதன் தபசைத்தான் அது வெளியிடுகிறதென்றும் சரியான காரணமும் மேற்கோளும் கொடுத்து விளக்கி உண்மையை நிலைநாட்டினார். கல்வெட்டுகள் பல இவரால் கண்டுபிடிக்கப்பட்டன. அவற்றுள் சிறப்பானது பனமலைக் கல்வெட்டு. பனமலையில் பல்லவர்கள் வெட்டுவித்த கல்வெட்டை ஆசிரியர் துய்ப்ரேய் கண்டுபிடித்து விவரம் தந்தபின் பலர் அதனை ஆதாரமாகக் கொண்டு பல்லவர் காலத்தின் வரலாற்றுண்மைகளை அறிந்து, பல செய்திகளை எழுதி வெளியிட்டனர்.

### அரிக்க மேடு

புதுச்சேரிக்கு அருகில் அரிக்க மேடு என்னும் சிற்றூர் அரியாங்குப்பத்திற்குக் கிழக்கே அமைந்துள்ளது. இக்கிராமத்தைப் பற்றி விவரமாகத் தெரிந்துகொள்ள ஆசிரியர் துய்ப்ரேய்க்கு வாய்ப்பு கிடைத்தது. அரியாங்குப்பத்து ஆற்றுக்கருகில் வீராம்பட்டிணத்திற்கு

அண்மையில் ஒரு கற்சிலை நெடுநாளாய் இருந்து வந்தது. அதனை அச்சிற்றூர்வாசிகள் ஏதோ ஒரு தெய்வச் சிலை என்று கருதி அதற்கு வழிபாடு செய்து வந்தார்கள். துய்ப்ரேயுக்கு அதனைக் காண நேர்ந்தபோது அது தமிழ் தெய்வச் சிலை அன்று என்றும், அதன் அமைப்பு, தோற்றம் முதலியன அருகனைக் குறிப்பன என்றும் தாம் தெரிந்து கொண்டதோடல்லாமல் பிறரையும் தெரிந்து கொள்ளும்படி செய்தார். அந்தச் சிலையின் பெயராலேயே அஃது இருந்த மேடு குறிக்கப்பட்டிருக்க வேண்டுமென்று எண்ணினார். அருகன் சிலை இருந்த மேடு 'அருகன் மேடு' என்று வழங்கப்பட்டிருத்தல் வேண்டும் என்றும் அதுவே திரிந்து 'அரிக்கன்மேடு' எனப் பாமர மக்களால் அழைக்கப்பட்டிருக்க வேண்டும் என்றும் குறிப்பிட்டார்.

### முதுமக்கள் தாழி

ஒரு முறை அவர் இந்த ஆற்றங்கரையோரமாகச் சென்று கொண்டிருந்த பொழுது ஒரு மட்பாண்டத்தின் மேற்பாகம் அவர் கண்ணிற்குப் புலப்பட்டது. அவர் அதனைத் தோண்டி எடுக்கச் செய்தார். அஃது ஒரு 'முதுமக்கள் தாழி' என்பதைக் கண்டார். அதுபோன்று வேறு தாழிகளையும் பிற்காலத்தில் அவர் காண நேர்ந்தது. அருகன் சிலை, சுட்ட மண்பாண்ட ஓடுகள், கண்ணாடிக் குழாய்கள், முதுமக்கள் தாழிகள் இவையெல்லாம் அவருக்கு ஒரு புதிய எண்ணத்தை உண்டாக்கின. பழங்காலத்தில் அந்த இடத்தில் ஒரு நகரம் இருந்திருக்க வேண்டும் என்றும், அது கைத்தொழிலிலும் வாணிபத்திலும் சிறந்திருக்க வேண்டுமென்றும், அயல் நாடுகளுடன் அது தொடர்புடையதாய் இருந்திருக்க வேண்டும் என்றும் எண்ணினார். இவற்றையெல்லாம் பற்றி அவர் பிரெஞ்சு மொழியில் தாம் எழுதிய நூல்களில் குறிப்பிட்டுள்ளார். அரசாங்க உதவி பெற்று அகழ்வாராய்ச்சி தொடங்குவதற்கு முன்பே அவர் இறந்து விட்டார்.

## எம்மோன்ஸ் ஈடன் ஒயிட்
## (Emmons Eaton White)

எம்மோன்ஸ் ஈடன் ஒயிட் 1891ஆம் ஆண்டு ஏப்ரல் திங்கள் 4ஆம் நாள் திருவாளர் வில்லியம் பிராங்க்லின் பெசி ஒயிட் தம்பதியரின் மகனாகக் கோனில் (Conn) உள்ள திரும்பாவில் பிறந்தார். அவர் 1914இல் ஏல் பல்கலைக்கழகத்தில் இளங்கலைப் படிப்பை முடித்துப் பட்டம் பெற்றார். 1917இல் பி.டி. பட்டமும் பெற்றார். பின்னர் அவர் 1925ஆம் ஆண்டு கார்வேடுப் பல்கலைக்கழகத்திலும் படித்தார். அவர் 1917இல் காங்கிரகேஷனின் மறைப்பணி புரியும் பாதிரியாராகத் திருநிலைப் படுத்தப்பட்டார். 1917முதல் 1958வரை தென்னிந்தியாவிலுள்ள மதுரை இராமநாதபுர மாவட்டங்களில் போதகராகவும் ஆசிரியராகவும்

பணியாற்றினார். தமிழில் மூன்று தேர்வுகளில் வெற்றி பெற்றுப் பின்பு சில தமிழ்ப் பண்டிதர்களின் கீழ் இலக்கிய நயம் மிகுந்த உயர்தரத் தமிழைப் படித்தார்.

ஒயிட் அவர்கள் மாசில் (Mass) உள்ள ரசெலில் (Russell) சமூகத் தேவாலயத்தில் மறைப் பணியாளராக 1959 முதல் 1962 வரை பணியாற்றினார். 1946முதல் 1947 வரை மதுரை இராமநாதபுர மறை மாவட்டத்தின் ஆலோசனைக் குழுவின் கூட்டுத் தலைவராக இருந்தார். மேலும் அவர் 1947 முதல் 1958 வரை மதுரை அமெரிக்கன் கல்லூரியின் ஆலோசனைக் குழுவின் தலைவராக இருந்தார்.

ஒயிட் பாதிரியார் மதுரைத் தமிழ் மறைக் கல்லூரியின் தமிழ் இசைக்குழுவுக்குப் பொறுப்பாளராக நியமிக்கப்பட்டார். அவர் படைத்த நூல்களுக்கும் அவர் நிகழ்த்திய பாடல் மறையுரைகளுக்கும் பொறுப்பாளராக இருந்தார். ஒயிட் பாதிரியாரின் படைப்புக்கள்:

1. The Kalkshepam as a method of Evangelism, (in Tamil) C.L.S. 1955.
2. Appreciating India's Music: An Introduction to the Music of India with suggestions for its use in the churches of India, C.L.S. 1957.
3. "An Introduction with an emphasis on the music of South India," Crescendo, 1971.
4. The Wisdom of the Tamil People, (Tr) Munshiram Manoharlal, New Delhi, 1975.
5. "Biography of Tamil Poet- Saint Sundarar as recorded in Sacred Tamil-Prose Work." (Tr).

## கசால்
## (Casal)

இவ்வாராய்ச்சியாளர் துய்ப்ரேய் விட்டுச் சென்ற வேலையைத் தொடர்ந்து நடத்தினார். அப்போது பல உண்மைகள் வெளியாயின. அவற்றையெல்லாம் தொகுத்துப் பிரெஞ்சு மொழியில் ஒரு நூல் வெளியிட்டார். புதைபொருள் ஆராய்ச்சியாளர் பலர் அருகன்மேட்டிற்கு வந்து இந்த வேலையை நேரில் கண்டு நூல்களும், கட்டுரைகளும் எழுதியுள்ளனர்.

# இருபதாம் நூற்றாண்டு

## சார்லஸ் வாலன்டைன் (Charles Valentin) 1906

இவ்வறிஞர் பிரெஞ்சு இந்தியாவின் பொருளாதாரத்தைப் பற்றி ஆய்வு செய்தவர். இத்துறையில் சிறந்து விளங்கினமையால் இவரது கவனம் இந்நாட்டின் அக்காலப் பொருளாதாரத்தின்மேல் சென்றது. நாட்டு நிர்வாகத்துக்குப் பொருளாதாரத் துறையே சிறந்தது என்பது எல்லோரும் அறிந்த ஒன்றாகும். நாட்டு மக்களின் வாழ்க்கை நிலையும் பிரெஞ்சு அரசாங்கத்தின் ஆட்சியும் ஒன்றுக் கொன்று தொடர்புடைய தாகையால் இவர் அதைப்பற்றி ஆய்வு நடத்தி 1906இல் 'பிரெஞ்சிந்தியாவின் பொருளாதார நிலை' என்னும் பெயரில் ஒரு நூலை வெளியிட்டார்.

## ஜான் பிலியோசா (Jean Filliozat) 1906-1983

தமிழகம் ஏன் தமிழுலகமே ஜான் பிலியோசாவை நன்கு அறியும். ஏனென்றால் தமிழ்ப் பண்பாட்டுக்குப் பல ஆண்டுகளாகப் பெரும் தொண்டாற்றியுள்ளார். குறிப்பாகக் கூறுமிடத்து, சங்க இலக்கியத்தைப் பற்றி ஆராய்ந்துள்ளார். இரண்டு அருஞ்சொல் பொருள் விளக்க அகராதிகளைப் படைத்தது இவரது தமிழ்த் தொண்டு என்று கூறலாம்.

அறிஞர் ஜான் பிலியோசா 1906ஆம் ஆண்டு நவம்பர் மாதம் 4ஆம் தேதி பாரீசில் பிறந்தார். உயர்நிலைப் பள்ளிப் படிப்புக்குப்பின் அவர் மருத்துவத்தில் சேர்ந்து கண் மருத்துவத்தை முக்கியப் பாடமாக எடுத்துக் கற்றார். மருத்துவர் ஜான் பிலியோசா பாரீசில் 17 ஆண்டுகள் (1930-1947) கண் மருத்துவராகப் பணியாற்றினார். இவர் கண் சம்மந்தமான ஓர் ஆராய்ச்சி செய்து முனைவர் பட்டமும் வாங்கினார். பைனாக்குலர் பார்வையில் பிசியாலஜியும் (Physiology) பேத்தாலஜியும் (Pathology) பற்றி ஒரு நூல் எழுதினார். கண் மருத்துவரான ஜான் பிலியோசா ஒரு பன்மொழி வித்தகர். அவர் சைனீஸ், பாலி, சமஸ்கிருதம், தமிழ், திபெத்திய மொழிகளைக் கற்றார்.

பிரெஞ்சுக் கவிஞர் லுகோந் தெ லில் (Leconte de Listle) தமது படைப்புக்களில் சில வேதிகி பாடல்களையும், இந்தியப் புராணக் கதைகளையும் சேர்த்து எழுதியதன் மூலம் ஜான் பிலியோசா அவற்றை

வாசிப்பதில் ஈடுபாடும் ஆர்வமும் மிக்கவராய் இருந்தார். எனவே அவர் இந்தியாவைப் பற்றிப் பாரீசில் கிடைக்கும் நூல்களை வாசிக்கத் தொடங்கினார். பின்பு அவர் தனது அனைத்து ஆராய்ச்சிகளையும் அறிவியல் செயல்பாடுகளையும் இன்டாலஜி பக்கம் திருப்பினார். இன்டாலஜியிலும், கிழக்கத்தியப் படைப்புக்களிலும் ஆர்வமும் அறிவுக்கூர்மையும் கொண்ட சில்வியன் லெவி என்பவர்தான் இவருக்கு முக்கியமான ஆசிரியராவார்.

அறிஞர் சில்வியன் லெவி தனது வாழ்க்கையின் இறுதியில் இந்தியாவைப் பற்றிய ஆவணங்களை மத்திய ஆசியா, சைனா போன்ற நாடுகளிலிருந்து சேகரித்தார். திராவிட இலக்கியங்களைப் படிப்பதின் மூலம் இந்தியப் பண்பாட்டைப் பற்றிய அறிவையும் விளக்கங்களையும் பெற முடியும் என்பதனைச் சில்வியன் லெவி உணர்ந்தார். எனவே அவர் தமது சீடரான பிலியோசாவைத் தமிழ் இலக்கியத்தைப் படிக்க 1930களில் ஊக்குவித்தார். அறிவுத் திறனும் தெளிவும் கொண்ட அறிஞர் ஜூல் பிளாக்கிடம் பிலியோசா தமிழ் கற்றார்.

அறிஞரான ஜான் பிலியோசா 1935ஆம் ஆண்டில் கீழை நாட்டுத் தேசிய மொழிகள் கற்பிக்கப்படும் பள்ளியில் தமிழ் படித்து ஒரு பட்டயம் (Diploma) பெற்றார். அதே பள்ளியில் 1937 முதல் 1939 வரை தமிழ் கற்றுக் கொடுத்தார். பின்னர், பாரீசிலுள்ள உயர்படிப்பு நிறுவனத்தில் பேராசிரியராக 1941ஆம் ஆண்டு வரை பணியாற்றினார். பின்பு 1952இல் அவர் பிரான்சில் மிக உயர்தரக் கல்வி நிறுவனத்தின் கீழ் இயங்கிவரும் பிரெஞ்சுக் கல்லூரியில் இந்திய மொழிகளும் இலக்கியங்களும் கற்பிக்கும் பேராசிரியராக இருந்தார். அவர் பாண்டிச்சேரியில் 1955இல் இந்தியாவைப் பற்றி ஆராய்ச்சி செய்ய ஒரு பிரெஞ்சு நிறுவனத்தைத் தொடங்கி, அதற்குத் தொடக்கத்திலிருந்து 1977வரை இயக்குநராக இருந்தார். இவர் பிரான்சில் கல்லூரியில் படித்த பாடங்களில் தமிழ் இலக்கியத்திற்கு அதிகமான நேரத்தைச் செலவழித்துள்ளார். இவர் மூன்றாவது உலகத் தமிழ் மாநாட்டைப் பாரீசில் 1970இல் நடத்த ஏற்பாடு செய்து சிறந்த முறையில் நடத்தி முடித்தார். இவர் இரண்டு நிறுவனங்களை நிறுவுவதற்குக் காரண கர்த்தாவாக இருந்தார். 1965இல் அகில உலக அளவில் தமிழ் ஆராய்ச்சிக் கழகத்தையும் 1973இல் அகில உலக அளவில் சமஸ்கிருத ஆராய்ச்சிக் கழகத்தையும் நிறுவினார். ஜான் பிலியோசா தமிழ் ஆராய்ச்சிக் கழகத்திற்குத் தலைவராகவும் சமஸ்கிருதக் கழகத்திற்கு உபதலைவராகவும் இருந்தார்.

ஜான் பிலியோசா பாண்டிச்சேரியில் தமிழ் இலக்கியத்தில் ஆராய்ச்சி செய்பவர்களுக்கு நெறியாளராக இருந்தார். தென்னிந்தியாவிலுள்ள கோயில்களில் உள்ள உருவச் சிலைகளையும், செதுக்கப்பட்ட வடிவமைப்புச் சித்திரங்களையும் அடையாளம் கண்டு

கொள்ள புராணச் சுருக்கங்கள் பயன்படும் என்பதால் இவர் தன்னுடன் பணிபுரியும் தமிழ் அலுவலர்களைத் தமிழ்ப் புராணங்களின் சுருக்கத்தை எழுதும்படி கேட்டுக் கொண்டார். கலப்படமில்லாத இலக்கியமான சங்க இலக்கிய நூல்களில் உள்ள தமிழ் வார்த்தைகளின் அகரவரிசை அட்டவணையின் தேவையை உணர்ந்தார். இவ்வட்டவணை மூன்று பகுதிகளாக 1967லும் 1970லும் வெளியிடப்பட்டன.

இரண்டு முக்கியமான தமிழ்ப் படைப்புக்களை ஜான் பிலியோசா பிரெஞ்சு மொழியில் மொழிபெயர்த்துள்ளார். இவை இலக்கிய நயம் படைத்தவை. ஆண்டாளின் திருப்பாவையை 1972ஆம் ஆண்டிலும் திருமுருகாற்றுப்படையை 1973ஆம் ஆண்டிலும் வெளியிட்டார்.

ஜான் பிலியோசா தமிழ் நாட்டைப் பற்றிய இலக்கியம், வரலாறு முதலியவற்றில் தம் கருத்தைச் செலுத்தி ஆராய்ச்சிகள் பல செய்துள்ளார். மருத்துவ அறிஞரான பிலியோசா தமிழ் மருத்துவத்தைப் பற்றிப் பிரெஞ்சு மொழியில் பல கட்டுரைகள் எழுதியுள்ளார். இவர் மருத்துவத் துறையில் மட்டுமின்றி வேறு பல துறைகளிலும் தொண்டாற்றியுள்ளார். கலை, இலக்கியம், வரலாறு, சமயம், மருத்துவம், யோகா ஆகியவற்றில் பிலியோசா ஈடுபாடு கொண்டு ஆராய்ச்சிகள் செய்து நூல்களும், கட்டுரைகளும் எழுதி வெளியிட்டுள்ளார். இவர் 1983ஆம் ஆண்டு இயற்கை எய்தினார்.

தமிழ் மொழியின் பால் பற்றுக்கொண்டு பணிபுரிந்த பிரெஞ்சுக்காரர் தமிழ்நாட்டுக் கலைகளின் மீதும் தம் கருத்தைச் செலுத்தினார். கூறப்போனால் தமிழ்க் கலைகள்தாம் அவரை ஈர்த்தன. அன்று தமிழகத்தில் 'பாவைக்கூத்தும்', 'பொம்மலாட்டமும்' வியந்து பாராட்டப் பட்டன. ஆனால் இன்று இவை அருகி வருகின்றன. ஜான் பிலியோசா இவற்றைக் குறித்து ஆராய்ச்சி செய்து பிரெஞ்சு மொழியில் கட்டுரைகள் பல எழுதி இவற்றைப் பாரீசு நகரத்தில் வெளியிட்டுள்ளார்.

இவற்றைத் தவிர்த்து, தமிழ் நாட்டில் நெடுங்காலமாய் வழக்கில் இருந்து வருவது பரத நாட்டியம். இக்கலையிலும் பிரெஞ்சு நாட்டவர் நாட்டம் கொண்டனர். பிரெஞ்சுப் பெண்டிர் சிலர் பரத நாட்டியம் பயின்று வருகின்றனர். சில ஆண்டுகளுக்கு முன் சென்னைப் பல்கலைக் கழகத்தின் ஆதரவில் நடைபெற்ற கிழக்கு மேற்கு உறவு விழாவில் அறிஞர் ஜான் பிலியோசாவின் மகள் ஜாக்குலின் பிலியோசா பரதநாட்டியமாடி அவையோரை அகமகிழச் செய்தது பலர் அறிந்த ஒன்றாகும்.

பிரெஞ்சுக்காரர்கள் தமிழகத்தில் உள்ள சமயங்களின் மீதும் தங்கள் கருத்தைச் செலுத்தினர். சமயத் தலைவர்களோடு தொடர்பு கொண்டு அவற்றை ஆராய்ந்தறிந்தனர். தமிழ் நாட்டில் சிறப்பாய்

விளங்கும் வைணவம், சைவம் என்னும் இரண்டு சமயங்களின் தத்துவங்களைப் பயின்றனர். அவற்றைப் பற்றி ஆராய்ந்து தங்கள் மொழியில் நூல்கள் இயற்றியுள்ளனர். இப்படிப்பட்டவர்களில் ஒருவர் ஜான் பிலியோசா. இவர் சமஸ்கிருத மொழியைக் கற்று அறிந்திருந்ததால் சைவ சமயத்தைப் பற்றி ஆராய்ச்சிக் கட்டுரைகளை எழுதி வெளியிட்டுள்ளார்.

ஜான் பிலியோசா பல திறமைகள் கொண்ட மேதையும் அறிஞருமாவார். இவரது வெளியீடுகள் எண்ணிக்கையாலும், பலவிதமான கருத்துக்களாலும் மிகுந்து காணப்படுகின்றன. அனைத்து வகையான நிறுவனங்களும், அரசாங்கங்களும் (பிரெஞ்சு அரசாங்கம் உட்பட) இவரைப் புகழ்ந்தும் மேன்மைப்படுத்தியும் உள்ளன. குறிப்பிட்டுக் கூறவேண்டு மெனில் மதுரைப் பல்கலைக் கழகம் இவரைத் தொல்பொருள் ஆராய்ச்சிக்கும், இந்தியாவைப் பற்றிய ஆய்வுக்கும் கௌரவப் பொறுப்பாளராக நியமனம் செய்தது. "ஜான் பிலியோசா எவ்விதச் சந்தேகமுமின்றித் தமிழ் இலக்கியத்தில் ஆழ்ந்த அநுபவம் பெற்றுள்ளார். பழைய சங்க இலக்கியத்தில் இவர் இயற்கையின் மனந்திறந்த புதுப்புனலை மீண்டும் நினைவிற்குக் கொண்டு வருகையில் உணர்ச்சிப் பெருக்கங்களின் உண்மையையும், தமிழகத்தின் உண்மையான ஆன்மாவையும் சிறப்பித்துள்ளார். ஏனென்றால் இவர் இந்தியாவின் தென் பகுதியை மிகவும் விரும்பினார். அதில் பெரும் கலாச்சார நட்புத் தொடர்புகள் இருந்தன. இவர் அவற்றைப் பற்றி விளக்கியும், பாதுகாத்தும் வந்தார்... தென்னகம்தான் முதன் முதலில் கத்தோலிக்க, மறுசீர்திருத்தக் கிறித்தவ திருச்சபைகளின் மறைப் போதகர்கள் மூலம் ஐரோப்பாவிற்கு இந்தியாவையும் சமஸ்கிருதத்தையும் வெளிப்படுத்தியதை இவர் அடிக்கடி நினைவூட்டுவார். மேற்கத்தியவர்களின் பங்களிப்பு கல்கத்தாவிலுள்ள ஆசிய சங்கத்தின் மருட்சியால் மேற்கு வங்காளத்தை நோக்கிச் சென்றடையச் செய்தது. அதன் விளைவாக அதிகமான பலன்கள் சமஸ்கிருதப் படிப்பை மட்டுமே சென்றடைந்தன. மேலும் சமஸ்கிருதத்தின் வாயிலாகவே இந்தியக் கலாச்சாரத்தை மிகவும் கவனித்தனர். ஜான் பிலியோசா இதைப்பற்றி மிகவும் வருத்தப்பட்டார். 19ஆம் நூற்றாண்டில் சமஸ்கிருதத்திற்குக் கொடுக்கப்பட்ட முக்கியத்துவமும், உழைப்பும் தமிழ் மொழிக்குக் கொடுக்கப்படவில்லை. ஆனால் தமிழ் மொழி மிக்க தகுதி பெற்ற மொழி" என்று இவரது துணைவியாரான சில்வியன் பிலியோசா (Sylvian Filliozat) தனது கணவரின் கருத்துக்களைக் கூறியுள்ளார்.

அதனால் இவருடைய நண்பர் தமிழ்ப் புலவர் காரவேலனய்யாவும் தஞ்சை நா.கந்தசாமி பிள்ளையும் சங்க இலக்கியத்தை ஆராய்ச்சி செய்ய எண்ணினர். 1963ஆம் ஆண்டிலிருந்து ம.கந்தசாமியின் வழி காட்டுதலின்

கீழ் ஒரு குழு பழங்கால இலக்கியப் படைப்புக்களைத் 'தேடுதல்' செய்தது. அதன் விளைவு பழந்தமிழ் இலக்கியத்தின் சொற்களின் அட்டவணை வெளியிடப்பட்டது. ஜான் பிலியோசா தமது முகவுரையில் 3,00,000க்கும் அதிகமான குறிப்பு அட்டைகள் ஏற்படுத்தப்பட்டன என்று எழுதுகின்றார். "நிறைவான வெளியீட்டுக்கும், உபயோகித்த சொற்களைச் சரிபார்க்கவும் மிகுந்த காலம் தேவைப்பட்டது. மொழி உரையாசிரியர்களால் கொடுக்கப்பட்ட விளக்கங்கள் தற்கால அகராதிகளில் பொருந்தச் செய்தாலும், இவற்றிற்கு முன்பாக, நிகண்டுகளில் வார்த்தைகளின் உண்மையான அர்த்தங்கள் எப்பொழுதும் இல்லை. வியாக்யானம் செய்பவர் எப்பொழுதும் மூல நூல் படைக்கப்பட்ட காலத்தில் அந்த வார்த்தைக்கு நிகரான சுருக்கத்தைக் கொடுக்க இலக்குப் பார்க்கவில்லை.

எனவே இதை மொழியியலாளர்களுடைய உபயோகத்திற்கு விடுவது அதி சீக்கிரமாகும். இதை முந்தைய மொழியின் சொற்பொருள் சார்ந்தவற்றைக் கட்டுப்படுத்தவுள்ளது. அதுவரையில் மொழியின் சொற்பொருள் சார்ந்தவைகளின் மூல ஒப்பீடு முறைகளைப் படிப்புகளுக்காக முன்பே தயார் செய்ய முடிந்தது. முன்பு இருந்த எல்லாப் பொருள்களை இது நமக்கு தற்போதைய அகரத் தொகுப்பு அட்டவணையை வெளியிட உபயோகமுள்ளதாகத் தோன்றுகிறது. இவ்வாறு ஏனைய மொழிகளில் உள்ளதைப் பற்றி ஆராயப் பயனுள்ள கருவிகளாக இருக்கக்கூடும். உதாரணமாக வேதிக் நூல்கள். இந்த அட்டவணையின் முதல் ஏடு 12414 வார்த்தைகள் 12 உயிர் எழுத்துக்களில் தொடங்கி 'அ' விலிருந்து 'ஔ' முடிய 414 பக்கங்களிலும், இரண்டாவது ஏடு 'க' வில் தொடங்கித் 'கெள' வரை 13473 வார்த்தைகள் 408 பக்கங்களிலும், மூன்றாவது ஏடு 23354 வார்த்தைகள் 'ந' வில் தொடங்கி 'ன' வரையில் முடிந்து 666 பக்கங்களிலும் முடிந்து மொத்தம் 1488 பக்கங்கள் 17x23.5 செ.மீ. மொத்த வார்த்தைகளின் எண்ணிக்கை 50000.

கேரளீப் பல்கலைக் கழகத்தின் பேராசிரியர் குளோரியா சுந்தரமதி கூறுவதாவது: 1962 லிருந்து சில ஆராய்ச்சியாளர்கள் சங்ககாலப் படைப்புகளை எடுத்து இது போன்ற ஆராய்ச்சிகளைத் தொடங்கினர். ஆனால் அவர்களில் ஒவ்வொருவரும் ஒரு நூலை எடுத்து ஆராய்ச்சி செய்தனர். ஆகையால் ஜான் பிலியோசாவின் படைப்பு ஒரு பெரிய பாய்கலத்தைக் கட்டுவதைப் போல முழுமையானதாகும். இவர் ஒன்று, இரண்டு, மூன்று பகுதிகளாகச் சங்க இலக்கியத்தை நிறைவு செய்தாரென்றால் இது பயனுள்ளதாகவும், ஒரு பெரும் நினைவுக்குரியதாகவும் இருக்கிறது. தற்பொழுது அது முடிவு பெற்றுள்ளது. ஜான் பிலியோசா நீண்ட காலம் காத்திருக்கவில்லையா? உண்மையிலேயே நாம் விரும்புவது என்னவென்றால் இந்தியக் கலைக்

கழகம் இதை முடித்து இந்தப் படைப்பை இம்மாபெரும் மனிதரின் நினைவாக வெளியிட வேண்டும் என்பதாகும்.

இந்தச் சொல் அட்டவணை எளிமையாக இருப்பதால் அனைவரும் நினைவுகூர்கின்றனர். நாம் இதை ஓர் அகராதியைப் போன்று பகுப்பாய்வு செய்ய இயலாது. அதற்கு மாறாகப் பிலியோசா படைத்த வார்த்தைகளின் அகராதிகளான 1972இல் திருப்பாவை, 1973இல் திருமுருகாற்றுப்படை பிரெஞ்சு இந்தியக் கழகத்தினால் வெளியிடப்பட்டவை. இவை பெரும் மதிப்புக்குரியவைகளாக இருக்கின்றன. பிலியோசா அட்டவணைகளுக்கும் (அகராதி) வியப்புக்குரிய ஒரு முகவுரையை எழுதியுள்ளார். அட்டவணையோடு இந் நூல்களிலுள்ள அனைத்து வார்த்தைகள் ஒவ்வொன்றுக்கும் அந்தச் சூழ்நிலைக்கேற்ப விளக்கமும், பாட்டுகளும், அடிகளும் எங்குக் காணப்படுகின்றனவோ அவற்றைச் சுட்டியும் காட்டியுள்ளார். இதை ஒரு முன்மாதிரியாகப் பின்பற்ற வேண்டும். துரதிஷ்டவசமாகத் தமிழ் அறிஞர்கள் சாதாரணமாகப் பிரெஞ்சைப் பொருட்படுத்துவதில்லை. இவ் இரு படைப்புகள் அவ்வளவாக அறிமுகமாகவில்லை. இப் படைப்புகளின் தமிழ் மொழியாக்கம் அசல் பங்களிப்பை வெளிக்காட்டும். திருப்பாவையின் சேர்க்கையில் இவற்றைப் பற்றி இரண்டு பக்கங்களில் காணலாம்.

50 ஆண்டுகளாகத் திருவனந்தபுரத்தில் உள்ள கேரளப் பல்கலைக் கழகத்தில் தமிழ்த் துறையின் ஆராய்ச்சியாளர்கள் பிலியோசாவின் படைப்பால் தூண்டடப்பட்டதாகத் தெரிகிறது. இம்மாதிரியான அகரவரிசைத் தொகுப்பு அட்டவணையைத் திரட்டுவதற்கு முனைந்துள்ளனர். முனைவர் தாமஸ் மால்ட்டன் (Thomas Malten) டி.லூமான் (T.Lehman) உதவியுடன் 1993இல் சென்னையிலுள்ள ஆசியவியல் நிறுவனம் (Institute of Asian Studies) முழுமை பெற்ற ஓர் அகரவரிசைத் தொகுப்பு அட்டவணையை வெளிக்கொணர்ந்துள்ளது.

1. Address to the Academi of Tamil Culture, Madras, 1955.
2. "Tamil and Sanskrit in South India", Tamil Culture IV.4. (1955), 285-300.
3. "Research in South-East Asia and in the Far-East," Tamil Culture, XII.2&3, (1966), 109-116.
4. பேய் நம்பிக்கையைப் பற்றி ஆழ்ந்து அறியும் ஆய்வு, இராவணாவின் குமாரதந்திரம், பாரீஸ், 1937.
5. வீராம்பட்டிணத்தில் உள்ள பொறிக்கப்பட்ட எழுத்துக்கள், 1947, 107-118.

6. தமிழ்ப் பண்பாட்டுக் கழகத்தில் ஆற்றிய சொற்பொழிவு, சென்னை, 1955.
7. இந்தியாவின் வெளியுறவுத் தொடர்புகள், பாண்டிச்சேரி, 1956.
8. "தென்கிழக்கு ஆசிய பிரம்ம வித்யாவில் அகஸ்தியரும், பிராமணவியலின் செய்தி பரப்புதலும்." அடையாறு நூல் நிலைய அறிக்கை. V. 31-32 (1967-1968) 442-449.
9. "இந்திய-பிரெஞ்சு நிறுவனத்தில் தமிழ் ஆய்வு." வெளிநாடுகளில் தமிழ் ஆய்வு: கருத்தரங்கு, குலாலம்பூர், 1968.
10. "இந்தியப் பண்பாட்டில் திராவிடர்கள்," செவாந்து செய்தித்தாள் (1949), 74-91.
11. "கந்த புராணத்தின் புராணக்கதை- அறிமுகம், ஙிஷிளிகிஷி, 32.2 (1969) 457-458.
12. "த்மிழும் தொல்பொருள் ஆராய்ச்சியும்," சென்னை, 1971.
13. வைணவப் பக்தியைப் பற்றிய ஒரு தமிழ் நூல்: ஆண்டாளின் தமிழ்ப்பாவை. இந்தியப் பிரெஞ்சு நிறுவனம் 45, புதுச்சேரி, 1972.
14. திருமுருகாற்றுப்படை (பிரெஞ்சாக்கம்) புதுச்சேரி, 1973.
15. "வையாபுரிப் பிள்ளையின் தமிழ் அகராதியைப் பற்றிய பழைய ஆசிய செய்தித்தாள் திறனாய்வு," பாரீஸ், (1937), 348-353.
16. "ஜூல் பிளாக்கின் திராவிட மொழிகளின் இலக்கண அமைப்பு பற்றிய திறனாய்வு, பழங்கால ஆசிய செய்தித்தாள், (1948), 154.
17. "மதுரை பெரிய அகராதியைப்பற்றிய திறனாய்வு" 2 தொகுதிகள், பழங்காலச் செய்தித்தாள், 244, பாரீஸ், (1956) 458- 460.
18. "தென்னிந்தியாவில் சிவனுடைய உருவங்கள்" ஆசியக் கலைகள், கூஷி.8 (1961), 43-56.
19. "சைவ ஆகமாவைப்பற்றிய அறிமுகம்" Rauravagama, V.I.Ed.N.P. Bhatt, இந்தியப் பிரெஞ்சு நிறுவனம், புதுச்சேரி, 1961.
20. "அபயதீக்சித்தின் ஆரிய சட்டகா, சிவனுக்கான பக்திப் பாடல்கள்" ஆசிய செய்தித்தாள், V. 253, பாரீஸ், (1965), 51-82.

## மோரீஸ் மேந்திரோன்
## (Maurice Maindron) 1907

இவர் புதுச்சேரிக்கு வந்தபோது தமிழ் மக்கள் சமூகத் துறையிலும், சமயத் துறையிலும் கொண்டிருந்த பழக்க வழக்கங்கள் இவரது கவனத்தை ஈர்த்தன. எனவே இவர் தமிழர்தம் பழக்க வழக்கங்களையே ஆராய்ந்தார். இவர் இப்பழக்க வழக்கங்களின் பெருமையை உணர்ந்தார்.

சீரிய முறையில் அமைந்திருந்த இவை இவருக்கு மன எழுச்சியைத் தந்ததால் இத்துறை ஒன்றைப் பற்றியே ஆராய்ச்சி செய்து ஒரு நூல் இயற்றினார். பிரெஞ்சு மொழியில் வெளியான இந்நூலுக்குத் 'தமிழ் நாட்டின் பழக்க வழக்கங்கள்' என்னும் பெயர் சூட்டி 1907இல் வெளியிட்டார்.

## ஆலன் தானியேலு (Danielou, Alain) 1907

ஆலன் தானியேலு ஒரு பிரெஞ்சு மொழியியலாளர். இவர் 1907ஆம் ஆண்டு பிறந்தார். தானியேலு R.S. தேசிகனுடன் சேர்ந்து சிலப்பதிகாரத்தைப் பிரெஞ்சில் மொழியாக்கம் செய்துள்ளார். அம்மொழியாக்கத்தை 1960ஆம் ஆண்டு பாரீசு நகரில் வெளியிட்டார். இந்நூல் Le Roman de l' Anneau என்னும் தலைப்பில் 1961, 1965களில் மறுபதிப்பு செய்யப்பட்டது குறிப்பிடத்தக்கதாகும்.

தமிழ்நாட்டுக் கலைகளின் மீது பிரெஞ்சு மக்களில் சிலர் தம் கருத்தைச் செலுத்தினர். தமிழ்க் கலைகள் அவர்களது கவனத்தை ஈர்த்தன. இத்துறையில் அவர்கள் மிக்க ஊக்கங் கொண்டு உழைத்தனர். அவர்களுள் சிறப்பாகக் குறிப்பிடத்தக்கவர் ஆலன் தானியேலு என்பவர். இவர் தென்னாட்டு இசையைப் பயின்று இசைக்கருவிகளை இயக்கும் திறமையும் பெற்றார். இந்நாட்டு இசையைப்பற்றிப் பிரெஞ்சு மொழியில் 1960ஆம் ஆண்டில் நூல்களை இயற்றினார். இவர் பல ஆண்டுகள் தமிழ் நாட்டில் வாழ்ந்தவர். சென்னை அடையாறிலுள்ள உருக்குமணி அருண்டேல் கலைக்கூடத்தில் தங்கிப் பயின்றவர். பின்னர் அமெரிக்க நாட்டிற்கு ஆராய்ச்சி செய்யச் சென்றுவிட்டார்.

**படைப்புகள்**

1. "The Meaning of Ganapathy", Adayar Literary Bulletin, 18 (1954).
2. The Ankle Bracelet, (tr.) n.d. London, 1067, Manimekalai, (tr.) n.d.
3. While the gods play: Shaiva oracles and predictions on the cycle of history and the destiny of making n.d.

## மோரிஸ் லாங்டன் (Langton, C.Maurice.Rev.) 1909

மோரிஸ் லாங்டன் 1909ஆம் ஆண்டு இலண்டன் நகரில் பிறந்தார். இவர் கேட்போர்டு (Catford) கல்லூரியிலும், கேம்பிரிட்ஜ் பல்கலைக் கழகத்திலும் படித்துப் பட்டம் பெற்றவராவார். லீட்ஸ் பல்கலைக் கழகத்தில் இவர் கிரேக்க மொழித் துணைப் பேராசிரியராகப் பணியாற்றினார்.

பின்பு இவர் சேலிஸ்பரி (Salisbury) மறையியல் கல்லூரியில் சேர்ந்து இறையியல் கற்று மறை பரப்பும் பாதிரியாராகச் சென்னை வந்தார். மோரிஸ் பாதிரியார் திருநெல்வேலியில் மறைப்பணி ஆற்றியபோது தமிழைச் சிறந்த முறையில் கற்றுத் தேர்ந்தார். இவர் மறைப்பணி ஆற்றும்போது பாளையங்கோட்டையிலுள்ள கண்விழி இழந்தோர்களுக்கான பள்ளியின் தலைமை ஆசிரியராக இருந்தபொழுது தமிழ் நூல்களை ஆங்கில மொழியில் மொழியாக்கம் செய்வதில் ஈடுபாடு கொண்டார். எனவே இவர் புகழேந்திப் புலவரின் படைப்பான நளவெண்பாவைச் செய்யுள் வடிவில் ஆங்கில மொழியில் வடித்தார்.

இவ்வறிஞர் நளவெண்பாதான் உலகத்திலேயே உள்ள காதல் கதைகளிலேயே சிறந்த ஒன்றாக உள்ளது என்று கூறுகின்றார். இந்திய மொழிகளிலேயே குறிப்பாகத் தமிழ் மொழியிலிருந்து பிற மொழிகளில் மொழியாக்கம் செய்வது ஒரு கடினமான வேலை என்பது இவரது கருத்தாகும். இந்தப் படைப்பு சென்னைக் கிறித்துவ இலக்கியக் கழகத்தால் (Madras Christian Literary Society) 1950ஆம் ஆண்டு வெளியிடப்பட்டது. புகழேந்திப் புலவரைப் பற்றிய இவரது புகழ்மாலை ஈரேழ் வரிப்பாவில் எழுதப்பட்டுள்ளது.

படைப்பு

The Story of King Nala and Princess Tamayanti, Madras, 1950.

## தாமஸ் பரோ
## (Burrow, Thomas) 1909-1986

பேராசிரியர் தாமஸ் பரோ 1909ஆம் ஆண்டு ஜூன் திங்கள் 29ஆம் நாள் வட லங்காஷயரிலுள்ள லெக் (Leck) என்னும் குக்கிராமத்தில் பிறந்தார். அவர் 1944லிருந்து 1976வரை ஆக்ஸ்போர்டு பல்கலைக் கழகத்தில் சமஸ்கிருதத்தில் போடன் பேராசிரியராகப் பணியாற்றினார். இந்தியாவின் திராவிட மொழிகளில் தலைசிறந்த அகில உலக மேதையாகத் திகழ்ந்தார். இளமைக் கல்வியைப் போன்ஸ்டேலில் உள்ள கிர்கிபி குயின் எலிசபெத் கிராமர் பள்ளியில் முடித்தார். இப்பள்ளி இவருக்குக் கல்லூரிப் படிப்புக்காக உபகாரச் சம்பளம் வழங்கியது. அவர் அப்பணத்தைக் கொண்டு 1927இல் கேம்ப்ரிட்ஜில் உள்ள கிறிஸ்து கல்லூரியில் படித்தார். கேம்ப்ரிட்ஜில் அவர் உயர்தர இலக்கியத்தில் இளங்கலைப் பட்டம் பெற்றார். மொழி நூல் ஒப்பாய்வு செய்தார். இவ்வாய்வு இவரைச் சமஸ்கிருதம் படிப்பதில் ஈடுபாடு கொள்ளச் செய்ததோடல்லாமல் கீழ்த்திசை மொழிகளை அதிலும் குறிப்பாகச் சமஸ்கிருதம், பாலி, பிராக்கிருத மொழிகளைப் படிக்கவும் தூண்டியது. இவர் மூன்றாண்டுகள் இலண்டனிலுள்ள ஓரியண்டல் நிறுவனத்தில்

ஆய்வு மேற்கொண்டார். பின்பு கேம்ப்ரிட்ஜூக்குச் சென்றார். 20ஆம் நூற்றாண்டில் மத்திய ஆசியாவில் சர் ஒரல் ஸ்டெயின் கண்டுபிடித்த கரோஸ்தி (Kharosthi) மொழியைப் பற்றிய ஆவணங்களைக் கண்டுபிடித்தார். பரோ இவ்வாவணங்களை ஆராய்ந்து முனைவர் பட்டம் பெற்றார். 1935ஆம் ஆண்டு முதல் 1937வரையில் கிறிஸ்து கல்லூரியில் ஆய்வாளராகவும் பின்பு 1937 முதல் 1944 வரையில் பிரிட்டிஷ் அருங்காட்சியகத்திலுள்ள கீழ்த்திசைப் புத்தகப் பதிப்புத் துறையிலும், கைப்பிரதிகளுக்கும் உதவிக் காப்பாளராக இருந்தார். இவர் அங்கே திராவிட மொழிகளைப் படிக்கத் தொடங்கினார். 1944ஆம் ஆண்டு சமஸ்கிருதப் போடனின் பேராசிரியராகவும், இந்திய நிறுவனத்தின் காப்பாளராகவும் நியமிக்கப்பட்டார். 1976-இல் பேராசிரியர் பதவியிலிருந்து ஓய்வு பெற்றார். ஆனால் 1986ஆம் ஆண்டு முதல் தனது மரணம் மட்டும் ஆக்ஸ்போர்டு பல்லியோல் கல்லூரியில் எமிரட்டஸ் பேராசியராகப் பணிபுரிந்தார்.

அறிஞர் பரோ சமஸ்கிருதத்தில் விரிவான பணிக்கும் திராவிட மொழிகளின் ஒப்பாய்வுக்கும் பேர் போனவர். இவரது வெளியீடுகள் மொழியியலைப் பற்றியதாகும். சைனிய துர்கஸ்தானிலிருந்து கிடைத்த கரோஸ்தியைப் பற்றிய ஆவணங்களை 1937இல் கேம்ப்ரிட்ஜில் ஆய்வு செய்தார். மேலும் 1949இல் இலண்டனில் மேற்குறிப்பிட்ட மொழியின் ஆவணங்களை மொழியாக்கம் செய்தார். எனினும் இவற்றுக்கெல்லாம் மேலாகத் திராவிட மொழிகளில் வல்லுநர் என்ற முறையில் பரோ என்றென்றும் நினைவிற் கொள்ளப்படுவார். 1968இல் அண்ணாமலை நகரில் திராவிட மொழிகளைப் பற்றிய ஆவணங்களைத் தயாரித்தார். அவர் இவைகளை மறுபடியும் பதிப்பிக்கும் தருணத்தில் சமஸ்கிருதத்தில் அநேகத் தமிழ் வார்த்தைகள் கடன் வாங்கப் பட்டுள்ளதை அடையாளம் கண்டு திராவிட ஒப்பாய்வு இலக்கணத்தைப் பற்றி விவாதித்தும் உள்ளார். 1962ஆம் ஆண்டு ''இந்திய-ஆரியன் மொழிகளிலிருந்து கடன்வாங்கியவைகள்'' என்ற நூலும் 1961இல் திராவிடச் சொல்லிலக்கண அகராதியும் வெளியிடப்பட்டன. இந்நூலின் இரண்டாம் பதிப்பு 1984இல் செய்யப்பட்டது அவருக்கு மனதிருப்தியை அளித்தது.

**அறிஞர் தாமஸ் பரோ தமிழுக்களித்த கொடை**

1. "Dravidian Studies-I" BSOAS, 93 (1938), 711-22.
2. "Dravidian Studies-II," BSOAS,10.2(1940), 289-297.
3. "Dravidian Studies-III," BSOAS,11.1 (1943), 122-139.
4. "Dravidian Studies-IV" BSOAS, 11.2 (1944) 328-356.

5. "Dravidian Studies-V" BSOAS, 11.3 (1945), 595-616.
6. "SomeDravidian words in Sanskrit," TPs,(1945),79-120.
7. "Some Loanwords in Sanskrit", TPs(1946),1-30.
8. "Dravidian Studies-VI" BSOAS, 12..1(1947, 132-147.
9. " Dravidian Studies-VII" BSOAS,12.2 (1948), 365-396.
10. "The Treatment of Primitive Dravidian-r-in Kurukh and Malto."
11. Studies in Indian Linguistics (Prof.M.B.Emeneau Sastipurti Volume), Annamalai nagar: Annamalai University,1960.
12. Collected Papers on Dravidian Linguistics,Annamalai Nagar: Annamalai University, 1968.
13. "Decipherment of Mohenjo-Daro Script," Journal of Tamil Studies, 11.1(1970), 149-156.
14. "The Primitive Dravidian word for the horse." IJDL,1(1972),18-25.
15. "A sketch of Manda Grammar in Comparison with Pengo."
16. Dravidian Linguistics, Ed. Agesthialingam and P.S. Subrahmanyam, Annamalainagar: Annamalai University,1976.
17. "Review of G.L.Hart's Relations Between Tamil and Classical Sanskrit Literature", Indo-Iranian Journal, 21(1979), 282-4.
18. A Comparative Vocabulary of Gonodi Dialects, Calcutta,1960.
19. A Dravidian Etymological Dictionary: Supplement,Oxford, 1961.
20. Dravidian Etymological Dictionary: Supplement, Oxford,1968.
21. "Dravidian Etymological Notes", Journal of the American Oriental Society, 92(1972). 397-418, 475-491.

## தேசிகன்
## (Dessigane)

தேசிகன் பிரெஞ்சு மொழியியலாளரும் இந்திய இலக்கிய வல்லுநருமாவார். இவர் தமிழ்ப் பக்திப் பாடல்களின் நூல் ஒன்றை 1959ஆம் ஆண்டு வெளியிட்டார். இந்நூல் பிரெஞ்சு மொழியில் உள்ள பக்திப் பாடல்களிலிருந்து மொழியாக்கம் செய்யப்பட்டது. ஜான் பிலியோசாவின் முன்னுரையுடன் 110 பக்கங்களில் தேர்ந்தெடுக்கப்பட்ட பக்திப்பாடல்களைக் கொண்டுள்ளது.

ஆண்டாளின் திருப்பாவை பிரெஞ்சு மொழியாக்கம் செய்யப்பட்டு 1952இல் வெளியிடப்பட்டது. மூலப் பாட்டும் பிரெஞ்சு

மொழியாக்கமும் திருப்பாவை என்னும் தலைப்பில் கொடுக்கப் பட்டுள்ளன.

காஞ்சிபுரத்தில் நடைமுறைப்பாங்கில் உள்ள சைவ சமயக் கதைகள் பிரெஞ்சு மொழியில் காஞ்சிபுரச் சைவ சமயப் புராணக்கதைகள் என்னும் தலைப்பில் இந்நூல் ஜான் பிலியோசாவால் 1964ஆம் ஆண்டு வெளியிடப்பட்டது. மற்றுமொரு நூல் தமிழ்க் கந்த புராணம், தென்னிந்தியக் கடவுள்களின் வடிவங்கள் ஆகியவற்றின் அடிப்படையில் ஸ்கந்தாவின் புராணக்கதை என்னும் தலைப்பில் 1967இல் பாண்டிச்சேரியில் வெளியிடப்பட்டது.

**தேசிகன் தமிழ் மொழிக்காற்றிய தொண்டு**

1. Tiruppavai Text Original Tamoul en Français, Pondicherry, 1952.
2. திருப்பாவையின் மூல நூலும் பிரெஞ்சு மொழியாக்கமும், பாண்டிச்சேரி, 1952.
3. Le Legende Joueux de Civa A Madurai d' après Les Textes Et les peintures Vol I & II, 1960.
4. மதுரையில் சிவனின் திருவிளையாடல்: புராணக்கதைகள் நூல்கள் ஓவியங்கள் இவற்றின்படி Vol I & II, 1960.
5. Les Legendes Civates De Kanchipuram, 1964.
6. காஞ்சிபுரத்தின் சைவர்களின் புராணக் கதைகள், 1964.
7. Le Legende De Skanda, 1967.
8. கந்தனின் புராணக்கதை, 1967.

## ஞானு தியாகு
## (Gnanou Diagou)

ஞானு தியாகு ஒரு பிரெஞ்சு அறிஞர். தமிழகம் வந்து தமிழ் இலக்கியப் படைப்புகளைப் பிரெஞ்சு மொழியாக்கம் செய்து வெளியிட்டார்.

**படைப்புகள்**

1. திருவள்ளுவர் குறள் (திருக்குறள் பிரெஞ்சில் மொழியாக்கம்) பாண்டிச்சேரி 1942.
2. ஆசாரக்கோவை (சங்ககாலத்திற்குப் பிந்திய நீதிநெறிகளைப் பற்றிப் பிரெஞ்சில் மொழியாக்கம்) காரைக்கால், 1950.
3. நான்மணிக்கடிகை (சங்க காலத்திற்குப் பிந்திய நீதிமொழிகளின் படைப்புகள், பிரெஞ்சு மொழியாக்கம்.) பாண்டிச்சேரி 1950.
4. கல்லாதனார், பாண்டிச்சேரி, 1955.

5. நல்லந்துவனார் கவியின் பிரெஞ்சாக்கம் (Nallanduvanar, L'Epigramme triple Traduit Du Tamoul) பாண்டிச்சேரி 1955.
6. கம்ப ராமாயணம், சுந்தரகாண்டம் (Livre de La Beauté) the fifth canto of கம்பராமாயணம் translated into French, பாண்டிச்சேரி, 1972.

## லீ லிஸ்கர்
## (Lisker, Leigh)

லீ லிஸ்கர் ஒரு மிகச் சிறந்த அமெரிக்கப் பன்மொழி அறிஞர். 20ஆம் நூற்றாண்டுக்கு முன்பு அமெரிக்காவில் எந்த ஒரு கல்லூரியிலும் தமிழ் கற்றுக் கொடுக்கப்படவில்லை. 1950ஆம் ஆண்டு லீ லிஸ்கரின் விடாமுயற்சியால்தான் பென்சில்வேனியா பல்கலைக் கழகத்தில் அமெரிக்க மாணவர்களுக்குத் தமிழ் கற்பிக்கப்பட்டது. இவரேதான் அங்கு முதல் பேராசிரியராகப் பணியாற்றினார். கலிபோர்னியா, சிக்காகோ பல்கலைக் கழகங்களில் தமிழ் கற்றுக் கொடுக்க ஆரம்பித்தனர். தென்னாசிய ஏரியா ப்ரோகிராம் (South Asia Area Programme) வாயிலாக அமெரிக்கப் பல்கலைக் கழகங்களில் தமிழும் ஏனைய திராவிட மொழிகளும் கற்றுக் கொடுக்கப்படுகின்றன.

**தமிழ்க் கொடை**

1. "Tamil Verb Classification," JAOS, (1951), 71.
2. "The Tamil occulusives: Short vs.long or Voiced vs Voiceless,", Ind Linguistics, 1 (1958) 194-301.
3. "Tamil Verb Classification," JAOS, 71:2 (1981), 111-114.
4. "Review of C.R.Sankaran: Phonemics of Old Tamil," JAOS, 72, 1952.
5. "Tamil verbs auxiliaries," paper delivered at the University of Chicago, 1962.
6. "Review of T.Burrow and M.B.Emeneau: A Dravidian Etymological Dictionary," JAOS, 82, 1962.
7. A manual of Colloquial Tamil, University of Pennsylvania, 1966, (Mimeo).
8. "On Stops and Termination in Tamil," Proceedings of the First all India Conference of Dravidian Linguistic Association of India, University of Kerala.

## நோல்டன்
## (Knowlton, E.C.JR)-1921

நோல்ட்டன் ஓர் அமெரிக்கர். இவர் ஹவாய் பல்கலைக் கழகத்தில் மொழியியல் துறையில் பேராசிரியராகப் பணியாற்றினார். இவர்

போர்த்துக்கீசிய மொழியில் ஓர் அறிஞர். ஓர் ஆராய்ச்சியாளரும்கூட. எனவே தமிழ், போர்த்துக்கீசு, தெற்காசிய மொழிகளின் ஒப்பாய்வு செய்து கட்டுரைகள் வெளியுட்டுள்ளார்.

அவர் ஓகியோவிலுள்ள டெல்வேரில், ஆசிரியரான எட்கர் கால்பி, மருத்துவ நூலகரான மில்ரெட் நோல்ட்டன் தம்பதியருக்கு 1921 ஆம் ஆண்டு செப்டம்பர்த் திங்கள் 14ஆம் நாள் பிறந்தார். நோல்டன் ஹார்வர்டு (Harvard) பல்கலைக் கழகத்தில் பயின்றார். 1959-இல் ஸ்டான்போர்டு (Stansford) பல்கலைக் கழகத்திலிருந்து முனைவர் பட்டம் பெற்றார்.

நோல்டன் முதலில் கற்றுத்தருபவராகப் பணியில் சேர்ந்து பின்னர்ப் படிப்படியாகப் பதவி உயர்வு பெற்றுப் பின்னர் ஐரோப்பிய மொழிகளின் பேராசிரியராகப் பதவி வகித்தார். மலேசியப் பல்கலைக் கழகத்தில் மொழியியலைக் கற்பிக்கும் வருகை தரும் பேராசிரியராக (visiting professor)ப் பணி புரிந்தார்.

பங்களிப்பு

1. அந்தோணியோ தெ பொரென்சா படைத்த தமிழ்-போர்த்துக்கீசு அகராதியிலிருந்து 99 வார்த்தைகதைத் தேர்ந்தெடுத்து சேவியர் தனிநாயகம் அடிகளுடன் இணைந்து பகுத்தாய்வு செய்து ஓர் ஆய்வுக் கட்டுரையை முதல் உலகத் தமிழ் மாநாட்டுக் கருத்தரங்கில் 1966இல் மலேசியாவில் வாசித்தார்.

2. மற்றுமொரு தலைப்பில் அதே பொருளில் நோல்ட்டன் சென்னையில் 1968ஆம் ஆண்டு நடந்த இரண்டாம் உலகத் தமிழ் மாநாட்டுக் கருத்தரங்கில் பொரையென்சாவின் தமிழ்-போர்த்துக்கீசிய அகராதியில் 61 வார்த்தைகளைத் தேர்ந்தெடுத்து அத்தோடு இந்திய-போர்த்துக்கீசிய அகராதியின் அடிப்படைக் கூறுகளை ஆராய்ந்து கட்டுரை எழுதியுள்ளார்.

3. "Antao de Proença's Vocabulario Tamulico Lusitano: Indo-Portugeese elements," Tamil Culture 11:2,1064,135-164.

4. "Portuguese-Tamil Linguistic Contact, "Proceedings of the First International Conference Seminar of Tamil Studies, Vol.1. Kuala Lampur. 1969.

5. "Further Examples of Indo- Portuguese elements in Proença's Tamil Portuguese Dictionary,"

6. Proceedings of the Second International Conference Seminar of Tamil Studies, Vol.1 Ed. R.E..Asher, Madras,1971.

## பக் ஹேரி மெர்வின்
## (Buck Harry Merwyn) 1921-

பக் ஹேரி 1921ஆம் ஆண்டு நவம்பர் மாதம் 18ஆம் தேதி தந்தை ஹேரி மெர்வினுக்கும் தாய் ஈடித் பக்குக்கும் திருமகனாய்ப் பிறந்தார். இவர் அல்பிரைட் (Albright) கல்லூரியில் பயின்றார். கெட்டிஸ்பர்க் (Gettysburg) லூத்தரன் இறையியல் குருமடத்தில் மூன்று ஆண்டுகள் (1944-46) மறையியல் கற்றார். இவ்வறிஞர் பல உபகாரச்சம்பளங்களைப் (fellowship) பெற்றார். 1945ஆம் ஆண்டு சிக்காகோப் பல்கலைக்கழகத்தில் முனைவர் பட்டமும் அதையடுத்து 1965இல் பென்சில்வேனியாப் பல்கலைக்கழகத்தில் மறு பட்டமான D.Sc பட்டத்தையும் பெற்றார். 1967ஆம் ஆண்டு கிறிஸ்டியன் மேரி லின்பேக் (Christian Mary Linback) சிறந்த ஆசிரியருக்கான விருதை இவருக்கு வழங்கியது.

**பங்களிப்பு**

"In the Footsteps of Lord Rama, a phenomenological Study of Ramayana" Professor K.A.Nilakanta Sastri Felicitation Volume, Madras, Rathnam Press, 1921.

## ஓஸ்டர்லிட்ஸ் இராபர்ட்
## (Austerilitz Robert) 1923

ஓஸ்டர்லிட்ஸ் இராபர்ட் உருமேனியாவிலுள்ள புஷாரஸ்தில் 1923ஆம் ஆண்டு திசம்பர் 13ஆம் நாள் தந்தை சட்டோ (Cetto) தாய் ரோஸ் ஆகியோருக்குத் திருமகனாகப் பிறந்தார்.

இவர் 1950ஆம் ஆண்டு கொலம்பியப் பல்கலைக் கழகத்தில் முதுகலைப்பட்டம் (வி.கி.) பெற்றவர். 1955இல் இவர் தனது முனைவர் பட்டத்தைப் பெற்றார். பின்லாந்து நாட்டில் 1951-53ஆம் ஆண்டிலும் ஜப்பானில் 1953-54ஆம் ஆண்டிலும் 1956-58ஆம் ஆண்டிலும் படித்தார். இவ்வறிஞர் நியூயார்க்கிலுள்ள கொலம்பியப் பல்கலைக் கழகத்தில் மொழியியல் துறையில் பணியாற்றினார்.

"Long-rage Comparisons of Tamil and Dravidian With other Language Families in Eurasia" Proceedings of the Second International Conference Seminar of Tamil Studies, Vol.I. Ed. R.E-Asher, Madras: I.A.T.R.1971.

## ஆஷர்
## (Asher, R.E) 1926

அறிஞர் ஆஷர் ஒரு மொழியியல் பேராசிரியர். ஸ்காட்டிலாண்டில் உள்ள எடின்பர்க் பல்கலைக்கழகத்தில் பணியாற்றியவர். அவர்

தென்னிந்திய மொழிகளைப்பற்றிப் பல நூல்கள் எழுதிப் பிரபலம் ஆனவர். இவர் இங்கிலாந்தில் வடக்கேயுள்ள நோட்டிங்காம்ஷயரில் அமைந்த ஒரு சிறிய கிராமமான கிறிங்கிளி ஆன்த ஹில்லில் (Gringley-on-the Hill) 1926ஆம் ஆண்டு பிறந்தார். அவர் தமது பத்தாவது வயதில் உள்ளூரிலேயே ஆரம்பப் பள்ளிக்கல்வியை முடித்தார். பின்பு அருகில் உள்ள நகரமான ரெட்போர்டுவில் (Retford) அமைந்த ஆறாம் எட்வர்டு கிராமர் உயர்நிலைப் பள்ளியில் உபகாரச் சம்பளம் பெற்று உயர்நிலைப் பள்ளிப் படிப்பை முடித்தார். இலண்டன் பல்கலைக்கழகக் கல்லூரியில் சேர்ந்து பிரெஞ்சு மொழியைச் சிறப்புப் பாடமாகவும், துணைப்பாடமாக ஜெர்மன் மொழியையும் கற்றார். இவர் தம் இளங்கலைப் படிப்பைத் தென் பிரான்சில் உள்ள மோம்பெல்லியர் (Montpellier) பல்கலைக் கழகத்தில் படித்து முடித்தார். அதன் பிறகு இலண்டன் பல்கலைக் கழகத்தில் முனைவர் பட்டத்திற்காக, பிரெஞ்சுக் கலைகளிலும் இலக்கியத்திலும் ஏற்பட்ட மறுமலர்ச்சியின் வரலாற்றைப்பற்றி ஆராய்ச்சி செய்தார். 1955ஆம் ஆண்டு மேற்கூறிய பல்கலைக் கழகத்தில் முனைவர் பட்டம் பெற்றார். இதே தலைப்பை ஆராய்ந்து மேன்மைப்படுத்தி ஒரு நூல் வெளியிட்டார்.

1953ஆம் ஆண்டில் ஆஷர் இலண்டன் பல்கலைக் கழகத்திலுள்ள கீழ்த்திசை-ஆப்பிரிக்க மொழியியல்-ஒலியியல் துறையில் கற்றுக் கொடுக்கும் பணியில் சேர்ந்தார். இங்கேதான் 1955-56இல் பேச்சுத் தமிழில் மொழியியல் ஆராய்ச்சி செய்வது சம்பந்தமான தயாரிப்பை நினைவில் கொண்டு தமிழ் எழுத்துமொழி பாடங்களின் வாயிலாகத் தமிழைக் கற்கத் தொடங்கினார்.1955-56இன் முதல் ஆறு மாதம் தமிழகத்திலுள்ள வடஆர்க்காட்டில் செங்கத்தில் தங்கினார். பின்னர் அவர் சென்னைக்கு வந்தார். அங்கு முனைவர் மு.வரதராசனார் உயர்தர இலக்கியத் தமிழையும், நவீன காலத் தமிழையும் அவருடைய தமிழ் மொழி கற்றலில் சேர்த்துப் படிக்க ஆஷரை ஊக்குவித்து வழி நடத்தினார். ஆண்டின் முடிவில் ஒரு மாதம் அறிஞர் இலங்கையிலுள்ள ஜாப்னா, பட்டிக்கோலா ஆகிய பகுதிகளில் மக்கள் பேசும் பேச்சுத் தமிழைப் பற்றி ஆரம்ப ஆய்வு செய்யும் நோக்கத்தோடு அங்குச் சென்று தங்கினார். 1963-64இல் இரண்டாம் ஆண்டின் விடுமுறையின் முதல் பகுதியை சென்னையில் தமிழ் கற்பதிலும் பிற்பகுதியைக் கேரளத்தில் உள்ள எர்ணாகுளத்திற்குச் சென்று மலையாள மொழி கற்பதிலுமாக இந்தியாவில் செலவழித்தார்.

1961இல் சமஸ்கிருதம், ஹிந்தி, உருது, பெங்காலி, தமிழ் ஆகிய தென்னாசிய மொழிகளின் ஆராய்ச்சியையும் கற்பித்தலையும் மேற்கொண்டுள்ள தென்னாசிய மொழிகளும் அந்த வட்டார மையமுமான சிகாகோ பல்கலைக்கழகத்திற்கு ஒரு வருடம் குறுகிய காலப்

பார்வையாளராக நியமனம் பெற்றார். சிக்காகோவில் அவருக்குக் கீழைநாடு- ஆப்பிரிக்க மையத்தில் முதல் முதலாகப் பேச்சுத்தமிழ் கற்கும் ஆராய்ச்சி மாணவனாகச் சேர்த்து விட்ட ஆர்.இராதாகிருஷ்ணனுடைய தொடர்பைப் புதுப்பித்துக் கொண்டார். அவர்கள் இருவரும் சேர்ந்து தற்கால உரைநடையின் பலவிதமான குறிப்பிட்ட பதிப்புக்களை உருவாக்கினர். இந்த நூல் கேம்பிரிட்ஜ் பல்கலைக்கழகப் பதிப்பகத்தால் (Cambridge University Press) வெளியிடப்பட்டது.

ஆஷருடைய கல்வி வாழ்க்கை பெரும்பாலும் எடின்பர்க் பல்கலைக்கழகத்தில்தான் கழிந்தது. அங்குத் தான் அவர் 1965இல் பொது மொழியியல் துறையில் சேர்ந்தார். அங்கு ஆராய்ச்சியிலும், மொழியியலையும் ஒலியியலையும் கற்பித்தலிலும் ஈடுபட்டதோடல்லாமல் நிருவாகத்திலும் முழுமூச்சோடு செயல்பட்டார். இரண்டு முறை மொழியியல் துறைத் தலைவராகப் பணியாற்றிய பின்பு புலத் துணைத் தலைவராகவும், பின்னர்க் கலைத்துறையின் புலத்தலைவராகவும் அதன்பின்னர்த் துணை முதல்வராகவும் பணியாற்றியுள்ளார். இவை மட்டுமல்லாது 1984இல் ஆஷர், எடின்பர்க் பல்கலைக்கழகத்தின் ஒலியியல் பேராசிரியருமான ஜான் லேவர் இவர்களின் கூட்டு முயற்சியால் நிறுவப்பட்ட சொல்லியல் ஆராய்ச்சி மையத்தின் உதவி இயக்குநராகவும் பணி செய்துள்ளார்.

ஆஷர் ஐரோப்பா, ஆசியா, வட அமெரிக்கக் கண்டங்களிலுள்ள அநேக பல்கலைக்கழகங்களில் அவைகளின் அழைப்பின் பேரில் சொற்பொழிவாற்றியுள்ளார். அவர் மிச்சிகன் ஸ்டேட் பல்கழைக்கழகம், அர்பெனா கேம்ப்பெய்னில் உள்ள இலினாய் பல்கலைக் கழகத்திலும், மினிசோட்டா பல்கலைக் கழகத்திலும், பாரீசிலுள்ள பிரெஞ்சுக் கல்லூரியிலும் வருகை தரு பேராசிரியராகப் பணியாற்றியுள்ளார். 1968இல் சென்னைப் பல்கலைக்கழகத்தில் முனைவர் ஆர்.பி.சேதுப்பிள்ளை அறக்கட்டளையின் இருபத்தைந்தாம் ஆண்டு வெள்ளி விழாச் சொற்பொழிவாற்றினார். 1984ஆம் ஆண்டு தஞ்சைத் தமிழ்ப் பல்கலைக்கழகத்தில் அந்த ஆண்டிற்கான சுப்பிரமணிய பாரதியாரின் நினைவு அறக்கட்டளைச் சொற்பொழிவை ஆஷர் ஆற்றினார்.

டாக்டர் ஆஷர் எடின்பர்க்கில் இருந்தபொழுது கோட்பாடு சார்ந்த மொழியியல்கள், திராவிட மொழியியல், தமிழ் மலையாளம் ஆகியவற்றின் விரிவான இலக்கணம், நவீனத்தமிழ் மலையாள இலக்கியங்கள், பிரெஞ்சு மறுமலர்ச்சி ஆகியவை பற்றிய பல்வேறு தலைப்புகளில் நூல்களையும் கட்டுரைகளையும் எழுதி வெளியிட்டுள்ளார். 1980களின் முடிவிலும் 1990களின் தொடக்கத்திலும் பெர்காமன் அச்சகத்தினரால் 1993இல் வெளியிடப்பட்ட பத்துப் பகுதிகளைக் கொண்ட மொழியும் மொழியியலும் அடங்கிய

சொற்களஞ்சியம் எழுதுவதற்குத் தலைமைப் பதிப்பாசிரியராகப் பணியாற்றினார். இவரது கல்வி சார்ந்த செயற்கரிய செயல்களின் அடையாளம் கண்டு இவரை இராயல் சொசைட்டி ஆப் எடின்பர்க்கும் (Royal Society of Edinburgh) கேரளா சாகித்ய அகாடமியும் (Kerela Sahitya Academi) (கேரளத்தைச் சாராத உறுப்பினர் இவர் ஒருவர் மட்டுமே என்பது குறிப்பிடத்தக்கது) உறுப்பினராகத் தேர்ந்தெடுத்தன. மேலும் திராவிட மொழிகளின் ஆய்வில் இவர் படைத்த படைப்புக்களுக்காக இவருக்கு 1992இல் எடின்பர்க் பல்கலைக்கழகம் டிலிட் (D.Litt) பட்டம் வழங்கிக் கௌரவித்தது. இவர் இராயல் ஏசியாட்டிக் சொசைட்டியிலும் (Royal Asiatic Society) உறுப்பினராக உள்ளார்.

அறிஞர் ஆஷரின் படைப்புக்களைக் கீழ்வருமாறு பிரிக்கலாம்.

**Books**

1. A Tamil Prose Reader: Selections from Contemporary Tamil Prose with Notes and Glossary (With R.Radhakrishnan) Cambridge: Cambridge University Press, 1971.
2. Some Landmarks in the History of Tamil Prose, Madras: University of Madras, 1973.
3. Tamil. Amsterdam, North-Holland (Lingua Descriptive Studies, Vol 71), 1982, 2nd impression, London, Croom Helm, 1985 (Croom Helm Descriptive Grammars); 3rd impression, London, Routledge,1989.
4. National Myths in Renaissance Frances Fancus, Samothes and the Druids, Edinburgh: Edinburgh University Press, 1993.

**Books Edited**

1. Tamil Studies Abroad ( Secondary editor: with Xavier S. Thani Nayagam), Kuala Lumpur, International Association of Tamil Research, 1968.
2. (Secondary editor: with Xavier S.Thani Nayaham et al) Proceedings of the First International Conference Seminar of Tamil Studies, Kuala Lumpur: I.A.T.R.,1969.
3. India, Pakistan and Ceylon Entries, In D.R.Dudley & D.M.Lang (eds.), The Penguin Companion to Literature: Harmondsworth, Penguin Books, 1969 b.
4. Proceedings of the Second International Conference Seminar of Tamil Studies Vols. I & II, Madras: I.A.T.R, 1971.
5. (Ist editor: with Eugenie J.A.Henderson) Towards a History of Phonetics, Papers contributed in honour of David Abercrombie, Edinburgh: University Press, 1981; Reprinted 1982.

6. (Co-editor with C.Moseley) Atlas of the world's Languages, London: Routledge, 1993.
7. Encyclopaedia of Language and Linguistics, Pergamon Press, Oxford: (Editor-in-Chief and author of several articles) 10 volumes, 1993.
8. Translations: Contributions to T.N.Ramachandran (ed.) பாரதி பாடல்கள் (Translation into English verse of the complete Tamil poetical works of C.Subramania Bharati) Thanjavur: Tamil University, 1989.

**Contributions to books**

1. "The verb in spoken Tamil," I.C.E.Bazell et al. (eds) In Memory of K.R.Firth, London: Longmans, 1966.
2. "Tamil Literature," Chamber's Encyclopaedia Vol.VII, Oxford: Pergamon Press, 1967.
3. "The Versatality of C.N.Annadurai,"Anna 60, Ed. A.P.Janarthanam, Madras, 1968.
4. "Short articles on: Valluvar, Cattanar, B.R.Rajam Aiyar, C.Subrahmanya Bharati," In D.R.Dudley & D.M.Lan (eds.), The Penguin Companion to Literature, 4, Harmondsworth, Penguin Books, 1969.
5. "Classification of Tamil and Malayalam verbs: a Comparative study." Dravidian Linguistics, Ed. S.Agesthialingom and N.Kumaraswami Raja. Annamalainagar : Annamalai University, 1969.
6. "The Tamil Renaissance and the beginnings of the Tamil Novel", The Novel in India: Its Birth and Development, Ed.T.W.Clark, London: George Allen & Unwin 1970.
7. Short articles on: "C.N.Annadurai. Arumuga Navalar, P.Sundaram Pillai, A.Madhaviah, S.M.Natesa Sastri, C.Rajagopalachari, B.R.Rajam Aiyar, M.Varadarajan, S.Vedanayagam Pillai." Dictionary of Oriental Literature, Vol.2 Ed. Jazoslav Vacek & Dusan Zbavitel. London: George Allen & Unwin, 1974.
8. "இங்கிலாந்தில் உலகத்தமிழ்" Ed. தமிழண்ணல் எ. இராம பெரியகருப்பன், கு.குழந்தைநாதன். மதுரை, மதுரை காமராஜ் பல்கலைக்கழகம், 1981.
9. "T.P.M. - Attribute," தமிழ் மலர்ச்சி ஐந்தாவது உலகத் தமிழ் ஆராய்ச்சி மாநாட்டுச் சிறப்பு மலர், இலண்டன்: I.A.T.R.,1981.

10. "The outcome of his original inspiration and sustained interest," Ub Rajan Philipu Pillai (ed.), தமிழாரம்: a volume of Tributes and Reminiscences dedicated to Xavier S.Thani Nayagam, Kaits (Sri Lanka), A.Sabaratnam, 1983.
11. "Intervocalic plosives in Tamil," (with T.Balasubramanian) Topics in Linguistic Phonetic, Coleraine: The new University of Ulster (Occasional), 1984.
12. Sections on "Language: Handbooks and Grammar" and "Linguistics and Comparative Dravidian" in Xavier S.Thani Nayagam (ed.) A Reference Guide to Tamil Studies, Kuala Lumpur: Malaya University Press. 1989.

**Journal articles and review articles**

1. "Tamil literature in translation", Mahfil, a Quarterly Journal of South Asian Literature, VI (Spring 1970), 41-43.
2. "Ethnograpy and Poetry: the Songs of the Toda's (review articles, on M.B.Emeneau," Toda Songs, Oxford, (1971), South Asian Review, 5.2 (Jan. 1972), 155-9.
3. "Social Comment in South Asian Prose Fiction," South Asian Review, 5.3 (April 1972), 207-20.
4. "Dravidian Separateness: Invention of Reality," South Asian Review, 6.1(Oct. 1972), 33-42.
5. "The Revival of South Indian Studies," South Asian Review, 8.4 (July/Oct 1975), 279-88.
6. "Recent Western Publications Relating to Tamil Studies," தமிழாரம், 2.4 (1975) 51-64.
7. "The Incomparable Dr.Mu. Va.," Journal of Tamil Studies, 7 (1975) Papers published in conference Proceedings.

1. "Notes on F.W.Ellis and unpublished fragment of his commenary on திருக்குறள்" Proceedings of the First International conference seminar of Tamil Studies, Vol. Kuala Lumpur I.A.T.R., 1969.
2. "250 Years after: some aspects of Ziegenbalg's study of Tamil" Ibid., (1969), pp. 513-22.
3. "Pandit S.M.Natesa Sastri (1859-1906), Pioneer Tamil Novelist." Proceedings of the Second International Conference Seminar of Tamil Studies, Vol.I. Madras: I.A.T.R., 1971.
4. "Modern Tamil Literature," Compte-rendu de la troisième conférence international d'étu des tamoules, X.S. Thani Nayagam & François Gros. Pondicherry: Institute Francois d' Indologie,!1973

5. "Comparative problems in the noun morpholgy of Tamil and Malayalam," Proceedings of the First International conference seminar on Dravidian Linguistics, Ed. B.Gopinathan Nair. (January 1986) Trivandrum: International School of Dravidian Linguistics, 1989.

## லெகிரான் லூசியன்
## (Legrand-Lucian) 1926

அருட்தந்தை லெகிரான் லூசியன் 1926ஆம் ஆண்டு நவம்பர் மாதம் 19ஆம் தேதி மோன்ஸ்-ஆன்-பருவெல் (Mon-en-Barouel) என்னுமிடத்தில் பிறந்தார். 1950ஆம் ஆண்டு ஜூன் மாதம் 29ஆம் தேதி அந்நிய மறைத்தளங்கள் குருமடத்தில் குருப்பட்டம் பெற்றார். 1953ஆம் ஆண்டு ஆகஸ்டு மாதம் 4ஆம் தேதி சேலம் மறைத்தளம் வருவதற்காகப் பிரான்சிலிருந்து புறப்பட்டார்.

இந்தியா வந்தடைந்த பிறகு ஏற்காட்டில் உள்ள மோண்ட்போர்ட் பள்ளியில் மொழியியல் பயிற்சி பெற்ற பிறகு சேலம் மறை மாவட்டப் பேராலயத்தில் உதவிப் பங்கு குருவாக 1953-லிருந்து 1955வரை பணியாற்றினார். 1955ஆம் ஆண்டில் பெங்களூர் புனித இராயப்பர் பெரிய குருமடத்தில் திருமறை நூலின் (Sacred Scripture) பேராசிரியராகப் பணியமர்த்தப்பட்டார். இதில் 1993வரை பணியாற்றினார்.

இதற்கிடையில் 1980லிருந்து 1986வரை கிறிஸ்து பாளையம் பங்கின் பொறுப்பை ஏற்றுப் பணிபுரிந்தார். பின்னர் 1987லிருந்து 1994வரை மத்திகிரி பங்கின் பங்குக் குருவாகப் பணியாற்றினார். 1994இல் புனித இராயப்பர் குருமடத்தில் கௌரவப் பேராசிரியராகப் (Professor Emeritus) பணியேற்று அதில் தொடர்ந்து பணியாற்றிக் கொண்டிருக்கிறார். பாரீஸ் அந்நிய வேதபோதகச் சபையைச் சார்ந்த மறைபணியாளர்களில் இவர் ஒருவர் மட்டுமே உயிரோடிருக்கின்றார்.

### படைப்புகள்

1. பழந்தமிழ் இலக்கியம். தந்தை லுக்கிரானும் கி.மரியசெல்வமும் பாரீஸ் அந்நிய மறைப்போதகர்கள் சபையின் செய்திப் பத்திரிக்கை, காங்காங், 1950 பக்.682-695 புத்தக விவரத் தொகுப்பு பக்.693-695.

2. தமிழ் விவிலிய நூல், 1770.

a. பரிசுத்த வேதாகமம். லுக்கிரானும் மற்றவர்களும். திருச்சிராப்பள்ளி-தமிழ் இலக்கியக் கழகம்1970, 1132: ப.332

b. பரிசுத்த வேதாகமம். தமிழ் நாடு விவிலிய மறைக்கோட்பாட்டு வழிபாட்டு மையம். திண்டிவனம். TNBCLC, 1986,1132, ப.332.

c. தமிழ் விவிலியம் 1995. திண்டிவனம்-The Holy Bible with Dentero canonical Books- Tamil e.c.- Interconfessional; printed and distributed

with the permission of the Tamil Nadu Bishops By "Divine Retreat Centre" Muringoor, Shalakudy, Kerela.

3. மரியாளுக்கு மங்கள வார்த்தை (L'Annonce A Marie) Lc 1. 26-38 பகுதி 1. இத்தோடல்லாது தந்தை பல ஆராய்ச்சிக் கட்டுரைகள் எழுதி வெளியிட்டுள்ளார்.

## அறிஞர் கமில் செவலேபில் (Kamil Zvelebil) 1927-2009

கமில் செவலேபில் 1927ஆம் ஆண்டு செப்டம்பர் மாதம் 17ஆம் நாள் செக்கோஸ்லோவாக்கியாவிலுள்ள பிராகுவேயில் பிறந்தார். இவர் பிராகுவேயிலுள்ள சார்லஸ் பல்கலைக் கழகத்தில் சேர்ந்து 1946ஆம் ஆண்டு முதல் இந்திய இலக்கியத்தை ஆராய்ச்சி செய்து முனைவர் பட்டம் பெற்றார். மேலும் செவலேபில் இந்தியாவைப் பற்றிக் கற்றதோடல்லாது ஆங்கில மொழியும், இலக்கியமும், மெய்யியலும் கற்றுத் தேர்ந்தார். முனைவர் பட்டம் வாங்கியபின்பு 1952ஆம் ஆண்டு இப்பல்கலைக் கழகத்தில் மெய்யியலிலும் 1959ஆம் ஆண்டு தமிழ் மொழியியலிலும் இலக்கியத்திலும் பட்டம் பெற்றார். 1970ஆம் ஆண்டில் தமிழிலும், திராவிட மொழிகளிலும், இலக்கியத்திலும் செக்கோஸ்லோவேக்கிய அறிவியல் கல்விக் கழகத்தில் உள்ள கீழ்த்திசை நிறுவனத்தில் மூத்த ஆராய்ச்சியாளராக இருந்தார். இவர் தாம் கற்ற பிராகுவேயிலுள்ள பல்கழகத்தைச் சேர்ந்த சார்லஸ் பல்கலைக் கழகத்தில் தமிழ், திராவிட மொழிகளின் துணைப் பேராசிரியராக 1968 வரை பணியாற்றினார். இவரும் இவரது குடும்பத்தினரும் சோவியத் படையெடுப்பின் கட்டாயத்தினால் தாய் நாட்டை விட்டு வெளியேற வேண்டியதாயிற்று.

1960ஆம் ஆண்டு இறுதியில் கமில் ஆய்வுக்கான ஆராய்ச்சிக்காகத் தென் இந்தியா உட்பட அநேக நாடுகளுக்குப் பயணம் செய்தார். 1965-66 ஆண்டுகளில் தற்காலிகப் பேராசிரியராக அமெரிக்காவிலுள்ள சிக்காகோ பல்கலைக் கழகத்தில் திராவிட மொழி கற்பிப்பவராகப் பணிபுரிந்தார். மேலும் இவர் 1967-68 ஆண்டுகளில் கெய்டெல்பெர்க் பல்கலைக் கழகத்தில் பேராசிரியராகப் பணிபுரிந்தார். இவர் மாஸ்கோ, சென்னை, பென்சில்வேனியா, பாரீஸ் பல்கலைக் கழகங்களில் கற்றுக் கொடுத்தும், விரிவுரையாற்றியும் உள்ளார். நூற்றுக்கணக்கான ஆய்வுக் கட்டுரைகளும், திறனாய்வுகளும், மொழிபெயர்ப்பு களையும் தவிர மொழிகளின் ஒப்புமை பற்றியும் நீலகிரி மக்களின் பண்பாட்டைப் பற்றியும் ஆய்வு நூல்கள் எழுதியுள்ளார். இவற்றில் மிகவும் சிறப்பானது திராவிட ஒலியியல் ஒப்பாய்வு ஆகும்.

இவர் படைத்த இரண்டு தமிழ் இலக்கிய வரலாறு நூல்கள் 1974, 1975ஆம் ஆண்டுகளில் வெளியிடப்பட்டன. முருகனின் புன்முறுவல் 1973இல் எழுதி வெளியிடப்பட்டுள்ளது.

1970ஆம் ஆண்டுக்குப்பின் பாரிசிலுள்ள பிரான்ஸ் நாட்டுக் கல்லூரியிலும் சிக்காக்கோ பல்கலைக் கழகத்திலும் வருகை தரு பேராசிரியராகச் (Visiting Proffessor) சென்று வந்தார். ஐரோப்பியப் பல்கலைக் கழகங்களுக்குப் பயணம் செய்து கற்றுக் கொடுத்து விட்டு 1992ஆம் ஆண்டு ஓய்வு பெறும் வரை உட்ரக்ட்டில் (Utrecht) திராவிட மொழியியலையும், தென்னிந்திய இலக்கியத்தையும், பண்பாட்டையும் கற்றுக் கொடுத்தார். 1987ஆம் ஆண்டு மக்களின் வாய்மொழியாய்த் தமிழில் வந்த மரபுக் கதைகளையும், இருளர் இனத்தவரைப் பற்றியும் இரு நூல்கள் ஆங்கிலத்தில் எழுதியுள்ளார். உ.வே.சாமிநாத ஐயரைப் பற்றிய இறவாத சுயசரிதையையும் ஆங்கிலத்தில் மொழியாக்கம் செய்து முடித்தார். உயர்தரத் தமிழ் யாப்பிலக்கணம் பற்றிய ஓர் அறிமுகம் செவலேபில்லின் மற்றுமொரு பங்களிப்பாகும். இது ஒரு செய்முறை வழிகாட்டி நூல் என்ற முறையில் எழுதப்பட்டது. இது மிகுந்த நெடுநாள் தேவையாக உணரப்பட்டது. இது மேலும் பெஸ்கி அடிகளின் "De Arte Tamulicaei poeseos", சிதம்பரநாதன் செட்டியாரின் "Advanced Studies in Tamil Prosody" ஆகியவற்றின் சுருக்கமான வழிகாட்டி முறைகளின் பற்றாக் குறையை நிறைவு செய்கின்றது. உயர்தரத் தமிழ் யாப்பிலக்கணத்தைப் புரிந்து மகிழ்ச்சி கொள்ளும் கையேடாக இது இருப்பதோடன்றி வலிமைமிக்க கருப்பொருள் வாயிலாக உயர்தரத் தமிழ் யாப்பிலக்கணத்தைப் புரிந்து கொள்ளும் முறையிலும் உள்ளது.

தமிழுக்குப் பங்களித்த தமிழரல்லாத அறிஞர்களின் பட்டியலில் முதல் இடத்தை செவலேபில் வகிக்கின்றார். இவரை அடுத்து இரண்டாவது இடத்தை டாக்டர்.ஆர்.இ.ஆஷர் வகிக்கின்றார். கமில் செவலேபில் 2009ஆம் ஆண்டு ஜனவரி 17ஆம் நாள் மரணமானார்.

### அறிஞரின் பங்களிப்பு

அறிஞர் கமில் 500 புத்தகங்களின் விவரத் தொகுப்போடு நூல்கள், கட்டுரைகள், புலனாய்வுகள், மொழியாக்கங்களுக்கு ஆசிரியராவார். அறிஞருக்குத் தெரிந்த மொழிகள் அவரது தாய்மொழியான செஸ்கி, தமிழ், ஆங்கிலம் ஆகியவையாகும். இவர் திராவிட மொழியியலுக்கும், இலக்கியத்திற்கும் ஆசிரியராவார்.

### படைப்புகள்

1. "Z dravidske poesie".“திராவிட செய்யுள்கள்,” (புறநானூறு-164. நற்றிணை-60 குறுந்தொகை-40, செக் மொழியாக்கம், 6 (1951).
2. "S.Baradi Jedina Indie".பாரதியார் பாடல்களின் செக் மொழியாக்கம், 6 (1951).

3. "Kvet Mullaje" தமிழ்ச் செய்யுள்களின் செக் மொழியாக்கம், 6 (1951).
4. "Tahle Herecka" தமிழ்ச் செய்யுள்களின் செக் மொழியாக்கம், 6 (1951).
5. "Auvaijar, tamilska Sappho" "ஔவையார் தமிழகத்தின் சபோ (Sappho) செக் மொழியாக்கம்", 7 (1952).
6. "Nejstarst styky jizni Indie de zapadnim soetem" "மேற்கத்திய நாடுகளுடன் தென்னிந்தியாவின் பழங்காலத் தொடர்புகள்" செக் மொழியாக்கம், 7 (1952).
7. "Jaro," "கலித்தொகைச் செய்யுள்கள் செக் மொழியாக்கம்", 7 (1952).
8. "Vindan Zavrene dvere" தமிழிலிருந்து செக் மொழியாக்கம், 7 (1952).
9. "Tajemny Cizinec" தமிழிலிருந்து செக் மொழியாக்கம், Zembedelske Noving, (1952).
10. "S.Baradi, Zakladatel modren tamilske literatury," "சுப்பிரமணிய பாரதியார்- தற்காலத் தமிழ் இலக்கிய நிறுவனர்," 7 (1952).
11. "Krocenf Byku" கலித்தொகை செய்யுள்களின் செக் மொழியாக்கம்.
12. "S.Baradi, Svobodny parija" சுப்ரமணிய பாரதியாரின் படைப்புகளின் செக் மொழியாக்கம், 8 (1953).
13. "Osm tamilskych povidek ve sbirce ponadka o pismi" புதுமைப் பித்தனின் எட்டுச் சிறுகதைகள், விந்தன், ரகுநாதன் மற்றும் சிலருடன் செக் மொழியாக்கம், Praha., 1958.
14. "Ctyri tamilske povidky ve Sbirce Indicke novely" நான்கு தமிழ்க் கதைகள் சுலோவாக் மொழியில் மொழியாக்கம் செய்யப்பட்டுள்ளன.
15. "Vesely panovnik," (translation of புறநானூறு verse into Czech)., 3 (1953).
16. "Dnes odesel," (translation of நற்றிணை verse into Czech), 8 (1953).
17. "K.Tumappan, Hlad," (translation from Tamil into Czech), 8 (1953).
18. "S.K. Nadan, Hlad," (translation from Tamil into Czech), 8 (1953).
19. "O tamilskych Pisnich a Prislovich," (On Tamil songs and proverbs in Czech), 8(1953).
20. "Hlad," (Verse from புறநானூறு translated into Czech), 8 (1953).

21. "Na Hrazi," (குறுந்தொகை verse 326 translated into Czech), (1953).
22. "O literature tamilske," (An essay of Tamil Literature in Czech), Novy Zivot.II, (1953).
23. "Collectanea Zur Tamil-Grammatik von der Hand des a Ludwig," Aro.21, (1953).
24. "Proso, Hra," (verses from குறுந்தொகை 335 and 44 translated into Czech), 9 (1954).
25. "சிலப்பதிகாரம், நற்றிணை நானூறு of S.I.S.S.W. editions," Aro.22(1954).
26. "Sul," (translation of அகநானூறு verse 140 into Czech), 9(1954).
27. "More," (குறுந்தொகை verse 140 translated into Czech), 9 (1954).
28. "Veer na horach," (அகநானூறு verse 302 translated into Czech) 9(1954).
29. "The Enclitic vowels ஆ- ஏ- ஓ in modern Tamil", Aro. 22(1954).
30. "Bharati's poems," Tamil culture III, 3&4, (1954).
31. "Two Etymological Remarks," Aro, 22 (1954).
32. "வீரமாமுனிவர், Zertovne Priberby Mistra Paramarty," (a Czech version of Beschi's பரமார்த்த குருவின் கதை), Praha, 1954.
33. "Horsky Kraj," (நற்றிணை verse 93 translated into Czech), 9 (1954).
34. "S.Baradi, Deste," (பாரதியார் பாடல்கள் translated into Czech), 7 (1954).
35. "Doba Desin," (translation from குறுந்தொகை into Czech, 9 (1954).
36. "Opustina," (translation from குறுந்தொகை into Czech, 9(1954).
37. "S.Baradi, Pisen Maravaru," (translation from பாரதியாரின் படைப்பு, 9 (1954),
38. "Vesti nez zeme," (குறுந்தொகை verse 3 translated into Czech), 9 (1954).
39. "Mele Jsem, Deeru," (நற்றிணை verse 184 translated into Czech), 9 (1954).
40. "Do Puskny," (அகநானூறு -419 translated into Czech), 19 (1955).
41. "மணிமேகலை XIX, 107," (translated into Czech). Katalog Indic Socharstvi, (1955).

42. "Co Pocit Zamyslel," (4th verse of கலித்தொகை translated into Czech), 10 (1955).

43. "Lovec," (அகநானூறு verse 82 translated into Czech), 10 (1955).

44. "Irariyanar Rekni Veelko," (Translation of குறுந்தொகை into Czech), 10 (1955).

45. "Mame ceka," (குறுந்தொகை, 161 translated into Czech), 10 (1955).

46. "Zablesk" (மணிமேகலை, Vol.I., translated into Czech), 10 (1955).

47. "Boure a deste," (நற்றிணை-7 translated into Czech), 10 (1955).

48. "Z peti set Krathych Strof," (ஐங்குறு நூறு-401 translated into Czech), 10 (1955).

49. "Kabilar, I Kdyz," (குறுந்தொகை-153 translated into Czech), 10 (1955).

50. "Ceuny Kvet, Preklady starotamilske milostone poesie," (Black Blossom, translation of ancient Tamil Erotic Poetry), Jor, Picka Prata, 1955.

51. "Phonemics of Old Tamil by C.R.Sankaran."

52. "A Primer of Tamil Literature by K.S.Ramaswami Sastri," review of, Aro.23, (1955).

53. கம்பராமாயணம்: review of, an edition," Aro, 23 (1955).

54. The present state of Dravidian Philology," Tamil Culture, IV.I, (1955).

55. Z Tirukkuralu, (திருக்குறள் translated into Czech), 10 (1955).

56. Baradi ve vyhanstvi," Bharati in exile, in Czech), 10 (1955).

57. Some remarks on the articulation of the So-called Cerebral Consonants in Indian Languages, Especially in Tamil," (with O.Svarny), Aro, 23(1955).

58. "On Emphasis and Intensification in Tamil," Aro, 23 (1955).

59. "A Note on Tamil Verbal Morphology," Aro, 23 (1955).

60. "Bharathi's Youth," Tamil Culture IV. 2, (1955).

61. "S.Baradi, Jiskra," (translation of பாரதியார் work into Czech), 10 (1955).

62. "Pongal, tamilske dezinky," (Pongal, the Tamil harvest festival, in Czech), 10(1955).

63. "A Czech Missionary of the 18th century as author of a Tamil Grammar," Tamil Culture, IV.4(1955).

64. "Z tamilske lidove poesie," (translations from Tamil into Czech), 11 (1956).

65. "Short remarks on Old Tamil Syntax," Aro, 24 (1956).

66. "The Grammatical Structure of Dravidian Languages by J.Bloch," review of, Aro.24, (1956).

67. "Vivekasindamani, Duvera," (Translation from Tamil), No.11, (1956).

68. "இலங்கை நாட்டுப்பாடல்," by Ramalingam, review of, Aro, 24 (1956).

69. "Basnik Kampan a Tamilske Folklore," கம்பனும் தமிழக நாட்டுப்புறப் பாடல்களும்.

70. "Z Tirukkkuralu," (Couplets from Tirukkural translated into Czech), 1(1956).

71. "Kavimani D.V.Pillai, Ma zemea Ma poesie," கவிமணி தேசிகவிநாயகம் பிள்ளையின் பாடல்களின் செக் மொழியாக்கம். 11(1956),

72. "Translating old Tamil Poetry - Some suggestions ," Tamil Culture, V.3, (1956).

73. "Baradi der Begrunder Modern tramilischen Literature," (பாரதியார் நவீன இலக்கியத்தின் முன்னோடி) Rocznik Orientalitayczny, XX., (1956).

74. "At Myself na svou zemi kral," (ஐங்குறு நூறு-450 translated into Czech).11, (1956).

75. "One Hundred years of Dravidian Comparative Philology," Aro, 24 (1956).

76. "The Yavanas in Old Tamil Literature," Chamsteria Orientalia, Prana, (1956).

77. "Pisen O Klemotu," (The Lay of the Anklet, in Czech), 11(1956).

78. "Kolami, a Dravidian Language by M.B.Emenau," review of, Aro. 24 (1956).

79. "The Prose works of Bharathi," Tamil Culture, V.4 (1956).

80. "Z tamilske lidone Poesie," (translation of Tamil Folk Songs). 12(1957).

81. "இன்னா நாற்பது- A study in Old Tamil Philology," Aro.25 (1957).

82. "Ragunadan, Meeni Pod Madurou," (The Czech version of பஞ்சும் பசியும், Praha, Pracce, 1957.

83. Kvety Jasminu (Blossoms of Jamsmine, translation, annotation and introduction of 200 classical தமிழ் அகம், புறம் பாடல்கள். Praha, 1957.

84. "Tentative Periodization of the Development of Tamil," Tamil Culture, VI.I, (1957).

85. "Verbal Noun in Early Old Tamil," Tamil Culture, Vol.2, (1957).

86. "Tamil Studies in Ceylon," Young Hindu, Kandy, (1957).

87. "O literaturach Jizi Indie," (On So uth Indian literature, public lecture), the Czecheslovak Academy of Sciences, 1957.

88. "Tamilska Prislovi," (Tamil Proverbs in Czech) 12 (1957).

89. "Emphasis in Early Old Tamil," Tamil Culture.VI.3 (1957).

90. "Principal and Verbal Nouns as Predicates in Early Old Tamil," Aro, 25 (1957).

91. "Dravidske jazyky," (Dravidian Languages in Czech), 13 (1958).

92. "S.Baradi, Sen Tamil Nadu," (Czech version பாரதியார் பாடல் செந்தமிழ் நாடு, 13 (1958).

93. "என் உள்ளம் கவர்ந்த தமிழ்நாடு" (an essay in Tamil), ஜனசக்தி, 1958.

94. ''தமிழ் இலக்கியத்தில் ஜைன அறவோர்கள் ஆற்றிய அருந்தொண்டுகள்,'' (an article about Jainism in Tamil Nadu, in Tamil) நல்லறம், 1.3 (1958).

95. "Dative in Old Tamil," IIJ,II.1(1958).

96. "Indology in Czechoslovakia," Hindustan Standard, 1958.

97. "இனியவை நாற்பது, A study in Late old Tamil Philology," Aro, 26(1958).

98. "Pudumaippittan, Rozbresklo Se," (Putumaippittan's short story translated into Czech) 13(1958).

99. "Madura, Perla Jihu," (Madurai, the Pearl of South India, in Czech), 13 (1958).

100. "Dialects of Tamil-I: Introduction and texts," Aro, 27 (1959).

101. "S.Baradi, tanec posledni zkazy," (பாரதியார் பாடல்கள் செக் மொழியில்), (1959).

102. "Heldani," (குறுந்தொகை- 130 translated into Czech) 15 (1960).

103. "Dialects of Tamil-II (Appendix)," Aro, 28 (1960).

